மேலைச் சிவபுரிச் சன்மார்க்க ச[illegible]ளியீடு—௫.




# சுக்கிர நீதி

(தமிழ்)

(1926)

உ

கணபதி துணை.

# சுக்கிர நீதி



மகிபாலன் பட்டி

பண்டிதமணி

மு. கதிரேசச் செட்டியார்

மொழிபெயர்த்தியற்றியது.

மேலைச்சிவபுரிச்

சன்மார்க்க சபையாரால்

வெளியிடப் பெற்றது.

அக்ஷய ௵ ஆவணி ௴

1926

 [விலை ரூபா. **4-0-0**

# இப்புத்தகத்தில் அடங்கியவை.

கணபதி துணை.

# முகவுரை

என்னிற் பிரியா தெனதுள்ளத் தாமரையின்
மன்னித் திகழ்களிற்று மாமுகத்தேம் — முன்னவனைப்
பேற்றே னவனடியே பேணினே னுதலினல்
எற்றே செயற்கரிய தேற்று.

அமிழ்தினு மினிய தமிழ்மொழியை அணிசெய்து நிற்கும் நூல்கள் முதனூல் வழிநூல் என இருதிறத்து ளடங்குவனவாம். வழிநூல், தொகுத்தல் விரித்தல் தொகைவிரி மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தல் என நான்கு வகைப்படுமென்ப. இவற்றுள் இறுதியதாகிய மொழிபெயர்த் ததர்ப்பட யாத்தலென்பது வேற்றுமொழியிலுள்ள பொருளை அது கிடந்தவாற்றானே தமிழ்நூலாகச் செய்வதாம். மொழிபெயர்த்த லென்றதனானே பொருள் பிறழாமைச் செய்ய வேண்டுமென்பது போதரும். தமிழ்மொழியின் ஆக்கங்கருதிய ஆசிரியர் அதற்கு வேற்றுமொழிப்பொருளைத் தமிழில் மொழிபெயர்த்துரைத்தலையும் ஒன்றாக எண்ணி அதனை வழியின் வகையுட்படுத்துரைப்பாராயின், இம் மொழிபெயர்ப்பின் இன்றியமையாமையைப் பற்றிப் பிற கூறவேண்டுவதென்? மொழிபெயர்க்கப்படும் நூல் பெயர்த்துரைக்கப்படும் மொழிக்கண்ணுள்ள குறையை நிரப்புவதாக இருத்தல் வேண்டும். அதுவே அதன் பயனாகும். ஆன்றோரருளிய நூல்கள் அறம் பொருளின்பம் வீடுகளை நுதலுந்திறத்தான் நான்கு வகையினவாம். இவ் வுறுதிப்பயன்க ளெல்லாவற்றையும் ஒருங்கே கூறுவனவும், தனித்தனி எடுத்து விளக்குவனவுமாக நூல்கள் பல இறப்படும். தனித்தனியே கூறும் பகுதியில் பொருளைப்பற்றித் தனியே கூறுந் தமிழ்நூல் இற்றைஞான்று அரிதாமென்பதைப் புலமுடையார் யாவரும் உணர்வர். திருக்குறண் முதலிய நீதிநூல்களுட் பொருட்பகுதி கூறப்பட்டிருப்பினும் பொருளையே சிறப்பாக விதந்தெடுத்துக் கூறுந் தனிநூலிற்போல அதன்கண் விளக்கமாகக் காண்டற் கியலாது. பொருணூல் தனியே தமிழில் இல்லாத இக் குறையை

நிரப்ப எண்ணியபொழுது வடமொழிக்கணுள்ள பொருணூல்கள் நினைவிற்றோன்றின. வடமொழிக்கட் பொருணூ லியற்றினோர் வியாழன், வெள்ளி, சாணக்கியன் முதலியோராவர். அவர் இயற்றிய நூல்களுள், பாருகற்பத்தியம், ஔசநசம், கௌடிலீயம் என்னும் இம்மூன்றும் சிறந்தனவாக ஆன்றோரான் மேற்கொள்ளப்பட்டன. இவற்றுள் ஔசநசம் என்பது சுக்கிரரால் இயற்றப்பட்டது. அது விரிந்து பரந்த நூலாதலின் அதன் சுருக்கமாகத் தொகுக்கப்பட்டது சுக்கிரநீதியாகும். ஆகவே கருத்துவகையில் ஔசநசத்தின் சாரமாக இஃது அமைந்துள்ள தென்பது போதரும். அதுபற்றியே இதற்குச் சுக்கிரநீதிசாரம் என்னும் பெயரும் நிலவுவதாகும். பொருணூலியற்றிய ஆசிரியர்களுள்ளே சுக்கிரர் தலைவராக மதிக்கப்பட்டனர் என்பதைக் கௌடிலீயமென்னும் பொருணூற் றொடக்கத்தில் "சுக்கிரற்கும் பிருகற்பதிக்கும் வணக்கம்" என்று அதன் ஆசிரியராகிய சாணக்கியரும், "வெள்ளியும் பொன்னும் என்போர் விதிமுறை" என்று கம்பநாடரும் முறைப்படுத்து முதற்கட் கூறுமாற்றான் நன்குணர்தல் கூடும்.

இந் நீதிநூல் அறநூல்களுக்கு மாறுபடாமல் இயற்றப்பட்ட பொருணூலாகும். பொருளும், இன்பமும் அறத்திற்கு மாறுபடலாகா தென்பது பெரியார் துணிபு. இவ்வாசிரியரும் இதனை வற்புறுத்துக் கூறியுள்ளார். இவ்வுண்மையை 4-ஆம் அத்,ரு- ஆம் பிர, 44, 274-ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க. அறம் பொருளின்பங்களுள் நடுவணதெய்த இருதலையு மெய்து மாதலின் பொருள், வாழ்க்கைக்கு இன்றியமையாத தொன்றென்பது போதரும். இவ்வுண்மையை இவ்வாசிரியர் "மனிதன் பொருட்கு அடிமையாவான். பொருள் எவர்க்கும் அடிமையாகாது. ஆதலின் மனிதன் எப்பொழுதும் சோர்வின்றிப் பொருளீட்ட முயலவேண்டும். அப்பொருளால் அறமும் இன்பமும் வீடும் மனிதர்க்குண்டாவனவாம்.", (அத். ரு, சு. ௩அ) என்று விளக்கிக் கூறுவர். இதுபற்றியே இன்னோரன்ன பொருணூல்கள் தேவாசுரர்களின் ஆசிரியர் முகமாக இவ்வுலகத்திற்கு வெளிப்பட்டன. "வேதம் அறநூல்களுக்கு முரணுமல் அரசனது செங்கோன் முறை முதலியவற்றை வரையறுத்துக் கூறுவதும், பொருளீட்டுதற்குரிய சிறந்த உபாயங்களை விளக்கிக் காட்டுவதும் பொருணூலென்று கூறப்படும்." (அத். ச; பிர. ௩; சு. ரு௯) என்று இவ்வாசிரியர் கூறிய இலக்கண முறைப்படியே இஃது இயற்றப்பட்டதென்பது இதனை யாராய்வார்க்கெல்லாம் புலனும். இதன்கண் அரசனுங் குடி

மக்களும் மேற்கொள்ளவேண்டிய ஒழுக்கவகைகள் விரிவாகக் காணப்படுகின்றன. "அரசன் குடிகளிடத்தினின்றும் தனக்குரிய அரசிறையாகிய வேதனத்தைப் பெறுதலால் அக்குடிகளுக்கு ஏவலாளாந் தன்மையை எய்தப்பெற்றவனாவான்." (அத். க, சு. கஅஅ) எனவும், "பூமரத்தை வளர்த்து மலர்பறித்து மாலைகட்டிப் பயன்பெறுபவனை யொப்பக் குடிபுறந்தந்து அவர்பால் அரசிறைபெறவேண்டும்" எனவும், "அங்ஙனமன்றி அம் மரத்தை எரித்துக் கரிசெய்து பயன்பெறுதல் போலக் குடிகளைக் கெடுத்துச் சிறுபயன் கோடலாகாது." (அத். ச, பிர. உ, சு. ககரு) எனவுங் கூறப்பட்டுள்ளன. இதனால் அரசன் அரசியலை மேற்கொள்வது தன்பயன் குறித் தன்றென்பதும், குடிகளின் நலங் குறித்தேயா மென்பதும் நன்கு வற்புறுத்தப்பட்டன. குடிமக்கள் மேற்கொள்ளத்தக்க ஒழுக்கவகைகள் இதன் மூன்றும் அத்தியாயத்தில் தெளிவாகவும் விளக்கமாகவும் கூறப்பட்டுள்ளன.

சுக்கிரர் அசுரகுருவாதலின் அசுரர்களின் வழக்க ஒழுக்கங்களை உற்றுணர்ந்து அவர் ஏற்றுக்கொள்ளத்தக்க முறையில் இவ்வரசிய னூலைத் திறம்பட ஆக்கியருளினர். கட் காமஞ் சூது முதலிய விதனங்களெல்லாம் அறவே நீக்கப்படவேண்டியவை என்பதை ஆங்காங்கே இவ்வாசிரியர் வற்புறுத்துக் கூறுகின்றாராயினும், ஒரோவிடங்களில் அவற்றை அளவோடு மேற்கொள்வதால் விளையும் நலங்கள் இன்னவென்றுங் கூறுகின்றார். அங்ஙனங் கூறுதற்குக் காரணம் கள்ளுண்டலில் வேட்கைமிக்க அசுரர்கள் உளங் கொளும்வகை இதமாக உபதேசிக்கவேண்டு மென்னும் எண்ணமேயாம். இதனை முதல் அத்தியாயம் கoகூ, கககூ-ஆம் சுலோகங்களிற் காண்க. "சிறிதளவு உண்ணப்படும் கள் மதிநுட்பத்தையும், தூய அறிவையும், அஞ்சாமையையும், மனவுறுதியையும் தருவதாகும்." (அத். க, சு. கககூ) என்பது முதலிய இந்நூற்கருத்துக்களை யுட்கொண்டே கலித்தொகை என்னும் சிறந்த சங்க இலக்கியத்தில் அதன் ஆசிரியர் "நறவினை வரைந்தார்க்கும் வரையார்க்கு மவையெடுத், தறவினை யின்புறூஉம் அந்தணரிருவரும்" என்று கூறினார். (மருதக்கலி. நச.) ஈண்டு நறவினை வரைந்தார் தேவரும், அதனை வரையார் அசுரரு மாவர். அவ்விருதிறத்தார்க்கும் வரைதலும் வரையாமையுமாகிய அவ்விரண்டினையுங் கைக்கொண்டு அறத்தொழிலாக இன்புறுத்திய அந்தணரிருவர் வியாழனும் வெள்ளியு மாவர். விலக்கத்தக்கதொன்று அறமாதல் உலகத்துப் பலரான் மேற்கொள்ளப்பட்டமையான் ஆம் என்பது இவ்வாசிரியர்

துணிபாகும். இதனை "எச்செயல் பலராலும் பாராட்டப்படுகின்ற தோ அஃது அறமாகும். எச்செயல் பலராலும் பழிக்கப்படுகின்ற தோ அது மறமாகும். ஆராய்ந்து துணிதற்கரிய அறத்தினியல்பை எவரும் அறிதற்கு ஆற்றலுடையரல்லர்." (அத். ரு, சு. நடு) என்று இவ்வாசிரியர் கூறுமாற்றான் அறியலாம். விலக்கற்பாலன ஒருகாரணம்பற்றி விதியாகக் கூறப்படினும் அங்ஙனங்கூறும் ஆசிரியரின் உட்கோளை யுணர்ந்தே விதிவிலக்குக்களைத் துணிதல் வேண்டும். இவ்வாசிரியர் வேட்டையாடல், கள்ளுண்டல் முதலியவற்றை ஏற்றுக்கொள்வார் நிலைபற்றி ஓரோவிடங்களிற் சிறுபான்மை விதிபோலக் கூறியுள்ளாரேனும் "எப்பொழுதும் புழு, எறும்பு முதலிய சிற்றுயிர்களையும் தன்னைப்போற் பார்த்தல் வேண்டும்" (அத். ந, சு. கூ.) எனவும், "அரசர்களுக்கு வேட்டையாடலுஞ் சூதாடலுங் கட்குடித்தலுமாகிய இவை வெறுக்கற்பாலனவாம். இம்மூன்றானும் முறையே பாண்டுவும், நளனும், யாதவர்களும் துன்பமெய்தினர்." (அத். க, சு. கசஉ) எனவும் பலவிடங்களில் உயிர்க்குறுகண் செய்தல், கள்ளுண்டல் முதலியவற்றால் விளையுந் தீமைகளை எடுத்துக்காட்டி அவை அறவே விலக்கத்தக்கன என்று வற்புறுத்துக் கூறுகின்றமையான் இவர் உட்கிடை இன்னதென்பது நன்கு வெளியாம். சீவதயை முதலிய உயர்குணங்களைச் சிறந்த பிற பயன் நோக்கிக் கேட்போரை ஏற்றுக்கொள்ளச் செய்தல் இவ்வாசிரியர்க்கு இயல்பாம். இத்திறன் அரசியனூல் இயற்றும் ஆசிரியர்க்கு இன்றியமையாத தொன்றே. அரசர்க்குப் பொதுவாகப் பிறரைத் தம்வயப்படுத் தாளுதலில் அவாவுடையராதலும், அதற்குரிய உபாயத்தை ஆராய்தலும் அவர்க்கு இயல்பே. அந்நிலை நோக்கி இவ்வாசிரியர் "பிறரை வயப்படுத்தற்கு உயிர்களிடத்து அருளும், நட்புரிமையும், கொடையும், இன்சொல்லுமாகிய இவைகளையொப்ப மற்றொன்று இம் மூன்றுலகத்திலும் இன்றாம்." (அத். க, சு. களக) என்று தம் உட்கிடையாகிய உயர்ந்த ஒழுக்கங்களை அவர் விரைந்து ஏற்றுக்கொள்ளும்வண்ணம் உபாயமாக வெளியிடுகின்றார். இதனால் ஓர் பெருங்குழுவினர் அடிப்பட்டு மேற்கொண்ட சில ஒழுக்கங்கள் விலக்கத்தக்கனவெனினும் அவ்விலக்கினை அவர் ஏற்றுக்கொள்ளுமாற்றான் நயம்பட உரைத்தல் நலமென்பது போதரும். வேதநடை போல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தரமேயறிந்து செய்யுந் தன்மைத்தாகிய ஒப்புரவு என்னும் உலகநடையை இவ்வாசிரியர் உடன்படுகின்றார். (அத்.ச,பிர.ந,சு.கூச) காலவேற்றுமையால் உல

கம் நடைபெறும் நிலையை நுணித்துணர்ந்து செய்வன தவிர்வன மேற்கொள்ளவேண்டு மென்பதை வற்புறுத்துகின்றார். உலகியலுணர்ச்சி கைவரப்பெறுதற்கு இவ்வுலகத்தையே ஆசிரியனாகக் கொள்ளவேண்டு மென்பதை, "அறிவுடையோர்க்கு எல்லாச் செயல்களினும் உலகமே ஆசிரியனாகும்; ஆதலின், பகுத்துணரு மறிஞன் உலகியலுணர்தற் பொருட்டு அவ்வுலகத்தையே பின்பற்றல் வேண்டும்." (அத்.க,சு.நஉ) என்பதனான் விளக்கியுள்ளார். பொருளுணர்ச்சியின்றி வேதங்களை அத்தியயனஞ் செய்பவர்க்கு உலகியலறிவு இருப்பதில்லை யென்பதை இக்காலத்திற் கண்கூடாகக் காண்கின்றேம். இவ்வுண்மையை இவ் வாசிரியர் "வேதநூலாக படனப் பயிற்சியான் மழுங்கிய அறிவு மற்றை உலகியல் வழக்குக்களிற் றிறனுடையதாகாது." (அத்.ந,சு.உஅக.) என்று வெளிப்படுத்துகின்றார். இங்ஙனங்கூறியது வேத படனமுடையார் எல்லா முணர்ந்தே மென்று செருக்குறலாகா தென் பதையும், வேதபடனத்தினுஞ் சிறப்பாக உலகியலுணர்ச்சி கைவரப் பெறவேண்டு மென்பதையும் வற்புறுத்தற்பொருட்டேயாம்.

திருக்குறட் கருத்துக்களும், பரிமேலழகர் உரைக்கருத்துக்களும் இதன்கட் பலவிடத்துங் காணலாம். இந்நூற் கருத்துக்கள் திருக்குற ளாசிரியர்க்குத் துணையாகவுள்ளனவென்று பரிமேலழகர் கூறுவர். இதனை, "தேவர்க்கும் அசுரர்க்கும் அமைச்சுப்பூண்ட வியாழ வெள்ளி களது துணிபு தொகுத்துப் பின் நீதிநூலுடையார் கூறியவாறு கூறு கின்றமையின்" (அதி.கள,செ.உ-உரை) என அவர் கூறுமாற்றா னுணர்க. பிறாண்டும் இக்கொள்கை துணியப்படும். துணிபு தொகுத் துக் கூறப்பட்ட பின் நீதிநூல் இச்சுக்கிரநீதி, கௌடிலீயம், காமந்தக நீதி என்னும் இவைகளாக இருக்கலாமென்று ஊகித்தற்கு இட னுண்டு. காலம்பற்றி முன்னாகப் பின்னாகத் தோன்றினும் திருக் குறண்முதலிய தமிழ்நூல்களிற் சுருக்கமாகக் காணப்படும் பொருள் களை விளக்கமாக வுணர்ந்துகோடற்கும், அவற்றிற் காணப்படாத புதிய பொருள்களைக்கண்டு மேற்கோடற்கும் இது தக்க கருவியாதலை யுணர்ந்து தமிழகத்தார் இன்புறுவரென்னும் துணிவுடையேன்.

இன்னும் இதன்கட் காலமுணர்த்தும் பொறியாகிய நாழிகை வட்டில்; (அத்.ச,பிர.ந,சு.அச) நீர்ப்பொறி, இசைப்பொறி, (Gramophone) காற்றியக்கும்பொறி, (Electric fan) (அத்.க,சு.உசஅ) கம்பிவழிச் செய்தி யனுப்புங்கருவி, (Telegraph) (அத்.க, சு. நஅள) நீராவியாலியக்கப்படும் பொறிகள், (Train) (அத். ச, பிர. ந,சு.அரு)

முதலிய இக்காலத்துக் காணப்படும் அரிய இயந்திரத்தொழில்களைப் பற்றியுங் கூறப்பட்டுள்ளன. சில செயல்களுக்கு உவமை கூறுங்கால் செய்வினைக்கேற்றபடி கூறியிருத்தல்வியக்கத்தக்கதே.நடைவழி(Road) ஆமை முதுகுபோல் இருக்கவேண்டுமென்கின்றார். (அத். க, சு. உகூ) "புதல்வர்ப் பேற்றை விரும்பும் பெண்மக்கள் வயிரமணியை அணிதலாகாது" (அத். ச, பிர. உ, சு. ருங) என்று கூறுகின்றனர். இன்னோரன்ன புதிய செய்திகள் பல இதன்கட் டிகழ்ந்து இன்புறுத்துகின்றன.

இன்னும் இந்நூல் நுதலிய பொருள்களும், இதன் அமைப்பின் மாண்பும் என் அரிய நண்பர்களாகிய திருவாளர். அட்வோகேட் கா. சுப்பிரமணிய பிள்ளை M.A., M.L. அவர்களாலும், திருவாளர், ஹைகோர்ட்டு வக்கீல் ச. சோமசுந்தர பாரதியார் M.A., B.L. அவர்களாலும் எழுதப்பட்டு இதனுடன் சேர்க்கப்பெற்றிருக்கும் ஆராய்ச்சி மதிப்புரைகளால் நன்கு விளங்குமாதலின் யான் இங்கு விரித்துக் கூறத் துணிந்திலேன். அவ் ஆராய்ச்சி மதிப்புரைகளை ஆராய்ந்து படிப்பார்க்கு இந்நூல் நலங்கள் உள்ளத்திற் பதிந்து இன்புறுத்துமென்னும் துணிவுடையேன்.

இனி, இந் நீதிநூல் பெரும்பான்மை அரசியலைப் பற்றியும், சிறுபான்மை மக்களின் வருணாச்சிரம தருமங்களைப் பற்றியும் கூறுவதாகும். இது பிறப்புப் பற்றி மக்களுக்குச் சிறப்பு இழிவு கூறும் நூல்கள் போலாது "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யான்.", "பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங், கருமமே கட்டளைக் கல்." என்று பொய்யில் புலவர் தம் பொருளுரையாகிய திருக்குறளிற் கூறியாங்குக் குணஞ் செயல்களாலும் அறிவினாலுமே மக்கள் மாட்சி யுடையராவர் என்னும் உயரிய நோக்கத்தை உட்கோளாக உடையதாகும். இவ்வுண்மையை, "அறிவுடையார்பால் அந்தணர் மாணுளியுளது" (அத். ங, சு. உஎகூ) எனவும், "இவ்வுலகத்தில் அந்தணராதலும் அரசராதலும் வணிகராதலும் சூத்திரராதலும் மிலேச்சராதலும் பிறப்பினு லில்லை; குணஞ் செயல்களாலேயே வேறுபடுக்கப்பட்டனர்." (அத். க, சு. ஙஅ) எனவும், "சாதியினாலும் தாய்தந்தையராலும் பிராமணத்தன்மை எய்தற்பாலதன்று." (அத். க, சு. ஙகூ) எனவுங் கூறுமாற்று னறிக. இக் கருத்தைப் பின்னும் ஆங்காங்குப் புலப்படுத்தியுள்ளார். ஆயினும் பிறப்புப்பற்றிச் சிறப்பு இழிவு கூறுதலையும் அறவே விலக்கினாரல்லர்; அதுவும் மக்கட்பகுதியினரின்

ஏற்றத்தாழ்விற்கு ஒருவாறாக ஏதுவாதல் பற்றி. பிறப்பொன்றையே கடைப்பிடித்துப் பெருமைசிறுமை கருதி நீதி வழங்கல் தக்கதன்றாகலின் அம்முறையை இவ்வாசிரியர் மேற்கொண்டிலர். ஆயினும் இந்நூலிற் சிலவிடங்களிற் பிறப்புப் பற்றிய சிறப்பு இழிவுகள் கடுமையாகவும் வற்புறுத்தப்பட்டுள்ளன. அத்துணைக் கடுமை இவ்வாசிரியர் கொள்கைக்கு ஏற்ற தன்றாகலின் அங்ஙனங் கூறிய சில சுலோகங்கள் பிற்காலத்தவரால் இடைச்செருகப்பட்டனவாக இருத்தல் கூடுமென்று எண்ணுதற்கிடனுண்டு. இக்கருத்து நிலைபெறுதற்குத் தக்க சான்று இந்நூலின்கண்ணே காணப்படுகின்றது. இந்நீதி நூல் இரண்டாயிரத்திருநூறு சுலோகங்களாறுக்கப்பட்டதென்று இதன் ச-ஆம் அத், எ-ஆம் பிர, சஉரு-ஆம் சுலோகத்திற் கூறப்பட்டுள்ளது. இதற்கு மாறாக இற்றைஞான்றுள்ள இந்நூற்சுவடியில் இரண்டாயிரத்தைஞ்ஞூற்றறுபது சுலோகங்களுக்கு மேல் உள்ளன. இத்துணையென்று அறுதியிட்டுரைக்கப்பட்டன போக எஞ்சிய ருசுo-க்கு மேற்பட்ட சுலோகங்கள் நாளடைவிற் புதியனவாக எழுதிச் சேர்க்கப்பட்டிருக்கலாம். அப்புதியன இன்னவென்று பகுத்துணர்தல் அரிதாகலின் இருந்தபடியே எல்லாச் சுலோகங்களும் மொழிபெயர்க்கப்பட்டன. இம்மிகுதியே இந் நீதிநூலாசிரியர் கொள்கைக்கு மாறுபாடான கருத்துடையவாக நினைக்கத்தக்கனவாம்.

இத்தகைய சிறந்த பொருணூலாகிய சுக்கிரநீதியைத் தமிழில் மொழிபெயர்க்க எண்ணி மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபைத் தலைவராக இருந்து சிவபதம் எய்திய திருவாளர், வ. பழ. சா. அண்ணாமலைச் செட்டியாரவர்களிடம் தெரிவித்தேன். அவர்கள் இச்செயலை மனமுவந்து உடன்பட்டுச் சிறிதுங் காலந்தாழ்க்காமல் வடமொழியிற் சாகித்திய சிரோமணி வகுப்பிற் றேர்ச்சிபெற்ற தின்னியம் பிரம்மஸ்ரீ டி. எஸ். சுப்பிரமணிய சாஸ்திரிகளை எனக்கு உதவியாக இருந்து . வரும்படி செய்தனர். சன்மார்க்கசபை வெளியீடுகளில் ஒன்றாக இஃது என்றும் நின்று விளங்கும்வண்ணம் மொழிபெயர்த் தியற்றலானேன். இதனை மொழிபெயர்க்குங்கால் முதனூற் பிரதியாகப் பெற்றது பண்டித குலபதி ஜீவானந்த வித்தியாசாகரர் B.A. அவர்கள் உரையோடு கல்கத்தா நகரத்தில் அச்சிடப்பட்டதாகும். அது மூலத்திற் சிலவும் உரையிற் பலவுமாகிய பிழைகளையுடையதாகும். பிழைபட்ட பகுதிகளைக் கூடியவரை முன்பின் ஆராய்ச்சிகளாலும் பிற நூல்களின் உதவியாலுஞ் செப்பஞ்

செய்துகொண்டு மொழிபெயர்க்கலானேன். அங்ஙனஞ் செய்தும் முற்காலத்திருந்து இக்காலத்து வழக்கொழிந்த சில செய்திகளின் உண்மை காண்டற்கரிதாயிற்று. அவ்விடங்களில் என் மொழிபெயர்ப்புத் தவறியிருத்த லியல்பே. அதுபற்றிப் பெரியார் வெறுது பொறுத்தருள்வரென்பது என்றுணிவு. மூலத்தில் விளக்கமாக இல்லாதவைகளுக்குச் சுலோக எண்ணிட்டுக் கீழே குறிப்பு எழுதி விளக்கியிருக்கின்றேன். ஒத்த கருத்துக்களையுடைய திருக்குறட் செய்யுட்களும், பரிமேலழகர் உரைப் பகுதிகளும், பிறவும் ஆங்காங்கு எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. மொழி பெயர்ப்பிலுள்ள சில சங்கேதச் சொற்களும் குறியீடுகளும் அரும்பதங்களும் வடமொழிக்கண் எவ்வாறுள்ளன வென்று படிப்போர் அறிந்து கொள்ளுதற்கு உபயோகப்படும் வண்ணம் இறுதியில் அரும்பத முதலிய வற்றின் அகராதியை எழுதிச் சேர்த்திருக்கிறேன். அவ்வகராதி வட சொற்களாகவே வடவெழுத்து வரிசையாகக் காட்டப் பட்டது அச்சொல்லுருவந் தெரிதற் பொருட்டேயாம்.

இவ்வரிய செயலில் எத்துணையுந் தகுதி யற்ற யான் முயன்றிருத்தலைக் கண்டு நேரிலுங் கடித வாயிலாகவும் வேண்டுவன கூறி யூக்கி யுதவியவர்கள் மஹா மஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி பிரம்மஸ்ரீ வே. சாமிநாதையரவர்கள். ஸ்ரீமத் - ஐயரவர்களும், சேது ஸம்ஸ்தான மஹாவித்வான் ஸ்ரீ உ.ப. வே. ரா. இராகவையங்காரவர்களும் இந்நூற்குச் சிறந்த சிறப்புப்பாயிரச் செய்யுட்களை யுதவிப் பெருமைப் படுத்தினர். இந்நூலின் நுண் பொருள்களைப் படிப்பார் உணர்ந்து இன்புறும் வண்ணம் ஆராய்ச்சியுரை யெழுதி யுதவவேண்டுமென்று விரும்பியபடி என் நண்பர்களும் ஆங்கிலத்திலும் தமிழிலும் சிறந்த பயிற்சி யுடையவர்களுமாகிய சென்னைச் சட்ட கலாசாலைப் பேராசிரியர் அட்வோகேட் திருவாளர், கா. சுப்பிரமணியபிள்ளை M.A., M.L. அவர்களும் மதுரை ஹைகோர்ட்டு வக்கீல் திருவாளர், ச. சோமசுந்தர பாரதியார் M.A., B.L. அவர்களும் இந்நூலை முற்றும் பார்வையிட்டுத் தம் மதிவலியால் நுனித்துணர்ந்து இதற்குச் சிறந்த ஆராய்ச்சி மதிப்புரை வரைந்துதவினார்கள். மற்றும் வடமொழியிலும் ஆங்கிலத்திலும் தமிழிலுஞ் சிறந்த பல பெரியார் இந்நூலைப் பார்வையிட்டுத் தம் கருத்துறு பொருள்களைத் தெரித்துக்காட்டி அபிப்பிராயபத்திரங்க

ளுதவினர். இவர்களெல்லோரும் என் சிறு பணியை இங்ஙனம் பெருமைப் படுத்தியதற்குக் காரணம் இன்னோரன்ன துறைகளில் என்போன்ற மாணவர்கள் புகுந்து இயன்றவரை தம் மொழிவளர்ச்சியிற் பணிசெய்ய வேண்டு மென்னும் நல்லுணர்ச்சியும், என்மாட்டுள்ள உண்மை யன்புமே யாகும். வினையாளை வேலை முடிவிற் பாராட்டி இன்புறுத்தும் இயல்புவாய்ந்த இப்பெரியா ரெல்லோர்க்கும் என் உளமார்ந்த வணக்கத்தைச் செய்தலோடு இவர்கள் நன்றியை என்றும் மறவாக் கடப்பாடு முடையேன்.

இந்நூன் மொழிபெயர்ப்புத் தொடக்கமுதல் முடியும்வரை என்னுடனிருந்து துணைபுரிந்தவர் நின்னியம் சிரோமணி பிரம்மஸ்ரீ T. S. சுப்பிரமணிய சாஸ்திரிக ளாவர். இவர்கள் வடமொழியிற் சிறந்த அறிவு படைத்திருத்தலோடு தமிழிலும் வேண்டிய அளவிற் பயிற்சி பெற்றிருந்தல் எனக்கு மிகவும் உதவியாயிற்று. இன்னோரன்ன பண்டிதர்களே மொழிபெயர்ப்புச்செயற்கு மிகவும் தகுதியுடையராவர். இவர்கள் உதவி மிகவும் பாராட்டற்பாலது.

சென்னை அடையாற்றுக் காலேஜ் தலைமைத் தமிழ்ப்பண்டிதரும், என் இனிய நண்பருமாகிய பிரம்மஸ்ரீ பண்டித அ. கோபாலையரவர்கள் என் வேண்டுகோட்கு இணங்கி இதன் அச்சுவேலையில் எனக்குச் சிறிதும் சிரமம் உண்டாகாவாறு சலியா முயற்சி மேற்கொண்டு எழுத்துப்பிழை முதலியன நேராமல் உற்றுநோக்கி உதவி புரிந்தமைக்கு என்றும் அவர்கள் நன்றியை நினைவுகூருங் கடப்பா டுடையேன். இந்நூல் அச்சு வனப்புற வமைந்ததற்கு இவர்கள் உதவியே காரணமாகும்.

இம் மொழிபெயர்ப்புத் துறையில் யான் தலைப்பட்டுப் பணி செய்தற்கு முக்கிய காரணம் மேலைச்சிவபுரிச் சன்மார்க்கசபையாரின் தூண்டுதலேயாகும். இச்சபை புதுக்கோட்டை ஆட்சியுட்பட்ட மேலைச்சிவபுரிக்க ணுள்ளது. இது தோன்றி இற்றைக்குப் பதினேழு ஆண்டுகளாயின. இது தன் பாலப்பருவமாகிய மூன்றும் ஆண்டில் முதற்றலைவராகிய திருவாளர் வ. பழ. சா. பழனியப்ப செட்டியாரவர்களையும் இளமைப்பருவமாகிய பதினைந்தாம் ஆண்டில் இரண்டாந்தலைவரும் முதற்றலைவரின் இளைய சகோதரருமாகிய திருவாளர் அண்ணாமலைச்செட்டியாரவர்களையும் பிரிந்துளதாயினும், இவ் யௌவனபருவத்

தில் தன்னைப் பாதுகாக்கும் அறிவும் ஆற்றலும் பருவமுங் குணங்க ளும் நிரம்பப்பெற்றவரும், முதற்றலைவரின் பிரதம குமாரருமாகிய திரு வாளர் வ.பழ.சா.சாமிநாதன் செட்டியாரவர்களைத் தலைவராகக் கிடைக் கப்பெற்று நாளுளும் தன் நோக்கங்களை இனிது நிறைவேற்றித் திகழ் கின்றது. என்பால் உண்மையன்பு மிக்க சபைத்தலைவராகிய திரு. சாமிநாதன் செட்டியார் யான் செய்துவந்த இத் தமிழ்ப்பணியை அடுத் தடுத்துக் கண்டு தாம் இன்புறுதலோடு என்னையும் இத்துறையில் மேன் மேலும் ஊக்கி யின்புறுத்தி வந்தனர். சன்மார்க்கசபையின் புகழ் என்றும் நின்றுநிலவுதற்கு இப் புத்தக வெளியீடு ஏற்றதாகும் என் னும் உண்மையை இவர்கள் நன்குணர்ந்தவர்கள். அருமை யறியா ரகத்து எத்துணைச் சிறந்த காரியமும் பயனுடையதாகத் தோன்றாது. அருமை யுணர்வாரகத்துச் சிறிய நற்செயலும் பெரும் பயனுடைய தாகத் திகழும். அருமை யுணர்ந் தின்புறூஉம் சிறந்த குணத்தை இச் சபைத்தலைவர்பாற் கண்டு உவகையுற்று வருகின்றேன். ஆரிய மொழிக் கணுள்ள வேதம், உபநிடதம், சிவாகம முதலிய உயரிய நூல்களையெல் லாம் தக்க பண்டிதர்களைக்கொண்டு மொழிபெயர்த்துச் சன்மார்க்க சபை வெளியீடாக அடுத்தடுத்து வெளிப்படுத்தவேண்டு மென்னும் அவா இவர்கள்பால் மிக்குள்ளது. இச்சிறந்த எண்ணங்களுக்கு மற்றை யோரும் உதவியாதல் அன்றித் தடைசெய்யாதிருத்த லாகிய இவற்று ளொன்று செய்வாராயின் திருவருட்பாங்கால் தமிழ்மொழி இந்நலங் களைப் பெற்றுப் பீடுற்று விளங்குவதாகும். இச் சன்மார்க்கசபை தான் றோன்றிய சில வாண்டுகளுள்ளே பல மாணக்கர்களுக்குச் சிறந்த தமிழ்க்கல்வியை யூட்டியும், அறிவுடைப் பெரியார் உபந்நியா சங்களால் தமிழகத்தை யின்புறுத்தியும், இன்னோரன்ன நூல் வெளி யீடுகளைச் செய்தும் தமிழ்நலம் வளர்க்குந் தகைமை பாராட்டற் பாலதே. இந்நூல் சன்மார்க்கசபையின் வெளியீடாக வருதல் அதன் பெருமைக்கு ஏற்றதே. சபைக்குத் தக வமைந்த தலைவரும், அவர் தம் அருமைச் சகோதரர்களும், மற்றைச் சபையின் நிருவாககர்களும் இந்நூல் வெளியீட்டிற் காட்டும் சிரத்தையை மிகவும் பாராட்டுகின் றேன். ஒரு தமிழ்நிலயம் சிறந்த புகழையும், புண்ணியத்தையும் பெற வேண்டுமாயின் அதற்குப் புதிய பல நூ லுரைகளின் வெளி யீடே சிறந்த கருவியாகும். இந் நற்செயலில் தமிழ்நாட்டுச் செல்வர்

களும், தமிழ் வடமொழி ஆங்கிலம் வல்ல புலவர்களும், தமிழ்ச்சங்கங்களும் தலைப்பட்டுப் பெருமை பெறவும், அச்செல்வரும், புலவரும், சங்கங்களும் புலமை, செல்வம், சோர்வின்மை முதலிய நலங்களைப் பெற்றுத் திகழவும் எல்லாம்வல்ல சிவபிரான் திருவருள் புரிவாராக.

ஒன்றுக்கும் பற்றாத சிறியேனை இவ்வரிய செயலிற் புகுத்தி நிறைவேற்றியருளிய திருவருளை நெஞ்சார வாழ்த்துகின்றேன்.

செய்வினைக்கட் குற்றந் தெரிந்து பொறுத்தருளன்
மையில் புலமையார் மாண்பாதந்—செய்தி
பெறுதி யெனக்கிடைக்கப் பெற்றே னதனால்
உறுதி பெரிதுடையே னூங்கு.

உள்ளக் கமலத் தொருவன் றிருவடியைக்
கொள்ளக் குறையுங் குறைகளெலாம்—வெள்ளி
புலத்திற் றிகழும் பொருணூல் தமிழ்
னலத்திற் றியைதருமா னன்று.

மகிபாலன்பட்டி
30-5-1926.

இங்ஙனம்
மு. கதிரேசன்.

# சிறப்புப் பாயிரம்.



சிதம்பரம் ஸ்ரீ மீனாக்ஷி தமிழ்க்காலேஜ் பிரின்ஸிபாலாகிய

உத்தமதானபுரம்

## மஹா மஹோபாத்தியாய தாக்ஷிணாத்ய கலாநிதி

## பிரம்மஸ்ரீ, வே. சாமிநாதையரவர்கள்

இயற்றியது.

### நேரிசை யாசிரியப்பா.

பூமலி நான்முகப் புத்தேள் படைத்த
மாமலி புவியுறு மக்கட் கெல்லாம்
உறுதியா மறமுதற் பெறுதியீங் கிவையென
மனுமுதற் பெரியோர் முனநவில் நூல்களுள்
5 மழைக்கோ டன்னுடை மாணவர்க் கருளிய்
அரச நீதிமுன் னாகிய வெல்லாந்
தொகுக்கப் பெற்ற சுக்கிர நீதியாம்
வடநூற் பொருளை மாண்புறத் தமிழிற்
றேனெனப் பாலெனத் தேன்விராம் பாலெனக்
10 கழிபெருஞ் சுவைத்தா மொழிபெயர்த் திட்டே
அரும்பொருள் விளக்கமு மவணவண் அமைத்தே
பொருணயங் கண்ட புலவர்க ளிந்நூல்
பாட சாலையிற் பயிலுமா ணவர்க்கு
நல்லறி வதனை நல்குறு மெனவும்
15 இக்கா லத்திற் கேற்புற விலகு
வசன நடையா வாய்ந்ததிஃ தெனவும்
சொன்னயம் பொருணயந் தொகுமிதி லெனவும்
முப்பால் முதலா வெப்பா னூலினும்
உள்ள வைய மொழிந்தே மெனவும்

20 காணுப் பலபொருள் கண்டே மெனவும்
நகரத் தார்புரி நல்லற மெனவும்
தத்த மனத்திற் கொத்தது புகன்று
பலபட விழைந்துபா ராட்டும் வண்ணம்
எழுதா வெழுத்தி லியைவித் தளித்தனன்
25 அன்னவன் யாரெனிற் பன்னுது முன்னுவோர்
ஆசகற் றுறுமணி வாசகப் பெருமான்
எழிற்சிவ லோக மெனவெடுத் தியம்புஞ்
சேண்டிகழ் பெருமைப் பாண்டிநன் னாட்டிற்
சிவபுண் ணியமே செய்துசெய் தோங்கும்
30 மங்கல மிகுதன வைசியர் மரபிற்
பொங்கர வேணிச் சங்கர னென்றும்
இன்பான் மேவிய வொன்பான் கோயிலுட்
செயிரவந் தீர்க்கும் வயிரவன் கோயிற்
குரிய• தாகிய பெரிய வகுப்பிற்
35 சீருடைச் சிறுகுளத் தூருடை யான்குலத்
துண்மையு மன்பு முறுசிவ பத்தியும்
வண்மையுந் தண்மையு மற்றும் வாய்ந்த
முத்துக் கருப்ப முகில்புரி தவத்தால்
உதித்த செல்வன் கதித்த வறத்தின்
40 மேலன் புறுகர் மிகுத்துள வளமகி
பாலன்மா நகரைப் பதியாக் கொண்டோன்
நன்னயச் சுகுணச் சின்னய வேளைப்
பின்னவ னுக்கொள் பெரும்பாக் கியவான்
செந்தமிழ்க் கணியாந் திருவள் ளுவர்முதல்
45 முந்தமை நூல்களு மொழியவற் றுரைகளும்
நன்றாய்ந் தறிந்த குன்று வுணர்ச்சியன்
விழைவட மொழியிலும் வேண்டுவ பயின்றோன்
வடமொழி வாணருந் தென்மொழி வாணரும்
ஆங்கிலப் பயிற்சியி லோங்கிய நிபுணரும்
50 வேட்டுப் பலமுறை கேட்டே சிரகர
க்ம்பிதஞ் செய்திடக் கவின்பிர சங்கம்
புரிதரு திறலினன் புலவர்க் கருந்துணை

கத்திய நடையொடு பத்திய நடையினால்
அழகுற வியற்றப் பழகிய குருநில்
55 தமிழ்மொழி நாளுந் தழைத்திட வெண்ணி
அன்பரைக் கொண்டே யின்புற வவணவண்
பாட சாலைகள் பலவமைத் தவற்றைப்
பாலனஞ் செயப்புரி சீலம துடையோன்
அவமகன் மேலைச் சிவபுரி யவைக்கண்
60 இவையும் பிறவு மியல்பா வமைந்தமை
கண்டித மணிபல பண்டித ரளித்த
பண்டித மணியெனும் பட்டம் பெற்றோன்
சிவனடி யவரைச் சிவனென மதிக்கும்
மாசிலாப் புகழ்க்கதி ரேசன்
65 என்னும் பெயர்கொண் டிலங்குசீ ரியனே.

இராமநாதபுரம் ஸேதுஸம்ஸ்தான மஹாவித்வான்

## ஸ்ரீ. உ.ப. வே. ரா. இராகவையங்காரவர்கள்

இயற்றியவை.

---

எண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.

திருவி ளங்குமெவ் வுலகி னுந்திகழ்
    சீர்வி ளங்குதண் ணாவ லஃபொழிற்
றருவெ னுஞ்சண பதும னைத்தினுந்
    தனியு யர்ந்தது நனிசி றந்தது
பொருவ ருப்புக ழுறநி றைந்தது
    புனித சேதுநா டதும லர்ந்ததோர்
மரும ணங்கமழ் மலரை யன்னது
    மகிமை நீண்மகி பாலன் மாநகர்.

சோழ ரிற்கரி கால னாதியர்
    சூழ் வித்தரை யாளு நாண்முதல்
வாழ்வு மிக்கபு கார்ந கர்க்குல
    வணிகர் மக்கணன் மரபி னந்நகர்க்
காழ்க டற்பெரு வளையி னிற்படு
    மரிய முத்தினிற் றெரிய வுற்பவித்
தேழ்பு விக்குமின் னமிழ்தெ னச்சுவை
    யியலு நற்றமிழ் பயிறன் மேவியே.

விளையு நன்பயிர் முளையி னேமிகும்
    விதமெ னத்திருக் குறளி னேதிளைத்
தளவி னல்லிசைப் புலவர் பாடிய
    வகப்பொ ருள்புறப் பொருளெ லாமடுத்
துள்நி லாயதொல் காப்பி யத்துள
    வொட்ப முற்றவு நுட்ப மோடிகண்
டிளமை யிற்றெருண் முதுமை யெய்தியெற்
    கின்ப மேபெரு கன்ப னாகியே.

சோதை நல்லிளங் கோவி எம்பிசை
கூர்சி லப்பதி கார நுண்மையுந்
தீதி லாமணி மேக லைத்தமிழ்
செப்பு நுண்மையு மொட்ட வாய்ந்துகொண்
டோது மூவர்தே வார மும்பொரு
ளூற்று ணர்ந்துமா ணிக்க வாசகர்
காத லார்திரு வாச கச்சுவைக்
கனியு டன்றிருக் கோவை யுண்டுமே.

தப்பி லாத்திருத் தக்க தேவர்சிந்
தாம ணிப்பொருள் காமு றத்தெளிந்
தொப்பி லாத்தமிழ்க் கம்ப நாடர்தம்
மொண்க வித்திறத் திண்பொ ருட்படிந்
திப்ப ரேபெருங் குடிய ரேயெனு
மெவரு நெஞ்சுவந் துவகை விஞ்சவா
னப்ப ருமுடிக் கடவு ளுக்குளத்
தன்பு கூடிநல் லின்பு நீடியே.

தொண்டர் சீரிசை குன்றை யூரர்சொல்
தூய பத்திமைச் சுவைய ளைந்துமெய்.
கண்ட தேவனு ராதி யாங்கிகழ்
கடவுண் மாதவர் நடவு சைவநூல்
விண்ட நுண்மையுங் கண்டு தேறிநன்
மேதை யிற்றலை யாகி நின்றுதா
னுண்ட வின்பமிவ் வுலக முய்பெற
வொள்ளி தாயதன் னுள்ள வாவியே.

உயர்கு லத்துநல் வணிகர் வாழ்பல
வூரெ லாம்புகுந் தாரு மின்புற
மயர்வ றுக்குமின் மதுவெ னத்தமிழ்
மழைபொ ழிந்தவர் தழைவ துள்ளியே
யயர்வெ ளைத்துமின் முயற விற்சிறந்
தறிவு வைத்தபல் கழகம் வைத்துவெர்
துயர்வி ளைப்பதில் பொருளி தைப்பல
துறையி லும்விழைந் துறைய நட்டபின்.

பொருள்வி ளைத்தவர் திரளி டைப்பலர்
புலவ ருக்கவ ருபக ரித்தல்செய்
தருள்வி ளைக்குநன் னெறியி தென்றவர்க்
கறிவு றுத்தவர்க் கறம்வ ளர்ப்பவ
னிருள றுத்தநல் லவைதொ றுந்தலை
யிடனு றச்சிறந் திவணை யீன்றவர்
மருள றுத்தவெம் மலையி னிற்றவ
மன்னி னார்கொலோ வென்ன வாழ்வனாய். ௮

பாச காளிதா சாதி யோர்புகல்
பனுவ னுட்பமுந் தினம டுப்பனாய்
மாசி லாதநன் ஞான வாரியாய்
மருவு மாரியத் தருமை யுந்தெளிந்
தாசில் பண்டித மணியெ னச்சிறந்
தலகி லாவொளி யிலக வீசிய
தேசி னிற்கதி ரேச னென்றிவண்
செகமெ லாஞ்சொல மிகநி லாவுவோன். ௯

மருள்பெ யர்க்குறுங் கலைவ ளர்ப்பதே
மதிப டைத்ததன் பயனெ னத்தெளிந்
திருள்பெ யர்க்குறு மாரி யத்தொளி
ரினிதெ லாந்தமி ழுணிவ தாயெணி
யருள் பெயர்த்தலை லுசாந சக்கவி
யகம் டைத்தநற் றுணிபு முற்றவும்
பொருள்பெ யர்த்திலன் மொழிபெ யர்த்தனன்
புலமை யைப்புவி புகழ்த றக்கதே. ௧௦

# ஆராய்ச்சி மதிப்புரை.

சென்னை நியாய கலாசாலைப் பேராசிரியர்

**திருவாளர் - கா. சுப்பிரமணிய பிள்ளை M. A., M. L.**

அட்வொகேட் அவர்கள் எழுதியது.

சுக்கிரநீதி யென்னும் இவ்வரிய நூல் அரசியற்குரிய நன்முறைகள் யாவற்றையும் விளக்குவான் இரண்டாயிரத்திருநூறு சுலோகங்களால் அமையப்பெற்றுள்ளதோர் வடநூலின் மொழிபெயர்ப்பாகும். "மூன்றுலகங்களிலும் இந் நீதிநூலுக் கொப்பான நூல் வேறில்லை" யென்று இதன் நான்காவது அத்தியாயத்தின் முடிவில் கூறிய தொரு புறமிருப்ப, தற்காலத்திலே சாணக்கியருடைய அர்த்த சாத்திரத்தையும் அதன் சுருக்கமாகிய காமந்தகநீதி என்னும் நூலையும் இதனோடு ஒத்துப்பார்த்த வங்காளக் கலைநிபுணராகிய பினோய்க்குமார சர்க்கார் M.A. என்பார் அவற்றினும் இதுவே மிகவும் விரிவாகவும் விளக்கமாகவும் இந்திய அரசியல் நாகரிகத்தைக் கூறும் பெருநூலென்று மொழிந்தமை உற்றுநோக்கத்தக்கது. அவர் இந்நூலைப் பல்லாற்றானும் வகுத்து வகுத்து ஆய்ந்து கண்ட முடிபுகளை ஆங்கிலத்தில் "சுக்கிரநீதித் தோற்றுவாய்" அல்லது "இந்திய சமுதாய வாழ்க்கை யடிப்படை" என்னும் நூலில் வெளியிட்டுள்ளார். அதனுட் போந்த பல காரணங்களால் சுக்கிரநீதி என்பது கீழை இந்திய நாட்டில் ஒரு தக்க அறிஞரால் செம்மையாய் அரசியல் இவ்வாறிருத்தல் வேண்டுமென்று தனதுள்ளவிலாசத்திற் கண்ட முறையில் எழுதப் பெற்ற நூலென்று ஊகிக்கப்படுகின்றது.

ஆதியில் கிரேக்க நாட்டில் பிளேட்டோ என்னும் பேரறிஞரும் சுமார் ஐந்நூறு ஆண்டுகட்குள்ளாக ஆங்கிலநாட்டில் மூர், ஆரிங்டன் என்னும் இரு பெரும் புலவரும் இது போன்ற நூல்கள் இயற்றியுள்ளார்கள். இந்நூல் எழுதிய காலம் வங்காளத்தில் பாலர் என்னும் அரசரும், தென்னாட்டில் இராஜராஜன் முதலிய சோழரும் அரசாண்ட காலம் என்பது பல குறிப்புக்களால் அறியக்கிடக்கின்றது.

அக்காலம் பத்தாவது அல்லது பதினோராவது நூற்றாண்டு ஆகும். கி.பி. எண்ணூறு முதல் ஆயிரத்திருநூறுவரை உள்ள காலப் பகுதியே வங்காளத்தில் தந்திர நூற் காலம் எனப்படும். இத் தந்திர நூற் காலத்திலேதான் அகத்திய மதம் என்னும் நூலுள் நவக்கிரகம் அல்லது ஒன்பது கோள்களைத் திருத்தி செய்தற்பொருட்டு நவமணிகளைப் பயன்படுத்த வேண்டுமென்ற குறிப்புக் காணப்படுகின்றது. பத்தாவது நூற்றாண்டில் எழுந்த விஷ்ணுதருமோத்தரபுராணம் என்பதனுள் நவமணிகளே மகாரத்தினங்கள் என்று கூறப்பட்டிருக்கின்றன. அக்காலத்தில் ஸ்ரீபதி என்னும் வானநூல் வல்லாரால் இயற்றப்பட்ட ஜோதிஸ் ரத்தினமாலை என்னும் நூலுள் நவமணிகளைக் கோள்களுக்கு உகந்தனவாகக் கூறியவண்ணமே சுக்கிரநீதியுள்ளும் கூறப்படுகின்றது. இத் தந்திர நூற் காலத்திற்கு முன்புள்ள நூல்களுள் வராகமிகிரருடைய பிருகத்சம்ஹிதாவில் இருபத்திரண்டுக்கு மேற்பட்ட மணிகள் குறிக்கப்பட்டிருப்பினும் அவற்றுள் ஐந்தே விதந்தோதப் பட்டன. தந்திர நூற்காலத்திற்றான் ஒன்பது மணிகள் ஒன்பது கோள்கட்குச் சிறந்தன என்ற கருத்து நிலைபெற்றது. அங்ஙனம் நிலைபெற்ற கருத்தே சுக்கிரநீதியுட் காணப்படுதலின் அஃது அக் காலத்த தென்பது ஊகிக்கப்படும். இன்னும் அக்காலத்திற்றான் திருமால், சிவபிரான், கணபதி, சூரியன், அம்பிகை என்னும் ஐந்து தெய்வங்களையும் ஒருங்கு வழிபடும் தந்திரவழக்கம் வடநாட்டில் ஏற்பட்டதென்று தந்திரதத்துவம் என்னும் நூலின் முகவுரையிற் கூறிய காரணங்களால் தெரியக்கிடக்கின்றது. (இத்தந்திர தத்துவத்தின் ஆங்கில மொழிபெயர்ப்பு ஸர் ஜான் உட்ராவ் என்னும் கல்கத்தா ஹைகோர்ட்டு நீதிபதியால் வெளியிடப்பட்டுள்ளது.) அவ்வழிபாட்டு முறையே சுக்கிரநீதி நாலாவது பிரகரணத்துள் 63-வது சுலோகத்தில் கூறப்பட்டது காண்க. சாணக்கியரது அர்த்த சாத்திரத்தில் நகரத்தினடுவே அபராஜிதர், அப்பிரதிகதர், ஜயந்தர், வைஜயந்தர், சிவன், வைசிரவணன், அசுவினிதேவர் என்னும் இவர்கட்குக் கோயிலும், மதுகிரகமும் (கள்வீடும்) இருத்தல் வேண்டுமென்று கூறப்பட்டிருத்தல் காண்க. இதனாலும் சுக்கிரநீதி தந்திர நூற் காலத்த தென்பது தெளியப்படும். மேலும் அக்காலத்திலே சோழரது ஆட்சி இமயமலையடிவரையில் பரவியிருந்ததாகவும், திருக்குறள் முதலிய தமிழ்நூல்

களின் விழுமிய கொள்கைகளும், தமிழ்நாட்டு மருத்துவநூலிற் கூறப்படும் உலோக நீற்றுமுறைகளும் வடநாடெங்கும் பரவியதாகவுந் தெரிகின்றோம். இந்நாட்டில் ஆங்கிலக்கருத்துக்கள் ஆங்கில அரசாட்சி காரணமாக நிலவுவதொப்பத் தமிழரசாது ஆட்சி வடநாட்டில் நிலைபெற்றிருந்த காலத்தில் தமிழ்நூற் கருத்துக்களும் ஆண்டு நிலவியிருத்தல் இயல்பே. அக்காலத்து எழுந்த வங்கநாட்டுத் தந்திரங்களிலே விரிந்த நோக்கங்கள் தோன்றித் திகழ்ந்தன வென்றும், அக்கருத்துக்கள் வைதிகக் கிரியாநூலுட் காணப்படும் ஒடுங்கிய கருத்துக்களுக்கு முரணானவை என்றும் ஆனரபிள் ஸர் ஜான் உட்ராவ் மேற்கூறிய தந்திரதத்துவம் என்னும் நூலின் முகவுரையுட் கூறியுள்ளார். சுக்கிரநீதியுள் தமிழ்நாட்டு உயரிய கருத்துக்கள் காணப்படுதற்கு உதாரணம் வருமாறு:—“பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமை யான்” என்ற திருக்குறளின் கருத்தே சுக்கிரநீதியுள் முதலத்தியாயத்து 38,39-வது சுலோகங்களில் காணப்படுகின்றது. அவை வருமாறு:—“இவ்வுலகத்து அந்தணராதலும் அரசராதலும் வணிகராதலும் சூத்திரராதலும் மிலேச்சராதலும் பிறப்பினால் இல்லை. குணஞ் செயல்களாலே வேறுபடுத்தப் பட்டனர்.” “பிரமனிடத்துத் தோன்றியதுபற்றி எல்லோரும் எங்ஙனம் பிராமணராவர்! சாதியினாலும் தாய்தந்தையராலும் பிராமணத்தன்மை எய்தற்பாலதன்று.” இவ்வாறே இந்நூலுட்போந்த ஊழைப்பற்றிய கொள்கையும் திருக்குறட்கருத்தோடு பெரிதும் ஒற்றுமையுடையதே. அரச அங்கங்களைப்பற்றிச் சுக்கிரநீதி பகர்வது திருக்குறட் கருத்தே. அதன் முதல் அத்தியாயம் 61-வது சுலோகத்தில் திருவள்ளுவ நாயனார் கூறிய ஆறு அங்கங்களோடு அரசையும் சேர்த்து அரசியற்குரிய அங்கங்கள் எழென்று சுட்டப்பட்டது. சாணக்கியரும் இவ்வாறே சொற்றனர்.

சுக்கிரநீதியையும் திருக்குறளையும் ஒப்பிட்டுப் பார்ப்போர் திருக்குறள் கி. பி. இரண்டாவது நூற்றாண்டுக்கு முந்திய நூலென்றும், சுக்கிரநீதி கி. பி. பத்தாவது நூற்றாண்டில் எழுந்த நூலென்றும் அறிந்துகொள்ளற்பாலர். தென்னாட்டுக் கருத்தைப் பெரிதும் தழுவிக் கூறும் காரணத்தினாலே சுக்கிரநீதி என்னும் நூல் அப்பெயர்த்தாயிற்றுப்போலும்.

சிறந்த அரசநீதிகளைத் தொகுத்துரைப்பான் புகுந்த ஆரிய ஆசிரியர் தமது நூலைத் தேவகுருவின் பெயரால் வியாழநீதி என்னுது அசுரகுருவின் பெயரால் சுக்கிரநீதி என்றது உற்றுநோக்கத்தக்கது. அசுரருள் தலையாயவன் சூரபன்மன். அவன் ஆண்ட இடம் தென்கடலிடை நிலவந்த வீரமகேந்திரம். அவனது குருவின் பெயரே சுக்கிரர். இதனாலும் சுக்கிரநீதிக் கருத்துக்கள் தென்னாட்டுக் கருத்துக்கள் என்பது ஒருவாறு ஊகிக்கப்படும்.

திருக்குறள் சுருக்கமாகக் கூறிய உண்மைகளுக்குச் சுக்கிரநீதியுள் விளக்கமாகிய உதாரணங்கள் கிடைக்கின்றன. அரண் அதிகாரத்துள் "உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கின், அமைவர ணென்றுரைக்கு நூல்." என்றதன் விளக்கத்தைச் சுக்கிரநீதி முதல் அத்தியாயம் 238-வது சுலோகத்துட் காண்க. "எல்லாப் பொருளுமுடைத்தா" யென்றதற்கேற்ப எல்லாவகைப் பொறிகளும், எல்லாவகைப் படைகட்கும் இருப்பிடமும், எல்லாப் பொருள்கட்கும் பண்டசாலையும் அரணுள் அமைத்தல் வேண்டுமென்று சுக்கிரநீதியார் கூறுவாராயினர். முதல் அத்தியாயம் 248 முதல் 258 வரை காண்க.

அரசற்குக் கண்ணோட்டம் வேண்டு மென்பது "ஒறுத்தாற்றும் பண்பினார் கண்ணுங்கண் ணோடிப், பொறுத்தாற்றும் பண்பே தலை." என்பதனாற் பெறப்படும். இப் பொருளுண்மையை உட்கொண்டு சுக்கிரநீதியாரும் நாடிழந்த பகைவர்க்கு வாழ்க்கைநிமித்தம் பொருளுதவும் முறைகளை நாலாவது அத்தியாயம் ஏழாம் பிரகரணத்துள் 397 முதல் 401 வரை உள்ள சுலோகங்களால் விளக்கியுள்ளார்.

இவ்வாறே பல பகுதியுள்ளும் கண்டுகொள்க. சிலவிடங்களில் இரு நூற் கருத்துக்களுக்கும் ஒரு சிறிது வேறுபாடு காணப்படும். இறைமாட்சியுள் "அஞ்சாமை யீகையறிவூக்கமிந்நான்கும், எஞ்சாமை வேந்தற் கியல்பு." "கொடையளி செங்கோல் குடியோம்ப னான்கு முடையானாம் வேந்தர்க்கொளி." என்ற குறட் கருத்துக்களை முதல் அத்தியாயம் 124-வது சுலோகத்திலும் பிறண்டும் அமைத்திருத்தல் காண்க. இச்சுலோகத்துள் தீயோரை ஒறுத்தலாகிய செங்கோன்மையும், குடியோம்புதலும், ஈகையும் கூறப்பட்டன. அளி என்பது பகைவர்க்கிரங்குதல்; அது மேற்சுட்டினும். ஊக்க மென்றதனையே பொருளீட்டுவதாகச் சுலோகம் மொழிகின்றது. அறிவு என்பதனைக்

குணங்குற்றங்களை யறிதல் என்னும் பொருட்டாகக் கொண்டு பல ச்லோகங்க ளடங்கிய ஓர் பிரிவாக வகுத்தனர் நீதிநூலார். அஞ்சாமை என்பதனையே பகைவரைத் தொலைத்தலும், மேன்மேலும் நிலப்பகுதி கோடலு மாகிய இரு செயல்களாக அவர் கூறிப் போந்தனர். கொடை என்பதனை அவர் வேள்வியாகக் கருதினர் போலும். இறைமாட்சியுள் வேள்வி அரசன் கடமையாகக் கூறப்படவில்லை. ஆனால் சுக்கிரநீதியுள் இராஜசூயம் முதலிய வேள்விகளை வேட்டல் அரசனுடைய தொழில்களுள் ஒன்றாக வைத்து எண்ணப்பட்டது. (வறியவர்க்குக் கொடுத்தல் ஈகை; தக்கார்க் கீதல் கொடை என்ப.)

அரசன் கடுஞ்சொல்லனாயிருத்தல் கூடாதென்று சுக்கிரநீதி நன்கு தெரிக்கின்றது. காட்சிக்கு எளியனாதல் வேண்டுமென்று அது குறிப்பதாகத் தெரியவில்லை. இவ்விரண்டும் ஒருங்கே இறைமாட்சியுள் கூறப்பட்டது காண்க. "காட்சிக் கெளியன் கடுஞ்சொல்லனல்லனேல், மீக்கூறு மன்ன னிலம்." பிறவும் அன்ன. இதனால் திருக்குறட் பொருட்பாலினை ஆராய்தற்குத் தக்கதோர் கருவிநூலாகச் சுக்கிரநீதி அமைகின்ற தென்பதனைத் தமிழறிஞ ருணர்ந்து அதனைப் பாராட்டுவாராக.

இனிச் சுக்கிரநீதியுட் போந்த பொருள்களை ஒருவாறு தொகுத்துச் சுட்டுதும். இந்நூல் ஐந்து அத்தியாயமுடையது. முதல் அத்தியாயத்தின் ஒரு பகுதியுள் நீதிநூலறிவு பொதுவாக மக்களது ஒழுக்கங்கள் நிலைபெறுவதற்கும் சிறப்பாக அரசியன்முறை தழைப்பதற்கும் இன்றியமையாத தென்பதும், முக்குணங்களால் அரசர் மூவகைப்படுவரென்பதும், ஊழ் முயற்சி யென்னும் இரண்டனுள் முயற்சியையே சிறப்பாகக் கைக்கொள்ளவேண்டுமென்பதும், அரசியற்குரிய அங்கங்க ளின்ன வென்பதும், அரசனென்பவன் அயன் இந்திரன் வாயு இயமன் ஞாயிறு தீ வருணன் மதி நிதிக்கிழவன் என்பாருடைய கூறுகளையுடையான் என்ற கொள்கையின் விளக்கமும், குடிகளுக் குதவு முகத்தால் அவன் அவர்கட்குத் தந்தை தாய் ஆசிரியன் உடன்பிறந்தார் உறவினன் குபேரன் இயமன் என்னும் எழுவரைப்போல்வானென்பதும், அரசர்க்கு ஐம்பொறியடக்கத்தின் இன்றியமையாமையும், இருமனப்பெண்டிரும் கள்ளும் கவறுமாகியவற்றால் பெருந்தீங்கு விளையுமென்பதும், அரசனுடைய அறிவும் செயலும் இனையவென்ப

தும், குடிகளைத் துன்புறுத்தாமல் இறை கொள்ளும் தன்மைக்கும் வருவாயின் அளவிற்கும் அதிகார அளவிற்கும் ஏற்ப அரசர் பல் வகைப்படுவரென்பதும் கூறப்பட்டன.

பின்னர் நிலத்தின் அளவு வகைகள் கூறப்பட்டுள்ளன. கிராம மென்பது ஒரு குரோச அளவுள்ளதும் ஆயிரங் கருடம் அளவுள்ள வெண்பொற்காசுகள் அரசிறையாகப் பெறத்தக்கதும் ஆம் என்றும், ஒரு குரோசம் 5000 முழம் ஆகு மென்றும் விளக்கப்பட்டன. இத னால் ஆதியில் எவ்வளவு அளவுள்ள இடத்தைக் கிராம மென்றார்கள் என்பது தெரியும். அங்குலம், கோல், நிவர்த்தனம், பரிவர்த்தனம், புயம் முதலியவைகளுக்கு இலக்கணம் செவ்வையாகக் கூறப்பட்டுள் ளது. இவை தமிழிலே கணிதநூலினும், சோதிடப்பகுதியான இரேகைநூலினும் விரிவாக விளக்கப்பட்டுள்ளன.

பின்னர் அரச நகர் அமைப்பும், அரண் அமைப்பும், அரசவீதி யமைப்பும் மிகவும் அழகாக நவிலப்பட்டுள்ளன. இப்பகுதி சிலப் பதிகார முதலிய சங்கநூல்களில் காவிரிப்பூம்பட்டினம் மதுரை முத லிய நகர்கட்குக் கூறிய வனப்பை நினைவூட்டுகின்றது. அறச்சாலைகள் வழிச்செல்வோர்க்கே ஆதியில் அமைந்ததாகவும், புதிதாக வருபவரை நன்கு உசாவி அவருக்குத் தங்குமிடங்களை அதிகாரிகள் உதவினதாக வும் 270 முதல் 274 வரையுள்ள சுலோகங்களால் அறிகின்றோம். தற்காலத்தில் புதுநகர் அமைப்பினைப்பற்றி ஆங்கிலவாணர் கூறும் முறைகளும் இப்பகுதியோடு ஒத்துப்பார்க்கத்தக்கன.

பின்னர் அரசர்கள் நாடோறும் நேரத்தைப் பலபடப் பகுதி செய்து ஒவ்வொரு பொழுதிலும் செய்யவேண்டிய கடமைகளையும், குடிகளது நன்மையின்பொருட்டு அவர்கள் விதிக்கவேண்டிய கட்டளை களையும், அவ்விதிகளை யாவர்க்கும் வெளிப்படுத்து முறையினையும், போர்புரிதல், வேட்டை, விளையாடல், ஒற்றுடல் முதலியவற்றின் இயல்புகளையும் கற்பார்க்கு இன்பந்தரும்வண்ணம் விளக்கியிருத்தல் காண்க.

நஞ்சுகலந்த உணவைச் சோதிக்கும் உபாயம் பிறவுயிர்க்கு இறுதி செய்யாத நலமான முறையிற் சுட்டப்பட்டது. நச்சுணவைக் கண்ட வுடன் அன்னம் வண்டு மயில் முதலியவைகள் இன்ன இன்ன செயல்

களைக் கீட்டும் என்று அறிவுறுத்தினமை காண்க. இந்நூல் விழுமிய நோக்கமுடையதாகலின் வேட்டையாடல் பிறவுயிர்க்குத் துன்பம் விளைத்தல்பற்றி நல்லதன்றெனக் கூறுகின்றது. அரசியற்குரியாரைத் தெரிந்தெடுத்தலும், அரசவை யமைப்பும், அரசுரிமை யுடையாளங் களைக் காத்தலும் செவ்வையாகக் கூறப்பட்டுள்ளன. குடிகளுக்கு எல்லாவிதக் கல்விகளையும் பயிற்றுவித்தல் வேண்டுமென்ற கருத்தும், நெடுந் தூரத்திலுள்ள செய்திகளை விரைவில் அறிந்துகொள்ள வேண்டுமென்ற கருத்தும், அரசன் உவகையும் சுறுசுறுப்பும் படைக் கலப் பயிற்சியும் உடையனாதல் வேண்டுமென்ற கொள்கையும் பாராட் டத்தக்கன. அரசிலக்கணங்களில்லாத அரசன் புலவர்களால் நாயோ டொப்ப வைத்து எண்ணப்படுவா னென்றுங் கூறப்பட்டது. அரசன் கற்புடைய இல்லாளோடு இன்புறுதலன்றிப் பிறன்மனை நயத்தல் கூடாதென்பதும், அவன் நிலைகுலைதல் பற்களும், மயிர்களும், உகிர் களும் தமக்குரிய இடம்விட்டுப் பெயர்தலை யொக்கும் என்ற கருத் தும் உற்றுநோக்கத்தக்கன. "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர், நிலையி னிழிந்தக் கடை." என்பது திருக்குறள். "ஊழின் வலியால் தன் முயற்சி யனைத்திற்கும் பயன் காணுதவழி ஒருவன் தவஞ்செய்து மேலுலக மெய்தக்கடவன்" என்று கூறும் பகுதி பண்டைத் தமிழ ரசருட் சிறந்த வீரர் தமது முயற்சி கடைபோகாவழி வடக்கிருந்த வழக்கத்தை நினைப்பூட்டுகின்றது.

இனி, இரண்டாம் அத்தியாயத்துள் அரசனுக்கு நன்னட்பினு லாம் நன்மையும், தீநட்பினுலாந் தீமையும் முதற்கட் கூறப்பட்டன. இளவரசிற் குரியா ரின்னு ரென்பதும், அவர் கடமையும், அரசன் அவரையும் மற்றை ஞாதிகளையும் நடத்தும் முறையும் விளக் கப்பட்டன. "இதனை யிதனா லிவன்முடிக்கு மென் றாய்ந், ததனை யவன்கண் விடல்" என்ற திருக்குறளாற் பெறப்படும் கருத் துக்களனைத்தும் இந்நூலுள் அமைச்சர், புரோகிதர், பிரதிநிதி, சேநா பதி, யானைப்பாகன், படைத்தலைவர், சத்திரத்தலைவர், பரீக்கைத் தலைவர், தண்டத்தலைவர் முதலியோரதிலக்கணங்களையும் அவரை யாய்ந் தலமைக்கு முறைகளையும் கூறும் பகுதியுள் விரிவாகக் காணப் படும். அமாத்தியன், அமைச்சன், மந்திரி முதலியோர்களுக்கு வெவ் வேறு கடமைகள் இதனுட் கூறப்பட்டன. இப் பகுதி அக் காலத்து

அரசமைப்பில் இத்துணை அதிகாரிகளும் தொழிலாளர்களும் இருந்தன ரென்று அறிதற்குப் பெரிதும் பயன்படுகின்றது. அக் காலத்தில் உரிமைகளைப் பாதுகாக்க ஆவணங்க ளெழுதப்பட்டன வென்றும், அவைகள் ஆஞ்ஞாபத்திரம் பிரஞ்ஞாபனபத்திரம் சாசனபத்திரம் பிரசாதபத்திரம் முதலிய பலவகைப்பட்டு வழங்கின வென்றும், அரசனுக்குரிய வரவு செலவு கணக்குகள் எழுதிவைக்கும் முறை இன்ன வென்றும், அரசன் முதலிய அதிகாரிகள் பத்திரங்களை ஒப்பிட்டுக் கையெழுத்திடுமுறை இன்ன வென்றும் இவ் வத்தியாயம் விதந் தோதுகின்றது. எண்ணலளவைக் குறியீடுகளும், சாந்திரம் சௌரம் சாவனம் என்னும் கால வளவைகளும், மாதச்சம்பளங் கொடுத்தல் கடன் கொடுத்தல் நாட்கூலி கொடுத்தல் முதலியவற்றிற்கு முறையே வெவ்வேறு காலவளவைகள் பயன்பட்டன வென்பதும் இவ் வத்தியாயத்துள் விளக்கப்பட்டன.

இனி, மூன்றும் அத்தியாயத்துள் எல்லார்க்கு முரிய ஒழுக்க முறைகள் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. கல்வியினாலும் வீரத்தாலும் பொருளாலும் உயர்குடிப்பிறப்பாலும் வலிமையாலும் மானத்தாலும் ஒருபொழுதும் செருக்குறலாகா தென்றும், அங்ஙனம் செருக்குறு வார்க் கின்ன தீமை விளையுமென்றும், கல்வி முதலியவற்றின் பயன் இன்னவென்றும் கூறும் பகுதி மிகவும் அழகுற அமைந்துள்ளது. குடிகள் தமது வாழ்க்கையை நயம் பெற நடத்திக்கொள்வதற்கு இவ் வத்தியாயத்துட் கண்ட விதிகளைக் கற்றல் இன்றியமையாதது. உலகவாழ்க்கையில் உடல் நலமும் ஒற்றுமையும் எய்துதற்குரிய பல நற்பழக்கங்கள் இதன்கண் விதந்தோதப்பட்டன. திருவள்ளுவர் பொதுவாகக் கூறிய உண்மைகளின் நயம் இவ்வத்தியாயத்திற் கூறிய சிறப்புவிதிகளால் நன்கு விளங்கும். தமிழில் ஆசாரக்கோவை முதலியவற்றுள்ளும், சைவசமய நெறி முதலிய நூல்களிலும் கூறப்படும் ஒழுக்கவிதிகள் இவற்றோடு ஒத்துப் பார்க்கத்தக்கன.

இனி, நான்காம் அத்தியாயம் முதற்பிரகரணத்துள் இயற்கை நண்பர், செயற்கைநண்பர், இயற்கைப்பகைவர், செயற்கைப்பகைவர் என்னும் இவர்களினிலக்கணமும், இவர்கள்மாட்டுச் சாம பேத தான தண்டங்களை மேற்கொள்ளு முறையும் கூறப்பட்டன. பின்னர், தண்டத்தின் வகையும் பயனும் கூறும் பகுதியுள் அக்காலத்துத் தண்டோர்

பாயங்கள் சிறைப்படுத்தல் அடித்தல் அபராதப்பணம் விதித்தல் கடு மொழி கூறல் மானக்கேடு செய்தல் உறுப்புக்குறைத்தல் கொலைபுரி தல் என்பனவா மென்றறிகின்றோம். "கடிதோச்சி மெல்ல வெறிக" வென்பதன் கருத்தும் ஆண்டு விளக்கப்பட்டுள்ளது. அரசன் உள் ளத்தே யிரக்கமும், புறத்தே வன்கண்மையு முடையனாய்த் தன் குடி களை யொறுத்தல் வேண்டு மென்றது காண்க. குணத்தாலும் குலத் தாலும் பொருளாலும் வேறுபடுவார்க்கு வேறு வேறு தண்டங்கள் அக்காலத்து விதிக்கப்பட்டன வென்றறிகின்றோம். உயிர்களைக் கொலை செய்தலாகாதென்று வேதங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன வென் னும் 93-வது சுலோகத்தில் உயிர்க்கொலை என்பதற்கு மக்கட்கொலை என்றுதல், வேள்வி யொழிந்த பிறவிடத்துக் கொலை யென்றுதல் பொருள் கொள்ளவேண்டும். வேதங்கள் என்பதற்கு உயர்ந்த நூல்க ளென்ற பொருளே கொள்ளற்பாலது.

இரண்டாம் பிரகரணத்துள், கருவூலம் அமைக்கின்ற முறையும், கருவூலப்பொருளைப் பயன்படுத்து முறையும், சற்பாத்திரமாவார் இன்னரென்பதும், அசற்பாத்திரமாவார் இன்னரென்பதும், பொரு ளைச்சேர்க்குமுறை பற்றி அரசர் தலையாயார் இடையாயார் கடையாயா ரெனப்படுவரென்பதும், தானியங்களைத் தொகுத்து வைக்கு முறை யும் முதற்கட் கூறப்பட்டன. பின்னர் நவமணிகளின் "இலக்கணங் கூறுமிடத்து ஆசிரியர் வயிரமே எல்லாவற்றிற்கும் சிறந்ததென்றார். முத்துக்கள் தோன்றும் இடமும் அவற்றைச் சோதிக்கு முறையும் இதனுள் இனிது கூறியுள்ளார். இரத்தினங்களுக் குரிய நிறுத்த லளவைகளும் விரித்தோதப்பட்டன. பின், பொன் முதலிய உலோ கங்களைச் சோதித்து அவற்றிற்கு விலை ஏற்படுத்து முறையும் இப் பிரகரணத்துள் கூறப்பட்டுள்ளது.

மூன்றும் பிரகரணத்துள் பிரமனால் தொழில் பற்றிச் சாதிகள் வகுக்கப்பட்டன வென்பதும், இழிதொழில் காரணமாகச் சாதிக்குப் பங்க மேற்படுமென்பதும், நான்கு வருணத்தார்க்குரிய தொழில்கள் இன்ன வென்பதும் விளக்கிய பின்னர் வேதமுதலிய முப்பத்திரண்டு வித்தைகளினியல்பும், தொழிற்றிறனமைந்த அறுபத்துநான்கு கலை களினியல்பும் இப் பிரகரணத்துள் கூறப்பட்டுள்ளன. வித்தையென்

பது ஆங்கிலத்தில் (Science) சயின்ஸ் என்னும் சொற்பொருளை ஒரு வாறு விளக்குவதாகவும், கலை என்பது (Art) ஆர்ட் என்னும் சொல் லின் பொருளை விளக்குவதாகவும் தோன்றுகின்றது. வித்தையென் பது அறிவுநூலாகவும், கலை என்பது செய்கைநூலாகவும் கொள்ளு வது இழுக்காது. இங்குக் கூறப்பட்ட கலைகள் பிழைப்பின் பொருட் டுச் செய்யப்படும் பலவகைத் தொழில்களைக் குறிப்பனவே யன்றி அனற்கட்டு புனற்கட்டு முதலியனவாகக் கூறப்படும் அதிசயக் கலைக ளல்லவா மென்றுணர்க.

இனி நான்காம் அத்தியாயம் நான்காம் பிரகரணத்துள் நால்வகை ஆச்சிரமங்கட் குரிய விதிகள் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளன. மக ளிர், சூத்திர ரென்பாரது கடமை விதந்தோதப்பட்டன. யவன ரென்பார் நால்வகை வருணத்தாரின் வேறாய்த் தமக்கென வேறு மத நூல்களும் நீதிநூல்களு முடைய ரென்பது குறிக்கப்பட்டது. இவர் கள் வடதிசை மேற்றிசைகளில் இருப்பதாகத் தெரித்தமையின் இந் திய நாட்டுக் கப்பாலுள்ள பாரசீகர், கிரேக்கர், துலுக்கர் முதலி யோரை யவன ரென்ற சொல் சுட்டிய தென்றுணர்க. "சிறப்புப் பிறப்பாலன்று; குணத்தாலாம்" என்றதற்கும் இதனுள் உதாரணங் கள் கூறப்பட்டன. சிற்பி முதலிய தொழிலாளரைக் காக்கவேண்டு மென்று கூறியவிடத்துக் கட்கடை ஊருக்கு வெளியே இருக்கவேண்டு மென்றும், எம் மனிதனும் பகற் காலத்தில் கட் குடித்த லாகாதென் றும் விதிக்கப்பட்டது. பின்னர், பொழில்க ளமைக்கு முறை கூறி யாங்கே திருக்கோயி லமைக்கு முறையும், சாத்துவிகம், இராசதம் தாமதம் எனப்படும் தெய்வத் திருவுருவங்க ளமைக்கு முறையும், அவற்றினளவும் விதந்தோதப்பட்டன. தெய்வங்களுக்கு ஊர்தி க ளியற்று முறையும் சுருக்கமாகக் கூறப்பட்டது. ஆகமத்திற் கூறிய படி அமைக்கப்பெற்ற திருவுருவங்களெல்லாம் அழகுடையனவேயாம். அங்ஙனம் அமைக்கப்படாதன வெல்லாம் அழகில்லாதனவாகு மென்றமையால் இப்பகுதி ஆகமத்தைப் பெரிதும் தழுவி நிற் கின்றது.

இனி, ஐந்தாம் பிரகரணத்துள் வழக்காராயு முறையும், நியாய மன்ற மமைக்கு முறையும், நியாய மன்றத்தி னங்கங்களும், வழக்குத்

தீர்த்தற்குரிய விவாதங்களும், நீதிமன்றத்திற்கு அழைக்கப்படத் தக்கவரும் தகாதவரும், பிணைவாங்கு முறையும், முறையீடு எதிர் வாத மென்பவற்றி னிலக்கணமும், ஆட்சி ஆவணம் சாட்சி என்னும் சாதனங்களினியல்பும், வழக்குத்தீர்ப்பு முறைகளும், உலோகங்களை வஞ்சிப்போர்க் கிடுந் தண்ட முறைகளும், பிறவும் ஓதப்பட்டமையால் அக்காலத்துச் சட்ட ஆராய்ச்சிக்கு இப்பகுதி பெரிதும் பயன் படுவ தாகும்.

ஆறும் பிரகரணத்துள் "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்." என்பதன் விரிவுரை காணப்படுகின்றது.

ஏழாம் பிரகரணத்துள் படையியல்பு கூறுமிடத்து அதன் பல வகைகளும் இனிது விளக்கப்பட்டன. தேர், யானை, குதிரை இவற் றினிலக்கணங்களும், குதிரைகளின் நடை வகைகளும், குதிரை எருது ஒட்டக முதலியவற்றின் ஆயுள்வரையறையும், யானை முத லியவற்றை அடக்கிக் காக்கு முறையும், போர்க்குரிய ஆயுதங்களும், ஆயுதங்களுட் சிறப்பாகப் பீரங்கி போன்ற நெருப்புப் பொறிகளும் விவரமாக விளக்கப்பட்டுள்ளன. அம்பு முதலியவற்றாற் செய்யப் படும் போர் தெய்விகமென்றும், துப்பாக்கி முதலிய பொறிகளாற் செய் யப்படும் போர் ஆசுரமென்றும், வாள் முதலிய கைப்படைகளாலும் யாக்கை யுறுப்புக்களாலும் செய்யப்படும் போர் மானவ மென்றுங் கூறியது காண்க. இதனால் தற்காலத்தில் ஐரோப்பியர் செய்யும் போர் ஆசுரமாதல் தெளிக. போர் புரியச் செல்லும் அரசன் வினை வலியும் தன்வலியும் மாற்றான்வலியும் துணைவலியும் ஆய்ந்து செல்லல் வேண்டு மென்று கூறியது மிகவும் பாராட்டத்தக்கது. ஏழாம் பிரகரணத்தோடு நான்காம் அத்தியாயம் முடிவு பெறுகின்றது.

இனி ஐந்தாம் அத்தியாயத்துள் அரசர் வெற்றியின் பொருட் டுக் கைக்கொள்ள வேண்டும் பல உபாயங்களும் தெளிவாக ஓதப் பெற்றன.

இந் நீதிநூன் மொழிபெயர்ப்பு, பொதுக்கொள்கைகளை மாத் திரங் கூறும் திருவள்ளுவர் முதலிய பெரு நூலாராய்ச்சிக்குப் பெரி தும் துணைபுரிவதைத் தமிழறிஞர் நன்குணர்ந்து இதனைப் போற்று தல் வேண்டும். இந்நூன் மூலம் எத்துணை நயமுடைத்தோ அத்

துணை நயமுடைத்து இம் மொழிபெயர்ப்புமெனக் கொள்க. உரை நடையில் மொழிபெயர்ப்பு வடிவிலுள்ள நூல்களனைத்திற்கும் இதுவே தலைமணி நூலாக விளங்குகின்றது. ஆசிரியர் சிவஞான சுவாமிகளது மொழிபெயர்ப்பு நூல்கள் தமிழிலே ஏற்பட்ட காலத்திற்குப் பின் இச் 'சுக்கிரநீதி' மொழிபெயர்ப்பே மிகவும் போற்றத்தக்கதாக அமைந்துளளது. இதற்குக் காரணம் இதன் ஆசிரியராகிய பண்டித மணி. மு. கதிரேசச் செட்டியாரவர்களது இணையற்ற தென்மொழி வடமொழித் தேர்ச்சியேயாம். இக்காலத்தில் இவரைப்போல இரு மொழியிலும் நுண்மாணுழைபுலமுள்ள கலைஞரைக் காண்டல் அரிது. தமிழில் இன்னும் மொழிபெயர்ப்பு இயற்றக் கருதுபவர்கள் இவ்வாசிரியரையே தங்கட்குத் தக்கதோர் வழிகாட்டியாகக் கருதற்பாலர். சுக்கிர நீதியை மொழிபெயர்த்ததைப் போலவே வடமொழியிலுள்ள வேதம் உபநிடதம் ஆகமம் முதலிய அரியநூல்களைத் தமிழிலே யாத்தற்பொருட்டு இந் நல்லாசிரியர்க்குத் தக்க ஊக்கமும் உதவியுமளித்தல் தமது தாய்மொழிக்கட் பற்றுடையராய் அதனை வளர்க்கும் உண்மை நோக்கமுடைய பெருஞ் செல்வவான்கட்கும் பிற அறிஞர்க்கும் ஒருதலையாய கடமையாகும். தமிழறிந்தார் யாவரும் இப் புத்தகத்தை வாங்கிக் கற்பார்களாயின் இவ்வாசிரியரது சிறந்த அறிவாற்றலின் பயனைத் துய்த் தின்புறுவது திண்ணம். தமிழுலகத்திற்கு இத்தகைய பெருநன்மையினை மேன்மேலும் புரிந்துகொண்டிருக்கும் பொருட்டு எல்லாம் வல்ல இறைவன் இவ்வாசிரியர்க்குக் குன்றாத ஊக்கமும் திண்ணிய நல்லுடலும் நீண்ட ஆயுளும் தக்க துணைவலியும் நிலைபெற்ற பெருஞ் செல்வமும் செவ்வியின் அருளும் வண்ணம் திருவருளை வேண்டுகின்றேன்.

மதுரை ஹைகோர்ட் வக்கீல்

**திருவாளர் - ச. சோமசுந்தரபாரதியாரவர்கள் M.A.,B.L.**

எழுதியது.

வியாபகமான ஒழுக்கியல் ஒப்புரவுகளை வலியுறுத்துவன அற நூல்கள். அவ் வறத்திரட்டின் வியாப்பியமாம் அரசியற் பகுதி பற்றியன நீதிநூல்கள். தருமத்தி னொரு பகுதியாமேனும், நீதி அறப்பொது விசாரணையி லடங்காமல் தனியே ஆராயப்படவேண்டிய விழுப்பொருளா மென்பதைத் தொல்லாசிரியர் தொகுத்துள்ள நல்ல பல நூல்களானும், நாடொறு நாடுதொறும் மக்களின் சமுதாய வாழ்க்கை வளம் வளர்ப்பதற் குறுதுணையாம் வித்திவிலக்கு விசாரணையின் இன்றியமையாமையானும் இனிதறியலாம்.

இத்தகைய நீதிநூல்கள் வடமொழியிற் பலவுள. பிருகற்பதி வசிட்டன் வியாழன் வெள்ளி முதலியோர் செய்துதவிய நீதிநூல்களுள் பழமையும் பெருமையும் ஒருங்குடையதாய், இன்றளவு மிறவாது நின்று நிலவுவது "**சுக்கிரநீதி**" என்பதாம். இதன் முதனூல்கள் யாண்டும் இப்போது முழுது மகப்படக் காணகில்லேம். பின்னெழுந்தன பல நூல்களிருப்பினும் பொருளாட்சி அகலத்தானும் ஆழத்தானும் பிறிதொததற்கு மிளையாது, தொன்மையாற் றேமுறுது எங்கும் என்றும் நாகரிக அரசாட்சிகளுக்குக் குறையாத நன்மை தருந் தன்மைத்தாய் விளங்கும் இந்நூல் இதுவரை தமிழகத்தில் முற்றிலும் மொழிபெயர்க்கப்பட்டதில்லை. ஆரியம் பயின்றார்க்கும், தமிழறநூலுரைகாரரெடுத்தாண்ட சிறு பகுதிகளினளவு மற்றைத் தமிழ்வாணருக்கும் இந்நூல் கிட்டியிருக்கலா மன்றித் தமிழருக் கிதனை முழுது முதவ முயல்வாரின்மையால் நம்மவ ரிதனை நன்கறிதற் கிடனற்றிருந்தது. என்றுமுள தென்றமிழொடொன்றிவளர் வடமொழியு நன்கறியு நன்மக்கள் முன்னணியில் இடம் பெறற் குரிமையுடைய **பண்டிதமணி, தனவைசியகுல-சிகாமணி, திருவாளர் - மு. கதிரேசச் செட்டியார்** தமிழருக் கிக்குறை தவிர்த்து, 'சுக்கிரநீதி'யைத் தமிழணங்கின் மடிவளர வழங்கியுள்ளார்.

இந்நூலியல்பும் பயனும் இதனைப் படிப்பவர் எளிதிலறியுக்கிடப் பதா லீண்டவை விரிக்கவேண்டா. எனினும், பண்டைப் புலவர் பனுவல்களைப் படிப்பதும், அவைபற்றியாய்வதும், வினைபல பெருகிய வித்தகர் கால முழுதையும் விழுங்குந் தற்கால நாகரிக வுலகிற் பய னற்றனவாகக் கருதும் பல நவீனக் கலைவாணர் நடுவண் இதன் நலஞ் சில குறிப்பது மிகையாகாது. நமது கால தேச நிலை கருதித் தொல் லைச் சுவடிக ளனைத்தையும் உதவாச்சுமை யென ஒழிக்கவேண்டு மென்பார் கூற்று ஒழிக்குங் கூற்றாக உற்பத்தி யோசோரா நமது பழைய பெரிய நாகரிக சமுதாய நல்வாழ்வைப் புதுக்கி வளர்ப்பதற் குறு துணையா இத்தகைய தொல்லை நல்ல பனுவல்களை வெளிப் படுத்துவதினும் உயர்ந்த தேச சேவையும் மொழித்தொண்டும் பிறிது கருதற்பாற்றில்லை யென்பதற் கிந்நூல் ஒரு தக்க சான்றாம்.

நீண்ட பல நூற்றாண்டுகளுக்கு முன்னெழுந்த இப்பழநூல் விளக்கும் இறைமை முறைமை யியல்பும், தத்துவங்களும், பெரு நிலப் பரப்புக்களுடைத்தாய் இன்று நின்று நிலவு மங்கியர் போரசி யற் கமைதலும், அவரறியா ஆக்க வளர்ச்சிக் காதலு மாமேல் பழமை பற்றிப் பரிகரிப்பதற்குப் பதிலாக இன்னவற்றைக் கிழமை பற்றிப் பாராட்டுவதன்றோ நமது கடமையாகும். பழமையா லினிமை குறையாது, உண்மை யோர்வா ரறிவிற்கு நிதம் புதுமை நிலைக்களனுய், மாந்தர்க்குக் கற்றனைத் தூதவிக் கைகொடுக் குங் கலைத்துணையாய், என்று மொன்று வேத்தோத்தாய் விளங்கு மிவ்வறத்தொல்லை யரசற நூலில், தற்கால நாகரிகமே நாடும் மேனாட் டிறைமைக் கலைநூற் பழக்க மிக்குடையாரும் வியக்கத்தக்க டல நுண் பொருள் விவரிக்கப்படுவதுடன் வீதி மறுகமைத்தல் முதல் வேத்தியலீறாய் வினைத்திற விரகனைத்தும் சுருங்கச் சொல்லி விளங்க வைத்திருப்பது விந்தை விளையா தொழியாது.

அரசியல் அரசனுள்ளிட்டு ஏழுங்கமுடைத் தென்பது வட நூலார் மதம். படை குடி கூழ் அமைச்சு நட்பு அரணோடு வேத் தியலுறுப் பாறெனுந் தமிழ் வழக்கு, இறையியலில் இறைவனொருவ னின்றியமையா உறுப்பாகாமைக்கும், குடியரசு ஆன்ற குழுவரசு என்னப் பல திறப்பட மன்னு பல்வேறு வேந்தியல்கள் உலகிலுண்

மைக்கும் வேந்தன்கீ ழரசியலினும் வேந்தன் உறுப்பியாவதன்றி உறுப்பாமா றின்மைக்கும் இனிது பொருந்தும். இதுபற்றியே போலும் இறைவன் வேந்தன் கோன் அரசன் எனு முயர் திணை யாண்பாற் படர்க்கை யொருமைப் பெயர்களேயு மன்றித் தமிழில் இறை வேந்து கோ அரசு எனும் பால்பகாச்சொற்களும் இறைமை குறித் தெழுந் தியங்குகின்றன. இதனுண்மை எதுவாயினு மாக. வட வாரியர் வழக்கை யநுசரித்து அரசு அமைச்சு நட்பு பொருள் நாடு மதில் படை என்றரசியல் ஏழங்கமுடைத் தெனவும் அவற்றுள் அரசு தலையங்கமா மெனவும் சுக்கிரநீதி கூறுகின்றது.

அரசாட்சி முறையில் இந்நூல் விளக்குஞ் சில முக்கிய குறிப்புக்கள் வருமாறு:—வேத்தியல் விவகார விசாரத்துக்குரிய பெரியார் கூடிய அரசவை(Privy Council)யும், மதிநுட்ப நூலோடுடைய அவ்வரசவையாருள் விரகும் வினைத்திட்பமு மிக்வுடைய பதின்மர் பிரகிருதிகள் (Ministers) கூடிய அரசியல் நிருவாக சங்கமும் (Cabinet) இறையியல் முறையில் தலையுறுப்புக்க ளெனச் சுக்கிர நீதி சுட்டுகின்றது. புரோகிதன் (Chief Priest and Preceptor) பிரதிநிதி (Viceroy or Lord Privy seal) பிரதானன் (Premier) சசிவன் (Minister for War) மந்திரி (Counsel General or Law Member) நீதிபதி (Chancellor or Minister for Justice) பண்டிதன் (Minister and Referee for Ethics and Jurisprudence) சுமந்திரன் (Minister for Finance or Chancellor of the Exchequer) அமாத்தியன் (Minister of the Interior or Home Member) தூதன் (Foreign and Political Minister or Ambassador General) எனப் பதின்மர் பிரகிருதிகளும் (Ministers) கூடிய அரசியல் நிருவாக சங்கமும் (Cabinet or Executive Council) அரசியல் நலம் வளர்த்தற்குரிய அறிவும் ஒழுக்கமு முடைய குழுவினர் கூட்டம் (Privy Council) ஆலோசனைச் சங்கமுமாக அமையவேண்டு மென்கின்றது இந்நூல். நீதிபதி நீதிமன்றத்தில் உரிய அவையோர் சூழ இருந்து வழக்குக்களை விசாரிக்கும்படிக்கும், கக்ஷிப்பிரதிகக்ஷிகளைக் (Pleadings) கவனித்து சாக்ஷி சாதனமாதி சான்று கொண்டு (Oral and Documentary Evidence) ஆராய்ந்து மந்திரி (Counsel General) பண்டிதர்களின் (Juridical

Philosophers) அபிப்பிராயங்களைக் கலந்து நிதானித்து, வாதப் பிரதிவாதங்களைச் சீர்தூக்கிச் சிந்தித்துப் பிறகு முடிவு செய்யும் படிக்கும், உபயவாதிகளும் தம்முள் உடன்பட்டுச் சம்மதிபத்திரம் (Compromises) பிறப்பித்தாலொழிய நீதிமன்றத்தார் செய்யு முடிவுகளை ஜயபத்திரங்களில் (Judgments) எழுதிக்கொடுக்கும்படிக்கும் இந்நூல் வற்புறுத்துகின்றது. இப்படியே குற்றவாளிகளைச் சூசகர் (Public Prosecutors) பிழை சாற்ற, நீதிமன்றத்தில் பலர் முன் சான்றுய்ந்து விசாரிக்கச் செய்து விடுதலையோ தண்டனையோ தக்கபடி அவரவர்க்குத் தரச்செயலை அரசியற் கடனுக்குகிறது. அவசியமான விடத்து வழக்காளிகள் (Litigants) இடமும் குற்றவாளிகள் (Accused) இடமும் நம்பிக்கை சுவாதீனம் நல்லபுகழ் செல்வம் சொற்காத்தலாகிய சால்புடைய தக்கார் பிணை(Security) வாங்கு முறையினையும் வகுக்கின்றது.

இன்னும் இந்நூல் சுமந்திரன் (Finance Minister) அரசியற் சம்பந்தமாகக் கவனிக்கவேண்டிய வரவு செலவு விவரங்களையும் விரிக்கின்றது. கணக்குகளும் சாதனங்களும் பத்திரங்களும் எழுத வேண்டிய துறைகளையும் முறைகளையும் விளக்குவதுடன் நிலைப் பொருள்களைப்பற்றிய பத்திரங்கள் உரிய அரசியல் மன்றங்களில் பதியப்படவேண்டும் (Registration) அவசியத்தையும், ஈடு (Mortgages) கொடைப் (Gifts) பத்திரங்களுக்கு நல்ல சான்றுகள் (Attestors) வேண்டு மெனவும் வலியுறுத்துகின்றது.

பிரகிருதிகள் ஒவ்வொருவருக்கு முரிய காரிய நிருவாகத்தில் தனியதிகார உரிமையைக் (Autocracy) குறைத்து அவ்வப் பிரகிருதியைத் தலைவராகவும், பிரகிருதிக் கிருவருக்குக் குறையாமல் துணையதிகாரிகளை (Councillors or Secretaries) யும் நியமிக்க வேண்டு மென்றும், அவ்வதிகாரிகளை ௩ - ௭ - ௧௦ - ஆண்டுகளுக் கொருமுறையாவது வெவ்வேறு காரிய நிருவாகத்துக்கு மாற்ற வேண்டு மென்றும் கூறுகின்றது. பிரகிருதிகள் பல முறையும், அரசன் அல்லது பிரதிநிதி ஆண்டுக் கொருமுறையும் நாட்டின் கூற்றங்களையும் (Provinces) நகரங்களையும் (Cities) ஊர்களையும் (Towns) பட்டினங்களையும் (Ports) சுற்றிப்பார்த்து அவ்வவ்

விடத் ததிகாரிகளின் செயல்களையும், குடிகளின் குறைகளையும் விசாரித்து நீதிபுரியு மவசியத்தைத் தெளிக்கின்றது. அரசன் முதல் அதிகாரிக ளனைவரும் நாடோறும் நாழிகைதோறும் செயற் குரியனவும் தகுவனவும் எண்ணி எல்லையிட்டறுத் தாற்று முறை யையும், செய்தன காட்டும் தினக்குறிப்புக்களை முறையே பதிந்து வைத்து மேற்பார்வைக்கும் பின் சோதனைக்கு முட்படுத்து மவ சியத்தையும் குறிக்கின்றது.

சகல அதிகாரிகளையும் தெரிந்தெடுக்கு முறைகளையும், அவ்வவ் வதிகாரத்துக்குரியார் குணகுணங்களையும் விவகரிக்கின்றது. கோட் டமும் (Temples) கோயிலும் (Palaces) தோட்டமும் மன்றமும் (Courts and Council Chambers) மாடமும் கூடமும் அரணும் அகழியும் வீதியும் மறுகும் பாட்டையும் பாசறையும் அமைக்குந் துறைகளை விரிக்கின்றது. தூரிய உயர்ந்த சுத்தமான இடங்களில் வாவிக ளமைத்து, தட்டாமல் நீர் நிறைத்து, மக்கள் மாசுபடுத்தற் கெட்டாமல் மூடி அடிக்கடி புதுக்கப்படும் கல் மடைகளால் குறித்த பல தூய கிணறுகளிற் பெருக்கி நகரத்தவர்களுக்குப் பருகுநீரளிக்கு மவசியத்தை விளக்குகிறது. தெருக்களிலும் நீர்நிலைபருகும் மக் கள் தொக்க மற்றிடங்களிலும் யாரும் அசுசி பண்ணாமலும், கலாம் அமைதிக் கேடுகள் செய்யாமலும், காதகர் கள்வர்களாற் பாதக மேற்படாமலும், யாமந்தோறும் மாற்றப்படும் படையுடைப் பால கரால் பாதுகாவ லேற்படவேண்டு மென்கின்றது. பாட்டைகளிற் றங்கு சாவடிகளிலும், அரணுடை நகர வாயில்களிலும் சோராவீரர் (Sentinels) நின்று, வரும் புதியரை எப்போதும் யாவரையும் இரவிலும் ஊர் பேர் தொழில் ஆதி விவரங்களையும், போக்குவர வின் நோக்கினையும் தீர விசாரித்து உரிய புத்தகங்களில் பதிய வேண்டுமென்றும், அவருடைமைகளைச் சோதித்து அவர்பாலுள்ள ஆயுதங்களை வாங்கி வைத்திருந்து திரும்பிப் போகும்போ தவ ருக்குத் தரும்படிக்கும் விதிக்கின்றது.

இவையுமன்றித் தானைத்தொகுப்பும் தலைவர் வகுப்பும் அமைத் தா ளொரு முறை வகுத்து விளக்குகின்றது. ரு-கூ-காலாட்கள் கூடிய பத்தி க-க்கு ஒரு பத்திபாலனும் (Corporal of aparts), முப்பதின்

தொகுதி முதலவனும் ஒரு கௌள்மிகனும் (Subaltern of a section) நூற்றுவர் தொகைக்கொரு சதானிகனும் (Captain of a company),கo-சதானிகங்களுக்கு ஒரு சாகச்சிரிகனும்(Colonel of a Regiment)கo-சகச்சிரங்களுக்கு ஓர் ஆயுதிகனும் (General or Commander of a Division) நியமிக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு சதானிகீத்துக்கும் சதானிகனோடு (in addition to a Captain for each company of Troops) அநுசதிகன் (Lieutenant) சேனனி (Adjutant) என இரு துணைத்தலைவ ரமைக்கப்பட வேண்டுமென்றும், இவ்வாறே இவுளிப்படைக்கு நாயகன் சசிவன் முதலிய தலைவர்கள் படிப்படியே நியமிக்கப்படவேண்டு மென்றும், இன்ன பல படைப்பகுதிப் பாலகரின் தொழிற் பிரிவும் இயல்பும் இனைத் தென்றும், படைகளுக்கு ஊண் உடை யாதிகளை ஒல்கா துதவு மதிகாரிகள் (Quarter Masters) வேண்டுமென்றும் விசதப்படுத்துகின்றது.

மேலும் அரசியற்றுறையில் வற்புறுத்தப்படும் ஆணைகள் (Laws) அனைத்தையும் தொகுத்துப் பலகைகளிற் பொறித்துச் சதுக்கங்கள், நீதிமன்றங்கள், நீர்த்துறைகள், மக்கள் கூடும் பிறவிடங்களில் நிறுத்தியும், முரசறைவித்தும் பிரசுரிக்கவேண்டு மெனவும், பிரசுரமாகாத ஆணையை வற்புறுத்தலாகா தென்றும் பணிக்கின்றது. யார்க்கும் யாண்டும் எப்பொழுதும் முறைசெய்தலே இறைமை முதற் கடனு மென்பதை வலியுறுத்துவதுடன், வென்றுகொண்ட பகைப் பிறநாடுகளிலுங் கூட அரசியன்முறையில் முந்தி யமைக்கப் படவேண்டியவை முறையிறவா நீதிமன்றங்களே யாமென விதந்து கூறுகின்றது. இன்னும் வேத்தியலைப் பற்றி விழையப்படுவனவும் விழுமியனவுமாம் பொருளனைத்தும் சுக்கிரநீதியின் சிற்றெல்லையில் விரித்து விளக்கப்பட்டுள்ள திறம் யாவருக்கும் வியப்பும் இந்தியருக்குப் பெருமிதமும் விளையாதொழியாது. படிக்குந்தொறு மிதன் பழமையும் பெருமை வளர் புதுமையும் புலன் கவர்ந் தினிக்கச் செய்யும்.

இத்தகைய நன்னூலை, பண்டிதமணி - மு. கதிரேசச் செட்டியாரவர்கள் அரிய ஆரியத்தினின்றும் இனிய தமிழிற் பெயர்த்துதவி யுள்ளார்கள். எம்மனோர்க்கிவர்கள் உரைநடை மொழிபெயர்ப்

யாகத் தோன்றவில்லை. பிற மொழிகளினின்றும் பெயர்த்தெழுதப்படு நூனடை பெரும்பாலும் ஒழுக்கும் திட்பமும் ஒருங்கு பெறுவதருமை. வழிந்தொழுகு மருவியன்ன இயலொழுக்குத் தாய்மொழியிற் றன்னிதய வெளிப்பாட்டிற் கியைவதல்லால், பிற புலவருள்ளத்தைப் பிறிது மொழிகளினின்று பெயர்த்தெடுத் தெழுதுவோர்க் கமைவ தரிதாம். பண்டிதமணி, தமிழிற்றந்துள சுக்கிரநீதி தமிழ் நூலன்றி மொழிபெயர்ப்பு நூலாதலை அவர் விதந்தோதா முகத்தாலன்றி முன்னறியார் இதனடையால் அறியகில்லார். செட்டியாரவர்களின் நுண்ணறிவும் விரிந்த கல்வியும் இந்நூல் முழுதும் சலியாச் சான்று பெற்று நிலவுதலுடன், தங் குலநலனுங் குறையாவளமுதவ வளரு மிவர் புலமைச் செல்வத்தின் செவ்வியையு மிதில் நிரம்பக் காண்கின்றோம். முதனூலிற் கண்டதனை முகந்துகொண்டு தமிழ் மொழியிற் குறையாது கொடுப்பதுடன், அசையேனுங் கூடாமல் அளந்தெடுத்துதவு மிவர் சொற் செட்டும் பொருணிறைவும் வரன்முறை வணிகர் வளத் தழகை வலியுறுத்தி நிற்கும். பொருந்து மிடந்தொறும் இந்நூ னீதிகளுக்கு இயையும் நெருக்கமு முடைய தமிழ்ப் பொருளுள் முதுமொழிகளையும், இறவாக்குறளடிகளையுந் தொடுத்திணைத் தெடுத்துக்காட்டிச் செல்லுஞ் செவ்வி மிகப்பாராட்டற்பாற்று. தற்காலத் தமிழுலகிற் செட்டியாரவர்களைத் தெரியாதாரில்லை யென்னலாம். இவர் வியன்புலமையும், இயன்மதிநுட்பமும், தொகச் சுட்டித் துவாத நீக்கிச் செலச்சொல்லும் சொல்லாற்றலும் தமிழகத்தே புலவருலகு நன்கறியும். சிந்தாப் பொருட் செறிவும் நந்தா நடைநலனும் இவருபந்யாசங்களையும் வியாசங்களையும் பெரிது முவக்கச் செய்வ தறியுநர் இந்நூலிற் பொருட்டிட்பமும் நடைநலமுங் கலந்து கனிந்து மணமெழு மலர்வனை மகிழ்வரல்லால் வியப்பதற் கென்கொல் காண்பர்?

வேத்தியல் விவகாரங்களைத் தமிழர் விரும்பி விசாரிக்கத் தூண்டுவதொன்றே பெருந்தொண்டாமேல் அவ்விசாரத்துக்கு வேண்டும் கருவிகளை விரும்பியோர் விரும்பியாங் கெய்த உதவுமிந் நூலை இக்காலத் தமிழருக்கு உபரிகரிக்க முன்வந்த பண்டிதமணியின் தேசபக்தியும் தாய்மொழித்தொண்டு மிகப் பாராட்டப்படு மென்பதி லையமில்லை. புத்துணர்வும் புதுக்கிளர்ச்சியுமெழுந்துலவுந் தமி

முகத்திற் பண்டைப் பல புறப்பொருணூல்களுடன் இத்தகைப் பழம் புதுப்பனுவல்களுங் கிடைக்குமாயின், புலமையும் புலனும் புகழொடு வளரப் பெரிது முதவியாகும். இனைய நற்றொண்டியற்றி நலம் வளர்க்க முன்வந்த நண்பருக்கு இன்ன பணி யினும் பலவா யாற்றற் கேற்ற ஒல்கா வளமும் அல்கா வாழ்க்கையும் இறைவன் வழங்கி யருளுமாறு பல்லாண்டு கூறுகின்றேன்.



# அபிப்பிராய பத்திரங்கள்.

## தஞ்சாவூர் ஸப்ஜட்ஜ் பிரஹ்மஸ்ரீ

## K. S. இராமஸ்வாமி சாஸ்திரியாரவர்கள் B.A., B.L.

I have perused with great interest and delight the Tamil translation of *Sukra Neethi* by Pandithamani *M. Kathiresan Chettiar*, of Mahipalanpatti. Seldom has such a great work found such an able translator. Mr. Kathiresan Chettiar is one of the greatest of Modern Tamil Scholars and he possesses at the same time an admirable knowledge of Sanskrit. He belongs to the Nattu Kottai Chettiar community which has been conserving and preserving our ancient Indian culture in a vast variety of noble ways. Along with other men of his great community--nay, in an even ampler measure, due to his own inherent nobility of nature, and also to the influence of his synthetic culture—Mr. Kathiresan Chettiar has that broad outlook and inclusive patriotism which no narrow lingual or communal dislike can ever mar.

Sukraneethi is one of the many works on Artha Sastra in Sanskrit. Of these, Kautalya's work has had a special boon in recent years, because it was unearthed recently. But *Sukra Neethi* is older than even Mahabharata and is a veritable mine of secular ideals in the realms of civics, economics, and politics. It has been translated into Tamil now. I am sure that its study in the Tamil Nadu will galvanize the land into a new state of energy, efficiency and prosperity.

Those who accuse Indians of indifference to material—and especially political—affairs utter a kind of elusive half-truth which is ever worse than a lie. The Indians have ever been aware of the supremacy of the science of the soul (*Adhyatma Vidya Vidyanam*, as the Lord says in the Geeta). But they knew well that political science is only next to spiritual science—nay, is

the only secure safe - guard of the perfection of the latter—because a poor and spiritless community sunk in *Tamas* will never be able to rise to that attitude of inner life, standing on which it can, with a sense of accomplished duty to man, behold and enjoy,

" That Fair Beauty which no eye can see

"And that Sweet Music which no ear can measure."

The author of Sukra Neethi makes the bold and splendid affirmation that the political power in the land can guide the time-spirit. *Raja Kalasya Karanam.* He makes the bold and splendid affirmation that by Human effort, the rigors of destiny can be cancelled or mitigated. He boldly declares that the laws of God are binding on the highest kings.

This is not all. He gives us valuable ideas about town-planning and architecture and local self - government. He tells us what are the vital elements of beneficial administraton and emphasises the need for the direct contact of the king with his subjects. By way of illustration, I may point out that he tells us how to make roads with the curvature of the back of a tortoise, what road - material should be used etc. His exposition of mining and metallurgy is equally valuable and modern. His exposition of the military science shows how ancient India knew how to manufacture and use the war explosive ammunition (*Nalika).* Gustav Oppert says in his work *on The Weapons, Army organization, and political Maxims of the Ancient Hindus*: " The war machines which the ancient Indians used, whether they were made of metal or stone, and out of which thay hurled iron and lead balls at their enemies, were doubtless by means of gunpowder..............The ancient Hindus were also, as is well-known, great adepts in the art of melting and casting metals. The old Hindus displayed a great ingenuity in inventing injurious and irritating compounds and refined expedients for hurling them amongst the enemy during a combat " He proves " that the oldest documents mentioning and describing gunpowder are

found in India, and written in Sanskrit and that the use of gun-powder and its application to the discharge of missiles from projectile weapons was a well-known fact in ancient India, corroborating so far the opinion of those who always pointed out India as the original seat of its invention." *Sukra Neethi* gives the following prescription for making gunpowder: mix 5 parts of salt petre (*Suvarchi* lavana) with one part of sulphur (*gandhaka*) and one part of charcoal.

I must not dilate further. Once again I say that we have here a great translation of a great work. I wish the author high public appreciation—and what is more than such appreciation—the blessings of the Goddess of knowledge in an ever - increasing measure.

---

**M.R.Ry. S. Kuppuswami Sastriyar Avl.,** M.A.,I.E.S

Professor of Sanskrit and Comparative Philology,

Presidency College, Madras.

Dear Mr. Chettiyar,

I have perused your Tamil rendering of the *Sukraniti* in Sanskrit. I am glad to be able to say that the Tamil rendering is a fairly good and reliable approximation to the sanskrit original. The footnotes would prove to be very useful to readers who could not consult the original to clear their doubts.

[illegible]

[illegible]

Yours Sincerely

S. KUPPUSWAMI SASTRI.

---

சென்னை ஸம்ஸ்கிருத காலேஜ் ப்ரின்ஸிபாலாகிய
மஹா மஹோபாத்யாய
சாஸ்திர ரத்தினாகரம் மீமாம்ஸா ரத்தினம்

**ப்ரஹ்மஸ்ரீ. T. வேங்கட சுப்பிரமணிய சாஸ்திரிகள்.**

[illegible]

[illegible]

---

சிதம்பரம் ஸ்ரீ மீனாக்ஷி ஸம்ஸ்கிருத காலேஜ் ப்ரின்ஸிபாலாகிய
மஹாமஹோபாத்தியாய

**ப்ரஹ்மஸ்ரீ. ஶிவ. தண்டபாணி ஸ்வாமி தீக்ஷிதரவர்கள்.**

[illegible]

மதுரைத் தமிழ்ச்சங்கத்துச் செந்தமிழ்ப் பத்திராதிபர்
## ஸ்ரீ. உ.வே. திரு. நாராயணையங்காரவர்கள்.

**சுக்கிரநீதி** என்னும் இந்நூலானது நன்மக்களாயுள்ளவர்க ளெல்லோரும் உலகியலொழுக்க நெறியால் உயர்ச்சியடைதற்கும் அறியவேண்டுமவற்றை யறிதற்கும் அறம் பொரு ளின்பங்களை யடைதற்கும் சிறந்ததொரு கருவியாய் அமைந்ததென்பது எல்லோராலும் உணரத்தக்கது. இதன் அருமை பெருமை முதலியவற்றை விரித்துரைக்க இங்கு அவகாசமில்லை.

இந்நீதிநூலை, மதிநுட்பம் உடையராயும் வடமொழி தென்மொழி வல்லுநராயும் **பண்டிதமணி** என்னும் சிறப்புப்பட்டம் பெற்றவராயும் உள்ள **திருவாளர். மு. கதிரேசச் செட்டியாரவர்கள்** வடமொழியினின்றும் தமிழில் மொழிபெயர்த்து அச்சிட்டனுப்பிய பார்வைப் புத்தகமொன்று வரப்பெற்றுப் படித்துப்பார்த்துப் பெரிதும் உவப்புற்றேன்.

புலவர் சிலரே யறிதற்குரிய செய்யுட் டிரிசொன் னடையை யொழித்துப் பொதுமக்களும் அறிதற்குரிய திருந்திய செந்தமிழ்நடையால் இதனை மொழிபெயர்த்திருப்பது அவர்களது வினைத் தூய்மையையும் விரிந்த நன்னோக்கத்தையும் புலப்படுத்துகின்றது.

ஒரு பாஷைநடையைப் பிறிதொரு பாஷைநடையில் மாற்றியெழுதுங்கால் இடையிடையே நேரும் இடர்ப்பாடுகள் பலவுண்டென்பதும் பாஷைநடை வேறுபடுமென்பதும் மொழிபெயர்ப்பாளர் பலரும் அறிந்தனவாம்.

இம் மொழிபெயர்ப்பில் அத்தகை யிடர்ப்பாடேனும் பாஷைநடை வேறுபாடேனும் ஒரு சிறிதும் காணப்படாவண்ணம் முதனூல் நடைபோல் எழுதப்பட்டிருப்பது மொழிபெயர்ப்பாளரின் இருமொழிப் புலமையின் சால்புடைமையைக் காட்டுகின்றது.

முதனூலிலுள்ள சொற்களின் பொருளை நன்குணர்ந்துதற்கேற்ற ஆற்றல் வாய்ந்த தமிழ்ச் சொற்களை ஆராய்ந்து தேர்ந்தெடுத்துத் தொடுத்திருப்பதும், நூல் வழக்கான சங்கேதச் சொற்களை அவற்றின் பொருளிற் றமிழ்நூல்களில் அடிப்பட்டு வழங்கி வரும் சொற்களால் மொழிபெயர்த்திருப்பதும் தாம் பயின்ற அரிய

தமிழ்நூற் பயிற்சியின் பயனு யுள்ளன. அங்ஙனமன்றிப் புதிய சங்கேதக் குறிகளைப் படைத்துக்கொள்ளவேண்டிய இடத்தும் தமிழில் அடிப்பட்டு வழங்கிவரும் சொற்களாய் இருக்கலாமென்று எண்ணும்படி தமிழுருவம் அழியாமல் ஆக்கி யமைக்கப்பட்டிருப்பதும் அங்ஙனம் அமைக்கவேண்டாத இடத்துத் தமிழிற் சாதாரணமாய்ப் பயின்றுவரத்தக்க தற்பவ தற்சமச் சொற்களாக மாற்றிக்கொண்டிருப்பதும் சுலோகங்களின் முடிவைக் கருதாது பொருண் முடிவு கருதியே பத்தி வகுத்திருப்பதும் அவர்களது திருத்த முற்ற செயல் முறையைக் காட்டுகின்றன.

கீழே யெழுதிச் சேர்க்கப்பட்ட குறிப்புரையுள் நூலின்கண் விளங்காத பொருள்களை விளக்கியும் ஆங்காங்குத் தெரியவேண்டிய விருத்தாந்தங்களைத் தெரிவித்தும் சங்கேத மொழிகளுக்குப் பொருளெழுதியும் சில பொருண்முடிபுகட்குக் காரணங் காட்டியும் வேண்டுமெவற்றிற்கு மேற்கோள் காட்டியும் மத பேதங்களைப் புலப்படுத்தியும் சில தொகைப் பொருள்களை விரித்துக்காட்டியும் செல்லும் பல கலை யுணர்வு பாராட்டத்தக்கது.

"உவப்பத்தலைக்கூடி யுள்ளப்பிரிதல், அனைத்தே புலவர் தொழில்" என்னும்படி ஆங்காங்கு உபந்யாசங்கள் புரிந்து பிரிந்து செல்லும் குறைதீர்ந்து 'தாமின்புறுவ துலகின்புறு' மாறு இந் நீதிநூலை மொழி பெயர்த்துதவிய பண்டிதமணி யவர்களுக்கு இத் தமிழுலகம் நன்றி பாராட்டக் கடமைப்பட்டிருக்கிறது.

இந் நீதிநூல் முழுதுமேனும் கற்போர் தகுதிக்கேற்ப ஓரோர் பகுதியாகப் பகுத்தேனும் தமிழ்நாட்டு ஆங்கில கலாசாலை மாணவர்களுக்கும் தமிழின் உயர்தரக் கல்லூரி மாணவர்களுக்கும் பரீக்ஷைப் பாடமாக வைத்துக் கற்பிக்கப்படுமாயின் அம்மாணவர்கள் அறிவு ஒழுக்கம் ஆற்றல் முதலியவற்றால் நன்னிலை யடைவார்கள் என்று நம்புகின்றேன்.

---

## திருச்சி பிஷப் ஹீபர் காலேஜ் தலைமைத்தமிழாசிரியர், திருவாளர்-ந. மு. வேங்கடசாமி நாட்டாரவர்கள்.

'பண்டிதமணி' திருவாளர்-மு. கதிரேசச் செட்டியாரவர்களால் மொழிபெயர்த் தியற்றப்பெற்ற சுக்கிரநீதி என்னும் தமிழ் உரை நூலினை ஒருமுறை முழுதும் படித்துப்பார்த்தேன். பரதகண்டத்தின் பழைய அரசியன்முறை முதலிய பெருமைகளை அறிந்து கொள்ளுதற்குக் கருவிகளாயுள்ளவற்றுள் இந் நீதிநூலும் ஒன்றும். இது பெரும்பாலும் பொருளின் பகுதிகளையே கூறுதலின் இதனைப் பொருணூலெனினும் பொருந்தும். இந்நூலானது பாரத காலத்திற்குப் பல நூற்றாண்டுகளின் பின் பேரரசர்களாய் விளங்கிய சந்திரகுப்தன் அசோகன் முதலாயினாரின் ஆட்சிக்கால வியல்புகளை நினைவு கூர்ந்து வரையப்பட்டதோ வெனக் கருதுமாறுளது. இதிற் கூறப்பட்டுள்ள பொருட் பகுதி யனைத்தும் உயரிய நாகரிகத்தின் அறிகுறிகளே; எனினும் கூறவேண்டுவன அனைத்தும் நிரல்பட முறையானே இதிற் கூறப்பட்டுள வெனல் சாலாது. நகரமைக்குமாறு, அரண் முதலியன வமைக்குமாறு, நவமணிகளின் இலக்கணம், யானை குதிரை முதலியவற்றின் இலக்கணம், பல்வகை அளவைகள், பத்திரவகைகள், அமைச்சராதியோர் இலக்கணம், அவர் பெறும் சம்பளம், வழக்காராய்ச்சி முறை என்றின்னோரன்ன பல செய்திகள் ஓர் தொகை நூலிற்போல இதன்கட் காணப்படுகின்றன.

இம் மொழிபெயர்ப்பானது சிறந்த தமிழ்நடையில் மொழிபெயர்ப்பார்க்கெல்லாம் வழிகாட்டு மியல்பினதாய் மிளிர்கின்றது. கீழ் எழுதப்பட்டுள்ள விளக்கக்குறிப்புகளிலிருந்தே எழுதினோரின் அறிவு ஆராய்ச்சித்திற னெல்லாம் நன்கு புலனாகும். தமிழிலும் வடமொழியிலும் வல்லுநராய்த் தமிழ்த்தாய்க்குப் பல்லாற்றானும் தொண்டியற்றிவரும் பண்டிதமணியாகிய திருவாளர் - செட்டியாரவர்கள் ஆக்கி யளித்த இந்நூலைத் தமிழ்மக்க ளனைவரும் வரவேற்று நுகர்ந் தின்புறுதல் ஒருதலை. இளைஞராயினோர் இதனைக் கற்றுப் பயனெய்துமாறு செய்தல் முதுக்குறைவுடையார் கடன்.

சென்னை அடையாற்றுக் கல்லூரித் தலைமைத் தமிழாசிரியர்

## பிரம்மஸ்ரீ. பண்டித. அ. கோபாலையரவர்கள்

இயற்றியவை.

**பன்னிருசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்.**

வடமொழி நூலுட் காவியமே
மாணிதி காச புராணங்கள்
வண்டமிழ் வாணர் செய்தளித்தார்
மன்னிய பாவான் முன்னுளிற்
றிடமுறு சீர்சா லம்மொழியிற்
செய்பொரு ணூலுஞ் செந்தமிழிற்
றேருற வின்னாள் வெளிவந்தாற்
சீரிய வாமென் றுராய்வோர்
மடமக லச்சுக் கிரனுர்செய்
வான்பொரு ணூலை நயமெல்லா
மன்னி விளங்கும் படிநேரே
வளவிய நடையான் மொழிபெயர்த்தே
யிடமறி தெய்வக் குறண்முதலா
மெழில்வளர் நூல்கள் பகர்மேற்கோ
ளேய வெடுத்து விளங்கிடுமா
றீட்டு குறிப்போ டச்சிட்டான். (க)

அன்னவ னெங்கள் வாணியினல்
லம்பக மாகித் திகழ்மொழியா
மாரிய முஞ்செந் தமிழும்பே
ராதர வோடும் பயில்சீலன்
மன்னிய செல்வன் சிவநேசன்
வண்டமி ழுக்கேய் கல்லூரி
மாண்சபை யிவைதன் னுடெங்கும்
வைத்து வளர்த்துச் சபைதோறுஞ்
சொன்னய மும்பல் பொருணயமுந்
தொல்சுவை யுஞ்சேர் பிரசங்கந்
தூயவர் மெச்சும் படிபுரிவோன்
சொல்வள மோங்கக் கவிவாணர்
பன்னுறு மகிபா லன்பதியிற்
பாங்குற வோங்குந் தனவணிகர்
பற்பல ருள்ளும் பண்பார்ந்தோன்
பண்டித மணியாங் கதிரேசன். (உ)

# சுக்கிரநீதியின்

# உள்ளுறை விளக்கம்.

## முதல் அத்தியாயம்.

## இரண்டாம் அத்தியாயம்.



## மூன்றாம் அத்தியாயம்.

## நான்காம் அத்தியாயம்.

### முதற் பிரகரணம்.



### ௪ - அத் - இரண்டாம் பிரகரணம்.



### ௪ - அத் - மூன்றாம் பிரகரணம்.



### ௪ - அத் - நான்காம் பிரகரணம்.

## ஐந்தாம் அத்தியாயம்.

ஒரு திருத்தம்:

*முகவுரை முதற்பக்கத்தின் ஈற்றயல் வரியில் 'அதன்கண்' என்றிருப்பதனை 'அவற்றின் கண்' எனத் திருத்தி வாசித்துக்கொள்க.*

கணபதி துணை.

# சுக்கிர நீதி.

## முதல் அத்தியாயம்.

(அரசியற் காரிய நிரூபணம்.)

### க. நீதிநூன் மாட்சி.

**சுக்கிராசாரியர்** எல்லாவுலகங்களுக்கும் தலைவரும், படைத்தல் காத்தல் அழித்தலைச் செய்பவரும் ஆகிய கடவுளை வணங்கி வழிபட்டு, தம்மையடைந்து முறைப்படி வணங்கி வாழ்த்தி வழிபட்டுக் கேட்ட அசுரர்களுக்கு, நீதிகளின் சாரத்தைக் கூறுகின்றார். கஇ

பகவானாகிய பிரமதேவர் நூறு இலக்கம் சுலோக அளவுள்ள நீதிநூலை உலகம் நலமடைதற் பொருட்டுக் கூறினார். உஇ

பின்னர், வசிட்டர் முதலிய எம்மனோரால், சில் வாழ்நாளையுடைய அரசர் முதலியோர் பொருட்டு, நலம் பெருக அந்நீதி நூலின் சாரம் சுருக்கிப் பொருந்துமாற்றானமைத்துத் தொகுக்கப் பட்டது. ஙஇ

ஒரு சில பொருள்களைத் தனித்தனி யெடுத்துச் சிறப்பித்துக் கூறும் பிறநூல்கள் பலவுள. இந்நீதிநூல் மக்கள் வாழ்க்கைக்கு இன்றியமையாததும், உலக நிலையை வரம்புட்படுத்துவதும், அறம் பொருள் இன்பங்களை யுணர்த்துவதும், வீட்டின்பத்தை யருளுமென்று கருதப்படுவதுமாக இருத்தலின், இதனை அரசர்கள் எப்பொழுதும் முயற்சிமேற்கொண்டு பயிலல் வேண்டும். சஇ

அரசர் முதலியோர், நீதிநூலறிவாற் பகைவரைவெல்பவராவர்; மக்களுக்கு இன்பம் விளைவிப்பவராவர்; நல்ல நீதிநுட்பங்களை எப்பொழுதும் நுனித்துணர்பவராவர். ருஇ

---

ஙஇ. எம்மனோர் என்றது சுக்கிரர் தம்மோடு மற்றை முனிவரரை யுளப்படுத்திக் கூறியது.

ருஇ. முதலியோர் என்றதனாற் குடிகளையுங் கொள்க.

இலக்கணநாலுணர்ச்சியின்றியுஞ் சொற்பொருள்களி னறிவும், தருக்கநாலுணர்ச்சியின்றியும் மாயாகாரியப் பொருள்களி னறிவும், மீமாஞ்சைநாலுணர்ச்சி யின்றியும் நித்தியகன்மங்களின் நியம உணர்வும், வேதாந்த உணர்ச்சியின்றியும் யாக்கை நிலையாமை யுணர்வும் உண்டாதல் கூடும். அ௯

அந்நூல்கள், தத்தங் கொள்கைகளை நன்கு அறிவிப்பனவாக வுள்ளன. அவ்வக்கொள்கையின் ஒழுகு மக்கள், அவ்வந்நூல்களை எப்பொழுதும் மேற்கொள்வர். உலகியலுணர்ந்து ஒழுகுவோர்க்கு, இந்நீதிநூலா னுண்டாம் நுண்ணுணர்வு, அந்நூல்களான் எங்ஙன முண்டாகும்? ௧0

மக்களுக்கு உணவின்றி உடல் நிலையாவாறுபோல, நீதிநூலானன்றி எல்லாவுலகங்களின் ஒழுக்கங்களும் நிலைபெறா. ௧௧

## உ. அரசர்க்கு நீதிநூலறிவா னுண்டாம் பயன்.

நீதிநூல் எல்லோர்க்கும் விரும்பியதை நிறைவேற்றுவதாகும்; யாவரானும் ஏற்றுக்கொள்ளற்பாலதாகும்; அரசன் யாவர்க்கும் இறைவனாதலின், அவனுக்கு இன்றியமையாது பயன்படுவதாகும். ௧உ

மாறுபட்டவுண்டியை உண்பார்க்கு நோயுண்டாதல் போல, நீதியில்லாத அரசனுக்கு அப்பொழுது சிலபகைவரும், நாளடைவிற் சிலபகைவரும் தோன்றுவர். மாறுபாடில்லா வுணவை யுண்டாரிடத்து நோயின்றாதல் போல, நீதியுடையார்க்கு அப்பொழுதும் நாளடைவிலும் பகைவ ரிலராவர். ௧௩

அரசனுக்கு எப்பொழுதும் நன்மக்களைக்காத்தலும், கொடியவர்களை யொறுத்தலும் சிறந்த அறங்களாகும். இவ்விரண்டும் நீதியுணர்வின்றி உண்டாகா. ௧௪

அரசனுக்கு நீதியின்மையே பிறர் புகுதற்கு வழியாகும்; எப்பொழுதும் அச்சந்தருவதாகும்; பகைவர்க்கு ஆக்கந்தருவதாகும்; தன் ஆற்றற்குப் பெரிதும் அழிவுசெய்வதாகும். ௧௫

நீதியை யிகந்து தன் விருப்பின்படி செல்கின்ற அரசன் துன்புறுவான். நீதியில்லாத அவ்வரசன்மாட்டு அணுகி வினைசெய்வோன், வாட்படையின் கூரிய நுனியை நாவால் நக்குபவனாவான். ௧௬

---

அ௯. மாயாகாரியப் பொருள்கள் - நிலம் நீர் முதலியன.

௧0. அந்நூல்கள் - இலக்கணம் தருக்க முதலியவை.

௧௫. பிறர்புகுதல் - பகைவர் எளிதிற்புகுந்து கேடுசெய்தல்.

நீதியுடைய அரசனை யாவரும் போற்றுவர்; அல்லாதவனை யாரும் போற்றார். எவன்மாட்டு நீதியும் பலமும் உள்ளனவோ, அவன்பால் திருமகள் பல்லாற்றானும் வந்தெய்துவள். கஎ

அரசன் தன் நாட்டிலுள்ளாரனைவரும், ஏவப்படாமலே நல்லன புரியும்படி நீதியைத் தன் நலங்குறித்து மேற்கொள்ளற் பாலன். கஅ

அரசனுக்கு நீதிதவறுதலான் எப்பொழுதும் தன் நாடு வேறுபடும்; பலம் வேறுபடும்; அமைச்சர் முதலியோரும் வேறுபடுவர். இங்ஙன மாதல் அவன் ஆளுந்திற னிலனாதலை வெளிப்படுத்துவதாகும். கக

அரசன் தவ வன்மையால் ஒளியை யடைகின்றான். மக்களை நன்னெறிப் படுத்துபவனும், காப்பவனும், இன்பம் பயப்பவனும் ஆகிய அவ்வரசன், தன் முன்னைத் தவ வலியானும், நீதி யாராய்ச்சியானும் இவ்வுலகத்தைத் தாங்குகின்றான். உ0

## ரு. அரசன் காலத்துக்குக் காரணம்.

மழை, குளிர், வெயில், நாள், கோள் முதலியவற்றின் நியமங்களானும், அவற்றின் இயற்கைகளானும், உலகத்திற்கு ஒத்தனவும், ஒவ்வாதனவும், மிக்கனவும், குறைந்தனவுமாகிய அரசனுடைய ஆசாரங்களானும், காலமானது வேறுபடுகின்றது. உக

அரசன் ஆசாரங்களை நடத்துபவனாவான். அரசனொழுக்கமே காலத்துக் குக்காரணமாகும். காலமே ஒழுக்கங்களை வரையறுப்ப

---

கஎ. திருமகள் பல்லாற்றானும் வந்தெய்தல் - பகைவர் தருந் திறை, அரசிறை, சுங்க முதலியவற்றாற் பொருள்வரல்.

உக. மழை, குளிர், வெயில் இம் மூன்றுட் பெரும்பொழுது ஆறும் அடங்குவனவாம். இவற்றால் வேறுபடுதல் - ஆண்டு, அயனம், இருது, மாதம் பக்கம், நாள், இரவு, பகல் முதலிய வாதல். அரசனுடைய ஆசாரங்களுள் உலகிற்கு ஒத்தன - குடிகளின் விருப்பத்திற்கியைந்தன-ஒவ்வாதன-விருப்பத்திற்கியையாதன. மிக்கன-வேண்டும் அளவின் மிக்கன. குறைந்தன-வேண்டுமளவிற் குறைந்தன. இவற்றாற் காலம் வேறுபடுதல் - இவ்வாசாரங்களா லுண்டாம் நன்மை தீமைகளைக் காலத்தின்மேல் ஏறிட்டு இன்புறுதலும் துன்புறுதலும் பற்றியாம்.' அரசனுடைய ஒழுக்கங்களுங் காலவேற்றுமைக்குக் காரணமாகுமென்பது கருத்து.

உஉ. காலமே எல்லாவற்றையும் நடத்துவதாயின் கருத்தாவுக்குச் சுதந்திரம் இன்றாம்; இன்றாகவே அவனுக்கு வினைப்பயனுகர்தல் கூடாததாகமுடியுமாதலின், அரசனே ஒழுக்கங்களை நடத்துபவனாவா னென்பது பொருந்தும்.

தாயின், காரியத்தைச் செய்பவர்பால் எங்ஙனம் வினைப்பயன் நிலை பெறும்? ௨௨

# ௪. அறத்தின் மாட்சி.

மக்கள், அரசன் ஒறுத்தற்கஞ்சித் தங் கடமைகளிற் பற்றுடைய வர்களாகின்றார்கள். இவ்வுலகத்தில் தன் கடமையிற் பற்றுடைய வனே ஒளியுடையவனாகின்றான். ௨௩

ஒருவனுக்குத் தன் கடமையே பெருந்தவமாகும். ஆதலின், தன் கடமையைச் செய்தலினன்றி நலம் உண்டாகாது. இடை விடாது தம் கடமையாகிய தவத்தைச் செழிக்கச் செய்கின்றவர்க் குத் தேவர்கள் ஏவலாளராவரெனின், இந்நிலத்து மக்கள் எங்ஙன மாவர்? ௨௪

அரசன் குலவழியாக முடிசூட்டப்பட்டு வந்தவனாயினும், அஃ தின்றி வந்தவனாயினும் அறிவினாலும், பலத்தினாலும், வீரத்தாலும் அரசியலை யடைந்துளானாயின், அவன் தன் கடமையிற் பற்றுடைய னாய்க் குற்றமிலனாய்ச் செங்கோலனாய் எல்லோரையும் நீதிமுறையாற் காத்து, மிகவும் அஞ்சத்தக்க செவ்விய தண்டங்களான் மக்களை எப்பொழுதுந் தத்தங் கடமைகளிற் பற்றுடையவர்களாக இருக்கும் படி செய்தல் வேண்டும். இன்றேல் அவன் ஒளி குன்றும். ௨௭

எப்பொழுதும் நுண்ணறிவாற் காரியம் புரியும் அரசனுக்குச் சுருங்கிய செல்வமும் பெரும் செல்வமாக வளரும். வீரம், நீதி, பலம், பொருள் என்னும் இவற்றால் விலங்கினங்களும் தன் வயத்தன வாகும். ௨௮

# ௫. அரசர் சாத்துவிக முதலிய் குணங்களான் மூவகைப்படுவர்.

தவம், சாத்துவிகம் இராசதம் தாமதம் என்று மூவகைப்படும். இவற்றுள், ஒன்றனை மிகுதியாகச் செய்தவன் அத் தவப்பயனை யுடைய அரசனாகின்றான். ௨௯

தன் கடமையிற்பற்றும், குடிகளைக்காத்தலும், எல்லா வேள்வி களையும் வேட்டலும், பகைவர்களையும் நன்னெறிப் படுத்தலும், கொடைக்குணமும், பொறுமையும், ஆண்மையும், புலன்களிற் பற்

---

௨௩. ஒளி-தேசசு.

௨௬. குலவழியாக முடி சூட்டப்பட்டு வருதல் - முன்னை அரசனால் அபி டேகஞ் செய்யப்பட்டு வருதல்.

றின்மையும, காமமுதலியன வின்மையும் எவன்பாலுள்ளனவோ, அவன் **சாத்துவிக** அரசனுவான்; இறுதியில் வீட்டின்பம் எய்துவான். ௩க

முற்கூறிய அறங்களின் எதிர்மறைக்குணஞ் செயல்களையுடையவனும், அருளற்றவனும், களித்து மயங்குபவனும், பிறரைத் துன்புறுத்துபவனும், பொய்யனுமாகிய அரசன் **தாமத** அரசனுவான். அவன் இறுதியில் நரகத்துக்காளாவான். ௩உ

இடம்பனும், உலோபியும், புலனுகர்ச்சியிற் பற்றுடையவனும், வஞ்சகனும், தூர்த்தனும், மனம்வாக்குக் காயங்களால் வேறுபட்டவனும், கலகப்பிரியனும், இழிந்தோர்க்கு அன்பனும், தன்மனம் சென்றவழி நடக்கின்றவனும், நீதியில்லாதவனும், தீவினையாளனுமாகிய தாழ்ந்த அரசன் **இராசத** அரசனுவான். அவன் இறுதியில் விலங்கின் கதியையும், நிலையியற் பொருட்டன்மையையும் எய்துவன். ௩௪

சாத்துவிக அரசன் தெய்வத்தன்மையையும், இராசத அரசன் மக்கட்டன்மையையும், தாமத அரசன் இராக்கதத்தன்மையையும் எய்துவர். ஆதலின் சாத்துவிக குணத்திலேயே மனத்தை நிலைப்படுத்தல் வேண்டும். ௩ரு

சாத்துவிக குணமும் தாமதகுணமுந் தம்முளொத்து நிற்பின், மக்கட்பிறப்புண்டாகும். மனிதன் எதனை எதனைப் பற்றி யொழுகுகின்றனே ஊழ்வலியால் அதற்கு அதற்குத் தக ஆகின்றான். ௩௬

## ௬. கன்மமே எல்லாவற்றிற்குங் காரணம்.

இவ் வுலகவாழ்க்கையில் நற்பிறப்புக்குந் தீயபிறப்பிற்குங் கன்மமே காரணமாகும். முற்பிறப்பிற் செய்யப்பட்டதுங் கன்மமே. ஒரு கணமேனுஞ் செயலின்றியிருப்பவன் யாவன்? ௩௭

---

௩க. முதலியன வென்பதனல் காமமொழிந்த வினை விதனங்களையுங் கொள்க.

௩௬. மனிதப்பிறப்பு சத்துவ தமோகுணங்களின் கலப்பாலுண்டாவதாகும். இப்பிறப்புடைய ஒருவன், முக்குணங்களுள் எதனை எதனை மிகுதியாக அடைகின்றனே, அவ்வக்குணத்துக்குரிய தன்மையை எய்துவானுதலின், ௩ரு—ஆம் சுலோகத்திற் கூறப்பட்டபடி மனிதப்பிறப்புடைய அரசன், தேவ இராக்கத மனிதத்தன்மைகளைக் குணவயத்தா லெய்துவானென்றது இதனேடு முரணுமை யுணர்க.

இவ்வுலகத்தில் அந்தணராதலும், அரசராதலும், வணிகராதலும், சூத்திரராதலும், மிலேச்சராதலும் **பிறப்பினாலில்லை; குணஞ் செயல்களாலேயே** வேறுபடுக்கப்பட்டனர். ௩௮

பிரமனிடத்துத் தோன்றியது பற்றி எல்லோரும் எங்ஙனம் பிராமணராவர்? **சாதியினாலும், தாய்தந்தையராலும் பிராமணத்தன்மை எய்தற்பாலதன்று.** ௩௯

ஞானம் கன்மம் தவம் முதலிய குணஞ்செயல்கள், கடவுள் வழிபாட்டிற்பற்று, பொறிகளை வெல்லல், அருள், அடக்கம் என்னுமிவைகளை யுடையவனை அந்**தணனாகப்** பிரமன் இயற்றினன். ௪0

உலகத்தைக் காப்பதிற்றிறமையும், வலிமையும், இந்திரியங்களினடக்கமும், வீரமும், தீயவர்களை யொறுக்குஞ் சீலமும் உடையவனே அரச**னாவான்.** ௪௧

எப்பொழுதும் பொருள்களைக் கொள்ளல் விற்றல் இவைகளிற்றிறமையும், பண்டமாற்று முதலிய வாணிகத்தொழில்களால் வாழ்தலும், பசுவோம்பலும், உழவு செய்தலு முடையவர்கள் இந்நிலத்தில் **வைசியர்களாகப்** புகழ்ந்துரைக்கப்படுவர். ௪௨

இருபிறப்பாளர்களிடத்து வணக்கமும், அவர்களுக்கு ஏவற்றொழில் செய்தலிற் பற்றும், வலிமையும், நல்லொழுக்கமும், இந்திரியங்களைத் தம் வயப்படுத்தலும், கலப்பை விறகு புல் எண்ணும் இவற்றைச் சுமத்தலாகிய சிறு தொழில் புரிதலும் உடையவர்கள் **சூத்திரர்** எனப்படுவார். ௪௩

தத்தங் கடமையைச் செய்யாதொழிதலும், அருளின்மையும், பிறர்க்குத் துன்பஞ் செய்தலும், வெகுளி மேற்கோடலும், எப்பொழுதும் தீய செயலே இயற்கையாதலும், பகுப்புணர்வின்மையும் ஆகிய இவைகளையுடையார் **மிலேச்ச**ரெனப்படுவார். ௪௪

மக்களுக்கு முன்னைச் செய்த வினைப்பயனை நுகர்தற்குத் தக்கதாகவே அறிவுண்டாகும். இன்றேல், நல்வினை தீவினைகளின் முற்படுதற்கு ஆற்றலின்றாம். ௪௫

௩௮. இக்கருத்தை "பிறப்பொக்கு மெல்லா வுயிர்க்குஞ் சிறப்பொவ்வா, செய்தொழில் வேற்றுமையான்" "பெருமைக்கு மேனைச் சிறுமைக்குந் தத்தங் கருமமே கட்டளைக்கல்" என்னுந் திருக்குறள்களிலுங் காண்க.

௪௫. முன்னைவினை நிகழ்ச்சியை யொத்தே ஒருவன் அறிவு இம்மையில் நல்வினை தீவினைகளிற் செல்லுமென்பது கருத்து. "தவமுந் தவமுடையார்க்காகு மவமதனை, யஃதிலார் மேற்கொள்வது" என்னுந் திருக்குறள் ஈண்டு நினைக்கத்தக்கது.

வினைப்பயன் விளைதல் எங்ஙனமோ அங்ஙனமே ஒருவனுக்கு அறிவுண்டாம். ஊழ்வலி எவ்வளவி னுள்ளதோ அவ்வளவாகவே துணைக்கருவிகள் கிடைக்கும். ௪௬

நன்று தீதனைத்தும் முன்னை வினைப்படியே உண்டாகு மென்று துணியப்படுமாயின், தக்கவின்ன தகாதனவின்னவென் றுணர்த்தும் முது மொழிகள் பயனில்லனவாக ஒழியும். ௪௭

யாவரானும் போற்றப்படும் ஒழுக்கமும் அறிவும் உடைய பெரியார், முயற்சியை ஊழினும் பெரிதாகக்கருதுவர். முயற்சியைச் செய்தற்கு ஆற்றலில்லாத பேடியனையார், முன்னை வினைப்பயனைக் கூட்டுவிக்கும் ஊழையே கடைப்பிடிப்பர். ௪அ

எல்லாம் ஊழைப்பற்றியும் முயற்சியைப்பற்றியு முண்டாவன வாம். தொடங்கப்படும் வினைக்குப் பயன் விளைத்தற்குரிய சாதனம், முன்னைப்பிறப்புக்களிற் செய்த வினைப்பயனாகிய ஊழும், இப்பொழுது மேற்கோண்ட முயற்சியுமென இருவகைப்படும். ௪௯

என்றும் வலியவன், எளியவனுக்கு (அவன் நட்டோனாயின்) நன்றும், (பகைவனாயின்) தீதுஞ் செய்பவனாவான். அங்ஙனஞ் செய்தற்குக் காரணம், அவன் (தன்மாட்டும் பிறனிடத்து முள்ள) வலிமை யெளிமைகளை ஆராய்ந்தறியும் அறிவும், அதனால் விளையும் பயனு முடையனாதல். இன்றேல், அங்ஙனம் நன்று தீது செய்தற்குரியனாகான். ௫0

பயன் எய்துதற்குக் காரணம் காட்சியிற் காணப்படுவதன்று; முற்செய்வினையே காரணமாகும். இன்றேல், பயன் எய்துதல் இன்று மென்பது துணியப்படும். ௫௧

மக்களுக்குச் சிறு முயற்சியாற் பெரும்பயன் விளைகின்றது. அதற்குக் காரணம் முற்செய் வினையேயாகும். சிலர் முற்செய் வினையும் இம்மையிற் செய்யப்படு முயற்சியுங் கூடி அப்பெரும்பயனை விளைவிக்குமென்ப. ௫௨

சிலர், மக்களுக்கு இம்மையிற் செய்யப்படு முயற்சிகளாலேயே (எவற்றையுஞ் செய்துமுடிக்கும்) திறமை யுண்டாகுமென்ப. நெய் தோய்ந்த திரியைப்பற்றி நிற்கும் விளக்கைக்காற்று அவித்துவிடாது காத்தல் முயற்சியினாலேயே யாகும். ௫௩

---

௪௬. இக்கருத்து மிகப் பாராட்டற்பாலது.

௫௧. இன்றேல் - முற்செய்வினை யின்றேல்.

ஒருதலையாக வரற்பாலனவற்றைத் தடுத்தற் கியலாது. ஆயினும், ஒருவன் தனக்குள்ள அறிவின் வன்மைக்குத் தக்கவாறு பகைநோய் முதலிய தீங்குகளைப் போக்கமுயல்வதே நன்றாகும். ரு௪

ஆதலின், அரசன் தனக்கு வரும் நலந் தீங்காகிய பயன்கள், சிறுமை நடுத்தரம் பெருமை யுடையனவாக இருத்தலான், அவற்றிற் கியைய ஊழையும் மூவகைப்படுத் துணர்தல் வேண்டும். ருரு

இராவணனுக்கு ஒரு (அநுமான்) குரங்கினால் வனம் அழிதலாகிய தீங்கும், வீடுமன் முதலியோர்க்கு ஒரு (அருச்சுனன்) மனிதனால் நிரை மீட்டலாகிய தீங்கும் ஏற்பட்டன வென்று அறிதல் வேண்டும். ரு௬

இராமனுக்கும், அருச்சுனனுக்கும் விலங்கு பறவை முதலியன துணை செய்தனவென்பது நன்கு வெளியாம். ஊழ் நல்லதாங்கால் சிறுமுயற்சியும் நற்பயனை விளைவிக்கும். ருஎ

ஊழ் தீயதாங்கால் பெரிய நற்செயலுந் தீயபயனை விளைவிக்கும். மகா பலியும், அரிச்சந்திரனும் கொடையினாலேயே துன்ப முற்றனர். ருஅ

நற்செயலால் இன்பமும், தீச்செயலாற் றுன்பமும் உண்டாம். ஆதலின், அறநூல் வாயிலாக நல்லனவினை தீயனவினை யெனவுணர்ந்து தீயனவற்றை யொழித்து நல்லனவற்றையே மேற்கொள்ளல் வேண்டும். ருகூ

அரசன் காலத்திற்குக் காரண மாதலால், நற்செயல் தீச்செயல்களுக்கும் அவனே காரணமாவான். ஆதலின், அவன் தன் அரசியற் காரியமுகமான முயற்சியாலும், ஒறுத்தலாலும் மக்களைத் தத்தம் கடமைகளில் நிலைப்படுத்தல் வேண்டும். சுO

## எ. அரசியற் குரிய ஏழு அங்கங்கள்.

அரசியல், அரசு அமைச்சு நட்பு பொருள் நாடு மதில் படை என்னும் ஏழு உறுப்புகளையுடைத்து. அவற்றுள் அரசு தலையாக மதிக்கப்படுவதாகும். சுக.

ருஎ-ருஅ. இச்சுலோகங்களின் கருத்தை "நல்லவை யெல்லா அந் தீயவாந் தீயவு, நல்லவாஞ் செல்வஞ் செயற்கு" என்னுந் திருக்குறளிற் காண்க. மகாபலி திருமாலுக்கும், அரிச்சந்திரன் விசுவாமித்திர முனிவர்க்குஞ் செய்த தானங்களாற் பெரிதுந் துன்புற்றனரென்பது பிரசித்தம்.

சுக. இச்சுலோகத்தின்படி "படை குடி கூழமைச்சு நட்பர ணாறும், உடையா னரசரு ளேறு, என்னுந் திருக்குறள் அமைந்திருத்தல் காண்க. பொ

அமைச்சுக் கண்ணாகவும், நட்புச் செவியாகவும், பொருள் முக மாகவும், படை மனமாகவும், மதில்கையாகவும், நாடு காலாகவும் இவ் வாறு அரசியல் உறுப்புக்கள் எண்ணப்படுவன வாம். ௬௨

எப்பொழுதும் நலங்களைத் தருவனவும், தம்மொடு நன்கு பொருந்திய அரசர்களைப் பெருமைப்படுத்துவனவுமாகிய இவ்வங் கங்களின் குணங்களை முறையே கூறுவேன். ௬௩

பெரியோர்களைப்பற்றி யொழுகுகின்றவனும், கடலைச் சந்திரன் மகிழ்விப்பது போல மக்கள் கண்களுக்கு இன்பஞ் செய்கின்றவனு மாகிய அரசன், இவ்வுலக நலம் வளர்தற்குக் காரணமாகின்றான். ௬௪

அரசன் காரியங்களைச் செவ்வையாகச் செய்திலனாயின், அவன் கீழ் வாழுங் குடிகள், கடலில் மீகாமனில்லாத மரக்கலம் போலக் கேட் டினை யெய்துவர். ௬௫

இந்நிலத்தில், குடிகள் அரசனையின்றித் தத்தங் கடமைகளில் நிலைபெறுவாரல்லர். அரசனும் குடிகளையின்றி விளக்கமுறான். ௬௬

அரசன் செங்கோலனாயின், தன்னையுங் குடிகளையும் அறம் பொருள் இன்பங்களோடு பொருந்தச்செய்வான். அன்றிக் கொடுங் கோலனாயின், உறுதியாகத் தனக்குங் குடிகளுக்கும் அழிவு செய்பவ னாவான். ௬௭

யுதிட்டிரன் (இந்நிலத்தில்) துவைதவன மென்னுங் காட்டி லிருந்து அறம் புரிந்தமையால், துறக்க வின்பத்தை யடைந்தான். நகுடன் (துறக்கமுற்றும்) மறம்புரிந்தமையால், இரசாதலத்தை யெய்தினான். ௬௮

வேனன் என்னும் அரசன் அதருமத்தை மேற்கொண்டமை யால் அழிவெய்தினான். பிருது என்னும் அரசன் தருமத்தை மேற்

ருள் நாடு என்பன இக்குறளிற் கூழ் குடி என்று கூறப்பட்டன. இவ் வுண்மையைப் பரிமேலழகர் இதற்கெழுதிய உரையானுணர்க. ஈண்டு அரசியலின் உறுப்புக்களாக்க் கூறப்பட்ட ஏழனுள் அரசும் ஒன்றாம். திருக்குறளில் அரசனுடைய உறுப்புக்களாக மற்றை ஆறுங் கூறப்பட்டன.

௬௫. மீகாமன்-மாலுமி.

௬௮. யுதிட்டிரன் - தருமபுத்திரன். நகுடன் இந்திரலோகத்தை யடைந்தும், இந்திராணியின்பால் வைத்த காமத்தால், தன்னைச் சுமந்து செல்லும் முனிவரரைக் கடிந்து ஏவ, அதனால் வெகுண்ட அகத்தியர், "மலைப்பாம்பாகுக" எனச் சபித்தனர். அச்சாபம் பெற்று அவன் மேலுலகத்தினின்று மிழிந்து பாதலத்தை யெய்தினான்.

கொண்டமையால் ஆக்கமெய்தினான். ஆதலின், அரசன் அறத்தின் வழியே பொருளீட்ட முயலல் வேண்டும். ௬௯

## ௮. அரசன் கடவுட்கூறுடையனாதல்.

அறத்திற் பற்றுடைய அரசன் கடவுட்கூறனாவான். அங்ஙனமல்லாதவனும், குடிகளுக்குத் துன்பஞ் செய்பவனுமாகிய அரசன் இராக்கதக்கூறுடையனாவான். ௭௦

எல்லாவுலகங்களும் அரசனின்றி அச்சத்தால் எப்பக்கங்களிலும் சிதறுண்டிருக்குங்கால், அவ்வெல்லாவற்றையுங் காத்தற்பொருட்டுப் பிரமதேவன் இந்திரனும், வாயுவும், இயமனும், சூரியனும், அக்கினியும், வருணனும், சந்திரனும், குபேரனுமாகிய இவர்களுடைய அழிவில்லாத கூறுகளைக் கொண்டு அரசனைப் படைத்தான். ௭௧-௭௨

இந்திரன் தன் தலைமையால் இயங்கியல் நிலையியற்பொருள்களுக்குத் தலைவனாய்த் தனக்குரிய பாகத்தை யேற்றுக் காத்தல் போல, அரசனும் அங்ஙனமாய்த் தனக்குரிய ஆறில் ஒருகூற்றைப் பெற்றுக் குடிகளைப் புரப்பதில் திறமையுடையனாவான். ௭௩

வாயு மணத்தைப் பரப்புபவனாவான். அங்ஙனமே அரசன் தீயவைகளை யொழித்து நல்ல செய்கைகளைச் செய்விப்பவனாவான்.

---

௬௯. வேனன் - சுவாயம்புவின் வம்மிசத்து அங்கனுக்குச் சுனிதையிடம் பிறந்தவன். இவன் தீயொழுக்க முடையவனாய் இருடிகளாற் சபிக்கப்பட்டு அழிவெய்தினான். பிருது-அவ்வேனனுடைய புதல்வன். இவன் அறவழிச் செங்கோல் செலுத்தியவன்; சனற்குமாரரால் உபதேசிக்கப்பட்டவன். இவன் காலத்தில் ஒருமுறை வற்கடம் வந்து அதனாற் பூமி புற்பூண்டின்றி வறிதாயிற்று. அது கண்ட இவன் இந்நிலமகளை யழிக்க ஆயுதத்தோடு எழுந்தான். நிலமகள் அஞ்சித் தான் ஒரு பசுவாகிச் சுவாயம்பு மனுவைக் கன்றாகக் கொண்டு வெளிப்பட்டுச் சராசரங்களுக்கு உணவூட்டி இவன் கோபத்தை ஆற்றினாள். இதனால் இப்பிருது தரும மேற்கொண்டு உலகத்தைக் காத்து ஆக்க மெய்தியது புலப்படும்.

௭௦. கடவுட்கூறு - தெய்வாமிசம்.

௭௧-௭௨. இந்திரன் முதலிய தேவர்களின் கூறுகளையுடையனாய்ப் பிறப்பவனே அரசனாவானென்பது கருத்து.

௭௩. இயங்கியற் பொருள்-சங்கமம். நிலையியற் பொருள்-தாவரம். இந்திரனுக்குரிய பாகமாவது, இவ்வுலகில் அவனைக்குறித்து வேள்வியிற் கொடுக்கப்படும் அவிப்பாகமாகும்.

சூரியன் இருளையோட்டி ஒளிசெய்தல் போல அரசன் அதருமத்தைப் போக்கித் தருமத்தில் நிலைப்படுத்துபவனாவான். எச

இயமன் தண்டஞ் செய்வோனாதலின் தீயன புரிவோரை யொறுக்கும் அரசன் அவ் வியமன் கூறுவான். அக்கினி தூய்மையுடையனாய்த் தேவர்க்குரிய எல்லா அவிப்பாகங்களையும் நுகர்தல் போல, அரசன் தூயனாய் எல்லோரையுங் காத்தற் பொருட்டு அவர்மாட்டுப் பெறத்தக்க கடமையை அனுபவிப்பவனாவான். எரு

வருணன் எல்லா வுலகங்களையும் நீர்ச்சுவையால் வளர்த்தல் போல, அரசன் தன் பொருள்களால் வளர்ப்பவனாவான். சந்திரன் தன் கிரணங்களால் மகிழ்விப்பது போல, அரசன் தன் நற்குண நற்செயல்களால் மகிழ்விப்பனாவான். எசு

குபேரன் நிதிகளைப் பேணுவதில் திறலுடைய னாதல் போல, அரசன் பொருட்பெருக்கைக் காப்பதில் திறலுடையனாவான். சந்திரன் தன் கலைக்கூற்றி லொன்று குறையினும் நிறைமதி யாதல் கூடாதவாறு போல, வேந்தன் இவ்வெல்லாக் கூறுகளும் நிரம்பப் பெற்றாலன்றி விளக்கமுறான். எஎ

க. குடிகளை யின்புறுத்தும் அரசனுக்குரிய எழுவகைக் குணங்கள்.

தந்தை, தாய், ஆசிரியன், உடன்பிறந்தான், சுற்றம், குபேரன், இயமன் இவ்வெழுவரின் குணங்களை யொன்று முடையவனே அரசனாவான். அவை யில்லாதவன் அரசனாகான். எஅ

அரசன் தன் குடிகளுக்குத் தந்தையைப் போல நற்குணங்களைப் பயிற்றுவதிற் பற்றுடையனாகின்றான். தாயைப் போலக் குடிமக்களை வளர்த்து அவர்கள் புரியுங் குற்றங்களைப் பொறுக்கின்றான். எகூ

ஆசிரியன் மாணாக்கர்களுக்கு நல்ல கல்வியைப் பயில்வித்து இதோபதேசஞ் செய்தல்போல, அரசன் தன் குடிகளுக்குங் கல்வி

---

எச. வாயு நறுநாற்றம் தீநாற்றமாகிய இவைகளை வெளிப்படுத்தித் தீநாற்றத்தில் வெறுப்பும் நறுநாற்றத்தில் விருப்பு முறச்செய்தல் போல, அரசன் நல்லன தீயனவற்றை மக்களுக்கு அறிவித்துத் தீயன வொழித்து நல்லன மேற்கொள்ளச் செய்பவனாதலின் இவ்வாறு கூறப்பட்டது.

எரு. அக்கினி பிறதேவர்களுக்குரிய அவிக ளெல்லாவற்றையுஞ் சுவைத்துப் பின் அவரவர்க்குக் கொடுத்தல் போல அரசனும் மற்றைக் குடிகளுக்குரிய நுகர் பொருள்க ளெல்லாவற்றினும் கூறு கொண்டு, பின் அவரவர்பாற் சேர்ப்பிப்பனென்பது கருத்து.

யைக் கொடுத்து நன்னெறியைப் போதிப்பவனுகின்ருன். உடன் பிறந்தான் தந்தையின் பொருளினின்று அறநூல் விதிப்படி மற்றைச் சோதரர்க்கு உத்தாரக்கூறிடல் போல, அரசன் குடிகளுக்கு அவ்வாறு செய்பவனுகின்ருன். அ0

அரசன் நண்பனைப் போலத் தன்னையும், பெண்களையும், பொருள்களையும், மறைபொருள்கள்களையும் பாதுகாத்தலாற் சுற்றமாகின்ருன். பொருளைப் பிறர்க்குக் கொடுப்பதாற் குபேரனும் முறைப்படி தண்டஞ்செய்வதால் இயமனும் ஆகின்ருன். அக

செல்வச்சிறப்பு மிக்க சீரிய அரசனிடத்து இக்குணங்கள் தங்கியிருக்கும். ஆதலின், அரசனால் ஒருபொழுதும் இவ்வெழு குணங்களும் விடற்பாலன வல்ல. அஉ

எவன் வலியனாயிருந்தே குடிகள் செய்யுங் குற்றத்தைப் பொறுக்கின்ருனே, அத்தகைய அரசன் குடிகளை யடக்கி யாள்வதிற் றிறனுடையனுவன். பிற எல்லா நற்குணங்களும் அமையப்பெற்றவனாயினும், பொறுமையில்லாத அரசன் சிறப்புறுன். அங

எவ்வரசன் தன்னைப்பற்றிப் பிறர்கூறும் பழிப்புரையைப் பொறுத்துக்கொண்டு, தன்பாலுள்ள தீயகுணங்களையொழித்து, எப்பொழுதுங் கொடையாலும் பெருமைப்படுத்தலாலும் ஆதரவாலும் தன் கீழ் வாழுங் குடிகளை மகிழ்வுறுத்தி, பொறியடக்கமும், வீரமும், படைக்கலத்திறனும், பகைவரை வெல்லுதலும், அறநூல் வழியொழுகுதலும், ஆராய்ந்தறிதலும், அறிவும், மெய்யுணர்தலும், கயவர்களோடு கலவாமையும், நெடிது சூழ்ந்துணர்தலும், பெரியோரைப் பின்பற்றுதலும், நடுவுநிலைமையும், புலவர்களோடு அளவளாவுதலுமாகிய இவ்வெல்லாவற்றையு முடையவனு யிருக்கின்ருனே அவனைக் கடவுட்கூறனுய் அவதரித்தவனென்று அறிதல் வேண்டும். அச

இவற்றிற்கு மாறுபட்ட குணஞ் செயல்களையுடைய அரசன் இராக்கதக்கூறு உடையனுவன். அவனே நரகம் எய்துவோனுவன். எவ்வரசன் எக்கூற்றையுடையவனே அவனைச் சார்ந்த பரிவாரங்களும் அங்ஙனமே யாவர். அஎ

---

அ0. உத்தாரம்-எடுகூறு-பாகநிருணயம். இதன் விரிவை மனுதரும சாத்திரம் கூ-ஆம் அத்தியாயத்திற் காண்க.

அக. இக்கருத்து "உடுக்கையிழந்தவன் கைபோல வாங்கே, யிடுக்கண் களைவதா நட்பு" என்னுந் திருக்குறளை நினைப்பூட்டுவதாகும்.

அரசன் தன் துணைவர் புரியுங் காரியங்களை நோக்கி, அவர்கள் ஊழ் நல்லதாக விருப்பின், அவற்றை யேற்று மகிழ்ச்சி யடைகின்றான். அன்றி அவ்வூழ் தீயதாக விருப்பின், அவர்தம் செயல்களை யேற்றுக் கோடலும், அதனால் மகிழ்வடைதலும் இலனாகின்றான். அஅ

செய்வினைப்பயன்கள் சாந்தியில்வழி மனிதர்களால் ஒருதலையாக நுகரற்பாலனவே. சாந்திசெய்யப்படுமாயின், அங்ஙனம் நுகரற்பாலன வல்ல. அகூ

மருந்தினால் நோய் நீங்கப்பெற்றவன் இன்ப நுகர்தற்கு உரிமையுடையனாதல் போலச் சாந்தியாற் றீவினைப்பய னீங்கப்பெற்ற அரசன் இன்பம் எய்துவன். துன்பத்திற்கு ஏது வின்னதென் றுணர்ந்துவைத்தும், அதனைச் செய்தற்கு முயல்பவன் யாவன்? (ஒருவனுமிலன் என்பதாம்.) கூ0

நல்வினைப்பயனில் மனம் இன்புறும்; தீவினைப் பயனில் எவர்க்கும் மனம் இன்புறுவதில்லை. நன்று தீதுகளைத் தெள்ளிதிற் புலப்படுத்தும் அறநூல்களைப் பார்த்து ஒழுகல் வேண்டும். கூக

நீதி வழங்குதற்கு விநயங் காரணமாகும். நூல்களின் உண்மைப் பொருட் டுணிவால் உண்டாகும் விநயத்திற்குப் பொறியடக்கங் காரணமாகும். அப்பொறிகளையடக்கியாளும் ஆற்றலுடையவன் நூல்களின் உண்மைப் பொருள்களை யறிபவனாவன். கூஉ

அரசன் முதலில் தான் பணிவுடையனாய் அதன்பின் முறையே புதல்வரையும், அமைச்சரையும், மற்றை வினைசெய்வாரையும், குடிகளையும் பணிவுடையவர்களாகப் பயிற்றுவித்தல் வேண்டும். கூங

வேந்தன் (தான் ஒழுகிக்காட்டாது) பிறர்க்குபதேசிக்குமளவில் திறனுடையனாக விருத்தல் கூடாது. அங்ஙனம் பிறர்க்கு உபதேசிக்குங் குணம் படைத்தும், ஓரோவமயத்திற் குடிபுறந் தருதலில் தவறுடையனாதலுங் கூடும். கூச

குடிகள் தீயகுணங்களை யுடையவர்களாயினும், தமக்கு ஓர் அரசனை யின்றி இருக்கமாட்டார்கள். இந்திராணி என்பாள் என்றும்

---

அகூ. ஒருவன் தான் செய்த தீவினையின் பயனைக் கடவுளர்க்குச் செய்யும் பூசைகளாற் பரிகரிக்கலா மென்பது கருத்து.

கூ0. அதனை - அத்துன்ப காரணத்தை.

கூச. புறந்தரல்-காத்தல். ஈண்டு "ஓதி யுணர்ந்தும் பிறர்க்குரைத்துந் தானடங்காப், பேதையிற் பேதையா ரில்" என்னுந் திருக்குறள் நினைவு கூர்தற்பாலது.

தலைவனை யுடையவளாக விருத்தல் போல, குடிகளும் என்றும் அரசனை யுடையவர்களாகவே இருப்பார்கள்.' கூ௫

எவ்வரசனுக்கு அடக்கமில்லாத அமைச்சரும், வணக்கமில்லாத தாயத்தாரும், கொடியவராகிய புதல்வர் முதலியோரும் உள்ளாரோ, அவ்வரசனது அரசுரிமை திருவிழந்ததாகும். கூசா

என்றுந் தன்பால் அன்பு பூண்டொழுகும் அமைச்சர் முதலியோரை யுடையவனும், குடிகளைப் புரப்பதில் விசேடப் பற்றுடையவனும், வணக்கமுடையவனுமாகிய அரசன் மிக்கசெல்வத்தை அனுபவிப்பவனாவான். கூஎ

## க0. பொறியடக்கத்தின் இன்றியமையாமை.

புலன்களாகிய பெருங் காட்டில் ஓடித் திரிவனவும், அடக்க வொண்ணாதனவுமாகிய பொறிகளென்னும் யானைகளை, அறிவென்னுந் தோட்டியால் அடக்கி வயப்படுத்தல் வேண்டும். கூஅ

மனம் புலன்களாகிய நுகர்பொருள்களில் வைத்த பேராவினாற் பொறிகளைச் செலுத்துகின்றது. ஆதலின், பெரிது முயன்றாயினும் மனத்தை யடக்கல் வேண்டும். மனம் அடங்கிற் பொறியடக்க முடையனாவன். கூகூ

ஒரு மனத்தை யடக்கி யாள்வதில் ஆற்றலில்லாத அரசன், கடல்சூழ்ந்த இந்நிலவுலகத்தை எங்ஙனம் தன் வயப்படுத்து ஆளக்கடவன்? க00

வினை முடிவிற் றுன்பம் விளைவிப்பனவும், தோற்ற மாத்திரத்தில் மனத்தைக் கவர்வனவுமாகிய புலன்களின் வயப்பட்ட மனத்தையுடைய அரசன், (புலன்களின் வயப்பட்டுக் கட்டுண்ணும்) யானையைப் போற் பிறரால் அகப்படுத்தப்படுவன். க0க

ஓசை, ஊறு, ஒளி, சுவை, நாற்றம் எனப் புலன்கள் ஐந்துள. இவற்றுள் ஒவ்வொன்றே அழிவெய்துதற்குப் போதியதாகும். க0உ

கூஅ. இச் சுலோகத்தின் கருத்து 'உரனென்னுந் தோட்டியா னோரைந்துங் காப்பான், வரனென்னும் வைப்பிற்கோர் வித்து" என்னுந் திருக்குறளை நினைவுறுத்துகின்றது.

க0உ. ஓசை முதலிய ஐம்புலனுகர்ச்சியா லழிவெய்து முயிர்களைப் பின் வரும் ஐந்து சுலோகங்களிலும் முறையே காண்க.

தூய்மையும், தருப்பைப்புன் முளை யுணவும், நெடுந்தூரம் ஓடுதலில் வன்மையும் உடைய **மான்கள்** வேடனது உரத்த இசைப் **பாட்டி**னால் மயங்கித் தமக்கு அழிவைத் தேடுகின்றன. க0௩

பெரிய மலைச்சிகரம் போன்ற உருவமுடையதும், விளையாட்டால் மரங்களை வேருடன் பிடுங்குவதும் ஆகிய யானை பெண்யானையின் **ஊற்றின்பத்தா**ல் மயங்கிக் கட்டுண்டு அகப்படுத்தப்படுகின்றது. க0௪

நெய்யினால் எரியும் விளக்கின் சுடரைப் பார்ப்பதனால் மயக்கமுற்ற கண்களையுடைய **விட்டில்**, அம்மயக்கத்தால் விரைந்து அவ் விளக்கில் வீழ்ந்து இறக்கின்றது. க0௫

ஆழமாகிய நீரில் முழுகித் திரியும் மீன், செம்படவனுக்குச் சேய்மையிலிருந்தும், அவனால் இடப்படும் தூண்டிலின்கண் உள்ள ஊனையுண்டு அழிவெய்துகின்றது. க0௬

**வண்டு** பூவிதழ்களைக் கடித்து உதிர்க்குந் திறமையும், வெளிச் செல்லுதற் குரிய இறகுகளின் துணையும் உடையதாயிருந்தும், **மணத்தின் மயக்கத்தா**ல் தாமரைப்பூவினுட் படுகின்றது. க0௭

தனித்தனியே கேடு விளைக்கும் நஞ்சையொத்த புலன்கள் ஐந்தும் ஒன்றுசேரின் யாதுதான் செய்யா? திண்ணமாக அழிவுசெய்வனவாம். க0௮

## கக. * சூது முதலிய **விதனங்கள்.**

சூதாடலும், பெண்விழைச்சும், கட்குடித்தலுமாகிய இம்மூன்றும் பலவகைத் துன்பங்களை விளைவிப்பனவாதலின், மேற்கொள்ளத் தகாதவைகளாம். இம்மூன்றும் பொருந்துமாற்றான் அளவோடு செய்யப்படின் முறையே பொருளையும், மகப்பேற்றையும், அறிவையுந் தருவனவாம். க0௯

---

க0௩. இஃது ஓசையா லழிவெய்தும் உயிரைக் குறிப்பதாகும்.

க0௪. இஃது ஊற்றின்பத்தா லழிவெய்தும் உயிரைக் குறிப்பதாகும்.

க0௫. இஃது ஒளியா லழிவெய்தும் உயிரைக் குறிப்பதாகும்.

க0௬. இது சுவையா லழிவெய்தும் உயிரைக் குறிப்பதாகும்.

க0௭. இது நாற்றத்தால் மயங்கும் உயிரைக் குறிப்பதாகும்.

* விதனங்களை "வேட்டங் கடுஞ்சொன் மிகுதண்டஞ் சூதுபொருள், வீட்டங்கட் காமமோ டேழு" என்பதனான் அறிக.

நளன் தருமபுத்திரன் முதலியோர் சூதாடலைக் கபடமுறைமேற் கொண்டமையால், நாடுமுதலியன இழந்து துன்பமுற்றனர். ஆதலின், அவ்வுபாயத்தை யறிந்தவர்க்குக் கபடத்தோடு கூடிய சூதே பொருளைத்தருவதில் வலியுடையதாகும். ௧௰

பெண்களின் பெயரைக் கூறுமளவில் அதுவே இன்பம் விளைவித்து மனத்தை விகாரப்படுத்துவதாகும். அங்ஙனமாயின், இன்ப விளையாட்டான் மகிழ்வுறுத்தும் புருவங்களையுடைய அம்மகளிரின் காட்சி யாதுதான் செய்யாது? ௧௧௧

மறைவில் தன் உள்ளக்கருத்தை வெளிப்படுத்துவதிற் றிறமை வாய்ந்தவளும், மெல்லியகுரலாற் றடைப்பட்டுப் பேசுகின்றவளும், சிவந்த கடைக்கண்களை யுடையவளுமாகிய பெண்மகட்கு ஆடவருள், வயப்படாதவன் யாவன்? ௧௧௨

பெண்பாலார் பொறிகளை வென்ற முனிவரர் மனத்தையும் நிச்சயமாகக் காமுறச்செய்பவரெனின், வேறு கூறற்பாலது யாதுளது? பொறிவழி யுள்ளம் போக்குவார் நிலை யாதாய் முடியும்? ௧௧௩

அங்ஙனம் எப்பொழுதும் மகளிர்பால் அவா மேற்கொண்டொழுகிய இந்திரன், தண்டகன், நகுடன், இராவணன் முதலிய இப் பலரும் கேடெய்தித் துன்பமுற்றனர். ௧௧௪

காமம் ஒன்றையேபற்றி யொழுகாத ஆண்மகனுக்கே கற்புடையாள் என்றும் இன்பந்தருபவளாவள். அத்தகையாளை யன்றி மனை வாழ்க்கையிற் றுணை செய்பவள் வேறொருத்தியுமிலள். ௧௧௫

கள்ளை மிகுதியாகக் குடிப்பவனுக்கு அறிவுகெடும். சிறிதளவு உண்ணப்படும் கள் மதிநுட்பத்தையும், தூய அறிவையும், அஞ்சாமையையும், மனவூற்றியையும் தருவதாகும். இன்றேல், இவ்வெல்லா

---

௧௰. நளனும், தருமபுத்திரன் முதலியோரும், வஞ்சகமின்றிச் சூதாடலை மேற்கொண்டமையால், முறையே வஞ்சகராகிய புட்கரனாலும் துரியோதனாதிகளாலும், நாடுமுதலியன கவரப்பட்டு வருந்தினரென்பது பிரசித்தம்.

௧௧௪. இந்திரன் அகலிகையோடு களவிற் புணர்ந்தமையால் கௌதம முனிவராற் சபிக்கப் பட்டுத் துன்பமுற்றான். தண்டகன் என்னும் அரசன் பார்க்கவரது ஆச்சிரமத்திலிருந்த அவர்புதல்வியாகிய அரசையை வலிந்து பற்றினமை காரணமாக, அப்பார்க்கவர் சாபமிட, அதனால் அவன் நாடு எரிந்து சாம்பராயிற்று. அவனும் புதல்வர் முதலியோரோடு மரணம் எய்தினன். நகுடனும் இராவணனும் முறையே இந்திராணியையும் சானகியையுங் காமுற்றுக் கேடெய்தினர்.

வற்றையும் அழிப்பதாகும். காமமும் வெகுளியும் மிக்கமதத்தினைச் செய்வனவாதலின், விதிப்படி வேண்டிய அளவு கொள்ளற்பாலனவாம். ககசு - ககஎ

அரசன் மக்களைப்பெற்று வளர்ப்பதற்குக் காமத்தையும், வெற்றி விருப்பத்தாற் பகைவரை யடக்குதற்கு வெகுளியையும், படைகளைக் காத்தற்குப் பேராசையையும் மேற்கொள்ளல் வேண்டும். ககஅ

பிறர்மனைநயத்தலிற் காமமும், பிறர் பொருள் கவர்வதிற் பேராவும், தங்கீழ்வாழுங் குடிகளையொறுப்பதில் வெகுளியும், அரசர்கள் என்றும் மேற்கொள்ளற்பாலனவல்ல. கககூ

பிறர்மனை நயத்தலையுடையானை இல்வாழ்வானெனவும், தன்கீழ் வாழுங்குடிகளை அலைப்பானை வீரனெனவும், பிறர்பொருளைக் கவர்ந்து தொகுத்தவனைப் பொருளுடையானெனவுங் கூறுதல் பொருந்தாது. கஉ0

தேவர்கள் காத்தற்றொழிலை மேற்கொள்ளாத அரசனையும், தவஞ்செய்தலில்லாத அந்தணனையும், ஈதலில்லாத பொருளுடையானையும் நிர்வீர்த்தி யழிப்பர். கஉக

தலைவனாதலும், கொடையாளியாதலும், பொருளுடையனாதலுமாகிய இவை நல்வினைப்பயன்களாம். ஏவலாளனாதலும், இரப்போனாதலும், வறியவனாதலுமாகிய இவை தீவினைப்பயன்களாம். கஉஉ

ஆதலின், அரசன் நீதிநூல்களையாராய்ந்து, தன்னை நன்னெறிப்படுத்தி, இம்மைமறுமைகளில் இன்பம் விளைத்தற்குரிய தன் அரசியற்றொழிலை விதிப்படி செய்தல்வேண்டும். கஉங

### கஉ. அரசனுடைய எண்வகைத் தொழில்கள்.

தீயோரையொறுத்தலும், ஈதலும், குடிகளைக்காத்தலும், இராசசூயமுதலிய வேள்விகளை வேட்டலும், அறநெறிபிறழாது பொருளீட்டலும், பிறஅரசர்களைத் திறைதரச்செய்தலும், பகைவரைத் தொலைத்தலும், மேன்மேலும் நிலப்பகுதி தேடலுமாகிய இவ்வெட்டும் அரசர்க்குரிய தொழில்களாம். கஉச-கஉரு

தம் படைகளைப் பெருக்காதவரும், பிறவேந்தர்களைத் திறை செலுத்தச்செய்யாதவரும், குடிகளை நன்கு ஓம்பாதவருமாகிய அரசர்கள் பேடியையொப்பர். கஉசு

---

கஉச-உரு. திறை. - சிற்றரசர் பெருநிலவேந்தர்க்குக் கொடுக்குங் கப்பம்.

## கரு. அரசனுடைய குணங்குற்றங்கள்.

குடிகள் தன்னொழுகிலைப் பழித்துத் தன்னை வெறுக்க ஒழுகு வோனும், அறிவுடையோராலும் பொருளுடையோராலும் விலக்கப் படுபவனுமாகிய அரசன் மிகஇழிந்தவனுவான். கஉ௭

நடரும், இசைபாடுவோரும், வரைவின்மகளிரும், மல்லரும், அலிகளும், தாழ்குலத்தோருமாகிய இவர்களிடத்து மிக்கபற்றுவைத் தொழுகும் அரசன், யாவராலும் பழிக்கப்பட்டுப் பகைவர்முகத் தில் இருப்பவனுவான். கஉஅ

எப்பொழுதும் நல்லறிவுடையோரை வெறுத்தும், தீயவர்க ளோடு கூடி மகிழ்ந்தும், தன்பாலுள்ள தீயகுணங்களை யறியாமலும் ஒழுகுகின்ற அரசன், தனக்குத் தானே அழிவுசெய்பவனு வான். கஉகூ

பிறர்பொருளைக் கவர்பவனும், குடிகளுக்குத் துன்பம் இழைப்ப வனும், கொடியதண்டம் விதிப்பவனுமாகிய அரசன் தன் தீயகுணங் களைக் குடிகள்பாற்கேட்டு, அதனால் அக்குடிகளைத் தீங்கு செய்த வர்களாக எப்பொழுது எண்ணுகின்றனே, அப்பொழுதே உலகம் கலக்கமுற்று வேறுபடும். ஆதலின், அவன் அங்ஙனம் உலகம் கலங்க முற்று வேறுபடுதற்குரிய தன் ஒழுக்கத்தை, நன்குணர்ந்த அமைச் சர் முதலியோர்க்கு மறைவிற்கண்டு சொல்லும் ஒற்றர்களால் அறி வித்து, அவ்வமைச்சர் முதலியோருள் யாவர் பழித்துரைக்கின்றனர்; யாவர் எக்கருத்தாற் புகழ்ந்துரைக்கின்றன ரென்பதும், தன் தீய குணங்களையும் நற்குணங்களையு முணர்ந்து யார்யார் தன் மாட்டு எத்தகைய விருப்புவெறுப்புடையவர்களாக இருக்கின்றன ரென் பதும் ஆகிய எல்லாவற்றையும் அவ்வொற்றர்கள் மறைவிற்கண்டு கூறக்கேட்டும், அவற்றை உலகத்தாரால் எப்பொழுதும் உணர்ந் தும், நல்லபுகழ் என்றும் நிலைபெறுதற் பொருட்டுத் தன்பாலமைந்த தீயகுணங்களை யொழித்தல் வேண்டும். அதுபற்றித் தன்குடிகளை அவ மதித்தல் கூடாது. "வேந்த! நின்னைஉலகம் பழிக்கின்றது" என்று ஒற் றர்கள்சொல்லக்கேட்ட அளவில் தன்தீயஇயற்கையால் வெகுளிமேற் கொள்ளுவானுயின், அவன் தன் தீயகுணங்களை மறைப்பவனுவான். **இராமபிரானுற் கற்பிற்சிறந்த சீதை, உலகம் கூறும் பழிச்சொற் காரணமாக விலக்கப்பட்டாள்.** அவ்விராமபிரான் மிக்க பலசாலியாக விருந்தும் அப்பழிச்சொல்லை வெளிப்படுத்திய வண்ணனை ஒரு

---

கஉஅ. பகைவர்முகத்திலிருத்தல் - அவர் வெல்லுதற் கெளியனுதல்.

சிறிதுந் தண்டித்திலன். அவ் வரசர் பெருமானாகிய இராமன் உலகிய லறிவோடு தத்துவஞானமு முடையவனாதலின், அவ்வண்ணானுக்கு அபயம் அருளினான். கடுo-கடுசு

அரசனது பெருங்குற்றத்தையும் அவன் முன்னிலையிற் கூறுதற்கு உலகம் அஞ்சும். திருமால் முதலிய தேவர்களெல்லோரும் புகழ்ச்சியில் விருப்பமுடையவர்களென்று வேதங் கூறும். அங்ஙனமாயின், மனிதர்களைப் பற்றிக் கூறுவதென்? இதனால், என்றும் ஒருவர்க்குப் பிறர் கூறும் பழிப்பினாற் கோபமுண்டாகுமென்பது போதரும். ஆதலின், அரசன் என்றும் பகுத்துணர்ந்து தண்டிப்பவனாகவும், மிக்க பொறுமையுடையவனாகவும், குடிகளை இன்புறுத்துபவனாகவும் இருத்தல் வேண்டும். கடுஎ-கடுஅ

இளமையும், வாழ்க்கையும், மனமும், உடலொளியும், திருவும், தலைவனுந் தன்மையு மாகிய இவ்வாறும் நிலையுடையனவல்லவென்றுணர்ந்து அறத்திற் பற்றுடையனாதல் வேண்டும். கடுசு

அரசன்பால் கொடையின்மையும், பிறரை அவமதித்தலும், கபடமும், வன்சொல்லும், மிகப்பெருந்தண்டமும் அமைந்திருப்பின் அவனைக் குடிகள் ஒழித்துவிடுவர். கசுo

மாறுபட்ட இக்குணங்களால் அரசனைக் குடிகள் பரம்பரையாக வெறுப்பர். தீயகுணம் ஒன்றே மிக்க பழியை யுண்டாக்குமாயின், அக்குணம் பலவாக அமையின் யாது செய்யா? கசுக

அரசர்களுக்கு வேட்டையாடலும், சூதாடலும், கட்குடித்தலுமாகிய இவை வெறுக்கற்பாலனவாம். இம்மூன்றானும் முறையே பாண்டுவும் நளனும் யாதவர்களும் துன்பமெய்தினர். கசுஉ

---

கடுடு. ஒரு வண்ணான் வேற்றிடஞ்சென்று வந்த தன்மனைவியை நோக்கி, "இராவணனாற் கவரப்பட்டு மீண்டுவந்த சீதையை யேற்றுக் கொண்ட இராமன் யான் அல்லன்; ஆதலின், நின்னை ஏற்றுக் கொள்ளேன்" என்று கூறிய சீதாபவாதத்தை மறைவிற் கண்டு கூறும் ஒற்றன்முகமாகக் கேட்ட இராமபிரான், அதுபற்றி அவ்வண்ணானைச் சினவாது, சீதாபிராட்டியாரை மீண்டும் வனத்தையடைவித்தாரென்பது புராணகதை.

கடுகூ. சாயை (மூலத்தில் ஛ாயா) என்பது ஈண்டு உடலின் ஒளியை யுணர்த்திற்று.

கசுக. இச்சுலோகத்தின் முற்பாதிக்கு "முன்னர்க்கூறிய தீய குணங்களுக்கு மாறுபட்ட கொடைமுதலிய நற்குணங்களால் அரசனைக் குடிகள் பரம்பரையாகப் போற்றுபவராவர்" என்று வேறு விதமாகவும் பொருள் கூறலாம்.

கசுஉ. பாண்டு வேட்டையாடுங்கால், மானுருக்கொண்டு புணர்ந்து இன்பம் நுகர்ந்த கிந்தம முனிவரையும், அவர் மனைவியையும் அம்பெய்து வீழ்த்தான்,

அரசன் காமம், வெகுளி, மோகம், உலோபம், மானம், மதம் என்னும் இவ்வறுவகைக் குற்றங்களையுங் களைதல் வேண்டும். இவை அங்ஙனம் களையப்படின் அவன் இன்பம் நுகர்பவனாவான். கசங.

காமத்தால் தண்டகனென்னும் அரசனும், கோபத்தாற் சனமேசயனும், உலோபத்தால் அயிலனென்னும் இராசவிருடியும், மோகத்தால் வாதாபி என்னும் அசுரனும், மானத்தாற் புலத்திய குமாரனாகிய இராவணனும், மதத்தினால் தம்போற்பவனென்னும் அரசனும் அழிவெய்தினர். கசச-கசரு

---

அப்பொழுது அம்முனிவர் பாண்டுவை நோக்கி, "நீயும் நின்மனைவியோடு கூடி இன்பந்துய்க்குங்கால் உயிர்நீங்கக் கடவை" என்று சபித்தனர். நளன் சூதாடி நாடு நகரங்களை யிழந்து, நடுநிசியிற் காட்டிற் றன்மனைவியையும் பிரிந்து துன்புற்றான். யாதவர் - கண்ணன் குலத்தவர்; இவர்கள் ஒன்றுகூடித் தவஞ்செய்யும் முனிவரைப் பரிகசித்தமையால், அம்முனிவர் சபித்தனர். அச்சாபப் பயனாக இவருள் ஒருவன் வயிற்றினின்று இருப்புலக்கை யொன்று பிறந்தது. அதனை அராவிக் கடலில் எறியும்படி கண்ணன் கூற, அங்ஙனமே செய்யப்பட்ட அவ்விருப்புத்துகள், சம்பங்கோரைகளாக முளைத்தன. பின்னொரு சமயம் கடற்கரைக்கு விளையாடச் சென்ற யாதவரனைவரும், நிரம்பக் கள்ளுண்டு களித்துத் தம்முட் கலாம் விளைத்து, அங்கு முளைத்திருந்த கோரைப்புற்களைப் பிடுங்கி அடித்துக்கொண்டு மாண்டனர்.

கசங. இவ்வறுவகைக்குற்றங்களுள், மோகத்தை உவகை யெனவும், உலோபத்தைக் கடும்பற்றுள்ள மெனவும் பரிமேலழகர் கூறுவர். (திருக்குறள், சச-ஆம் அதிகார அவதாரிகை.) இவற்றை முறையே சிறுமை, சினம், மாணாவுவகை, இவறல், மானம், செருக்கு என்று திருவள்ளுவர் கூறுவர். (திருக்குறள், சச-ஆம் அதி-க, உ-செ.)

கசச-கசரு. தண்டகன்-இக்ஷுவாகுவின் புதல்வன். இவன் விந்தியத்திற்கும் சைவலத்திற்கும் இடையேயுள்ள நாட்டை யாண்டவன். சுக்கிரரின் புதல்வியாகிய அரசையை வலிதிற்புணர்ந்த காரணத்தால் அச்சுக்கிரரால் சபிக்கப்பட்டுத் தன்னாட்டில் மண்மாரிபொழியத் தானும் அழிவெய்தினன். உலோபம்-ஈண்டுப் பிறர் பொருளைப் பெறுதற்கண் உண்டாம்பேரவா. அயிலன்-இளையின் புதல்வன். அம்பிகையின் தவவனத்தை யறியாமல் அடைந்த வைவசுவதமனுவின் புதல்வருள் ஒருவன், இளையெனும் பெயர் மடவரலாயினன். அவ் இளையின்பால் சந்திரன் புதல்வனாகிய புதனுக்குப் பிறந்த புரூரவா என்பவனே அயிலனாவான். இவன் பொருளாசை மேற்கொண்டு, சனற்குமாரர் முதலிய பெரியோர்களின் உபதேசங்களையும் ஏற்றுக்கொள்ளாமல், அந்தணர்களுடைய இரத்தின முதலிய பொருள்களை யெல்லாங் கவர்ந்துகொண்டு, அதுகாரணமாக முனிவரரற்சபிக்கப்பட்டு அழிவெய்தினன். வாதாபி-அசமுகியின்பால் துருவாசருக்குப் பிறந்த ஓர் அசுரன். இவனை ஆடாக்கி இவன் சகோதரன் முனிவர்பலர்க்கு விருந்திடுதலும், இவன் அம்முனிவர் வயிற்றைக் கிழித்து வெளிவருதலும் வழக்கம்.

ஆண்மையிற்சிறந்த பரசுராமனும், செல்வப்பெருமை மிக்க அம்பரீடனும் இவ்வறுவகைப்பகைகளையுந் துறந்து நெடுங்காலம் இந்நிலவுலகத்தை ஆட்சி செய்தனர். கசசு

அரசன் முயற்சியாற் பொறியடக்கமுடையனாகவும், இந்நிலவுலகத்தில் நல்லறிவுடையார் ஒழுகிய நெறிநின்று, அறம் பொருள்களை வளர்த்துப் பெரியோர்களிடத்து வணக்கமுடையனாகவும் இருத்தல் வேண்டும். கசஎ

ஆசிரியனையடுத்தல், நூலுணர்ச்சி யெய்தற்பொருட்டாம். அந்நூலுணர்வு, பணிவுடைமை மேற்கொள்ளுதற் பொருட்டாம். இங்ஙனங் கல்வி பணிவுடைமையாகிய இரண்டனையுமுடைய அரசன் பெரியோர்களின் அன்பிற்கு உரியனாவன். கசஅ

எவ்வரசன் தீயொழுக்கமுடையவர்களால் ஏவப்பட்டுந் தகாத செயல்களிற்புகாமலும், வேதமும், அறநூலும், உலகியலுமாகிய இவைகளின் முகமாக நெஞ்சத்தான் நன்கு ஆராய்ந்து துணியப்பட்ட அறமெனப் பெயரிய நற்செயலை முயன்று கடைப்பிடித்தும், கொள்வனவுங் கொடுப்பனவுமாகிய கூறுகளில் நிறைபூண்டும் ஒழுகுகின்றானோ அவன் பண்டிதனாவான். கசகூ-கடுO

பொறியடக்கமுடையவனாய் நீதிநூல் வழியொழுகும் அரசனுக்குச் செல்வம் வளரும். அங்ஙனமே அவன்புகழ் விட்புலத்தையுந் தொட்டு நிற்கும். கடுக

---

அம்முறையே அகத்தியமுனிவர்க்கு விருந்திட, அவரால் உண்டு சீரணிக்கப்பட்டான். மானமாவது, கருதியது செய்யத்தகாததாயினும் அதனை முடித்தேவிடுந் தீயகுணம். இதனால் இராவணன் அழிவெய்தினானென்பது வெளிப்படை. தம்போற்பவன்-இவன் செல்வமுதலியவற்றாற்களித்து நரநாராயணராற் பங்கமடைந்தவன்.

கசசு. பரசுராமர்-இவர் சமதக்கினிபுதல்வர்; திருமாலின் அம்மிசாவதாரம்; சிவபிரானை நோக்கித் தவம்புரிந்து பரசு பெற்றவர்; வீரத்தாலும் தவத்தாலும் சிறந்தவர். இவர் ஒரு காரணத்தால் சூரிய வம்சத்து அரசர்களை யழித்துப் பூமியை யாண்டு பின் காசிபருக்குத் தானஞ்செய்தனர். அம்பரீடன்- இவன் சூரிய வம்மிசத்து நாபகன் புதல்வன். திருமால் பத்தியிற் சிறந்தவன். திருமாலின் ஆழிப்படையுதவியால் துருவாசரும் தன்பால் அடைக்கல மெய்தப்பெற்றவன்.

கசகூ-கடுO. கொள்வனவாகிய கூறுகள்-பிற அரசர் தரும் திறை, குடியிறை, சுங்க முதலியன. கொடுப்பனவாகிய கூறுகள் - குடிமக்களின் நலங்குறித்துக் கல்வி உழவுத்தொழில் வாணிகமுதலியவற்றிற்கு உதவிபுரிதல்.

## கச. அறிவுநூல் முதலியவற்றின் இலக்கணங்கள்.

**ஆன்வீட்சிகி திரையீ, வார்த்தை, தண்டநீதி** ஆகிய பழமையான இந்நான்கு வித்தைகளையும் அரசன் எப்பொழுதும் பயிலவேண்டும். கடுஉ

**ஆன்வீட்சிகியில்,** நுனித்துணரப்படும் வேதாந்த முதலிய அறிவுநூல்கள் விரித்து விளக்கப்பட்டன. **திரையீயினுள்** தருமமும், அதருமமும், விருப்பும், வெறுப்புமாகிய இவை விளக்கப்பட்டன. கடுங

**வார்த்தை என்பதனுள்,** பொருளீட்டு நெறியும், அதன் இடையூற்றையொழிக்கு முறையும் விரித்துரைக்கப்பட்டுள்ளன. **தண்ட நீதியில்,** நீதி அநீதிகளை புணர்ந்து செய்வனசெய்தல் கூறப்பட்டுள்ளது. இவ்வித்தைகளில் அந்தணர் முதலியோரின் குலவொழுக்கங்களும், பிரமசரிய முதலிய ஆச்சிரம ஒழுக்கங்களும் விரித்துரைக்கப்பட்டன. கடுச

நான்கு வேதங்களும், அவற்றின் அங்கமாகவுள்ள நூல்களும், மீமாஞ்சையும், விரிந்த தருக்கநூல்களும், மனுமுதலிய அறநூல்களும், புராணங்களுமாகிய இவ்வெல்லாம் **திரையீ** யென்று கூறப்படும். கடுரு

வட்டித்தொழில், உழவுத்தொழில், பண்டமாற்று, பசுவோம்பல் முதலியவை **வார்த்தை** யென்றுசொல்லப்படும். இவ் வார்த்தையையுடைய நல்லோர்க்கு வாழ்க்கையிற் சிறிதும் அச்சமின்று. கடுசு

தீயோரை யொறுத்தலே **தண்ட** மாகும். அதனைச் செய்யும் அரசன் அதனால் (காரிய காரண அபேதத்தால்) தண்டம் என்று கூறப்படுவன். அவ்வரசனது நீதியே **தண்ட நீதி** என்பதாம். **நன்று தீது துணிதற்குரிய கருவி நீதி யெனப்படும்.** கடுஎ

அறிவுநூற்பயிற்சியால் ஆன்மஞானமும், அதனால் இன்பத் துன்பங்களின் ஒழிவும் உண்டாம். விதிப்படி வேதமுதலியவற்றின் நெறியொழுகுவோன் இம்மை மறுமை இன்பங்களை யெய்துவன். கடுஅ

---

கடுஉ. ஆன்வீக்ஷிகி - வேதங்களைப் பயின்றபின்னர் ஆராய்தற்குரியது. திரையீ-மும்மறை. தண்டநீதி-செங்கோன் முறை.

கடுசு. "உழவு பசுக்காவல் வாணிகம் என்னும் வார்த்தையுமாம்" என்பர் பரிமேலழகர். (திருக்குறள். ருகஉ-உரை.)

கடுஎ. தண்டம் - செங்கோல்.

எல்லா வுயிர்களுக்கும் அருட்குணமே சிறந்த அறமாகும். ஆதலின், அரசன் அவ்வருளினாலேயே எளியோரைக் காத்தல் வேண்டும். கருகூ

அரசன் தனக்கு இன்பம் விழைந்து அதனிமித்தம் எளியோரைத் துன்புறுத்தலாகாது. துன்புறுத்துவானாயின், துன்புறாஉம் எளியோன் தன் இறப்பால் அவ்வரசனை யழிப்பவனாவன். கசுo

கரு. நல்லார் இணக்கம்.

நல்லோன் அறமும் இன்பமுமாகிய இவற்றின் பொருட்டு நன்மக்களோடு பழகுதல் வேண்டும். நன்மக்களாற் சூழப்படுவோன் மிக்க விளக்கமெய்துவான். கசுக

தண்கதிர்ச் செல்வனாகிய சந்திரன் புதிய குவளை மலர்களை யலர்த்தி ஓடையை விளங்கச்செய்தல்போல, நல்லோர் தம் உயர்ந்த செயல்களாற் றம்மை அடுப்பவர்களின் மனத்தை இன்புறச் செய்வர். கசுஉ

முதிர்வேனிற் காலத்துக் கதிரவன் கிரணங்களால் வெதும்பு வதும், மிக்க அச்சத்தை விளைவிப்பதும், அணுகவொண்ணாததுமாகிய பாலைநிலத்தைப்போல, மிக்க கேட்டினை விளைவிக்கும் தீயோர் கூட்டுறவை யொழித்தல் வேண்டும். கசுங

தீயோர்கள் சேர்க்கையினும், மூச்சுக் காற்றுக்களால் வெளிப் படும் தீயின் புகையினாற் கருகிய செவ்வியநிறம் வாய்ந்த முகங்களை யுடைய நச்சுப்பாம்புகளோடு பழகுதல் நன்றாம். கசுச

நலத்தை விரும்புவோன் யாவரானும் மதிக்கப்படும் நல்லோர்க்குச் செய்யும் வணக்கத்தினும், விசேடமாகத் தீயோர்க்குச் செய்தல் வேண்டும். கசுரு

கசு. இன்சொற் கூறல்.

இன்சொற்களால் எப்பொழுதும் உலகத்தை மகிழ்வித்தல் வேண்டும். கடுஞ்சொற் கூறுவோன் கொடையாளனாயினும் உயிர்களை வெறுக்கச் செய்பவனாவன். கசுசு

நல்லறிவுடையோன் தான் பிறராற் றுன்புறுத்தப்படினும், அவரை நோக்கி நெஞ்சத்தைப் பிளப்பதுபோல் மிக்க வெதுப்பஞ் செய்யுங் கடுஞ்சொற்களைக் கூறலாகாது. கசுஎ

---

கசுரு. தீயோர்களை இன்சொற்களால் மகிழ்வித்து விலக்கல் வேண்டு மென்பது கருத்து.

மயில் தனக்கு இயற்கையாக வாய்ந்த கேகை யென்னும் இனிய ஒலியையே யாண்டுஞ் செய்தல்போல, நல்லோர் நட்டோரிடத்தும் பகைவரிடத்தும் என்றும் விரும்பத்தக்க இன்சொற்களையே கூறுவர். கசுஅ

களிப்பு மிக்க அன்னம், குயில், மயில் என்பவற்றின் ஒலியினுஞ் சிறக்கப் புலவர்கள் கூறும் இன்சொற்கள் நன்கு பிறர் மனத்தைக் கவர்வனவாம். கசுகூ

பிறரை மகிழ்வித்துப் பெருமைப்படுத்துவதில் விருப்பமும் இன்சொற்கூறுதலும் உடையார், மனிதவுடலைப் பெற்றும், யாவ ராலும் பாராட்டப்படும் இயல்புவாய்ந்த பெருஞ் செல்வர்களாகிய தேவராவர். கஎ0

பிறரை வயப்படுத்துதற்கு உயிர்களிடத்து அருளும், நட்புரி மையும், கொடையும், இன்சொல்லுமாகிய இவைகளை யொப்ப மற்றொன்று இம்மூன்றுலகத்திலு மின்றாம். கஎக

அரசன் கடவுளுண்மையை மேற்கோடலாற் றூய்மையுடைய னுய்க் கடவுளை யென்றும் வழிபடல் வேண்டும். கடவுளை யொப்ப இருமுதுகுரவர் முதலியோரையும், தன்னை யொப்பச் சுற்றத்தார் நட்டோர் முதலியோரையும் வைத்துப் பேணல்வேண்டு மென்பது மறையின் றுணிபாம். கஎஉ

அரசன் வேதவேதாங்கங்களை யுணர்ந்தவர்களாற் சூழப்பட்டுப் பெரியோர்களையும் குரவர்களையும் வணக்கத்தினாலும், தனக்கு நலம் உண்டாதற்பொருட்டுத் தேவர்களை நற்கருமத்தாலும் அனுகூலர் களாகச் செய்துகோடல் வேண்டும். கஎங

நண்பரையும் சுற்றத்தாரையும் நல்லெண்ணத்தாலும், மகளிரை அன்பினாலும், ஏவலாளரை விசேட உபகாரத்தாலும், மற்றை மக் களைக் கண்ணோட்டத்தாலும் வயப்படுத்தலாம். கஎச

வலிமையும், மதிநுட்பமும், வீரமும், வேண்டிய அளவு மேற் கொள்ளும் பராக்கிரமமுமுடைய அரசன் பெருநிலவேந்தனுய்ச் செல்வம் நிறைந்த இந்நிலவுலகத்தை அனுபவிப்பவனவன். கஎரு

பராக்கிரமமும், வலிமையும், மதிநுட்பமும், வீரமுமாகிய இவைகளே சிறந்த குணங்களாம். இவைகள் வாய்க்கப்பெறுமல்,

**கஎ0. இக்கருத்தை "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையுந், தெய்வத்துள் வைக்கப்படும்" என்னுந் திருக்குறளிலுங் காண்க.**

இவற்றிற்கு வேறான குணங்கள் அமையப்பெற்ற அரசன் மிக்க பொருளுடையனாயினும், நிலப்பகுதியின் ஒரு சிறு கூற்றையும் அனுபவிப்பானல்லன். அதுவன்றி, விரைந்து இராச்சியத்தினின் றும் நழுவிவிடுவான். அரசர்கட்குரிய வலிமை முதலிய இக்குணங்க ளாலேயே சிற்றரசனும் தவறாத ஆணையும் ஒளியும் உடையனாய் அக்குணங்களமையப்பெறாத பெரும்பொருள் படைத்த வேந்த னினும் சிறப்புற விளங்குவான். மற்றைச் சாமானிய மக்கள் நிலத்தை யடக்கியாள்வதிற் றிறமையற்றவராவர். கஎசு - கஎஅ

இவ்வுலகம் எல்லாப்பொருட்கும் இருப்பிடமாதலின், இதன் பொருட்டே தேவதானவர்களின் போர் நிகழ்ந்தது. அரசர்கள் இந் நிலத்தின்பொருட்டே தம் உயிரையும் விடத்துணிகின்றனர். கஎகூ

எவ்வரசன் தன் அனுபவத்தின் பொருட்டுப் பொருளையும் உயிர்வாழ்தலையும் பேணி, நிலத்தைக் காவாதொழிகின்றானோ, அவ் வரசனுக்கு அப்பொருளானும், உயிர்வாழ்தலானும் வரக்கடவதாகிய பயன் யாது? கஅ0

ஒருவனுக்கு மேன்மேலும் வருவாயின்றேல், இருப்புப் பொருள் விரும்பியவாறு மிகுதியாகச் செலவுசெய்தற்குப் போதியதாகாது. உண்மையாகவே குபேரனுக்கும் அவ்வாறாம். கஅக

இத்தகைய குணங்கள் வாய்க்கப்பெற்ற அரசனே பாராட்டப் படுவான். அரசர்குலத்திற் பிறந்ததனால் மட்டிற் பாராட்டப்படுவா னல்லன். வலிமை, வீரம், பராக்கிரம முதலிய குணங்களாலுண் டாம்பெருமை குலப்பிறப்பாற் பெறத்தக்கதன்று. கஅஉ

### கஎ. அரசர்களைப்பற்றிய வகைகள்.

குடிகளைத் துன்புறுத்தாமல் ஒவ்வோராண்டிலும் ஓர் இலக்கம் **கருடம்** என்னும் அளவுள்ள வெண்பொற் காசுகளை யுறுதியான வருவாயாகவுடைய அரசன் **சாமந்தன்** என்று சொல்லப்படுவான். அக்காசு ஓர் இலக்கத்திற்குமேல் மூன்றிலக்கம் அளவு யாண்டுதோ றும் வருவாயாகவுடையவன் **நிருபன்** என்று கூறப்படுவான். அதற்கு மேல் அக்காசு பத்திலக்கம்வரை யாண்டுதோறும் வருவாயாக வுடைய வன் **மாண்டலிகன்** என்று கூறப்படுவான். கஅங - கஅச

**கஅங - கஅச.** கருடம் - இது வடமொழியில் 'கர்ஷம்' எனப்படும்; பத்து மாட அளவினது. மாடம் ஒன்று, பத்துக் குன்றிமணி எடை கொண்ட தாகும். இதனை உ-ஆம் அத்தியாயம் ௬அரு - ஆம் சுலோகத்திற் காண்க, வெண்பொன் - வெள்ளி.

பத்தின்மேல் இருபது இலக்கம்வரை அக்காசு யாண்டுதோறும் வருவாயாகவுடையவன் **அரசன்** எனப்படுவான். இருபதின்மேல் ஐம்பது இலக்கம்வரை யாண்டுதோறும் வருவாயாகவுள்ளவன் **பேரரசன்** என்று கூறப்படுவான். கஅரு

ஐம்பது இலக்கமுதல் ஒருகோடிவரை வருவாயாக வுடையவன் **சுராட்டு** எனப்படுவான். ஒருகோடி முதல் பத்துக்கோடிவரை வருவாயாக வுடையவன் **சம்மிராட்டு** என்று சொல்லப்படுவான். பத்துக்கோடி முதல் ஐம்பதுகோடி வரை வருவாயாகவுள்ளவன் **விராட்டு** எனப்படுவான். அதற்குமேல் ஏழுதீவங்களையுமுடைய நிலமுழுதையும் தன்வயப்படுத் தாள்பவன் **சார்வபௌமன் என்னும் சக்கரவர்த்தி**யாவன். கஅசு-கஅஎ

தனக்குரிய அரசிறையாகிய வேதனத்தைப் பெறுதலாற் குடிகளின் ஏவலாளாந் தன்மை யெய்திய அரசன், எப்பொழுதும் குடிகளைக் காத்தலாற் றலைவனாகப் பிரமனாற் செய்யப்பட்டான். கஅஅ

இவ்வுலகில் வேதனத்தினிமித்தம் காத்தற்றொழிலை மேற்கொண்டு சாமந்தன் முதலியவர்களை யொப்ப அரசியற்றொழில் புரியும் அதிகாரிகள், முறைப்படி அரசனுக்குரிய இறைப்பொருள்களைக் கொள்வோராய்ச், சாமந்தன் முதலிய பெயர்களையும் உடையராவர். கஅகூ

சாமந்தன் முதலிய நிலைகளினின்றும் பிறழ்ந்தவர்களாயினும், பேரரசன் முதலியோரால் அவ்வந்நிலைக்குத்தக வேதனந்தந்து காக்கப்படுவோர் என **சாமந்தன்** முதலிய பெயர்களையுடையராவர். ககூ0

நூறு சிற்றூர் (கிராமங்)களுக்குத் தலைவனாகவுள்ளவனும் **சாமந்தன்** என்னும் பெயரையுடையவனுவான். அரசனால் நூறு சிற்றூர்களுக்கு அதிபதியாக நியமிக்கப்படுபவன் **அநுசாமந்தனு**வான். ககூக

---

கஅஅ. குடிகளையோம்புதலே அரசன்கடமையாதலின், அது குறித்துக் குடிகள்பாற் பெறும் இறை அவனுக்கு வேதனமாம் என்பதும், அவன் ஏவலாளாந்தன்மை யுடையானென்பதுங் கருத்து.

கஅகூ. சாமந்தன் என்னும் பெயர், ஓர் அரசன்கீழ் வேதனம் பெற்று அவ்வரசனுக்குரிய கூறுகளையும் இறைப்பொருள்களையும் குடிகளிடத்தினின்றும் வாங்கி அரசனுக்குச் செலுத்தும் அதிகாரிகளுட் சிலர்க்கும் பொருந்துவதாகும். அவ்வதிகாரிகள் முற்கூறிய சாமந்த அரசனுக்குரிய வருவாயளவு பொருள்களை வரவுசெலவு செய்பவராக இருக்கவேண்டுமென்பது கருத்து.

ககூக. அநுசாமந்தனுவான், அரசனிடத்தினின்று வேதனம் பெற்று நூறு கிராமங்களுக்கு அதிகாரியாயினன்.

பத்துச் சிற்றூர்களுக்கு அதிபதியாக நியமிக்கப்படுபவன் **நாயகன்** என்று சொல்லப்படுவான். பதினாயிரம் ஊர்களின் அரசிறைப் பொருள்களைக் கொண்டு சேர்ப்பவன் **திக்குப்பாலன்** எனவும் **சுராட்டு** எனவுங் கூறப்படுவான். கக௨

## க௮. நிலத்தின் அளவு வகைகள்.

ஒரு குரோச அளவுள்ளதும், ஆயிரங்கருட அளவுள்ள வெண்பொற் காசுகள் அரசிறையாகப் பெறத்தக்கதும் **கிராமமென்று** சொல்லப்படும். அக்கிராமத்தின் அரைக்கூறு **பல்லி** எனவும், அதனின் அரைக்கூறு **கும்பம்** எனவுங் கூறப்படும். கக௩

ஐயாயிரமுழம் **ஒரு குரோசமாகுமென்று** பிரசாபதியினாலும், நாலாயிரமுழம் ஒருகுரோசமாகுமென்று மனுவினாலுஞ் சொல்லப்பட்டன. கக௪

பிரமாவின்கொள்கைப்படி இரண்டரைக்கோடி முழங்களாதல் இரண்டாயிரத்தைஞ்ஞூறு **சதுரநிவர்த்தனங்களாதல்** ஒருகுரோசத்தின் சதுர அளவாகும். கக௫

நடுவிரலின் நடுவண் உள்ள இரண்டு கணுக்களின் நடுப்பாக நீளம் அங்குல மென்று கூறப்படும். யவமென்னும் தானியத்தின் நடுப்பாகம் எட்டுக்கொண்ட நீளமும் அதன் ஐந்து கொண்ட அகலமும் **ஓர் அங்குலமாகும்**. கக௬

---

கக௪. பிரசாபதி - பிரமன்.

கக௫. இதன் முற் சுலோகத்தில் பிரமன் கொள்கைப்படி ஐயாயிரமுழம் ஒருகுரோசமாகுமென்றமையால், அவ்வையாயிரத்தைச் சதுர அளவில் வைத்துப் பெருக்க இரண்டரைக்கோடி முழமாதலும், நிவர்த்தனம் ஒன்றுக்கு முழம் நூறாதலின், அந்நூற்றைச் சதுர அளவிற் பெருக்க அந்நிவர்த்தனம் ஒன்றுக்கு முழம் பதினாயிரமாதலும், அப்பதினாயிரத்தை இரண்டாயிரத்தைஞ்ஞூற்றாற் பெருக்க முற்குறித்த இரண்டரைக்கோடி முழம் பொருத்தமாதலுங் காண்க. முதனூலாசிரியர் சதுர அளவுள்ள நிலத்தைக் **கேத்திரம்** என்ப. முழத்தின் அளவையும், நிவர்த்தன அளவையும் க௯௭, ௨00, ௨0௨ - ஆம் சுலோகங்களிற் காண்க.

கக௬. அங்குலத்துக்குக் கூறிய அகலம் அளவையிற்பயன்படுவதன்று. சிற்பத்துக் கிது கருவியாதலின், செய்கையாங்கால் பயன்படவுங் கூடும். "நூறுமுழ நீளஅகலத்தில் ஓரில்லம் அமைக்க" என்று சுருக்கிக்கூறுங்கால், யவம் எட்டுக்கொண்ட அங்குலம் இருபத்திநான்கு ஒருமுழமுமாக நீளத்திலும், யவம் ஐந்து கொண்ட அங்குலம் இருபத்துநான்கு ஒருமுழமாக அகலத்திலும் அளப்பிற் கிழமேல் நீண்டும் தென் வடல் குறுகியும் இருக்கும்.

அவ்வங்குலம் இருபத்துநான்கு கொண்டது ஒரு முழமாகும் என்று பிரசாபதியால் எண்ணப்பட்டது. நில அளவையில் இம்முழ அளவே சிறந்ததாகும். இஃதன்றி மற்றை முழு அளவுகள் தாழ்ந்தனவாக எண்ணப்பட்டன. கசஎ

நான்கு முழங் கொண்டது ஒரு **கோல்** எனவும், ஐந்துமுழங் கொண்டது இலகு எனவுங் கூறப்படும். அக்கோலுக்குரிய அங்குலம் ஒன்று, ஐந்து யவதானியத்தின் அளவாகுமென்பது மனுவின் கருத்தாகும். கசஅ

யவதானியத்தின் நடுப்பாகம் எழுநூற்றறுபத்தெட்டுக் கொண்டது ஒருகோலாகு மென்பது பிரசாபதியின் கருத்து. யவதானியத்தின் நடு அளவு அறுநூறுகொண்டது ஒருகோலாகுமென்பது மனுவின் கருத்தாகும். கசகூ

மனு பிரசாபதி இவ்விருவர்களின் கொள்கைப்படி இருபத்தைந்து கோல்கள் கொண்டது நிவர்த்தனமென்று கூறப்படும். மனுவின்கொள்கைப்படி மூவாயிரம் அங்குலங்களாதல், பதினையாயிரம் யவதானியத்தின் அளவாதல், நூற்றிருபத்தைந்து முழமாதல் **ஒரு நிவர்த்தனமாகும்.** உ00இ

பிரசாபதியின் கொள்கைப்படி பத்தொன்பதினாயிரத்து இருநூறு யவதானியத்தின் அளவாதல், இரண்டாயிரத்து நானூறு அங்குலங்களாதல், நூறு முழமாதல் ஒரு நிவர்த்தனமாகும். உ0உ

---

கசஅ. கோலை முதனூலார் தண்டமென்ப.

கசகூ. பிரசாபதிகருத்தின்படி யவம் எட்டுக்கொண்டது ஓர் அங்குலமும், அவ்வங்குலம் இருபத்துநான்கு கொண்டது ஒருமுழமு மாகுங்கால், அம்முழம் நான்கு கொண்ட கோல் ஒன்றுக்கு யவதானியம் எழுநூற்றறுபத்தெட்டு ஆதல் காண்க. மனுவின் கொள்கைப்படி யவம் ஐந்து கொண்டது ஓர் அங்குலமும், அவ்வங்குலம் இருபத்துநான்கு கொண்டது ஒருமுழமு மாகுங்கால், அம்முழம் ஐந்துகொண்டகோல் ஒன்றுக்கு யவதானியம் அறுநூறாதல் காண்க. இதனால் ஐந்து முழங் கொண்டது ஒருகோலாகுமென்பது மனுவின் கொள்கையென்று புலப்படுகின்றது.

உ00இ. மனுவின் கொள்கைப்படி கோல் ஒன்றுக்கு முழம் ஐந்தாகக் கோல் இருபத்தைந்திற்கு முழம் நூற்றிருபத்தைந்தாதலும், கோல் ஒன்றிற்கு அங்குலம் நூற்றிருபதாகக் கோல் இருபத்தைந்திற்கு அங்குலம் மூவாயிரமாதலும், அங்குலம் ஒன்றிற்கு யவதானியம் ஐந்தாகப் பதினையாயிரமாதலுங் காண்க.

உ0உ. பிரசாபதியின் கொள்கைப்படி கோல் ஒன்றிற்கு முழம் நான்காகக் கோல் இருபத்தைந்திற்கு முழம் நூறாதலும், கோல் ஒன்றிற்கு அங்குலம் தொண்ணூற்றாறாகக் கோல் இருபத்தைந்திற்கு அங்குலம் இரண்டாயிரத்து

பிரசாபதி மனு இவ்விருவர்களின் கொள்கைகளின்படி அறுநூற்றிருபத்தைந்து கோலாதல், இருபத்தைந்து நிவர்த்தனங்களாதல் கொண்டது பரிவர்த்தனமென்று கூறப்படும். உ0ங

மனுவின் கொள்கைப்படி எழுபத்தையாயிரம் அங்குலமும், பிரசாபதியின் கொள்கைப்படி அறுபதினாயிரம் அங்குலமுங் கொண்டது பரிவர்த்தனமாகும். உ0ச

மனுவின் கொள்கைப்படி மூவாயிரத்து நூற்றிருபத்தைந்து முழமாதல், முந்நூற் றெழுபத்தையாயிரம் யவதானியத்தின் அளவாதல் பரிவர்த்தனமாகும். பிரசாபதியின் கொள்கைப்படி இரண்டாயிரத்தைஞ்ஞூறு முழமாதல், நானூற்றெண்பதினாயிரம் யவதானியத்தின் அளவாதல் பரிவர்த்தனமாகும். உ0ரு-உ0சு

மனுவைப் பின்பற்றி யொழுகும் வேறு சிலர் முப்பத்திரண்டு நிவர்த்தனங்களாதல், நாலாயிர முழங்களாதல், எண்ணூறு கோல்களாதல் ஒரு பரிவர்த்தனமாகு மென்று கூறுவர். உ0எ

அப் பரிவர்த்தன அளவுவிடயத்தில், இருபத்தைந்து கோல்கள் கொண்டது ஒரு புயமாகும். அப்புயத்தின் சதுர அளவு பதினாயிர முழங்களாகும். உ0அ

---

நானூறாதலும், அங்குலம் ஒன்றிற்கு யவதானியம் எட்டாகப் பத்தொன்பதினாயிரத்து இருநூறாதலுங் காண்க.

உ0ச. மனுவின் கொள்கைப்படி ஐந்து முழங் கொண்ட கோல் அறுநூற்றிருபத்தைந்திற்கு, கோல் ஒன்றிற்கு அங்குலம் நூற்றிருபதாக அங்குலம் எழுபத்தையாயிரமாதல் காண்க. பிரசாபதியின் கொள்கைப்படி முழம் நான்கு கொண்ட கோல் அறுநூற்றிருபத்தைந்திற்கு, கோல் ஒன்றிற்கு அங்குலம் தொண்ணூற்றாறாக அங்குலம் அறுபதினாயிரமாகும்.

உ0ரு-உ0சு. மனுவின் கொள்கைப்படி கோல் அறுநூற்றிருபத்தைந்திற்குக், கோல் ஒன்றிற்கு முழம் ஐந்தாக முழம் மூவாயிரத்து நூற்றிருபத்தைந்தாதலும், முழம் ஒன்றிற்கு யவம் நூற்றிருபதாக யவம் முந்நூற்றெழுபத்தையாயிரமாதலுங் காண்க. பிரசாபதியின் கொள்கைப்படி கோல் அறுநூற்றிருபத்தைந்திற்குக், கோல் ஒன்றிற்கு முழம் நான்காக முழம் இரண்டாயிரத்தைஞ்ஞூறாதலும், முழம் ஒன்றிற்கு யவம் நூற்றுத் தொண்ணூற்றிரண்டாக யவம் நானூற்றெண்பதினாயிரமாதலுங் காண்க.

உ0எ. இதன்கட் கூறிய பரிவர்த்தன அளவு நன்றாகும்.

உ0அ. இதன் முற்சுலோகத்தில் பரிவர்த்தனமாகிய பேரளவிற்கு அங்கமாக முழம் கோல் நிவர்த்தனங்கள் கூறப்பட்டன. இதன்கண், அப்பேரளவிற்கு அங்கமாகப் 'புயம்' என்பதொன்றைப் புதிதாகக் கூறுகின்றார். பேரளவில் வேறுபட்டிருப்பினும், எண்ணில் நிவர்த்தனமும் புயமும் ஒன்றாகும்.

நான்கு புயங்களின் அளவுள்ளது உழவுநிலப் பரிவர்த்தனமென்று கூறப்படும். அரசன் நிலப்பரப்பை எப்பொழுதும் பிரசாபதியின் அளவுப்படி அளத்தல் வேண்டும். தனக்குக் கேடுவிளையுங்கால் மனுவின் அளவை மேற்கொள்ளல் வேண்டும். வேறுவிதமாக அளத்தல் கூடாது. பேராசையால் நில அளவை வேறுபடுத்துக் குடிகளைத் துன்புறுத்தும் அரசன் தன் குலத்தோடு கேடெய்துவான். ௨0௯-௨௧0

அரசன் இரண்டங்குல அளவுள்ள நிலத்தையேனும் பிறர் பொருட்டுக் கொடுத்தலாகாது. அன்றிக் கொடுக்க நேர்ந்தால், பெறுவோன் வாழ்நாள் அளவுஞ் சீவித்தற்பொருட்டுத் தன் உரிமையை விட்டுக் கொடுக்கலாம். ௨௧௧

நற்குணமுள்ள அரசன் தேவாலயங் கட்டுதற்பொருட்டு எப்பொழுதும் நிலங்கொடுத்தல் வேண்டும். அங்ஙனமே இல்லறத் தொழுகுவோரை யாராய்ந்து அவர் வீடுகட்டுதற்பொருட்டேனும், ஆராமம் (பூந்தோட்டம்) அமைத்தற் பொருட்டேனும் நிலங்கொடுத்தல் வேண்டும். ௨௧௨

## ௧௯. இராசதானி யமைத்தல்.

பலவகை மரங் கொடிகள் அடர்ந்ததும், விலங்கினம் பறவைத் தொகுதிகளையுடையதும், மிக நிரம்பிய நீர்வளத்தையும் தானியங்களையுமுடையதும், எப்பொழுதும் புல் விறகுகள் எளிதிற் பெறத்தக்கதும், கடல்வரை தோணிகளால் சென்றுவருதற்குரிய சாதனங்

---

கோல் ஒன்றுக்கு முழம் நான்காகக் கோல் இருபத்தைந்திற்கு முழம் நூறாகும். அந்நூற்றைச் சதுர அளவிற் பெருக்க முழம் பதினாயிரமாதல் காண்க.

| பிரசாபதி. | மனு. | அளவு. |
|---|---|---|
| யவம்-அ | யவம்-௫ | அங்குலம்-௧ |
| அங்குலம்-௨௪ | அங்குலம்-௨௪ | முழம்-௧ |
| முழம்-௪ | முழம்-௫ | கோல்-௧ |
| கோல்-௨௫ | கோல்-௨௫ | நிவர்த்தனம்-௧ |
| நிவர்த்தனம்-௨௫ | நிவர்த்தனம்-௨௫ | பரிவர்த்தனம்-௧ |
| முழம்-௫000 | முழம்-௪000 | குரோசம்-௧ |

௨௧0. கேடுவிளையுங்கால் மனுவின் அளவைக் கொள்ளவேண்டுமென்றது அவ்வளவின் குறைவுபற்றிப் போலும்.

௨௧௪. சாதனங்கள்- ஆறு கால் முதலியன.

கள் அமைந்ததும், மிக்க அணிமையில் மலையினையுடையதுமாகிய அழகிய சமநிலத்தில் இராசதானித் தலைநகர் அமைத்தல் வேண்டும். ௨௧௩-௨௧௪

நிறைமதியின் அரைக்கூறு, வட்டம், சதுரம் என்னுமிவற்றுள் ஒன்றன் வடிவமைந்து எழில் வாய்ந்ததாகவும், அரணும் அகழியும் கிராம முதலிய பகுதிகளும் இடையிடையே மன்றங்களுமாகிய இவற்றையுடையதாகவும், கிணறு ஓடை ஊருணி முதலிய நீர்நிலைகளும் நாற்புறமும் நான்கு பெருவாயில்களும் அழகிய தெருக்களும் உபவன வரிசைகளும் உறுதியான தேவாலயங்களும் மடங்களும் வழிச்செல்வோர் தங்குமிடங்களுமாகிய இவற்றால் விளங்குவதாகவும் இராசதானித் தலைநகரை யமைத்து அதன்கண் அரசன் எப்பொழுதும் காவலையுடையனுய்ப் புதல்வர் முதலியவர்களோடு கூடியிருந்து வாழ்தல் வேண்டும். ௨௧௫-௨௧௭

அத்தலைநகரில் அமைக்கப்படும் அரண்மனை நடுவண் அத்தாணி மண்டபத்தையுடையதாகவும், பசு குதிரை யானை என்பவற்றின் சாலைகள் அமையப்பெற்று அழகிய வாவி கிணறு நீர்ப்பொறி முதலியவற்றால் நன்கு திகழ்வதாகவும், எப்புறத்தும் ஒத்த அளவினவாகிய பக்கங்களையுடையதாகவும், தென்பாலுயர்ந்து வடபால் தாழ்ந்ததாகவும், ஒன்றுக்கொன்று எதிர்முகமாகவமைந்த நான்கு பெரிய அறைகளையுடைய இல்லமல்லாத மற்றைச் சாலைகள் பலபக்கங்களையுடையனவாக விருப்பின் பெரும்பாலும் நலமில்லாதனவா மாதலின் அச்சாலைகட்கின்றி ஒற்றைப்படையான பலபக்கங்கள் அமையப்பெற்றதாகவும், அம்பு வாள் முதலிய படைக்கலங்களைத் தாங்கி நிற்கும் வீரர்களாற் காக்கப்படும் மதிற்சுவர்களையும் சிறந்த நாளிக முதலிய எந்திரப்படைகளையு முடையதாகவும், மூன்று கட்டுக்களோடு கூடியதாகவும், நாற்புறத்தும் நன்கு அலங்கரிக்கப்பட்ட நான்கு வாயில்களையுடையதாகவும், அம்பு வாள் முதலிய படைக்கலங்களைத் தாங்கி நிற்கும் யாமங்காப்போர் நால்வராதல் ஐவராதல் அறுவராதல் மாற்றுமுறைப்படி பகலினும் இரவினும் ஒவ்வொரு கட்டிலும் நின்று என்றுங் காக்கப்படுவதாகவும், பல்வகை உருவமைந்த இல்லங்கள் காழகவில்லங்கள் மேன்மாளிகைகள் என்பவற்றோடு கூடியதாகவும் இருத்தல் வேண்டும். ௨௧௮-௨௨௨

௨௨௨. காழகவில்லம்-ஆடையானமைந்த வீடு.

## ௨௰. தனித்தனி இல்லம் அமைத்தல்.

ஆடைமுதலியன ஒலித்தல் நீராடல் வேள்விமுதலியதேவகாரியஞ் செய்தல் உண்டல் அடுதல் என்னும் இவற்றிற்குரிய இல்லங்களைக் கீழ்பால் அமைத்தல் வேண்டும். ௨௨௩

துயிலல் விளையாடல் குடித்தல் அழுதல் தானியம்வைத்தல் திரிகை முதலியன வமைத்தல் பணிப்பெண்கள் ஏவலாளர் இருத்தல் மலமூத்திரம் விடுதல் என்னுமிவற்றிற்குரிய இல்லங்களை முறைப்படி தென்பால் அமைத்தல் வேண்டும். பசுநிரை, மான், ஒட்டகம், யானை என்னுமிவற்றின்பொருட்டுத் தனித்தனிக் கிருகங்கள் மேல்பால் அமைத்தல் வேண்டும். ௨௨௪-௨௨௫

தேர், குதிரை, அம்பு, வாள் முதலிய படைக்கலங்களாகிய இவற்றிற்கும், உடற்பயிற்சி செய்தற்கும், யாமிகர் இருத்தற்கும், ஆடை, பொன், பொருள்களைக்காத்தற்கும், கல்விப்பயிற்சி செய்தற்கு முரிய இல்லங்களைக் காவல்நன்குடையனவாகவும் அழகமைந்தனவாகவும் வடபால் அமைத்தல் வேண்டும். அன்றி, அரசன் தன் நலத்திற்குரியவாறு இங்குக் கூறிய இல்லங்களை அமைத்துக்கோடலும் பொருந்தும். ௨௨௬-௨௨௭

நீதிமன்றம் சிற்பசாலை யென்னுமிவற்றை அரண்மனையின் வடபால் அமைத்தல் வேண்டும். அவ்வில்லங்களி லெடுக்குஞ் சுவர், அவ்வில்லங்களின் அகலத்தில் ஐந்திலொரு கூறு மிகுதியான உயரமுடையதாக இருத்தல் வேண்டும். ௨௨௮

அச்சுவரின் அகலம், அவ்வக் கோட்டங்களின் அகலத்தில் ஆறில் ஒருகூறு அளவுடையதாக விருத்தல் வேண்டும். யாண்டும் ஒரு மேற்றளத்தினையுடைய இல்லத்திற்கு இவ்வுயர்ச்சியின் அளவே சிறந்ததாகக் கூறப்பட்டுள்ளது. ௨௨௯

தூண்களானுதல் சுவர்களானுதல் வேறுபடுத்து இல்லப்பகுதிகளை யமைத்தல் வேண்டும். அவ்வில்லம் மூன்று கோட்டங்களையுடையதாகவாதல், எழுகோட்டங்களை யுடையதாகவாதல் அமைக்

---

௨௨௮. ஓர் அறையின் அகலம் ஐந்துமுழமாயிருக்குமாயின் அவ்வறையில் எடுக்கப்படும் சுவர் அவ்வறையின் அகலத்தின் ஐந்திலொரு கூறான ஒரு முழங் கூட்டி ஆறு முழ உயரமாக எடுக்கப்படவேண்டுமென்பது கருத்து.

௨௨௯. இவ்வுயர்ச்சியின் அளவென்றது முற்சுலோகத்திற் கூறப்பட்டவுயரத்தை. மேற்றளம்—இட்டிகையும் சுண்ணாம்புஞ் சேர்த்துப் படுத்த இல்லத்தின் மேற்பரப்பு. இதனை முதனூல் 'பூமிகை' என்று கூறும்.

கப்பட்டு, வாயிலின்பொருட்டு எண்கூறாகப் பகுக்கப்படல் வேண்டும். நாற்புறங்களிலும் வாயிலின் கூறாகவுள்ள நடுப்பாகம் இரண்டிரண்டாக நிருமிக்கப்படுமாயின், அவை மக்களுக்குப் பொருட்பேறு புதல்வர்ப்பேறுகளைப் பயப்பனவாம். ௨௩0-௨௩௧

அங்ஙனம் பிரிக்கப்பட்ட கூறுகளிலேயே வாயில்கள் அமைத்தல் வேண்டும். வேறு ஓரிடத்தில் ஒருபொழுதும் அமைத்தல் கூடாது. அங்ஙனமே அப்பகுதிகளில் இன்பநுகர்தற்கு வேண்டுமளவிற் சாளரங்களை வெவ்வேறாக அமைத்தல் வேண்டும். ௨௩௨

ஓரில்லத்தின் வாயில், மற்றோரில்லத்தின் வாயிலோடு எதிர்ப்பட்டதாகவும், அங்ஙனமே மற்றொரு வீட்டின் கோணத்தாலும் தூணினாலும், வழிப்பீடத்தாலும், கிணற்றினாலும் தடைப்படும்படியாகவும் அமைத்தலாகாது. ௨௩௩

அரசர்குலம், தேவகுலம் இவற்றின் வாயில்களுக்கு எதிரேயுள்ள வழி தடைப்படலாகாது. அக்கோயிற்றளம் அதன் உயரத்தின் நான்கிலொருகூறு உயரமுடையதாக வமைத்தல் வேண்டும். ௨௩௪

வேறு சிலர் அவ்வரசகுல தேவகுலங்களின் தளம் அவற்றின் உயரத்திற் பாதியளவுடையதாக அமைத்தல் வேண்டுமென்பர். ஓரில்லத்தின் சாளரம் மற்றோரில்லத்தின் சாளரத்திற்கு எதிர்முகமாக இருக்கும்படி யமைத்தல் கூடாது. ௨௩௫

---

௨௩0-௨௩௧ கோட்டம்-இல்லத்தின் நடுப்பாகம்; அறை. பின்வரும் இடங்களிலும் இவ்வாறேகொள்க. ஒருகோட்டத்தின் ஒவ்வொருபக்கத்தையும் இரண்டிரண்டு கூறாக்க எண்கூறாகும். வாயிலின் கூறாகவுள்ள நடுப்பாகம் இரண்டு என்றது, இரண்டு கூறுபடுத்தப்பட்ட ஒருபக்கத்தின் நடுவினின்று வாயிலின் அளவித்தம் இருமருங்குங் கொள்ளப்பட்ட இரண்டு கூறுகளை; நாற்புறமுநோக்கி இரண்டிரண்டாக என்று கூறப்பட்டது. நாற்புறத்திலும் நான்கு வாயில்கள் அமைக்கவேண்டுமென்பதும், ஒவ்வொருபக்கத்திலும் நடுவிடம் தொடங்கி இருமருங்கும் ஒத்த அளவுகொண்டு வாயில் அமைக்கவேண்டுமென்பதுங் கருத்து.

௨௩௩. கோணம் - கோடி. வழிப்பீடம் - வழிச்செல்வோர் இளைப்பாறியிருத்தற்பொருட்டு வழிக்கட் சுமைதாங்கியோடு நிழன்மரத்தடியிலமைக்கப்படும் பீடம்; தெருக்களில் சிறியதெய்வங்களை வழிபடுதற்பொருட்டு அமைக்கப்படுவதுமாம். இவற்றிற்கெதிராக ஓரில்லத்திற்கு வாயில் அமைத்தலாகாதென்பது கருத்து.

௨௩௪. அரசகுலம்-அரண்மனை. தேவகுலம்-திருக்கோயில். இவற்றின் வாயில்களுக்கெதிரே பிற இல்லமுதலியன இருத்தலாகாதென்பது கருத்து.

சுடுமண்களாலாகிய மேன்மூடல் அமைக்குங்கால், அதன்பால் விழும் நீர் தடையின்றிக் கீழ்ச்செல்லுமாறு அவ்வில்லத்தினது அகலத்து அளவின் அரைக்கூறு நடு உயர்ந்திருத்தல் வேண்டும். அம்மேன்மூடல் அவ்வுயரத்திற் குறைவாகவும் பள்ளமாகவும் இருத்தலாகாது. அங்ஙனமே இல்லத்தின் உட்பரப்பும் வலியற்ற தாகவும் தாழ்வாகவும் இருத்தலாகாது. ௨௩௭இ

## ௨௧. அரண் அமைத்தல்.

மதிற்சுவரின் அடிப்படை, அதன் உயரத்தின் சமஅளவாதல், பாதி அளவாதல், மூன்றிலொருகூறுதல் இருத்தல் வேண்டும். அதன் அகலம், உயரத்தின் பாதியளவு இருத்தல் வேண்டும். அதன் உயரம் கள்வராற் கடக்க முடியாவண்ணம் வேண்டிய அளவு உயர்ந்திருத்தல் வேண்டும். ௨௩௮

அம்மதிலே, யாமங்காப்போரால் எப்பொழுதுங் காக்கப்படுவதாகவும், நெருப்பிறைக்கும் பொறி முதலியன, வன்மை மிக்க காவலாளர்க்குரிய பல இருப்பிடங்கள், அழகிய சாளரவரிசைகள் இவற்றையுடையதாகவும், பகைவர்மதில்களினும் உயர்ந்ததாகவும், அணிமையில் மலையில்லாததாகவும் அமைத்தல் வேண்டும். ௨௩௯

அம்மதிலின் வெளிப்புறத்தே அகழி யமைத்தல் வேண்டும். அஃது ஆழத்தின் அளவினும் இருமடங்கு அகலமுடையதாகவும், மிக்க அணிமையில் மதில் இல்லாததாகவும், அழகிய நீர்ப்பெருக்கினையுடையதாகவும் இருத்தல் வேண்டும். ௨௪௦இ

போர்செய்தற்குரிய கருவிகளின் தொகுதியும், போர்த்திறன் வாய்ந்த நல்லவீரர்களுமின்றி அரசன் அரணுள் இருத்தல் நலந்தருவதன்று; சிறைப்பட்டிருப்பதாகும். ௨௪௧இ

அரசன் அத்தாணிமண்டபத்தை, அழகியதாகவும், நன்கு காக்கப்படுவதாகவும், மூன்றுகோட்டம் ஐந்துகோட்டம் ஏழுகோட்டங்களாகப் பிரிக்கப்பட்டதாகவும், தென்வடல் அகன்றதாகவும், கீழ்

---

௨௩௭இ. சுடுமண்-சுண்ணு ஓடு. மேன் மூடல்-அவ்வோடுகளால் மேலிடத்தைவேய்ந்து மறைத்தல்: இதனை முதனூல் சதி (छदि) என்று கூறும். அரைக்கூறு நடுவுயர்ந்திருத்தலாவது-ஓரில்லத்தின் அகலம் ஐந்து முழமாயின் அவ்வில்லத்தி லெடுக்கப்படும் சுவரின் மேலிடத்தினின்று முகட்டின் நடு இரண்டரை முழம் உயர்ந்திருத்தல்.

௨௩௯. யாமங்காப்போரை ௨௧௦-ஆம் சுலோகமுதலியவற்றிற் காண்க.

மேல் நீண்டதாகவும், அன்றி அகற்சியினும் இருமடங்காதல் மும்மடங்காதல் நீண்டதாகவும், தான் விரும்பிய வண்ணம் ஒன்று அல்லது இரண்டு மூன்று மேற்றளங்களையுடையதாகவும், காழகவில்லம் மேன்மாளிகைகளோடு கூடியதாகவும், ஒவ்வொரு கோட்டமும் நாற்புறத்துஞ் சாளரங்களால் விளங்குவதாகவும் அமைத்தல் வேண்டும். நடுக்கோட்டத்தின் அகலம், பக்கத்துக் கோட்டங்களினும் இருமடங்கு மிகுதியாக இருத்தல் வேண்டும். ௨௪௨.-௨௪௫

நடுக்கோட்டத்தின் உயரம், அதன் அகலத்தின் ஐந்திலொருகூறு மிகுதியாக இருத்தல்வேண்டும். அவ்வுயரம் அகலத்தின் அளவோடு ஒத்ததாகவேனும், அகலத்தின் ஐந்திலொருகூறு மிகுதியாகவேனும் அமைத்தல் வேண்டுமென்று வேறுசிலர் கூறுவர். ௨௪௬

கோட்டங்களுக்கு மேற்றளத்தினையாதல், மேன்மூடலையாதல் செய்வித்தல் வேண்டும். இருமருங்குமுள்ள கோட்டங்கள், தனித்தனி இரண்டிரண்டு மேற்றளங்களையுடையனவாக எடுக்கப்படுமாயின், நடுக்கோட்டம் ஒரே மேற்றளத்தையுடையதாக இருத்தல் வேண்டும். ௨௪௭

இன்னும் அவ்வரசமன்றத்தை, தூண்களின் நடுவண் அமைந்த நடுவிமையான ஓர் அழகிய கோட்டத்தினையுடையதாகவும், போக்குவரவிற்குரிய நான்கு அழகிய வாயில்களையுடையதாகவும்,நீரை மேல் நோக்கிச் செலுத்தி வீழ்த்தும் பொறிகள், இனிய இசையை வெளிப்படுத்தும் பொறிகள், போதிய அளவு வாயுவை இயங்கச்செய்யும்

---

௨௪௪. ஒன்று அல்லது இரண்டு மூன்று மேற்றளங்களென்பன பொதுவாக அப்பரப்புக்களை யுணர்த்தும். மேன்மாளிகைகளென்பன அத்தளப் பரப்புக்களிற் செய்யப்படும் கிருகவிசேடங்களை யுணர்த்தும்.

௨௪௬. அத்தாணிமண்டபத்தின் நடுஅறையில் எடுக்கப்படும் சுவர் அதன் அகலத்தின் அளவோடு ஐந்திலொரு கூறு மிகுதியான உயரமுடையதாகவிருத்தல் வேண்டுமென்பதாம். அகலம் பத்துமுழமாயின், சுவரின் உயரம் பன்னிரண்டு முழமாகும்.

௨௪௭. மேற்றளத்தையும் மேன்மூடலையும் முறையே ௨௨௯-௨௩௯ ஆம் சுலோகக் குறிப்புக்களிற் காண்க. பக்கத்துக் கோட்டங்கள் இரண்டு தளங்களையுடையவாக எடுக்கப்படுமாயின் நடுக்கோட்டம் ஒரேதளமாக இருக்கவேண்டுமென்றது, அதன் அகற்சிக்குத்தக்க உயரம் வேண்டுமென்பது குறித்தாம். நடுக்கோட்டத்தின் அகலம் பக்கத்துக் கோட்டங்களினும் இருமடங்கு மிகுதியாக இருக்க வேண்டுமென்று ௨௪௫-ஆம் சுலோகத்திற் கூறப்பட்டது.

பொறிகள், காலமுணர்த்தும் பொறிகள் ஆகிய இவற்றையுடையதாக வும், நல்ல கண்ணாடிகளும் பிரதிமைகளும் வைக்கப்பட்டதாகவும், சூழ்தற்கும் காரியங்களைச் செய்தற்கு முரியதாகவும் அமைத்தல் வேண்டும். அங்ஙனமே அரண்மனையினின்றும் நூறுமுழ அளவு நிலத்திற்கு அப்பால் அமைச்சர்களுக்கும், எழுத்தாளர்களுக்கும், மன்றக்குழுவினர்க்கும், மற்றை அரசியல் அதிகாரிகளுக்கும் உரிய இல்லில்லங்களைத் தனித்தனியாக அமைத்தல்வேண்டும். உசஅ-உருக

அறிஞனாகிய அரசன் முதலில் அரண்மனைக்கு அண்மையில் வடபால் இருநூறுமுழ அளவு நிலத்திற்கு அப்பால் எப்பொழுதும் படைவீரர்கள் இருத்தற்குரிய சாலைகளையும், அவற்றின் புறத்தே நான்குதிக்கிலும் ஆறு முறையே குடிமக்களுக்குப் பொருட்சிறப்பாலும் குலச்சிறப்பாலும் வரிசைப்படுத்திய இல்லங்களையும் அமைத்தல் வேண்டும். உருஉ-உருங

முதலிற் குடிமக்களுள் தலைவர்களுக்கும், பின்னர் அவர்க்கு அடுத்த நிலையிலுள்ளவர்க்கும், அதன்பின் அரசியல் வினைசெய்வார்க்கும், அதன்பின் படைத்தலைவர்களுக்கும், அதன்பின் காலாட்படைகளுக்கும், அதன்பின் குதிரைகளோடுகூடிய வீரர்களுக்கும், அதன்பின் யானைகளோடுகூடிய வீரர்களுக்கும், அதன்பின் பெரிய நாளிகயந்திரமென்னும் பொறிப்படையாளர்களுக்கும், அதன்பின் தனக்குரிய குதிரைக்கூட்டங்களுக்கும், அதன்பின் தன்காவலாளர்களுக்கும், அதன்பின் நாட்டுவார்க்கையுடையார்க்கும் தன் நகரத்தில் முறைப்படி அழகிய இல்லங்களை அமைத்தல் வேண்டும். உருச-உருசு

அதன்பின் வழிச்செல்வோர் தங்குதற்பொருட்டு நல்ல நிலைகளையும், காவலையுமுடைய இருப்பிடங்களை யமைத்தல் வேண்டும். இன்னும் நகரத்திலும் கிராமத்திலும் வரிசையாக ஒத்த குலத்தவர்களின் வீடுகளைக் கிழக்குமுகமாகவேனும் வடக்குமுகமாகவேனும் சேர்ந்திருக்கும்படி அமைத்தல் வேண்டும். அங்ஙனமே கடைத்தெருவில் கூறினப்பட்ட விலைப்பொருள்களையுடைய கடைகளை முறைப்படி யமைத்தல் வேண்டும். உருஎ-உருஅ

உருக. மன்றக் குழுவினர் - அரசன் பக்கலிலிருந்து காரியங்களை யாராய்தற்குத் துணைசெய்பவர்.

உருஉ. நாளிகயந்திரம் - நெருப்பொடு இருப்புத்திரளைகளைச் செலுத்துதற் கமைந்த வாயினையுடைய போர்க்கருவி. இதனைப் பீரங்கி யென இக்காலத்தில் வழங்குப.

இன்னும் இராசவீதியின் இருபக்கங்களிலும் முறைப்படி பெருஞ்செல்வர் முதலியோர்களை நிலைப்படுத்தல் வேண்டும். அரசன் இங்ஙனமே பட்டினத்தையும் சிற்றூரையும் அமைத்தல் வேண்டும். ௨௮௯

## ௨௨. இராசவீதியமைத்தல்.

அரண்மனையின் நாற்புறத்தும் இராசவீதிகளையமைத்தல் வேண்டும். முப்பதுமுழஅளவு அகன்ற இராசவீதி தலையாயதாகும். ௨௯௦

இருபது முழ அளவு அகலம் இடையாயதாகும். பதினைந்து முழ அளவு அகலம் கடையாயதாகும். அங்ஙனமே பட்டினங்களிலும் சிற்றூர்களிலுமுள்ள கடைவீதிகளையும் அமைத்தல் வேண்டும். ௨௯௧

சிற்றூர்களிலும் நகரங்களிலும் மூன்று முழ அளவு அகலமுள்ளது நடைவழியெனவும், ஐந்துமுழஅளவு அகலமுள்ளது வீதியெனவும், பத்துமுழ அளவு அகலமுள்ளது மார்க்கமெனவுங் கூறப்படும். ௨௯௨

அரசன் கிராமத்தின் நடுவணின்று கிழக்கு மேற்குத் தெற்கு வடக்குகளைக்கண்டு அவ்வழிகளை யமைத்தல் வேண்டும். அங்ஙனமே பட்டினத்தை நோக்கி அழகிய பல இராசவீதிகளை யமைத்தல் வேண்டும். ௨௯௩

இராசதானித்தலைநகரில் ஐந்துமுழ அகலமுள்ள வீதியையும், மூன்றுமுழ அகலமுள்ள நடைவழியையும் அமைத்தலாகாது. ஆறு யோசனைதூரம் அகன்ற காட்டின் புறத்தே தலையாய இராசமார்க்கத்தை யமைத்தல் வேண்டும். ௨௯௪

அக்காட்டின் நடுப்பாகத்தில் இடையாய இராசமார்க்கத்தையும், அவற்றின் நடுவிற் கடையாய இராசமார்க்கத்தையும் அமைத்தல் வேண்டும். ஒவ்வொரு கிராமத்திற்கும் பத்துமுழ அளவுள்ள மார்க்கம் எப்பொழுதும் இருக்கும்படி செய்தல் வேண்டும். ௨௯௫

கிராமத்தில் வாழும் மனிதர்கள் போக்குவரவிற் குரிய வழியிடத்தை ஆமையுதுகுபோல் நடுவிடம் உயர்த்தியும், இருமருங்கும்

---

௨௯௪. நான்கு குரோசங்கொண்டது ஒருயோசனை. தலையாய இராசமார்க்கம்—முப்பதுமுழ அளவு அகலமுடையது.

௨௯௫. அவற்றின் நடுவில் - தலையாயதும் இடையாயதுமாகிய இராசமார்க்கங்களின் இடையிடையே.

அழகிய வரம்பெடுத்தும் அமைத்தல் வேண்டும். அதன் இருமருங்கும் நீர்வீழ்ந் தோடுதற்குரிய வாய்க்கால் வழி ஏற்படுத்தல் வேண்டும். உசுசு

எல்லா இல்லத்து முகங்களும் இராசவீதியின்பால் இருத்தல் வேண்டும். ஒவ்வொரு வீட்டின் பின்புறத்திலும் மலங்கழித்தற்கு உரிய இடத்தையும், சிறுவழியையும் அமைத்தல் வேண்டும். உசுஎ

ஒவ்வொரு தெருவின் இருபக்கங்களிலும் வரிசையாக இல்லங்களை யமைத்தல் வேண்டும். குற்றமிழைத்துச்சிறைப்பட்டாரைக்கொண்டாதல், கிராமத்துக் குடிகளைக்கொண்டாதல் ஒவ்வோராண்டும் வழிகளைச் சுண்ணும்புக்கற்களால் இறுகுறப்படுத்தல்வேண்டும். உசுஅ

## உ௯. வழிச்செல்வோர் தங்குதற்குரிய அறச்சாலை யமைத்தல்.

அரசன் ஒவ்வொரு கிராமத்திலுமேனும், அன்றி இரண்டு கிராமங்களுக்கு இடையிலேனும் வழிச்செல்வோர் தங்கும் அறச்சாலை அமைத்தல் வேண்டும். அஃது எப்பொழுதும் அலகிடன் முதலியவற்ருல் தூயதாகவும், கிராமத்தலைவர்களால் நன்கு காக்கப்படுவதாகவும் இருத்தல்வேண்டும். எப்பொழுதும் அச்சாலைத்தலைவன் அங்கு வருவோரைப் பின்வருமாறு தனித்தனி வினவுதல் வேண்டும். உஎ0

"வழிச்செல்வோய்! எவ்விடத்தினின்று எதற்காக வந்தாய்? எங்குச்செல்கின்ருய்? துணையோடு வந்தனையா? அன்றித் தனிமையாக வந்தனையா? ஆயுதம் இருக்கின்றதா? ஊர்தியுண்டா? நின்சாதி குலம் யாவை? பெயர் யாது? நின் நீண்டநாள் வாழ்க்கை யாண்டுள்ளது? உண்மையாகச் சொல்" என்றிவ்வாறு கேட்டு எல்லாவற்றையும் எழுதிக்கொள்ளல் வேண்டும். மாலைப்பொழுதில் அவன் வைத்திருக்கும் ஆயுதத்தை வாங்கிக்கொண்டு "சாவதான மனமுடையனுய் உறங்குக" என்று அவனுக்குத் தெரிவித்தல் வேண்டும். அதன்பின், அங்கிருக்கும் வழிச்செல்வோரை எண்ணிக்கொண்டு, அவ்வறச் சாலையின் வாயிற்கதவை யடைத்து, யாமங்காப்பவர்களைக் கொண்டு நன்கு காத்தல்வேண்டும். காலையிற் கதவைத்திறந்து, அவர்களை எழுப்பி, அவரவர்க்குரிய ஆயுதங்களைக்கொடுத்து, எண்ணிக் கணக்கிட்டு வெளிப்போம்படி செய்தல் வேண்டும். கிராமத்திலுள்ளார் எப்பொழுதும் வழிச்செல்பவர்களுக்குத் தம் கிராம எல்லைவரை உடன் சென்று துணைசெய்தல் வேண்டும். உஎக-உஎசஇ

## உ௪. அரசன் முகூர்த்தந்தோறுஞ் செய்யவேண்டிய அவசிய நித்திய கன்மங்கள்.

அரசன் தலைநகரிலிருந்து நாடோறுஞ் செய்யவேண்டிய கடமைகளை முறைப்படி செய்தல் வேண்டும். உ௭௫

அரசன் இரவின் கடையாமத்திலெழுந்து, (க-உ) இரண்டு முகூர்த்தநேரம்வரை வரவுசெலவு நிமித்தம் துணியப்பட்டபொருளின் அளவு எவ்வளவு எனவும், கருவூலத்துள்ளபொருளிற் செலவு எவ்வளவாயிற்று எனவும், வழங்குதற்பொருட்டு முத்திரையிடப்பட்ட பொருளின் வரவு செலவுகளில் எஞ்சியது எவ்வளவு எனவுமாராய்ந்து, அவற்றைக் காட்சி அளவையானும் எழுத்து மூலமாகவும் அறிந்து, இப்பொழுது நேரும்செலவு எவ்வளவாகுமென்பதையுமாராய்ந்து, அதற்குத் தக்க அளவு பொருளைக் கருவூலத்தினின்றும் வெளிப்படுத்து வைத்தல் வேண்டும். உ௭௬-உ௭௮

வரவு செலவுகளைத் திட்டஞ்செய்தபின்னர், (௩) ஒரு முகூர்த்த நேரம் வரை மலமூத்திரங் கழித்து நீராடல் வேண்டும். அதன் பின் சந்தியாவந்தனம், புராணபடனம், தானம் இவைகளின் பொருட்டு (௪-௫) இரண்டுமுகூர்த்தநேரஞ் செலவிடல் வேண்டும். அதன்பின், காலை (௬) ஒருமுகூர்த்தநேரத்தை எருது குதிரை முதலிய ஊர்திகளில் ஏறிச் செல்லல் முதலிய உடற்பயிற்சியாற் போக்கல்வேண்டும். உ௭௬

அதன்பின், அறிவுமிக்க அரசன் தன்னையடுத்துப் பிழைப்பவர்களுக்குப் பரிசில் ஈதலால் (௭) ஒரு முகூர்த்தப் பொழுதையும், அதன்பின் தானியம், ஆடை, பொன், இரத்தினம், படை, நிலம் இவற்றின் அளவு முதலியவைகளை நன்றாக ஆராய்ந்து, அமைச்சனைக் கொண்டு எழுதிக் கணக்கிட்டு அவற்றின் வரவு செலவுகளைக் காண்டலால் (அ. ௯. ௧0. ௧௧) நான்கு முகூர்த்தங்களையும், அதன் பின் கவலையற்ற மனத்தினனாய் விருந்து, ஒக்கல் சூழவிருந்து உணவு செய்தலால் (௧உ) ஒரு முகூர்த்தப்பொழுதையுங் கழித்தல் வேண்டும். உ௮0-உ௮௧

அதன்பின், பழையனவும் புதியனவுமாகிய பொருள்களை நேரிற்காண்டலால் (௧௩) ஒருமுகூர்த்தப்பொழுதையும், அதன்

உ௭௬. முகூர்த்தம் - ஈண்டு இரண்டு நாழிகையாகக்கணக்கிடப்பட்டுளது. இதுமுதல் உ௮௪ வரையுள்ள சுலோகங்களில் ஒருநாளை முப்பது முகூர்த்தங்களாகக் கூறிட்டு ஒவ்வொரு முகூர்த்தத்திலும் அரசன் செய்யவேண்டிய காரியங்கள் இன்ன இன்னவென்று விளக்கிக் கூறப்படுகின்றன.

பின், தன்னால் நியமிக்கப்பட்ட நியாயாதிபதிகள் தெரிவித்துக்கொள்ளும் வழக்காராய்ச்சியால் (கச-கரு) இரண்டு முகூர்த்தங்களையும், அதன்பின், வேட்டைவிளையாடல்களால் (கசு-கஎ) இரண்டு முகூர்த்தங்களையும், அதன் பின், படைகளை அணிவகுத்துக் காண்டலால் (கஅ) ஒருமுகூர்த்தத்தையும், அதன்பின் மாலைக்கால சந்தியாவந்தனத்தால் (ககூ) ஒருமுகூர்த்தத்தையும், அதன்பின், இராவுணவு செய்தலால் (உO) ஒருமுகூர்த்தத்தையும், அதன்பின் மறைவிற் கண்டு கூறும் ஒற்றர்கள் மூலமாகக் கேட்குஞ் செய்திகளால்(உக-உஉ) இரண்டு முகூர்த்தங்களையும், அதன்பின் உறங்குதலால் (உரு-ருO) எட்டு முகூர்த்தங்களையுங் கழித்தல் வேண்டும். உஅஉ-உஅச

இவ்வாறு காலங்கழிக்கும் அரசனுக்கு நலம் உண்டாகும். முற்கூறியாங்கு முப்பதுமுகூர்த்தகால அளவால், இன்ன இன்ன காலத்தில் இன்னது இன்னது செய்தல் வேண்டுமென்று பகலையும் இரவையும் பிரித்து, அவ்வச் செயல்களால் அவ்வக்காலத்தைப் போக்குதல் வேண்டும். பெண்களோடு கூடிக் காமவின்ப நுகர்ந்தும், கட்குடித்தும், பயனின்றிக் காலத்தைக்கழித்தல் கூடாது. எக்காலத்தில் எக்காரியத்தைச் செய்தல் தகுதியோ, அக்காலத்திலேயே அச்செயலை ஐயமின்றி விரைந்து செய்தல் வேண்டும். இங்ஙனஞ் செய்யின், உரியகாலத்திற் குடிகளைக் காத்தற்குத் தக்கவாறு மழைபெய்யும்; இன்றேற் குடிகளுக்குக் கேடுவிளைக்கத்தக்க மிகுபெயல், பெயலின்மைகளுண்டாவனவாம். நீதியின் சிறப்பையும் அநீதியின் தாழ்வையும் அறிந்த அரசன், அம்பு வாள் முதலிய படைக்கலங்களில் வல்ல சிறந்த யாமங்காப்போர் நால்வர், ஐவர், அன்றி அறுவர்களால் எப்பொழுதும் எல்லாக் காரியநிலையங்களையும் எப்பக்கத்துங் காத்தல் வேண்டும். உஅரு-உஅஅ

அவ்வக்காரியாலயங்களில் நாடோறும் நிகழுங்காரியங்களைத் தலைமை யெழுத்தாளர்களிடம் கேட்கவேண்டும். நாடோறும் யாமங்காப்பவர்களை மாற்றிமாற்றி நியமித்தல் வேண்டும். உஅகூ

## உரு. *யாமங்காப்போர் செய்யவேண்டுவன.

யாமங்காப்போர் எப்பொழுதும் இல்லறவாழ்க்கையுடையாரின் வரிசையாகவுள்ள இல்லங்களின் எதிரில் நின்று வாயில்களைக் காவல்

*யாமங்காப்போர் - நகரங்களையும் இல்லங்களையும் நாடோறும் யாமம் யாமமாக வகுத்துக்கொண்டு காவல் புரிபவர். இவரைமுதனூல் "யாமிகர்" என்று கூறும். இவர்களை மாற்றியமைக்கு முறையை, ச-ஆம் அத், எ-ஆம் பிரகரணம் சOரு-ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க.

செய்தல்வேண்டும். இல்லறத்தார் உதவும் வேதனங்களாற் பரிபாலிக்கப்படும் அவ்யாமங்காப்பவர்கள் முகமாக அவ்வில்லறத்தார்களைப் பற்றிய செய்திகளை அரசன் கேட்டறிதல் வேண்டும். ௨௯0

கிராமத்தினின்றும் வெளிச்செல்வோரும் கிராமத்தின் உட்புகுவோருமாகிய இவர்களை நன்றாக முயன்று சோதித்தபின் பிணைகொடுக்கச்செய்து வெளிப்புறத்தும் உட்புறத்தும் விடல்வேண்டும். எல்லோராலும் போற்றப்படும் நல்லொழுக்கமுடைய பெரியாரைச் சோதிக்காமலே விடல் வேண்டும். ௨௯௧ இ

இரவில் கள்வரையும், பிறர்மனைநயக்குங்காமுகரையும் தடுத்தற் பொருட்டுத் தெருக்கடோறும் அரையாமத்திற்கொருமுறை யாமங்காப்போர் சுற்றிப்பார்த்து என்றுங் காவல்செய்தல்வேண்டும். ௨௯௨ இ

## ௨௯. குடிகளுக்கு அரசன் இடுங் கட்டளைகள்.

அரசன் குடிகளின் பொருட்டுப் பின்வருங் கட்டளைகளை என்றுஞ்செய்தல்வேண்டும். "நம்நாட்டில் வாழுங்குடிமக்கள் தம்ஏவலர், தம்முதவிபெறுவோர், இல்லாள், புதல்வர், மாணுக்கர் இவர்களிடத்துக் கடுஞ்சொற்கூறுதலையும், கடுந்தண்டமிடுதலையும் மேற்கொள்ளலாகாது; துலைமுதலிய நிறுத்தலளவைகள், முத்திரைக்காசுகள், மரத்தினின்றும் வடித்தெடுக்கும் பெருங்காய முதலியவைகள், ஒத்தமாற்றுக்களையுடைய பொன்வெள்ளிமுதலியன, நெய், தேன், பால், இறைச்சி, மா என்னும் இவைமுதலியவற்றில் வஞ்சகம் செய்தல் கூடாது; வலிந்து பத்திரமெழுதுதலையும், கைக்கூலிவாங்குதலையும், தம் தலைவர்களுக்கு வஞ்சகமிழைத்தலையும் ஒழித்தல் வேண்டும்; தீயொழுக்கமுடையார் கள்வர், பிறர்மனைநயப்போர், நம்மிடத்து வெறுப்புடையோர், நம்பகைவர், மறைவிற் றீங்கிழைக்கும் மற்றை மனிதர்களாகிய இவர்களை ஒருவரும் துணைசெய்து காத்தலாகாது; தாய் தந்தை ஆசிரியர் முதலியோர், புலவர்கள், நல்லொழுக்கத்திற் பற்றுடையாராகியஇவர்களை அவமதித்துப்பரிகசித்தல் கூடாது; கணவன் மனைவி, தலைவன் ஏவலாளன், அண்ணன் தம்பி, ஆசிரியன் மாணுக்கன், தந்தை மகன் ஆகியஇவர்களுக்குள் மனவேற்றுமையுண்டாக்குதல் கூடாது; ஊருணி,கிணறு, பூஞ்சோலை, எல்லைநிலம், அறச்சாலை, திருக்கோயில், நடைவழி ஆகிய இவற்றிற்கும், *உறுப்பறைகள்,உறுப்புவலியற்றோர்ஆகிய இவர்களுக்குங் கேடுவிளைத்தல் கூடாது; பணயம் வைத்துச்சூதாடல், கட்குடித்தல், வேட்டையாடல், ஆயுதந்தரித்

* உறுப்பறைகள் - அங்கவீனர்கள்,

6

தல், பசு, யானை, குதிரை, ஒட்டகம், எருமை, ஆளடிமை, நிலமுதலிய நிலையியற்பொருள்கள், வெள்ளி, பொன், இரத்தினம், மயக்க முண்டாக்கும் பொருள்கள், நஞ்சு என்னுமிவற்றை விலைகொடுத்துக் கொள்ளல், விற்றல், கள்வடித்திறக்குதல், கிரயபத்திரம், தானபத்திரம், கடன்பத்திரம், மருத்துவஞ்செய்தல் ஆகிய இவற்றை நம்(அரசன்) அனுமதியின்றி யாருஞ் செய்தலாகாது; செய்யாதவன்மேற் பெரும்பாவச் செயலை ஏறிடல், புதைபொருள் கொள்ளுதல், புதிய சமாசம் உண்டுபண்ணுதல், அரசியையின்றித் துணியப்படாத பொருளைத்துணிதல், சாதியைக் குற்றங்கூறிப்பழித்தல், தலைவனற்ற பொருளையும் களவுப்பொருளையுங் கொள்ளுதல், மறைவுச்செய்திகளை வெளிப்படுத்தல், அரசனுடைய தீயகுணங்களை வெளிப்படுத்திப் பேசுதல் ஆகிய இவற்றை ஒருபொழுதுங்குடிமக்கள் செய்தலாகாது; தம் கடமையை விட்டொழிதல், பொய்கூறல், பிறர்மனைநயத்தல், பொய்ச்சான்று கூறல், பொய்ப்பத்திரமெழுதல், மறைவிற்பொருள் பெறுதல், துணியப்பட்ட அளவிற்குமேற் குடிகளிடத்து இறைப் பொருள்வாங்குதல், களவாடல், வலிந்துபற்றுதல், தலைவனுக்குத் தீங்கிழைத்தலாகிய இவற்றை மனத்தாலும் நினைத்தல் கூடாது; வேதனத்தாலும், சுங்கப்பொருளாலும், வட்டித்தொழிலாலும், இறுமாப்பாலும், ஆற்றலாலும், வஞ்சகத்தாலும் ஒருபொழுதும் எவர்க்கும் துன்பஞ் செய்தலாகாது; நீட்டலளவையும், நிறுத்தலளவையும், முகத்தலளவையுமாகிய இவற்றின் கருவிகளை அரசியன் முத்திரையிட்டு உபயோகித்தல் வேண்டும்; எல்லாக் குடிமக்களும் நற்குணங்களை யீட்டுதலிற்றிறமையுடையராயிருத்தல் வேண்டும்; வலிந்துசெய்தன் முதலிய கடுஞ் செயல்கள் வெளிப்பட்டுழி அவற்றைச்செய்த ஆததாயியைப் பிடித்திழுத்து அரசன் பக்கல் சேர்த்தல் வேண்டும்; எவர்களால் அறங்கருதி எருதுமுதலியன விடப்பட்டனவோ, அவர்களே அவற்றைக்கட்டிக்காத்தல் வேண்டும்; இங்குக்கூறப்பட்ட என் கட்டளைகளைக்கேட்டும் எவர்கள் மாறுகநடக்கின்றார்களோ அத்தகைய கொடியவர்களைப்பெருந்தண்டத்தால்ஒறுத்திடுவேன்" என்றிவ்வாறு அரசன் குடிமக்களுக்கு நாடோறும் பறைசாற்றி அறிவித்தல் வேண்டும். உ௬௩ - ௩௧உ

---

௯0எ. மறைவிற் பொருள் பெறுதல் - ஒருவனிடத்தினின்றும் அவனைச் சார்ந்தாரறியாமலிருக்கும் வண்ணம் அவன் பொருளைக் கொள்ளுதல்.

௯௧0. ஆததாயிகள்—தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், பிறர்நிலங்கவர்வார், பிறனில்விழைவாரென அறுவகைப்படுவர். மூன்றாம் அத்தியாயம் ௬௪-ஆம் சுலோகத்திற் காண்க.

௨௭. அரசன் செய்யவேண்டியவை.

அரசன் நாற்சந்திதோறும் தன் கட்டளைகளை யாவருங்காண எழுதிவைத்தல் வேண்டும். தீயவர்களிடத்தும் பகைவர்பாலும் எப்பொழுதும் தண்டோபாயத்தை மேற்கொள்ளல்வேண்டும். ௩௩௩

அரசன் நீதிமுறைப்படி குடிகளைப் புரத்தல்வேண்டும்; வழிச்செல்வோர் நலங்குறித்து வழியிடங்களைக் காத்தல்வேண்டும். ௩௩௪

வழிச்செல்வோரைத் துன்புறுத்துபவர் யாவராயினும் அவர்களை முயன்று கண்டுபிடித்துக் கொல்லல்வேண்டும். அரசன் தனக்குரிய ஆண்டுவருவாயில் மூன்றுகூறு படைகளைக்காத்தற்கும், அரைக்கூறு தானத்திற்கும், அரைக்கூறு அமைச்சர் முதலிய தலைமை அதிகாரிகளுக்கும், அரைக்கூறு அரசியற்றொழில்புரியும் மற்றவர்களுக்கும், அரைக்கூறு தன் வாழ்க்கைக்கும் செலவிட்டு எஞ்சிய ஒரு கூற்றைத் தன்கருவூலத்து வைப்புநிதியிற் சேர்த்தல்வேண்டும். ௩௩௫-௩௩௬

இங்குக்கூறப்பட்டவண்ணம் வருவாயை ஆறுகூறிட்டு யாண்டுதோறும் செலவிடல் வேண்டும். முற் கூறிய சாமந்தன் முதலியோர்களுக்கும் இந்நியமம் பொருந்துவதாகும். அச்சாமந்தன் முதலியோரிற் றாழ்ந்தவர்களுக்கு இந்நியமம் ஒரோவமயம் பொருந்தாததாகவுங் கூடும். ௩௩௭

அரசன் தன் நாடு, புகழ், புகழ்விளைக்குங்காரியம், பொருள், குணம் என்னுமிவற்றைக் காப்பதிலும், வேற்றுநாட்டைக் கவர்வதி

---

௩௩௩. இக்கருத்தை "ஒல்லும்வா யெல்லாம் வினைநன்றே யொல்லாக்காற், செல்லும்வாய் நோக்கிச் செயல்" என்னுந் திருக்குறளிலுங் காண்க. வினை-ஈண்டுத் தண்டோபாயம்.

௩௩௫-௩௩௬. இச்சுலோகங்களுக்கு உரைவரைந்தாரொருவர் ஆண்டுவருவாயை எண்கூறுபடுத்துப் படைகளைக்காத்தற்கு மூன்றும்,மற்றவகை ஐந்திற்கு ஐந்து கூறுமாகக் கணக்கிட்டுக் கூறினர். அவர் 'அர்த்தாம்சம்' என்பதற்கு, வருவாயிற் பாதியில் நான்கிலொரு கூறு என்று கூறினர். அவ்வாறு கூறுதற்குச் சொற்பொருள் இடந்தராமையானும், ௩௩௭ - ஆம் சுலோகத்தில் வருவாயை ஆறு கூறிடல்வேண்டுமென்று நூலாசிரியரே கூறுதலானும், கருவூலத்திற் சேர்க்கப்படுவதை 'அர்த்தாம்சம்'என்று கூறுமையானும் அவ்வுரை பொருந்தவில்லையென்று தோன்றினமையால், முன்பின் இயைபு நோக்கி வேறுவிதமாகப் பொருந்துமாறு இவை மொழிபெயர்க்கப் பட்டன. பிறவிடும் இங்ஙனமே உரைவரைந்தாரின் பிறழ்ச்சியை யறிந்து முன்பின் இயைபு நோக்கி மொழிபெயர்க்கப்பட்ட சுலோகங்கள் பலவுள.

லும் முயற்சியுடையனாதல் வேண்டும். அங்ஙனங் கவர்ந்த வேற்று நாட்டை நன்கு பாதுகாப்பதிலும், மேன்மேலும் வேற்றுநாடு கொள் வதிலும் எப்பொழுதும் தளர்தலில்லாமுயற்சியை மேற்கொள்ளக் கடவன். ௩௧௮இ

அரசன் எப்பொழுதும் சௌரியம், புலமை, சொல்வன்மை, வண்மை, ஆற்றல், பராக்கிரமம், இடையறவில்லாமுயற்சி ஆகிய இவற்றை ஒழித்தல் கூடாது. ௩௧௯இ

எவன் போரில் தன் உடற் பொருட்டாதல், தன்றலைவன் பொ ருட்டாதல் உயிர்க்கு அஞ்சுதலையொழித்து, மனத்தளர்வின்றிப் போர் செய்கின்றானோ அவனே சூரனாவான். ௩௨௦இ

எவன் காய்தல், உவத்தலின்றிச் சிறுவன் கூறியதெனினும் பொருளுரையை முயன்று கொண்டு அதன்கண் உள்ள தருமத் தின் உண்மையை உள்ளவாறு அறிகின்றானோ அவனே **பண்டிதனா வான்**. ௩௨௧இ

அரசனுடைய தீயகுணங்களை அவன் முன்னிலையிற் கலக்க மின்றி எடுத்துச் சொல்லுதலையும், அத் தீயகுணங்களை நற்குணங்க ளோடொப்பவைத்து ஒருபொழுதும் பாராட்டாமையையுமுடைய வனே **சொலல்வல்லனாவான்**. ௩௨௨இ

எவனுக்கு மனைவி, மக்கள், பொருள் முதலிய யாவுங் கொடைக் குரியவாக வுள்ளனவோ, எவன் சற்பாத்திரத்திற்குத் தன்னையும் வழங்குகின்றானோ அவனே **வள்ளலாவான்**. ௩௨௩இ

ஒருவன் செயற்பாலதை உறுதியாகத் திறமையுடன் செய்தற் குத் துணைநிற்குங் குணமே **ஆற்றலாகும்**. ௩௨௪

வேற்றரசர் முதலியவர்களை ஏவலாளரையொப்பச் செய்து கோடற்குத் துணையாக நிற்குங் குணமே **பராக்கிரமமாகும்**. ௩௨௪இ

போர்செய்தற்கு அனுகூலமாக நிற்பது **முயற்சியாகும்**. ௩௨௫

௨அ. நஞ்சு முதலியவை கலந்த உணவைச் சோதித்தல்.

உணவில் நஞ்சு கலந்திருக்குங்கொல் என்னும் அச்சத்தாற் குரங்கு கோழி முதலியவைகளாற் சோதித்து ஆராய்ந்தபின் அறு வகைச் சுவையோடுங்கூடிய அவ்வுணவை எப்பொழுதும் உண்ணல் வேண்டும். சோதனை வருமாறு:—நஞ்சு கலந்த அன்னத்தைக் கண்ட அளவிலேயே அன்னப்பறவை தடுமாறி விழும்; வண்டுகள் குழறி ஒலிக்கும்; மயில்கள் நிலைபிறழ்ந்து துள்ளி ஆடும்; கோழிகள்

விரைந்துகத்தும்; அன்றிற்புள் மயக்கமெய்தும்; குரங்கு மலங் கழிக்கும்; காடைப்பறவை மயிர்சிலிர்க்கும்; நாகணவாய்ப்புள் எதிரெடுக்கும்; ஆதலின், இவற்றால் உணவுப்பொருள்களைச் சோதித்து ஆராய்தல் வேண்டும். இரண்டு சுவை மூன்று சுவைகளோடு மாத்திரங்கூடிய உணவையும், வேண்டிய அளவின் மிகுதல் குறைதற் சுவையுள்ள உணவையும், காழ்ப்பு, இனிப்பு, உவர்ப்பு இம்மூன்றும் ஒருங்குசேரக் கலந்த உணவையும் உண்ணலாகாது. யாரேனும் ஒன்றை அறிவிப்பின் அதனை அமைச்சர்களோடிருந்து கேட்டல் வேண்டும். ௬௨௬-௬௨௯

## ௨௯. வேட்டை விளையாடல் முதலியன.

அரசன் பூஞ்சோலை முதலிய இன்ப நிலங்களில் மற்றை அரசகுமாரர்கள், மகளிர், ஆடுவோர், பாடுவோர், வைதாளிகர், இந்திரசால விச்சை செய்வோராகிய இவர்களோடு கூடி உரிய காலங்களில் விழிப்புடையனாகி விளையாடல் வேண்டும். ௬௩௦

நாடோறும் காலை மாலைகளில், யானை குதிரை தேர் இவைகளின்மேலேறிச் செல்லுதலைப் பழகல் வேண்டும். காலாட் படைகளை அணிவகுத்துப் பழகும்படி பயிற்றுதலும், பயிற்றுவித்தலுஞ் செய்தல் வேண்டும். ௬௩௧

காட்டிலிருந்து கொணர்ந்து பழக்கப்பட்ட புலி முதலிய விலங்குகளோடும், மயில் முதலிய பறவைகளோடும் விளையாடல் வேண்டும். கொடியவிலங்கினங்களை வேட்டையாடிக்கொல்லல் வேண்டும். ௬௩௨

வேட்டையாடுதலால் எப்பொழுதும் தறுகண்மை, குறிவைத்தெய்யுந்திறமை, அஞ்சாமை, அம்பு வாள் முதலியவற்றை விரைந்து செலுத்தலாகிய இக்குணம் செயல்கள் பெருக்கம் அடைவனவாம். இவை வேட்டையால் விளையும் நலங்கள்போற் றோன்றுவன; ஆயினும், அதனால் விளையும் பிறவுயிர்க்குத் துன்பஞ்செய்தலாகிய தீவினை யொன்றே மிகப்பெரிதாகும். (ஆதலின் வேட்டையாடல் செய்யாதிருத்தலே நன்றென்பது கருத்து.) ௬௩௩

---

௬௨௬. அறுசுவையாவன - தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, காழ்ப்பு, கைப்பு என்பன.

௬௨௭. எதிரெடுத்தல் - வாந்திபண்ணுதல்.

## ௩௦. ஒற்றுடல்.

அரசன் அம்பு வாள் முதலிய படைப்பயிற்சியில் திறமையையும் சோர்வில்லாமனத்தினையும் உடையனாகி, தனக்குக் கேடுவிளையுங்காலத்தில், குடிகளுடையவும், அரசியற்றொழில்புரிவோருடையவும், அமைச்சர் முதலிய தலைவர்களுடையவுமாகிய உள்ளக்குறிப்புக்களையும், செயல்களையும், பகைவர் படைவீரர் நீதிபதிகள், சுற்றத்தார் உவளகத்துமகளிராகிய இவர்களின் எண்ணங்களையும் மறைவிற் கண்டுகூறும் ஒற்றர்கள் முகமாக நாடோறும் இரவில் முயன்று கேட்டல் வேண்டும். அக்கேட்டவற்றை நன்றாக எழுதிக்கொள்ளவும் வேண்டும். ௩௩௪-௩௩௬

மறைவிற் கண்டுகூறும் ஒற்றன் பொய் கூறுபவனாயின், அவனைத் தக்கவாறு ஒறுத்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்யாத அரசன் குடிமக்களின் உயிரையும் பொருளையுங் கவரும் 'மிலேச்சன்' என்று கூறப்படுவான். ௩௩௭

பிரமசாரி, வானப்பிரத்தன், சந்நியாசி, போலிச்சித்தன் ஆகிய இவர்களின் வேடத்தைத் தாங்கித் திரியும் ஒற்றர்களின் நிலையை அரசன் காட்சியளவையானும் மறைவானுஞ் சோதித்தறிதல்வேண்டும். ௩௩௮

அங்ஙனஞ் சோதித்தறியாத அரசன் உண்மையறிதல் இலனாவன்; உண்மைச்செய்தியும் வாராது; அவன்மாட்டுப் பொய்கூறுதலில் அவர் சிறிதும் அச்சங்கொள்ளார். அமைச்சர் முதலியோரும் மற்றை அரசியற்றொழில் புரிவோரும் தீங்குசெய்யாவண்ணம் ஒற்றனை நன்கு காத்தல் வேண்டும். ௩௩௯

---

௩௩௪-௩௩௬. கேடுவிளையுங்காலத்திற் கேட்டலென்பது, "கேட்டினு முண்டோ ருறுதி கிளைஞரை, நீட்டி யளப்பதோர் கோல்" என்னுந் திருக்குறளை ஒத்திருத்தல் காண்க.

௩௩௮. மறைவானறிதல் - ஓர் ஒற்றனை மற்றோர் ஒற்றனைக்கொண்டு சோதித்தல்.

௩௩௯. ஒற்றன், அமைச்சர் முதலியோர்களின் நிலையையும் உணர்ந்து அரசனுக்குத் தெரிவிப்பானாதலானும், அது குறித்து அமைச்சர் முதலியோர் அவ்வொற்றனுக்குத் தீங்கிழைக்க எண்ணவுங் கூடுமாதலானும் அத் தீங்கு வாராவண்ணம் அரசன் காக்கவேண்டுமென்பது கருத்து.

## ௩௧. அரசர் குலத்தில் அரசிற்குரியவனைத் துணிதல்.

எப்பொழுதும் ஆளப்படும் நாட்டை ஒரு தலைவனுடையதாக வே இருக்கும்படி செய்தல் வேண்டும். பலதலைவர்களையுடையதாகச் செய்தலாகாது. ௩௪0

அரசன் ஒருபொழுதும் தன் நாட்டைத் தலைவன் இல்லாததாகச் செய்தலாகாது. அரசர் குலத்தில் ஆண்மக்கள் பலர் இருப்பார்களாயின், அவருள் ஆண்டினாலும் அறிவினாலும் முதிர்ந்தவனே அரசனாவான். மற்றையோர் அவனுக்குக் காரியத்துணைவர்களாய், எல்லாத் துணைவர்களினுஞ் சிறந்தோராய், அவ்வரசன் நலம் வளர்தற்கு வேண்டுவன புரிபவராவர். ௩௪௧-௩௪௨

மூத்தவனும் செவிடு, தொழுநோய், ஊமை, குருடு, அலித்தன்மை இவைகளுள் ஒன்றையுடையனாயிருப்பின், அவன் அரசனாதற்குத் தகுதியில்லாதவனாவான். அங்ஙனமே அவன் உடன்பிறந்தாரும் புதல்வர்களும் முற்கூறிய குற்றமுடையராயிருப்பின், அரசியற்குரியராகார். ௩௪௩

மூத்தவன் இல்லையாயின் இளையோர் அரசெய்தற்குரியராவராதலின், அரசனுக்குத் தம்பியும் தமையன் புதல்வனும் முற்கூறிய குற்றமிலராயின் அரசியற்குரியராவர். உடன்பிறந்தார் முதலியவர்களோடு ஒன்றுபட்டு வாழ்தல் அரசனுக்கு மிக்க நலம்பயப்பதாகும். ௩௪௪

உடன் பிறந்தார் முதலியவர்களோடு வேறுபடுதல் தன் நாட்டிற்கும் குலத்திற்கும் அழிவுசெய்யுமாதலின், அரசன் தடையின்றிச் செல்லும் ஆணையுடையனாய்த் தன் உடன்பிறந்தார் முதலியவர்களை வெண்கொற்றக்குடை அரியணை முதலியவைகளால் மகிழ்வித்தல் வேண்டும். தன்னைப்போல் அவர்களும் வாழ்க்கையின்பமுடையவர்களாம்படி செய்தல் வேண்டும். ௩௪௫

பிரிக்கப்படுதலாற் சுருங்கிய நாட்டைப் பகைவர் கவர்ந்து கொள்ள விரும்புவராதலின் அரசர்களுக்கு நாட்டின் பிரிவால் நலமுண்டாகாது. ௩௪௬

## ௩௨. சுற்றத்தார் முதலியோர் பால் அரசன் இடுங் காரியங்கள்.

அரசன் உடன்பிறந்தார் முதலியவர்களுக்கு இராச்சியத்தின் நான்கிலொருகூறு உதவி நாட்டைச் சுற்றிலும் இருக்கச் செய்தல்

௩௪௫. அரியணைமுதலியன உதவல் - தன் நாட்டினுள் அடங்கிய சிறு பகுதிகளுக்குத் தலைவராம்படி செய்தல்.

வேண்டும். அன்றி அவரைத் தன் நாட்டின் நாற்புறத்துமுள்ள சிறிய நாடுகளுக்குத் தலைவராக்கல் வேண்டும். இன்றேல், பசு யானை குதிரை ஒட்டகம் பொருட்கருவூலம் இவைகளின் அதிகாரச் செயலில் நியமனஞ்செய்தல் வேண்டும். தாயையாதல், அன்றித் தாயையொத்த மற்றொருத்தியையாதல் அடுக்களையில் தலைமையாக நியமித்தல் வேண்டும். ௩௪எ-௩௪அ

அரசன் தன் சுற்றத்தார்களையும், மைத்துனர்களையும் எப்பொழுதும் படைத்தலைமை அதிகாரத்தில் நியமித்தல் வேண்டும். குரவர்களையும் நண்பர்களையும் தன்பாலுள்ள குற்றங்களை யறிந்து எடுத்துக்காட்டுந் தொழிலில் நியமனஞ் செய்தல் வேண்டும். ௩௪௯

பெண்பாலாரை ஆடை அணிகலன் பாத்திரம் என்னுமிவற்றை நன்கு பார்த்துக்கொள்ளும்படி செய்தல் வேண்டும். தான் எல்லாவற்றையும் ஆராய்ந்து கொண்டு, முறைப்படி அவற்றில் தன் அடையாள முத்திரை இடல் வேண்டும். ௩௫0

### ௩௩. அரசவை அமைப்பு.

இரவிலேனும் பகலிலேனும் தூய்மைசெய்யப்பட்டதும் வேற்று மனிதர் இல்லாததுமாகிய இல்லத்தின் உள்ளாதல், காட்டிலாதல் அமைச்சர்களோடு கூடியிருந்து மரக்கடவ காரியத்தைச் சூழ்தல் வேண்டும். ௩௫௧

அரச மன்றத்திருந்து நட்டார், உடன்பிறந்தார், புதல்வர், சுற்றத்தார், படைத்தலைவர், நீதியதிபர் இவர்களோடு கூடி அரசியற் காரியங்களை என்றுஞ் சூழ்தல் வேண்டும். ௩௫௨

அத்தாணிமண்டபத்தில் மேற்பாதியின் நடுவண் அரசனுக்குரிய அரியணை யிருத்தல் வேண்டும். அதற்குத் தென்பாலிற் சிலரும் வடபாலிற் சிலரும் இருத்தல் வேண்டும். மற்றையோர் பக்கத்துக் கோட்டங்களில் இருத்தல் வேண்டும். ௩௫௩

புதல்வர், பெயரர், உடன் பிறந்தார், மருகர், தௌகித்திரராகிய இவர்கள் தன் பின்புறத்தில் வலப்பக்கம் தொடங்கி இடப்பக்கமாக முறையே இருத்தல் வேண்டும். ௩௫௪

---

௩௫௧. இது மறைவிற் சூழ்தல்.

௩௫௨. இது வெளிப்படையிற் சூழ்தல்.

௩௫௩. இதனால் அத்தாணிமண்டபம் கிழக்குமுகமுடையதாக இருத்தல் வேண்டுமென்பது போதரும்.

௩௫௪. மருகர் - சகோதரிகளின் புதல்வர். தௌகித்திரர் - மகள் வயிற்றிற் பிறந்த ஆண்மக்கள்.

தன் தந்தையுடன் பிறந்தார், தன்குலத்துப் பெரியார், நீதியதிபர், படைத்தலைவர் ஆகிய இவர்கள் முறையே ஒருவர்க்கொருவர் கீழ்பாலாகத் தன் முன்னிலையில் வலப்பக்கத்தில் தனித்தனி இருக்கையில் இருத்தல் வேண்டும். ௫௫

தாய்வழிப் பாட்டன், அக்குலத்துப் பெரியார், அமைச்சர், சுற்றத்தார், மாமன்மார், மைத்துனன்மார், மற்றை அரசியற்றொழில் புரிவோர், ஆகிய இவர்கள் முறையே ஒருவர்க்கொருவர் கீழ்பாலாகத் தன் முன்னிலையில் இடப்பக்கத்தில் தனித்தனி இருக்கையில் இருத்தல் வேண்டும். ௫௬

மருமகன் இடப்பக்கத்தும், உடன்பிறந்தாள்கணவன் வலப்பக்கத்தும் இருத்தல் வேண்டும். தன்னையொத்த இன்னுயிர் நண்பன் மிக்க அணிமையிலாவது, தன் இருக்கையின் பாதியிலாவது உடனிருத்தல் வேண்டும். ௫௭

தத்தபுத்திரன் முதலியோர், தௌகித்திரர் மருகர் இவர்கட்குரிய இடத்தில் இருத்தல்வேண்டும். அங்ஙனமாயின், மருகரும் தௌகித்திரரும் புதல்வன் முதலியோர்க்குரிய இடத்தை யடைதல் வேண்டும். ௫௮

தந்தையும் ஆசிரியனும் இருபக்கத்து முற்கூற்றில் அரசனிருக்கையோடு ஒத்த இருக்கையிலாவது, அன்றி அதனினுஞ் சிறந்த இருக்கையிலாவது இருத்தல் வேண்டும். எழுத்தாளரனைவரும் அமைச்சர்களின் பின்புறத்தே நிற்றல்வேண்டும். ௫௯

ஏவலாளரனைவரும் முற்கூறப்பட்ட எல்லோர்க்கும் பின்புறத்தே நிற்றல்வேண்டும். காரியத்தை முன்னிட்டு வருவோருடைய வர

---

௫௭. மருமகன்-புதல்வியின் கணவன்.

௫௮. முதலியோர் என்றதனால் ஔரசன் அல்லாத மற்றைக் கிருத்திரிமன் முதலிய புதல்வரையுங் கொள்ளல் வேண்டும். புதல்வன் என்றது ஈண்டு ஔரச புத்திரனை. ஔரச புத்திரன் இல்லாத அரசனுக்கே தத்தபுத்திரன் முதலியோர் இருப்பராதலின், அத் தத்த புத்திரன் முதலியோர், தௌகித்திரர், மருகர் இவர்க்குரிய விடங்களை யடையுங்கால், அத் தௌகித்திரரும் மருகரும் புதல்வர்க்கும் பெயரர்க்குமுரிய விடங்களிலிருத்தல் வேண்டுமென்பது கருத்து. புதல்வரை ஔரசன், க்ஷேத்திரஜன், தத்தன், கிருத்திரிமன், கூடோற்பன்னன், அபவித்தன் எனவும்; கானீனன், சகோடன், கிரீதன், பௌனர்ப்பவன், சுயந்தத்தன், சௌத்திரன் எனவும் பன்னிரண்டு வகைப்படுத்து மனு கூறுவர். அவர் தம் இலக்கணங்களை மனுதரும சாத்திரம் ௯-ம் அத்தியாயம் ௧௬௬-முதல் ௧௭௯-வரையுள்ள சுலோகங்களிற் காண்க.

வையும் வணக்கத்தையும் தெரிவிப்பவரும், பொற்றடிதாங்குகின்ற வருமாகிய இரண்டு சேவகர்கள் பக்கத்தில் நிற்றல் வேண்டும். ௩௬0

௩௪. அரசுரிமை அடையாளங்களைக் காத்தல்.

அம்புமுதலிய படைக்கலப்பயிற்சியிற் றிறமைவாய்ந்த அரசன் அரசனுக்குரிய சிறப்படையாளங்களையுடையனுய்ச் சிறந்த அணிகலன்களையணிந்து, அழகிய கவசம் தரித்து, நல்லாடைகளையுடுத்து, முடிசூடி, உறையின் உருவிய வாளேந்தி, எப்பொழுதுஞ் சுருசுருப்பானமனமுடையனுய்த் தன் அரசிருக்கையில் உவகையோடு வீற்றிருத்தல்வேண்டும். ௩௬௧இ

'நீயே எல்லோரினுஞ் சிறந்த வள்ளலும் சூரனும் அறமுடையோனும் ஆகின்றாய்' என்று புனைந்து கூறுவார் சொற்களைக் கேட்டலாகாது. அரசியற் காரியஞ் சூழுங்கால், அதனைக் கேட்போர் வஞ்சகர்களா யிருப்பின் அவர்களையும், தன் (அரசன்) பாலுள்ள பிரியத்தாலும், பொருட்பற்றாலும், அச்சத்தாலுங் கழறிக்கூறாது ஊமைபோல் வாய்வாளாதிருக்கும் அமைச்சர்களையும், அரசன் அவ்வரசியற்காரிய நிறைவேற்றத்தில் துணைசெய்பவர்களாக ஏற்றுக்கொள்ளலாகாது. ௩௬௨-௩௬௩இ

ஒரு காரியத்தைத் துணிவதிற் காரணத்தோடுகூடிய அமைச்சர்களின் கருத்துக்களைத் தனித்தனி எழுதிக்கொண்டு, அவற்றைத் தன் கருத்தோடு இயைத்துச் சூழ்தல்வேண்டும். பலர்க்கும் உடன்பாடாயதைச் செய்தல் வேண்டும். ௩௬௪இ

அறிவுமிக்க அரசன் காரியஞ் செய்தற்குரிய ஆற்றல் வாய்ந்த யானை, குதிரை, தேர், பசு முதலியவைகளையும், வினை செய்வாரையும்,

---

௩௬௩. இதன் கண் 'கேட்போர்' என்பதற்குப் பிறர் கூறுங்காரியங்களைக் கேட்பவர்களெனவும், பிரியம், பொருட்பற்று, அச்சம் இவைகாரணமாக அமைச்சர்கள் ஊமைபோல் வாய்வாளாதிருத்தல் அரசன்பாற் காரியங்கருதி வருவோர்களைக் குறித்தாம் எனவும் உரைவரைந்தாரொருவர் கூறினர். அரசியற் காரியஞ் சூழ்தலே ஈண்டு எடுத்துக்கொள்ளப்பட்டதாகலானும், 'ராஜ்ஞ:' என்னுஞ்சொல்லை அவ்வுரையாளர் ஒழித்துப் பொருள் கொண்டமையானும், அச்சொல்லை இயைத்துப் பொருள்கொள்ளுங்கால் அவர் கருத்துப் பொருந்தாமையானும் வேறுவிதம் பொருள் கொண்டு மொழிபெயர்க்கப்பட்டது. கழறிக்கூறல்-அரசன் நெறி பிறழுங்கால் இடித்துக் கூறல்.

௩௬௬. ஆற்றல்வாய்ந்த என்னும் விசேடணத்தை வினைசெய்வார் முதலியோர்க்கும், பொருள் படைகளுக்குங் கொள்ளல்வேண்டும்; விலக்கல் வேண்

ஏவலாளரையும், பயன்படும் மற்றைப் பொருள்களையும், காலாட்படைகளையும் அறிந்து, நாடோறும் முயன்று நன்கு காத்தல் வேண்டும். மிகவும் ஆற்றலில்லாத அவ்யானை முதலியவற்றையும், வினைசெய்வார் முதலியோரையும் அறிந்து விலக்கல்வேண்டும். ரு௬௬

**பதினாயிரங் குரோசத்திற்கு அப்பாலுள்ள செய்தியை ஒரே தினத்தில் வரச்செய்தல் வேண்டும். குடிமக்களை வேதனமுதவி எல்லாவித்தைகளையும் கலைகளையும் பயிலும்படி செய்தல்வேண்டும்.** ரு௬எ

அவருட் கல்விநிரம்பப்பெற்றவர்களை நன்குறத்தெரிந்தெடுத்து அக்கல்வி சம்பந்தமான காரியங்களிற் கணக்காயர் முதலியோராக நியமித்தல் வேண்டும். அவருள் வித்தைகளிலும் கலைகளிலும் தேர்ந்தவர்களை யாராய்ந்தறிந்து அவர்க்கு யாண்டுதோறும் பரிசில் கொடுத்துச் சிறப்பித்தல் வேண்டும். ரு௬அ

அரசன் எப்பொழுதும் வித்தைகளையும், கலைகளையும் வளர்த்தல்வேண்டும். அச்சந்தரும் வேடத்தையும், வணக்கத்தையும், நீதியின் இறைமையையும், படைப்பயிற்சியையுமுடைய வீரர்கள், கையில் உறையொருவிய வாட்படையைத்தாங்கி முன்னும் பின்னும் அணிமையிற்சூழ்ந்துசெல்லத், தான் யானைமீதிவர்ந்து, குடிகளை இன்புறுத்தற்பொருட்டுத் தன் நகரத்தில் நாடோறுஞ் சுற்றிவரல் வேண்டும். ருஎ0

அரசனுக்குரிய ஊர்தியில் ஏறியிருக்கும் நாயும் அரசனையொத்ததாக ஏன் ஆகாது? (பற்றுக்கோட்டின் சிறப்பால் அரசனுக்கொப்

டும் என்பதற்கு ஈண்டு உரியசெயல்களில் நியமித்தலாகா தென்பது கருத்து. "காய-உக்கூசாடு" என்ற பாடம் இங்குக் கொள்ளப்பட்டது.

ரு௬எ. இது மின்சாரவாற்றலாற் கம்பிவழியாகவும் விண்வழியாகவும் செய்திகளைப் போக்குவரவு செய்தற்குரிய இக்காலத்துப்புதிய கருவிகளை(**Telegraph**) நினைவுறுத்தும்.

ரு௬அ. கணக்காயர் - உபாத்தியாயர்.

ரு௬௯. வித்தை - வேதசாத்திர அறநூல் புராணமுதலியன. கலை-நாட்டியம் சிற்ப முதலிய அறுபத்துநான்குமாம். இவற்றின் விரிவை ச-ஆம் அத்தியாயம், ருஎ-ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க. சுற்றிவரல்-உலாப்போதல்.

ருஎக. அரசனுக்குரிய ஊர்தியில் இருத்தலால் நாயும் அரசனுக்கொப்பாக மதிக்கப்படுமெனவும், முடி குடை முதலிய அரசிலக்கணங்களில்லாமையால் அரசனும் நாய்க்கு ஒப்பாக மதிக்கப்படுவானெனவுங் கூறியவாறும். இதனால் அரசன் என்றும் அரசியல் அடையாளங்களை யுடையனாய்ப் பரிசனங்கள் சூழத் தனக்குரிய ஊர்தியில் இவர்ந்து செல்லவேண்டுமென்பது போதரும்.

பாகவே மதிக்கப்படும்.) அங்ஙனமே முடி, குடை, ஊர்தி, அணிகலன், பரிசன முதலிய அரசிலக்கணங்க ளில்லாத அரசனும், புலவர்களால் உண்மையாகவே நாயோடொப்ப வைத்து எண்ணப்படுவான். ௩௭௧

ஆதலின் அரசன், தன்னோடொத்த குணஞ்செயல்கள் வாய்க்கப்பெற்ற தன்சுற்றத்தார், நண்பர், தன்மாட்டு அன்புடைய மற்றையார் ஆகிய இவர்களோடு நகரத்தில் உலாவச் செல்லல் வேண்டும். ஒருபொழுதும் தாழ்ந்தவர்கள் சூழச் செல்லலாகாது. ௩௭௨

எப்பொழுதும் பொய்யொழுக்கமுடையாரை இழிந்தாரெனவும், உண்மை யொழுக்கமுடையாரை உயர்ந்தாரெனவும் முறையே கொள்ளல் வேண்டும். இழிந்தார் நல்லோரினுஞ் சிறப்ப மேன்மைக் குணத்தை நன்கு வெளிப்படுத்திக் காட்டுவர். ௩௭௩

## ௩௫. யாண்டுதோறும் நாட்டைச் சுற்றிப்பார்த்தல்.

அரசன் ஆண்டுதோறும் சிற்றூர்களையும், பட்டினங்களையும், நாடுகளையும் நன்றாகத் தானே நேரிற்பார்த்தும், தன்னால் நியமனம் பெற்ற அதிகாரிகளால் குடிகளுள் யாவர் இன்புறுத்தப்பட்டனர்; யாவர் துன்புறுத்தப்பட்டன ரென்று அன்னார் நிலைகளை நேரிற்கண்டும், அந்நிகழ்ச்சிகளை உண்மையாக வுணர்ந்து உள்ளத்தமைத்துக் கொள்ளல் வேண்டும். அதிகாரிகள்பக்கலின்றிக் குடிகள்பால் நன்னோக்கமுடையனாதல் வேண்டும். ௩௭௪-௩௭௫

குடிகள் பலராற் குற்றங்கூறி வெறுக்கப்படும் அதிகாரியை அரசன் விலக்கிவிடல் வேண்டும். ஒருமுறை நீதிநெறியிற் றவறிய அமைச்சனைக் கண்டுபிடித்துத் தனிமையிற் றண்டித்தல்வேண்டும். மீண்டும் மீண்டுங் குற்றம்புரியும் அமைச்சனை வெளிப்படையாகத் தண்டித்து விலக்கிவிடல் வேண்டும். அறவழிபிழைத்தொழுகும் மற்றைச் சிற்றரசர்களுடைய அரசியலையும், பிற பொருள் முதலியவைகளையும் அரசன் கவர்ந்துகொள்ளலாம். ௩௭௬-௩௭௭

தோற்ற அரசர்களுடைய நாட்டில் எப்பொழுதும் நீதிமன்றம் அமைத்தல் வேண்டும். எல்லாப்பொருளையும் இழந்து தோல்வியெய்தினார்க்கு அவரவர் நிலைமைக்குத்தக்கவாறு வேதனங்கொடுத்து உதவல் வேண்டும். ௩௭௮

---

௩௭௩. தீயொழுக்கமுடையார், தம்மை நல்லோரையொப்ப மதிக்கும் வண்ணம் தம்பால் உயர்ந்தகுணங்கள் இருப்பனவாக உலகத்துக்கு வெளிப்படுத்துக் காட்டுவர்; அதுபற்றி அவரை உயர்ந்தவராக மதிக்கலாகாதென்பது கருத்து.

தன்மாட்டுப் பேரன்பும், கட்டழகும், அழகிய ஆடையும், இன்சொல்லும், உயர்ந்த அணிகலன்களும், சிறந்த கற்பொழுக்கமுமாகிய இவற்றை யுடைய இல்லாளோடு கூடி இன்புறல்வேண்டும். ௩௭௬

இரண்டு யாமம் வரை சயனிப்போன் மிக்க நலத்தையடைவான். தன் நிலையினின்றும் நீங்கலாகாது. நீதியினாற் பகைவர் கூட்டத்தை வெல்லல் வேண்டும். ௩௮௦

பற்களும் மயிர்களும் உகிர்களும் தமக்குரிய இடங்களினின்றும் இழிந்தக்கால் விளக்கம் எய்தா. அங்ஙனமே அரசனும் தன்னிலையி னின்றும் இழிந்தக்கால் விளக்கமுறான். அரசன் கடக்கமுடியாத கேடு நேர்ந்துழி, மலையரண் வாய்ந்த இடத்தை யடைதல் வேண்டும். ௩௮௧

அம் மலையரணுள் இருந்து, கள்வர் தொழில் மேற்கொண்டு மீண்டும் தன் நாட்டைப் பெறல் வேண்டும். அங்ஙனம் கள்வர் தொழில் மேற்கொண்டுள்ள அரசன், விவாகம் தானம் வேள்வி இவைகளின் பொருட்டு வைக்கப்பட்டன வல்லாத பிறர் பொருள்களில் எட்டிலொரு கூறு அவர் உணவிற்கு விட்டு எஞ்சியவற்றையும், கயவர்களுடைய பொருள் முழுதையும் எவ்வாற்றானும் கவர்ந்து கொள்ளலாம். எப்பொழுதும் ஓரே இடத்தில் இருத்தலாகாது. எவனிடத்தும் நம்பிக்கை வைத்தலாகாது. ௩௮௨-௩௮௩

எப்பொழுதும் விழிப்புடையனா யிருத்தல் வேண்டும். தன்னுயிருக்கு அழிவை நினைத்தலாகாது. தறுகட்செயலும், இடையறா முயற்சியும், தான் மேற்கொண்ட கள்வர் தொழிலில் வன்கண்மையும், பிறர்மனை நயவாமையும், குலகன்னிகளை வலிந்து பற்றாமையுமாகிய இக்குணஞ் செயல்களை யுடையனா யிருத்தல்வேண்டும். தன் நியமனம் பெற்ற அதிகாரிகள், புதல்வர்களைப்போல் பரிபாலிக்கப் பட்டவராயினும், ஓரோவமயம் பகைமை யெய்தவுங் கூடும். ௩௮௪-௩௮௫

முயற்சிக்குப் பயனின்றாதல் ஊழ்வலியானும். அதுபற்றி முயற்சி குற்றமுடையதாகாது. தன்முயற்சி யனைத்தும் எவ்வாற்றானும் பய

---

௩௮௧. இக்கருத்தை, "தலையி னிழிந்த மயிரனையர் மாந்தர், நிலையி னிழிந்தக் கடை" என்னுந் திருக்குறளிற் காண்க. உகிர் - நகம்.

௩௮௨. கள்வர்தொழில் மேற்கோடலாவது — பகைவர் கைப்பற்றிய நாட்டை மீண்டும்பெறுதற்குப் பிறர் காணாவாறு வேண்டியவை செய்தல். பிறர் பொருள்-நல்லோர் பொருள்.

னின்றிக் கழிதலைக் காணின், எஞ்சிய வாழ்நாளில் தவஞ்செய்து மேலுலகம் எய்தக்கடவன். ௩அசு

அரசர்க்குரிய காரியங்கள் ஈண்டுச் சுருக்கிக் கூறப்பட்டன. இவற்றின் விரிவை, இந்நூலின் மிச்சிராத்தியாயமாகிய நான்காம் அத்தியாயத்திற் கூறுவேன். அரசியற் காரியங்களை நிரூபித்துக் காட்டும் முதல் அத்தியாயம் இவ்வளவிற் கூறப்பட்டது. ௩அஎ

சுக்கிரநீதியில்

"அரசியற் காரிய நிரூபணம்" என்னும்

முதல் அத்தியாயம் முற்றிற்று.



௩அசு. இக்கருத்தை, "பொறியின்மை யார்க்கும் பழியன் றறிவறிந், தாள்வினை யின்மை பழி" என்னும் திருக்குறளிற் காண்க.

௩அஎ. நான்காம் அத்தியாயம், ஏழு பிரகரணங்களை யுடையதாய்ப் பலவகை அரசியற் காரியங்களையுங் கூறுதலால் அது மிச்சிராத்தியாயம் என்று கூறப்பட்டது.

# இரண்டாம் அத்தியாயம்.

(இளவரசன் முதலியோர் இலக்கணங்களுங் காரியங்களும்.)

---

## க. அரசனுக்கு நற்றுணையாகும் சிறப்பு.

மிகச்சிறிய காரியமெனினும் அதனைத் துணையின்றி ஒருவன் செய்யமுடியாது. அங்ஙனமாயின் மிகப்பெரிய அரசியற்காரியத்தைப் பற்றிக் கூறற்பாலது யாதுளது? க

அரசன் எல்லாவிச்சைகளிலுந் திறமையும் நல்ல சூழ்ச்சியறிவு முடையனு யிருப்பினும், அமைச்சர்களின்றித் தானொருவனுகவே தனித்திருந்து சூழ்ச்சிப்பொருளைப் பற்றி ஆராய்தல் கூடாது. உ

சிறந்த அறிவுள்ள அரசன், புரோகிதர் அமைச்சர் முதலிய பிரகிருதிகள் மன்றக்குழுவினர் மற்றை அதிகாரிகள் அவைக்களத் துள்ளாராகிய இவர்களுடைய நல்ல கொள்கையிலேயே எப்பொழுதும் நிற்றல் வேண்டும். தன் கருத்தின்வழி ஒருபொழுதும் ஒழுகுதல் கூடாது. ௩

அரசன் தன் கருத்தின்வழி ஒழுகுவானுயின் தன் நாட்டினராலும் பிரகிருதிகளாலும் அப்பொழுதே வேறுபடுக்கப்படுவான்; அதனுல் அவன் துன்பத்திற்கே யாளாவான். ௪

பெரியோருடைய உபதேச மொழிகளாலும், அனுபவங்களாலும், ஆகமங்களாலும், அநுமானத்தாலும் ஒவ்வொரு மனிதனிடத்தும் அறிவுவிளக்கம் வெவ்வேறு இயற்கையுடையதாகக் காணப்படும். ஒப்புமைகளாலும், ஆராய்ச்சியில்லாத செயல்களாலும், வஞ்சகங்களாலும், ஆற்றல்களாலும் உண்டாகும் மனிதரின் வழக்க ஒழுக்கங்களின் பற்பல வேறுபாடும், பெருமை சிறுமைகளானும் ஏற்றத் தாழ்வும் காட்சியளவையா லறியப்படும். ரு-சு

---

௩. மன்றக்குழுவினர்: க-ஆம் அத்தியாயம் உருக-ஆம் சுலோகக் குறிப்பிற் காண்க.

ரு-சு. இவ்விரண்டு சுலோகங்களாலும் முறையே 'மனிதர்களின் அறிவுவிளக்கமும் வழக்க ஒழுக்கங்களும் பல் வேறு வகையினவா மென்பது போதரும்.

அவ் வெல்லாவற்றையும் ஒரு மனிதன் தனிமையாக அறிந்து கொள்ளல் இயலாததாகலின், அரசன் தன் அரசியல் வளர்ச்சியை தற்பொருட்டுத் தக்க துணைவர்களை ஆராய்ந்து அமைத்துக்கொள் ளல் வேண்டும். அத் துணைவராவார்: நற்குடிப்பிறப்பு, சிறந்தகுண வொழுக்கங்கள், வீரம், தலைவனிடத்தன்பு, இன்சொற்கூறல், இதோபதேசஞ் செய்தல், துன்பம் பொறுத்தல், எப்பொழுதும் அறத்திற் பற்றுடைமை, தீநெறிக்கட்செல்லும் அரசனையும் அறிவி னாற் றிருத்தும் ஆற்றல், தூய்மை, அழுக்காறின்மை, காமமின்மை, வெகுளியின்மை, உலோபமின்மை, மடியின்மையாகிய இவைகளை யுடையராவர். ௭-௯

## ௨. அரசனுக்குத் தீத்துணையாலுங் கேடு.

அரசன் தீயதுணையால் தன் கடமைகளையும் அரசியலையும் இழந்துவிடுவான். திதிபுதல்வர்களாகிய அசுரர்கள் தீயதுணைவரா லும் தீச்செயல்களாலும் அழிவெய்தினர். ௧௦

துரியோதனன் முதலிய அரசர்கள் வீரமும் ஆற்றலும் மிகவுடை யராயிருந்தும், தீயதுணைவர்களாற் கேடெய்தினர். ஆதலின் அரசன் "யானேஎல்லாவற்றையும் அறிந்துளேன்" என்னுஞ் செருக் கொழிந்து நல்ல துணை வர்களையுடையனா யிருத்தல் வேண்டும். ௧௧

## ௩. இளவரசுக்குரியார்.

இளவரசனும் அமைச்சர்களும் அரசனுக்கு, முறையே வலம் இடமாகிய பக்கங்களிலுள்ள தோள்களும், கண்களும், செவிகளு மாக எண்ணப்படுவர். ௧௨

அவ் விளவரசனையும் அமைச்சரையு மில்லாத அரசன் தோள், செவி, கண் இவையில்லாதவனாவான். ஆதலின், அவ்விருபகுதியினை ரையும் ஆராய்ந்தமைத்தல் வேண்டும். இன்றேற் பெருங்கேடு விளை யும். ௧௩

௧௧. தீயதுணைவர்கள் - சகுனிமுதலியோர்.

௧௨. இளவரசன் அரசனுக்கு வலப்பக்கத்துள்ள தோளும், கண்ணும், செவியுமாவன் எனவும், அமைச்சர் இடப்பக்கத்துள்ள தோளும், கண்ணும், செவியுமாவர் எனவும் கொள்க.

எல்லா அரசியற்காரியங்களையும் எப்பொழுதும் மடியின்றிச் செய்தற்குரிய ஆற்றலுடையனாய்த் தன் தருமபத்தினியிடம் பிறந்த ஔரசபுத்திரனை இளவரசனாகச் செய்தல் வேண்டும். கச

இன்றேல் அத்தகைய ஆற்றல் வாய்ந்த தன் தம்பியையாதல், ஆண்டினால் தனக்கு இளைய சிறியதந்தையையாதல், தன் தமையன் மகனையாதல், தத்தபுத்திரனையாதல், அபிமானபுத்திரனையாதல் இளவரசுக்குரியனாகச் செய்யலாம். கரு

இங்குக் கூறப்பட்டவர்களும் இல்லையாயின், தௌகித்திரனையாதல், தனக்குப் பிரியமான மற்றொருவனையாதல் நியமனஞ் செய்யலாம். தனக்கு நலமுண்டாதற்பொருட்டு இவ் விளவரசர்களுக்கு மனத்தாலுங் கேடு நினைத்தலாகாது. கசா

தங்கடமையிற்பற்றும், வீரமும், அன்பும், நீதியுமுடைய இராசகுமாரர்கள் இளைஞராக விருப்பினும், அன்னாரை மிக்க முயற்சியோடு எப்பொழுதுங் காத்தல் வேண்டும். கஎ

அவ் விளவரசர் காக்கப்பட்டிருப்பினும், அரசன்பால் எங்ஙனமாயினும் புரைநெறி கண்டு அவனையழிக்கும் இயல்புடையராவரெனின், காக்கப்பட்டிலரேல், அரசன் செல்வங்களில் வேட்கையுடையராய், அவனை யழித்துவிடக் கருதுவரென்பது கூறுமலே யமையும். கஅ

தோட்டியால் அடக்கவொண்ணாதனவும், மதக்களிப்பு மிக்கனவுமாகிய களிறுகளை யொத்த அரசிளங்குமரர், சிங்கம் யானையைக் கொல்லுதல் போலத் தம்மைக்காக்கும் அரசனை விரைந்து கொல்லும் இயல்பினராவர். கசு

---

கச. ஔரசபுத்திரன் - ஒருவனுக்கு விதிப்படி மணந்த மனைவியிடத்துப் பிறந்த மகன்.

கரு. தத்தபுத்திரன் - புத்திரனில்லாமல் வருந்தும் ஒருவனுக்குத் தாய் தந்தையிருவராலும்மனமுவந்து கொடுக்கப்பட்ட புதல்வன். அபிமானபுத்திரன்-புதல்வனில்லாத ஒருவன் பிறராற் பெறாமல், தானே அன்பினால் வைத்து வளர்க்கப்படுபவன். இவனைக் கிருத்திரிமபுத்திரன் என்று மனு கூறுவர். (மநு, அத் - கூ. சு - கசு - கூ)

கசா. தௌகித்திரன் - புதல்வியின்மகன்.

கஅ. புரைநெறி - பிழைவழி.

அவ் வரசிளங்குமரர், தந்தைமாரையும் உடன்பிறந்தாரையுங் கொல்லத்துணிவரெனின், மற்றையோரைப்பற்றிச் சொல்லவேண்டுவதென்? அறிவில்லாத பாலனும் தலைமையை விரும்புவானாயின், காளைப்பருவமுடையாரைப்பற்றிக் கூறற்பாலது யாதுளது? ௨0

அரசன் எப்பொழுதும் தானே தன் அன்பிற்குரிய வினைசெய்வோர்களால் அவ்வரசிளங்குமரர் மனக்கருத்துக்களைத் திறமையானறிந்து, இடையறாமல் அவரைத் தன் அணிமையில் வைத்துக் காக்கக் கடவன். ௨க

அரசன் அமைச்சர் முதலியவர்களைக்கொண்டு, தன் புதல்வர்களை நல்ல நீதிநூல்களிலும் வில்வித்தைகளிலும் திறமையும், எப்பொழுதும் இடுக்கணழியாமையும், சொல்லானும் தண்டத்தானும் ஒறுத்தலில் அனுபவமும், வீரத்தோடு போருஞற்றுவதிற் பற்றும், எல்லாக் கலைகளிலும் வித்தைகளிலுந் தேர்ச்சியும், காரியத்திற் சுருசுருப்பும், நல்லவணக்கமுமாகிய இவற்றையுடையராயிருக்கும்படி செய்வித்தல் வேண்டும். ௨௨-௨௩

அரசன் தன் புதல்வர்களை நல்ல ஆடை அணிகலன்களால் அணிசெய்து, அழகிய விளையாட்டுப் பொருள்களால் மகிழ்வித்து, இருக்கை யீதல் முதலியவைகளாற் சிறப்பித்து, இனிய உண்டிகளால் வளர்த்து, இளவரசுக்குரியவர்களாகச் செய்து அப்பதவியில் முடிசூட்டல் வேண்டும். பயிற்சி செய்விக்கப்படாத புதல்வர்களையுடைய குலம் விரைந்து அழிவெய்தும். ௨௪-௨௫

### ௪. ஒழுக்கக்கேடுடைய புதல்வர் முதலியோரை நடத்துமுறை.

இராசகுமாரன் மிக்க தீயொழுக்கமுடையனாயினும், அவனை விலக்குதல் கூடாது. அங்ஙனம் விலக்கப்படின், அதனாற்றுன்புற்ற அவன், பகைவரைச் சார்ந்து தந்தையைக் கொல்லத் துணிவான். ௨௬

காம முதலிய தீயொழுக்கம் மேற்கொண்டிருக்கும் புதல்வனை, அவ்வொழுக்கமுடைய பிறரைக் கொண்டு துன்புறுத்தல் வேண்டும். மதச் செருக்கு மிக்க யானையைப்போற் கட்டுக்கு அடங்காப் புதல்வனை, இதத்தால் அடக்கி வயப்படுத்தல் வேண்டும். ௨௭

௨௨ - ௨௩. இடுக்கணழியாமை-துன்பம் வந்துழி மனங் கலங்காமை. கலைகள் - ஓவியம் சிற்பம் முதலியன. வித்தைகள் - வேதவேதாங்க முதலியன.

௨௭. பிறரைக் கொண்டு துன்புறுத்தலாவது - அத்தீயொழுக்கமுடையார் தம் குழுவில் இவனைப் பெருமைப்படுத்தாவாறு செய்தல்.

மற்றைஞாதிகள் தீயொழுக்க முடையராயிருப்பின், அவர்களை முயன்று புலிமுதலியவைகளாலும், பகைவர்களாலும், வஞ்சகச் செயல்களாலும் நாட்டின் நலங்குறித்துக் கொன்றுவிடலாம். உஅ

அங்ஙனங் கொலைசெய் தொழிக்காவிட்டால், அத்தாயத்தார் அரசனுக்குங் குடிகளுக்குங் கேடு சூழ்பவராவர். ஆதலின், ஞாதிகள் தம் சிறந்த குணங்களால் வேந்தனை எப்பொழுதும் மகிழ்வித்தல் வேண்டும். இன்றேல் அவர்கள் அரசன்பாற் பெறும் உதவியினின்றும் உயிர்வாழ்க்கையினின்றும் விலக்கப்படுபவராவர். உகூ இ

வேந்தன், சபிண்டகரல்லாத வேற்றுக் குடியிற்பிறந்த தத்தபுத்திரன் முதலியவர்களைத் தன் புதல்வர்களாக நெஞ்சத்தாலும் நினைத்தலாகாது; அவர்கள் பொருள் மிக்க மனிதனை நோக்கித் தத்தகத் தன்மையை விரும்புவராதலின். ௩௧

மனிதர்க்கு ஆண்மகனை யொப்பப் பெண்மகளும் தம் ஒவ்வொரு றுப்புக்களினின்றும் தோன்றுகின்றளாதலின், தம் குலத்திற் பிறந்த பெண்களுடைய புதல்வர், முற்கூறிய மற்றைத் தத்த புத்திரர்களினுஞ் சிறந்தவராவர். ௩௨

ஆதலின் பிண்டதானத்தில், புத்திரனுக்கும் தௌகித்திரனுக்கும் பேதமின்றாம். அரசன், அத்தௌகித்திரனும் இல்லையாயின், நிலத்தையுங் குடிகளையுங் காத்தற் பொருட்டுத் தத்த புத்திரனைப் பேணல் வேண்டும். ௩௩

வேந்தன் மிக்க பொருளுடையனாயின், குடிகளைக் காத்தற் பொருட்டு மற்றொருவனுக்குப் பிறந்த மகனைத் தன் மகனாக எண்ணி, அத் தத்தபுத்திரனுக்கு எல்லாவற்றையுங் கொடுத்தல் வேண்டும். பொருளிலனாயின் அங்ஙனஞ் செய்தல் வேண்டா. ௩௪

இவ்வுலகத்திற் பொருளைத் (தத்த புத்திரர்க்கேனுங் காத்து வைப்பதன்றி) தானம் தேவ காரியம் இவற்றிற்கு உபயோகப்படுத்த எண்ணார். இதன்கண் வியப்பு யாதுளது? ஒருவன் இளவரசனாகியும் வேறுபாடு எய்தல் தக்கதன்று. ௩௫.

---

௩௦. சபிண்டகன் - ஏழுதலைமுறைக் குட்பட்ட சந்ததியிற் றோன்றினவன். தத்தகத்தன்மை - தத்தபுத்திரனாந்தன்மை. அதனைப் பொருள் கருதி விரும்புவாரைப் புதல்வராகக் கோடல் நலமின்றென்பது கருத்து.

௩௩. பிண்டம் - பிதிர்க்களை நோக்கி யிடும் சோற்றுத்திரளை.

வேந்தன் தன் தந்தை, குரு, தமையன், தம்பி, தமக்கை, தங்கை, தன்மாட்டன்புடைய மற்றை நண்பராகிய இவர்களுள், எவர்க்கேனும் தன் பெருஞ்செல்வத்தைக் கொடுத்தலாகாது. ௩௬

௫. இளவரசர் கடமை.

இராச குமாரர் நாட்டிலுள்ள உயர்குடிக்கட் பிறந்தாரை அவமதித்தலுமாகாது; துன்புறுத்தலுமாகாது. பெருஞ் செல்வத்தை யெய்தினும், தந்தையின் ஆணைவழி ஒழுகல் வேண்டும். ௩௭

புதல்வனுக்குத் தந்தையின் ஆணையே சிறந்த அணியென்று கூறப்படும். ஆகலானன்றே, (தந்தையின் சொற்படி) பரசுராமன் தாயைக்கொன்றான். இராமன் வனத்தையடைந்தான். ௩௮

பரசுராமன் இராமனாகிய இவ்விருவரும், தந்தையர் தவ வன்மையால், முறையே தாயையும் அரசியலையும் மீண்டும் எய்தப் பெற்றனர். ஒன்னார்த் தெறலும் உவந்தாரை ஆக்கலுமாகிய ஆற்றல் மிக்க தந்தையினது ஆணை மிகச் சிறந்ததாகும். ௩௯

தன் னுடன்பிறந்தாரெல்லாரிடத்தும், தன் செல்வப்பெருக்கையாதல் அதிகாரத்தையாதல் காட்டலாகாது. தாயபாகத்திற்குரிய தருமபுத்திரன் முதலியோர்களை அவமதித்தமையால் துரியோதனன் அழிவெய்தினான். ௪0

இந் நிலவுலகத்தில், இராசகுமாரர் சிலர் உயர்ந்த நிலைமை யெய்தியும், தந்தையின் ஆணையைக் கடந்தமையால், அந் நிலையினின்றும் இழிந்து அடிமைபோலாயினர். இந்நிகழ்ச்சிக்கு, யயாதியின் புதல்

---

௩௬. பெருஞ்செல்வத்தைக் கொடுத்துவிடிற் பின் அப்பொருட் குறைவால் தலைமையின் சிறப்புக் குன்றிவிடுமென்பது கருத்து.

௩௯. தெறல் - சபித்தல். ஆக்கல் - அநுக்கிரகித்தல். பரசுராமன், தம் தாய் இரேணுகை நெஞ்சத்தாற் பரபுருடனை நினைந்த குற்றத்திற்குக் கழுவாயாக, அவளைக் கொன்றுவிடும் வண்ணம் தந்தை சமதக்கினி முனிவர் இட்ட கட்டளையைத் தம் உடன்பிறந்தார் மறுத்துவிட, தாம் நிறைவேற்றினர்; பின் தந்தையை வேண்டித் தாயை உயிர்ப்பித்தனர். இராமபிரான், தந்தை சொல் ஏற்று நாட்டைத்துறந்து காடெய்திப் பின் மீண்டும் அரசியலை யெய்தினர்.

௪0. பாண்டவர்க்குத் தாயபாகங் கொடுக்க மறுத்தமையால் துரியோதனன் கேடெய்தினனென்பது பிரசித்தம்.

௪௧-௪௨. யயாதியின் புதல்வர் - யது, துருவசு, திருகியு, அநு, பூரு என்னும் ஐவராவர். யயாதி சுக்கிரரால் முதுமைத்துன்பம் எய்தச் சபிக்கப்பட்டுப் பின் அதனை ஏற்று இளமைதரும்படி தன் புதல்வர்களைத் தனித்தனிவேண்ட,

வர்களும் விசுவாமித்திரமுனிவரின் புதல்வர்களும் எடுத்துக்காட் டாவர். ஆதலின், புதல்வர் மன மொழி மெய்களால் எப்பொழுதும் தந்தையின்பால் வணங்கி யொழுகுவதிற் பற்றுடையரா யிருத்தல் வேண்டும். ௪௧-௪௨

புதல்வன் எச்செயல் தந்தைக்கு மகிழ்ச்சிதரத்தக்கதோ அச் செயலையே உறுதியாகச் செய்தல் வேண்டும். எச்செயல் தந்தைக்குச் சிறிதேனும் வருத்தந்தரத்தக்கதோ, அதனைச் செய்தலாகாது. ௪௩

தந்தை எவன்பால்அன்புபூண்டுளானோ, அவனிடத்துத் தானும் அன்புடையனா யொழுகுதல் வேண்டும். தந்தை எவன்பால் வெறுப்பு மேற்கொண்டுளானோ, அவனைத் தானும் வெறுத்தொதுக்கல் வேண் டும். ௪௪

தந்தைக்கு உடன்பாடில்லாததும் முரணானவுள்ளதுமாகிய காரி யத்தைத் தான் மேற்கொள்ளலாகாது. மறைவிற்கண்டு கூறும் ஒற்றர், சூசகராகிய இவர்களுடைய பிழைச்சொற்களால், தந்தை மாறுபாட் டறிவுடையனாங்கால், அமைச்சர் முதலியோர்களின் கருத்துக்கி யைந்ததை ஆராய்ந்து செய்து, பின்னர்த் தனிமையில் வைத்துத் தந்தையை யறிவுறுத்து மகிழ்வித்தல் வேண்டும். அங்ஙனம் செய் தும் தந்தை மகிழ்ந்திலனாயின், அச்சூசகர்களை எப்பொழுதும் பெருந் தண்டத்தால் ஒறுத்தல் வேண்டும். ௪௫-௪௬

இளவரசன் எப்பொழுதும் அமைச்சர் முதலிய தலைமையதிகா ரிகளின் வஞ்சமனத்தை யறிந்துகொள்ளல் வேண்டும்; நாடோறும் காலையில், தந்தை தாய் ஆசிரியனாகிய இவர்களை வணங்கி, பின்னர்த் தன்னால் எவ்வெக்காரியஞ் செய்யப்பட்டனவோ, அவற்றை நாடோ

---

அவர்களுள், பூருவொழிந்த மற்றை நால்வரும் மறுத்துவிட்டனர். அதனால், அந்நான்கு புதல்வர்களும், இராச்சிய சுகமிழந்து பாவிகளாய்ப் பலவகைத் துன்பங்களையும் அடையுமாறு அவ் யயாதியாற் சபிக்கப்பட்டனர். அம் பரீடன் நரமேதயாகஞ் செய்யத்தொடங்கி விசுவாமித்திரரின் மருகனும் இருசிகன் புதல்வனுமாகிய சுனச்சேபனை விலைக்கு வாங்கிச் செல்லுங்கால், அச் சுனச்சேபன் விசுவாமித்திரரிடம் குறையிரப்ப, அவர் அவனுக்குப் பிரதியாகப் போம்படி தம்புதல்வர் நால்வர்க்குங் கட்டளையிட்டும், அப்புதல்வர் உடன்படாமையால், அவர்களெல்லோரையும் வேடராகும்படி சபித்தனர்.

௪௫. சூசகர்-பிறர்குற்றத்தை யாராய்ந்து அரசனுக்கு அறிவிப்போர். ௪-ஆம் அத்தியாயம், ரு-ஆம் பிரகரணம், எஉ-ஆம் சுலோகத்திற்காண்க.

றும் அரசனுக்கு அறிவித்தல் வேண்டும். இங்ஙனம் குடும்ப விரோதமின்றிக் குடும்பத்தில் இருத்தல் வேண்டும். சள-சஅ

வள்ளன்மையும் வாய்மையும் வாய்ந்த இளவரசன், கல்வி, செயல் குணம் இவற்றாற் குடிகளை இன்புறுத்தி, எல்லாமக்களையும் மகிழ்வித்து, எளிதில் தன்வயப்படுத்துக்கொள்ளல் வேண்டும். சகூ

அரசிளங்குமரன் முற்பக்கத்துத் திங்களஞ்செல்வனைப்போல் நாளுளும் மெல்ல மெல்ல வளர்ச்சியெய்தல் வேண்டும். அவன் பகைமையின்றி அரசியலை யெய்தினுயினும், தக்க துணைவர்களையும் அமைச்சர்களையு முடையனுயிருத்தல் வேண்டும். இங்ஙனம் ஒழுகுவோன் நெடுங்காலம் இந் நிலவுலகத்தை யனுபவிப்பான். இளவரசனுக்கு நலம் பயக்குங் காரியங்கள் இங்குச் சுருக்கமாகக் கூறப்பட்டன. ருO-ருக

## ச. அமைச்சர் முதலியோரை ஆராய்ந்தமைத்தல்.

இனி அமைச்சர் முதலியவர்களின் செயல்களும், இயற்கையின் வன்மை மென்மைகள், சிறந்த எடுத்துக்காட்டாக எண்ணப்படுந் தன்மை, குலநலம், சொல்வன்மையாகிய இவை முதலியவற்ருேடு கூடிய அவர்தம் இலக்கணங்களும் சுருக்கிக் கூறப்படும். ருஉ

சோதனை செய்வோர் பொன்னை உருக்கி ஆராய்வர். அங்ஙனமே அமைச்சர் முதலியோரைச் செயல், உடன் பழகுதல், குணம், ஒழுக்கம், குலப்பிறப்பு முதலியவற்ருல் எப்பொழுதும் ஆராய்ந்து தெளிதல் வேண்டும். தெளிந்தபின் நம்புதற்குரியாரை நம்புதல் வேண்டும். சாதியையும் குலத்தையும் மாத்திரம் ஆராய்தலாகாது. ருங-ருச

ஒருவனுடைய செயல் ஒழுக்கம் அறிவு முதலிய குணங்களாகிய இவைகளே பாராட்டப்படுவனவாம். உயர்ந்த சாதியுடைமை நற்குடிப்பிறப்பு ஆகிய இவற்ருல் மாத்திரம் ஒருவன் சிறப்படையமாட்டான். விவாகத்திலும் உணவிலுமே என்றும் சாதி குலங்களை ஆராய்தல் வேண்டும். ருரு

அமைச்சர் முதலிய அரசியற்ருெழில் புரிவோர்க்குரிய இலக்

---

ருO. வளர்ச்சி - ஈண்டு நற்குணம் நற்செயல் அதிகாரங்களின் பெருக்கம்.

ருச. சாதியையுங் குலத்தையுமாத்திரம் ஆராய்தலாகாதென்றதனுல் குணஞ் செயல்களையே முக்கியமாகச் சோதித்தறிய வேண்டுமென்பது போதரும்.

கணங்களாவன:—உண்மையுரைத்தல், உயர்குணமுடைமை, புகழு டைமை, உயர்குடிப்பிறப்பு, பொருளுடைமை, நல்லொழுக்கம், நற் செயல், மடியின்மை, தங்காரியத்திற்குரிய முயர்சியினும் நான்கு மடங்கு மிகுதியான மனமொழிமெய் முயற்சிகளால் தலைவன் காரியத் தைச் செய்தல், வேதனத்தளவின் மகிழ்தல், இன்சொற் கூறல், காரி யத்திறமை, தூய்மை, அசைவின்மை, பிறர்க்குதவிசெய்தலில் விருப்பு, பிறர்க்குக் கேடுவிளைத்தலில் வெறுப்பு, தலைவனுக்குக் குற்ற மிழைத்தோன் தந்தையாயினும் மகனாயினும் அவனை வெளிப்படுத் திக் காட்டல், தலைவன் நெறி பிழைத் தொழுகுவானாயின் அவனை மிக முயன்று தடுத்து நன்னெறிக்கட் செல்லும் வண்ணம் அறி வுறுத்தல், அவன் சொல்லைத் தடுத்துரையாமை, அவன்பாலுள்ள குறைகளை வெளிப்படுத்தாமை, நற்செயற்கண் விரைதல், தீச்செயற் கண் தாழ்த்தல், தலைவனுடைய மனைவிமக்கள் நண்பராகிய இவர் கள்பால் ஒருபொழுதும் புரைகாணாமை, தலைவனிடத்துப்போல அவன் மனைவி மக்கள் சுற்றத்தாரிடத்தும் மதிப்பு மேற்கோடல், தற்புகழ்ச்சியின்மை, பிறரை அவமதிக்க விரும்பாமை, அழுக்கா றின்மை, பிறர் பழி தூற்றாமை, பிறர் அதிகாரத்தை விரும்பாமை, அவாவின்மை,எப்பொழுதும் மலர்ச்சியுடைமை,தலைவனாற்றரப்பட்ட ஆடை அணிகலன்களைத் தரித்து எப்பொழுதும் அவன் முன்னி ருத்தல், வேதனத்திற்கு ஒப்பச் செலவிடல், பொறியடக்கம், அரு ளுடைமை, அஞ்சாமை, தலைவனது தகுதியில்லாச்செயலைத் தனிமை யில் எடுத்துக்காட்டி யறிவுறுத்தல் ஆகிய இக்குணஞ்செயல்களாம். இவற்றையுடையார் சிறந்தவராவர். (௫சு-சுச)

இங்குக் கூறப்பட்ட குணஞ்செயல்களுக்கு மாறான குணஞ் செயல்களையுடைய அமைச்சர் முதலியோர் பழிக்கப்படுவர். வேத னம் பெற்று அரசியற் றொழில்புரிவோருள் மிகக் குறைந்த வேத னம் பெறுவோர், அடிக்கடி குற்றம் புரிந்து தண்டத்தாற் றுன்புறுத் தப்பட்டார், வஞ்சகர், அச்சமுடையார், பிறர் பொருளில் அவாவு டையார், தலைவன் முன்னிலையிற் புகழ்ந்துரைப்போர், கள்ளுண்டு களிப்போர், காமம் வேட்டையாடல் முதலிய குற்றமுடையார், நோய்கோட்பட்டார், கைக்கூலி விருப்ப முடையார், சூதாடுவார், மறுமைமுதலியன இல்லையென்பார், இடம்பமுடையார், பொய் கூறுவார், அழுக்காறுடையார், பிறரை அவமதிப்பார், கடுஞ்சொற் களாற் பிறர் நெஞ்சைப் பிளப்பார், பகைவனுடைய நண்பர், பகை

வனுடைய சேவகர், முன்னைப்பகைமைத் தொடர்ச்சியுடையார், சின முடையார், ஆராயாது காரியம் புரிவார், அறமில்லார் ஆகிய இவர்கள் நல்ல சேவர்களாகமாட்டார்கள். அமைச்சர்முதலியோரிலக்கணங்களின் நன்றுதீதுகள் சுருக்கமாக இங்குக் கூறப்பட்டன. சுடு-சுஅ

## எ. புரோகிதன் முதலியோரின் சிறப்பு முறை.

இனி, புரோகிதன் முதலியோரின் இலக்கணங்கள் சுருக்கிக் கூறப்படும். புரோகிதன், பிரதிநிதி, பிரதானன், சசிவன், மந்திரி, நீதியதிபன், பண்டிதன், சுமந்திரன், அமாத்தியன், தூதன் ஆகிய இப்பதின்மரும் அரசனுடைய பிரகிருதிகளாவார். சுகூ-எ0

தூதனை இறுதியாகவுடைய புரோகிதன் முதலிய பதின்மரும் கீழுள்ளார்க்குரிய அளவினின்றும் மேலுள்ளார் முறையே பத்திலொருகூறு மிகுதியான வேதனம் பெறுபவராவர். அரசன் எப்பொழுதும் சுமந்திரன், பண்டிதன், மந்திரி, பிரதானன், சசிவன், அமாத்தியன், நீதியதிபன், பிரதிநிதி யாகிய இவ்வெட்டுப் பிரகிருதிகளையுடையனுவானென்றும் சில அறிவுடையோர் கூறுவர். எக-எஉ

அக்கொள்கைப்படி அரசனுடைய பிரகிருதிகளாகிய இவ்வெண்மரும், எப்பொழுதும் ஒத்த அளவினையுடைய வேதனம் பெறுபவராவர். பிறருடைய இங்கிதம் ஆகாரங்களின் உண்மையை

---

சுடு-சுஅ. மிகக் குறைந்தவேதனம் பெறுவோர் கைக்கூலி பெற விரும்புவாராதலின், அவரை உயர்ந்த காரிய நிருவாகங்களில் நியமிக்கலாகாதென்பது கருத்து.

எ0. பிரகிருதிகள் - அரசனிடத்து வேதனம் பெற்று அரசியற்றொழில் புரிவோருள் தலைவராவர். இவரைப் "பகுதிகள்" என்ப திருக்குறள் ஆசிரியர்.

எக-எஉ. புரோகிதன் முதலிய பதின்மரும் முறையே பத்திலொருகூறு அதிகவேதனம் பெறுதலாவது:— தூதனது வேதனத்தினின்றும் அமாத்தியனது வேதனம் பத்திலொருகூறு மிகுதியாக விருத்தல் வேண்டும். அமாத்தியனது வேதனத்தினின்றும் சுமந்திரனது வேதனம் பத்திலொருகூறு மிகுதியாகவிருத்தல் வேண்டும். இங்ஙனமே மற்றவர்க்கும் முறையே பத்திலொருகூறு விழுக்காடு கணக்கிட்டுக்கொள்க. அஃதாவது, தூதனுக்கு நூறு பொன் வேதனமாயின், அமாத்தியனுக்கு நூற்றுப்பத்துப் பொன் வேதனமாதல் வேண்டும். பிறவும் இவ்வாறு உணர்க.

எங. இங்கிதம்-குறிப்பால் நிகழும் உறுப்பின் றொழில். ஆகாரம் - குறிப்பின் றிநிகழும் வேறுபாடு. இச்சுலோகங்களின் கருத்துக்கள் வேறுசிலர்கொள்கை

யறியுந்திறன் வாய்ந்த தூதன், அரசனுக்கும் பிரகிருதிகளுக்கும் உடனிருந்து துணைசெய்பவனாவானென்று கருதப்படுவான். ௭௩

புரோகிதன் அரசனது நாட்டை இடையூறணுகா வண்ணம் தாங்குவோனாதலின், பிரதிநிதிமுதலிய எல்லோரினும் சிறந்தவனாய், முதற்கண் வைத்து எண்ணப்படுவான். அவனுக்குப் பின் பிரதிநிதியும், அவனுக்குப்பின் பிரதானனும், அவனுக்குப் பின் சசிவனும், அவனுக்குப்பின் மந்திரியும், அவனுக்குப் பின் நீதியதிபனும், அவனுக்குப் பின் பண்டிதனும், அவனுக்குப் பின் சுமந்திரனும், அவனுக்குப் பின் அமாத்தியனும், அவனுக்குப் பின் தூதனுமாக இவர் முறைப்படுத்துக் கூறப்படுவர். இவர்கள் பின்னுள்ளவரை நோக்க முன்னுள்ளவர் முறையே பதவியிற் சிறந்தவராவர். ௭௪-௭௭

அ. புரோகிதன் முதலியோர்களின் இலக்கணங்களும் காரியங்களும்.

மந்திராநுட்டானம் புரிதல், வேதங்களெல்லாவற்றையும் ஓதியுணர்தல், கன்மங்களை விரைந்து செய்யும் ஆற்றல், பொறியடக்கம், சினமின்மை, உலோப மோகங்களின்மை, வேதாங்கங்களான ஆறு சாத்திரங்களையும் அங்கங்களோடுங் கூடிய தநுர்வேதத்தையும் அறநூலையும் பொருணூலையும் பயின்றறிதல், தன் சினத்திற்கு அஞ்சி அரசனும் தருமநீதிகளிற் பற்றுடையனாம்படி செய்தல், நீதி நூற் பயிற்சி, அம்பு வாள் முதலிய படைக்கலங்களைப் பற்றிய நூற்பயிற்சி, படைகளை அணிவகுக்குந்திறமை, சாபாநுக்கிரகவன்மை ஆகிய இவ்வெல்லாம் அமையப்பெற்றவன் புரோகிதனாவான். அவனே ஆசிரியனுமாவான். ௭௮-௮0

முற்கூறப்பட்ட பிரகிருதிகளின் நல்ல சூழ்ச்சியின்றேல், அரசியல் நிச்சயமாக அழிவெய்தும். அரசன் தீநெறிக்கட் சேறலில் தடையுமின்றாம். ஆதலின் அப் பிரகிருதிகள் நல்ல சூழ்ச்சியறிவு உடையவர்களாக இருத்தல் வேண்டும். ௮௧

அரசன் அஞ்சி நடத்தற்குரிய தகுதியில்லாத புரோகிதன் முதலியவர்களால் அரசியல் எங்ஙனம் வளர்ச்சியடையும்? அத்தகைய பிரகிருதிகள், ஆடை அணிகலன்கள் முதலிய[illegible]ல் அணிசெய்யப்பட்ட மகளிரை யொப்பர். ௮௨

யாகக்கூறப்பட்டன வாதலின், பிரகிருதிகள் பதின்மர் என்பதனோடு முரணாமை யுணர்க.

நாடு, குடி, படை, பொருள், நல்ல அரசியல் ஆகிய இவை வளர்ச்சியெய்தற்கும், பகை கெடுதற்குமுரிய சூழ்ச்சி அமையப்பெறாத அமைச்சர் முதலியோர்களால் வரக்கடவ பயன் யாதுளது? அ௬

செய்யத்தக்கன இன்ன தகாதன இன்னவென்று நன்றாக அழுந்தி ஆராயும் அறிவுடையோன் பிரதிநிதி யென்று சொல்லப்படுவான். அரசியற் காரியம் எல்லாவற்றையும் பார்ப்போன் பிரதானனாவான். போர்க்குரிய படையியல்பு அறிந்தோன் சசிவனாவான். அ௭

நீதிநூல் ஆராய்ச்சியிலும், அதன்வழி யொழுகுதலிலும் திறமை வாய்ந்தவன் மந்திரியாவான். அறத்தின் உண்மையை யறிந்தவன் பண்டிதனாவான். எப்பொழுதும் உலகியலையும், நான்மறையையும், நீதியையும் அறிந்தவன் நீதிபதியாவான். அ௮

காலம், இடங்களை நன்றாக அறிபவன் அமாத்தியன் என்று கூறப்படுவான். பொருளின் வரவு செலவுத் தொழிலில் நல்ல பயிற்சியுடையவன் சுமந்திரனாவான். அ௯

பிறருடைய இங்கிதம் ஆகாரம் செயல்களையறிதல், மறவியின்மை, காலம் இடம் அறிந்து செய்தல், சந்தி விக்கிரக முதலிய ஆறு குணங்களையுமாராய்ந்தறிதல், சொல்வன்மை, அஞ்சாமையாகிய இவற்றையுடையோன் தூதன் என்று கூறப்படுவான். அ௰

பிரதிநிதி, ஒருசெயல் தீயதெனினும், அது தாழ்த்தலின்றி எவ்வமயஞ் செய்தற்குரிமையுடையதோ அவ்வமயம் அதனையும், ஒரு செயல் நல்லதெனினும், அஃது எவ்வமயம் செய்தற்குரிமையில்லாததோ அவ்வமயம் அதனையும், தகுதி தகுதியின்மை நோக்கி அரசனுக்கு அறிவித்தல், தான் செய்தல், செய்வித்தல், அறிவியாதிருத்தல், செய்யாதிருத்தலாகிய இவற்றை எப்பொழுதும் மேற்கொள்ளல் வேண்டும். அஅ

அஅ. செய்தற்குரிமையுடையதனைத் தகுதி நோக்கி யறிவித்தல் செய்தல் செய்வித்தல் வேண்டுமெனவும், செய்தற்குரித்தல்லாததனைத் தகுதியின்மை நோக்கி அறிவியாதிருத்தல் செய்யாதிருத்தல் வேண்டுமெனவும் இயைத்துப் பொருள் கொள்க. ஒரு செயல் தீதெனினும், வேண்டுங்காலத்திற் செய்ய வேண்டுமென்பதும், ஒரு செயல் நன்றெனினும், வேண்டாக் காலத்தில் விலக்க வேண்டுமென்பதுங் கூறப்பட்டன. தான் செய்யக் கருதாததொன்றைப் பிறர் செய்யும் வண்ணம் உடன்படானென்பது எளிதிற் கிடைத்தலின், செய்வியாதிருத்தல் ஈண்டுக் கூறப்பட்டிலது.

**பிரதானன்,** எல்லோருடைய அரசியற் றொழில்களுள்ளும் யாது யாது உண்மையாக வுள்ளது, யாது யாது பொய்ம்மையாக வுள்ளது என்று துணிதற்குரியவாறு அவற்றை ஆராய்தல் வேண்டும். ௮௬

**சசிவன்,** யானை குதிரை தேர் காலாட்படை வன்மைமிக்க ஒட்டகம் எருது ஆகிய இவற்றினுள்ளும் பல்வேறுவகைப்பட்ட ஆயுதக் கூட்டங்களினுள்ளும் காரியத்திற்குத் தகுதி வாய்ந்தன அத்தகுதியில்லாதன பழையன புதியன எவ்வளவுள்ளன வென்பதையும், வாத்தியங்களின் மொழிகளாற் குறிக்கப்படும் சங்கேதங்களாற் படைகளை அணிவகுக்கும் திறன் வாய்ந்தோர், கிழக்குமேற்கு முதலிய எப்பக்கத்தும் வினைகுறித்துச் செல்வோர், அரசியலடையாளமுள்ள அம்பு வாள் முதலிய படைக் கலங்களைத் தாங்கிநிற்போர், கடை இடை தலையாகிய வினைகளைப் புரியும் வலியாளர், குதிரைவீரர் ஆகிய இவர்களுள் காரியத்திற்குத் தகுதி வாய்ந்தோர் அத்தகுதியில்லாதார், பழையர், புதியர் எத்துணையர் உள்ளார் என்பதையும், வாள் முதலிய கைப்படைகள் இருப்புக்கோளங்கள் நெருப்புப்பொடிகள் முதலிய போர்க்குரிய பண்டங்கள் எவ்வளவுள்ளன வென்பதையும் நன்றாக ஆராய்ந்து அவற்றைப் பற்றிய காரியங்களை அரசனுக்கு அவ்வப்போது விளக்கமாக அறிவித்தல் வேண்டும். ௯௦-௯௪

**மந்திரி,** சாமம் தானம் பேதம் தண்டம் என்னுமிவற்றை எவ்வெப்பால் எப்பொழுது எவ்வாறு செய்தல் வேண்டுமென்பதும், அவற்றால் வரும் பயன் மிகுதி நடுத்தரம் குறைவு என்னுமிவற்றுள் எவ்வளவாமென்பதும் ஆகிய இவ்வெல்லாவற்றையும் நன்றாக ஆராய்ந்து துணிந்து வேந்தனுக்கு அறிவித்தல் வேண்டும். ௯௫

**நீதிபதி,** நீதிமன்றத்தின்கண் எப்பொழுதும் உரிய அவையோர் சூழவிருந்து கற்பிக்கப்பட்டனவும், உண்மையாக நிகழ்ந்தனவுமாகிய மக்களைப் பற்றிய வழக்குக்களைப் பொய்யாயினவும் உண்மையாயினவுமாகிய சான்று இலிகிதம் அநுபவம் என்னும் மாநுடசாதனங்களாலும், நெருப்பு முதலிய தெய்விக சாதனங்களாலும் ஆராய்ந்து, எவ்வழக்குக்களில் எச்சாதனங்கள் சிறப்புடையன வென்பதையும் அறிந்து,

௯௫. இவ்வுபாயங்களைப் பரிமேலழகர் தான சாம பேத தண்டமென்று முறைப்படுத்தி அவற்றை முறையே கொடுத்தல், இன்சொற் சொல்லல், வேறுபடுத்தல், ஒறுத்தல் என்று கூறுவர். (௪௯௭-திருக்குறள்.)

பொருந்துமாற்றானும், காட்சி அநுமான உபமான அளவைகளானும், உலகியலறிவானும், நீதிநூலறிவானும், பலர்க்கும்ஒப்ப முடிந்தவைகளை நன்கு துணிந்து, அரசனுக்கு அறிவித்தல் வேண்டும். கூசு-கூஅ

**பண்டிதன்,** பண்டை அறங்களுள், எவை மக்களால் நிகழ்கா லத்திற்குரியனவாக மேற்கொள்ளப்பட்டன வென்பதும், எவ்வறங் கள் நூல்களிற்கூறப்பட்டும் இப்பொழுது மக்களுக்கு ஒவ்வாதன வென்பதும், எவ்வறங்கள் நூல்களுக்கு ஒவ்வாதனவாகியும் மக்க ளான் மேற்கொள்ளப்பட்டன வென்பதுமாகிய இவற்றை நன்றாக ஆராய்ந்து, இம்மையினும் மறுமையினும் நலம் பயக்கும் அறங்களை அரசனுக்கு உணர்த்தல் வேண்டும். கூகூ-கOO

**சுமந்திரன்,** புன்முதலிய அசையாப்பொருள்களிலும், பசு முதலிய அசைபொருள்களிலும் இவ்வளவு இவ்வாண்டில் தொ குத்துச் சேர்க்கப்பட்டனவெனவும், செலவாயின இவ்வளவென வும், எஞ்சியவை இவ்வள விருக்கின்றன வெனவும் அரசனுக்கு விளங்கத் தெரிவித்தல் வேண்டும். கOக

**அமாத்தியன்,** நாட்டில் நகரம் சிற்றூர் காடு இவை எவ்வளவி ருக்கின்றன வென்பதும், யார் யாரால் எவ்வளவு நிலம் உழவு செய் யப்பட்டன வென்பதும், அந்நிலங்களினின்றும் யார்யாரால் எவ்வ ளவுகூறு அடையப்பட்டன வென்பதும், வரவேண்டிய கூறு யார் யார்பால் எவ்வளவுள்ளன வென்பதும், உழவுசெய்யப்படாத நிலம் எத்துணைய வென்பதும், ஆண்டுதோறும் சுங்கம் தண்டம் முதலிய வற்றாற் கிடைக்கும் பொருள் எவ்வளவென்பதும், உழவு முதலி யன செய்யப்படாமல் நிலத்தினின்றும் உண்டாய விளைபொருள் எவ்வளவென்பதும்,காட்டினின்றுங் கிடைத்தபொருள் எவ்வளவென் பதும், சுரங்கத்தினின்று முண்டாயபொருளும் உரியவரின்றெனத் துணிதற் கியலாமல் நிலத்தினின்றும் எடுக்கப்பட்டபொருளும் எவ்

---

கூசு-கூஅ. மாநுட தெய்விக சாதனங்களை ச-ஆம் அத்தியாயம் ரு-ஆம் பிர கரணம் கசுச - ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க.

கOக. புன்முதலிய அசையாப் பொருள்கள்:— புறத்தே காழ்ப்புடையன வாகிய தெங்கு பனை முதலியனவாம். அகத்தே காழ்ப்புடையன மா,பலா முதலிய மரங்களாம். இதனை "புறக்காழனவே புல்லென மொழிப, அகக்காழனவே மர மெனன மொழிப" என்னும் தொல்காப்பியச் சூத்திரத்தானு முணர்க. அசையாப் பொருள் - தாவரம். அசைபொருள் - சங்கமம்.

வளவென்பதும், உரியாரில்லாத பொருளும் தீயோரை இழப்பித்த லால் அடையப்பட்டபொருளும் கள்வர்பாற் கொண்ட பொருளும் எவ்வளவென்பதும் ஆகிய இவ்வெல்லாவற்றையும் நன்றாகஆராய்ந்து துணிந்து அளவிட்டு வேந்தன்பால்அறிவித்தல் வேண்டும். கoஉ-கoரு

புரோகிதன் முதலிய பிரகிருதிகள் பதின்மரின் இலக்கணமுஞ் செயலுஞ் சுருக்கிக் கூறப்பட்டன. அரசன் அவ்வக்காரியங்களைப் பார்ப்போரால் நேராகவும் அவர்களின் எழுத்துமூலமாகவும் எல்லா வற்றையும் அறிந்துகொள்ளல் வேண்டும். கoசா

ஒருவன் மற்றொருதொழிலையும் அதற்குரியான் பிறிதொரு செயலையும் பார்க்கும்படி, இவ்வாறு இப்பிரகிருதிகளை மாற்றி நிய மனஞ்செய்தல் வேண்டும். கoஎ

இவ்வதிகாரிகளை, அரசன் தன்னினுஞ் சிறந்த செல்வாக்குடைய வர்களாக இருக்கும்படி ஒருபொழுதுஞ் செய்தலாகாது. இப்பிர கிருதிகள் பதின்மரையும் தம்முள் ஒத்த ஆற்றலுடையராயிருக் கும்படி செய்தல் வேண்டும். கoஅ

## கூ. மற்றை அதிகாரிகளின் இலக்கணங்களுங் காரியங்களும்.

ஓர் அதிகாரச் செயலில் எப்பொழுதும் மூவரை நியமனஞ் செய்தல் வேண்டும். அவருள், ஒருவன் மிகச் சிறந்தவனாகவும் உயர்ந்த அறிவுள்ளவனாகவும் இருத்தல் வேண்டும். கoகூ

அச்செயலில் துணைவராக இருவர் இருத்தல் வேண்டும். மூன்று ஐந்து ஏழு பத்து ஆண்டுகளுக்கு ஒரு முறையாதல் அத்துணைவரை மாற்றி நியமித்தல் வேண்டும். ககo

---

கoரு. உரியாரில்லாதபொருள் - சந்ததி யில்லாத குடும்பத்துப் பொருள். தீயோரை இழப்பித்தலால் அடையப்பட்ட பொருளாவது-ஒருவன் அரசியற்கு மாறுபடுஞ் செயன்முதலியவற்றைப் புரிவானாயின், அவனை நாட்டினின்றும் விலக்கி, அவன்பாற் கவர்ந்து கொண்டதாகும். கள்வர்பாற் கொண்டபொருளாவது - அவர் களவுசெய்த பொருட்குரியார் இன்னாரென்று துணியப்படாத நிலையிற் கொண்டதாகும்.

கoஎ. பிரகிருதிகளை மாற்றிநியமித்தலாவது - சிலவாண்டுகளுக்கொரு முறை சுமந்திரனை அமாத்தியத்தொழிலிலும், அமாத்தியனைச் சுமந்திரத்தொழிலிலுமாக இங்ஙனம் ஏனையோரையும் மாற்றி நியமனஞ்செய்தல்.

ககo. முதனூலில் "தரிசகர்" என்பது துணைவர் என மொழிபெயர்க்கப் பட்டது. தரிசகர்-காரியதரிசிகளாக விருந்து துணை செய்வோர். (Secretaries)

அவ்விருதுணைவரின் செயலையுந்திறனையும்நோக்கி, அவரை அங்ஙனம் மாற்றி நியமித்தல் வேண்டும். அரசன் என்றும் எத்தகைய ஒருவனையும் ஓர் அதிகாரத்திலேயே நெடுநாள் வைத்தலாகாது. ௧௧௧

ஒருவன் எவ்வதிகாரத்திற்குரிய ஆற்றல் அமைந்துள்ளானென்று கண்டு, அவ்வதிகாரத்தில் அவனை நியமனஞ் செய்தல் வேண்டும். நெடுநாள் அதிகாரத்திற் களித்து மயங்காதவன் யாவன்? (எல்லோரும் மயங்குவராதலின் ஒரே அதிகாரத்தில் யாரையும் நெடுநாள் இருக்கச் செய்தலாகாதென்பதாம்.) ௧௧௨

ஆதலின், ஓர் அதிகாரத்திற் சிலவாண்டு இருந்தவனைக் காரியத்திறன் நோக்கி அச்செயலினின்றும் மாற்றி, வேறொரு செயலில் நியமித்தல் வேண்டும். அங்ஙனம் மாற்றி நியமிக்குங்கால், மாற்றப்படுஞ் செயலில் திறன்வாய்ந்தவனும் அத்தகைய பதவியிலிருக்கின்றவனுமாகிய மற்றொருவனை நியமித்தல் வேண்டும். அவனுக்கு அத்திறன் இன்றேல், பிறனொருவனை நியமித்தல் வேண்டும். முன்னை வினைபுரிவோன் மகன், தந்தையை யொத்த குணஞ்செயல்களை யுடையனாயின், அவனை அவ்வினைக்கண் நியமனஞ் செய்யலாம். ௧௧௩-௧௧௪

புதிய வினைவலானொருவன், எவ்வெச்சிறந்த பதவிகளுக்கு எவ்வெப்பொழுது தகுதியுடையனாகின்றானோ அவ்வப் பதவிகளில், அவன் முறையே மேலும் மேலும் நியமிக்கற்பாலன். இறுதியில் அவனைப் பிரகிருதிகளுள் ஒருவனாகச் செய்தல்வேண்டும். ௧௧௫

அதிகாரச் செயல்களின் மிகுதி நோக்கித் தக்கவாறு துணைவர் பலரை நியமிக்கலாம். அன்றித் துணைவரில்லாமலே காரியங்களைத் திறமையுடன் செய்யும் அதிகாரியைத் தனிமையாகவும் நியமிக்கலாம். ௧௧௬

## ௬௦. யானைப்பாகன் முதலியோரின் இலக்கணங்களுங் காரியங்களும்.

இங்குக்கூறப்பட்டவர்களையன்றி மற்றை வினைத்திறன் வாய்ந்த எல்லோரையும் யானை, குதிரை, தேர், காலாட்படை, பசு, ஒட்டகம், மற்றை விலங்கினம், பறவைக்கூட்டம்; பொன், அரதனம், வெள்ளி, ஆடை யாகிய இவற்றிற்கும், தானியம், அடுக்களை, ஆடற்பூஞ்சோலை, மேன்மாளிகையோடு கூடிய இல்லங்கள், பலவகைப் பண்டங்கள், திருக்கோயிற் பூசை, தானம் ஆகிய இவற்றிற்கும் தனித்தனி அதிபராகவும், கள்வர் முதலிய தீயோரைத் தண்டிக்கும் அதிபராகவும், சிற்றூர்த் தலைவராகவும், இறைப்பொருள் கொள்ளு

வோராகவும், எழுத்தாளராகவும், சுங்கம் வாங்குவோராகவும், வாயிற் காப்போராகவும், அவரவர் தகுதிக் கேற்ப அவ்வச் செயல்களில் நியமனஞ் செய்தல் வேண்டும். தீயோரைத் தண்டிக்கும் அதிபர் முதலிய ஆறு வகையினரையும், கிராமங்கடோறும் நகரங்கடோறும் நியமனஞ் செய்தல் வேண்டும். ககஎ-கஉக

அரசன் தவம்புரிவார், கொடைக்குணம் வாய்ந்தார், வேதம் அறநூல்வல்லார், பௌராணிகர், வியாகரணமுதலிய நூல்களையுணர்ந்தார், ஒளிநூல் வல்லார், மாந்திரிகர், மருத்துநூல் வல்லார், கன்மகாண்டமுணர்ந்தார், சைவாகமமுணர்ந்தார், மற்றை நற்குணமுடையார், பெரியார், மதிநுட்பம் வாய்ந்தார், பொறிபுலன்களை வென்றார் ஆகிய இவ்வெல்லோரையும் தானங்களாலும், சிறப்புக்களாலும் நன்றாகப் பெருமைப்படுத்திக், திங்கள் வேதனம் உதவிப் பரிபாலித்தல் வேண்டும். இன்றேல் அரசன் அரசியல் பிறழ்ந்து பழியும் எய்துவன். கஉஉ-கஉச

பலர் கூடி முடிக்கத்தக்க காரியங்களை யுணர்ந்து, அவ்வக்காரியங்களிற் றிறமை வாய்ந்த முற்கூறப்பட்ட அதிகாரிகளை, அவற்றின் அதிபராக நியமித்தல் வேண்டும். கஉரு

மந்திரத்தன்மையில்லாத எழுத்தும், மருந்தாந்தன்மையில்லாத வேரும், ஒன்றிற்கும் தகுதியில்லாத மனிதனும் இல்லை. ஆயினும், தகுதி யுணர்ந்து கூட்டிப் பயன்படுத்துவோனே அரியன். கஉசு

யானைகளின் பிரபத்திர முதலிய சாதிவேறுபாடும், அவற்றைப் பழக்குமுறையும் காக்குமுறையும், நாவின் அடி நுனி நகம் இவற்றால் அவற்றின் குணங்களும், நடையின் இயல்பும், எழுமுறைமையும், நோய்களும், அவற்றைத் தணிக்கு மருந்துமுறையுமாகிய இவற்றை நன்கறிந்தவனையே யானைக்காப்பில் நியமித்தல் வேண்டும். அத்தகைய யானைப்பாகனே யானைகளின் மனத்தை வயப்படுத்துபவனாவான். கஉஎ-கஉஅ

குதிரைகளின் உள்ளக்கருத்துக்களையும், சாதிநிறம்சுழிகளால் அவற்றின் குணங்களையும், நடை, பயிற்றுமுறை, வன்மை, தகுதி,

---

ககஎ. அடுக்களை-பாகசாலை. சுங்கம்:உஎகூ-ஆம் சுலோகக்குறிப்பிற் காண்க. பொருள் - பொற்காசு வெண்பொற்காசு முதலியன.

கஉஉ. ஒளிநூல் - சோதிடநூல்.

கஉசு. பயன்படுத்தும் அறிவுடையானால் எல்லா வெழுத்துக்களும் மந்திரங்களாம் எனவும், எல்லாவேர்களும் மருந்துகளாம் எனவும், எல்லாமனிதரும் காரியம் புரியும் தகுதி யுடையராவர் எனவுங் கூறியவாறு.

அளவு, பாரம் இழுக்கும் ஆற்றல், பற்களின் இயல்பு, ஆண்டினளவு, நோய்நிலை, அது தீர்க்கு மருந்துமுறை, நலம் தீங்குணர்ந்து உணவு கொடுக்கு முறையாகிய இவற்றையும் அறிந்து, படைகளை அணிவகுக்குந் திறனோடு சிறந்த அறிவும் வீரமும் வாய்க்கப் பெற்ற வனையே, குதிரைத் தலைவனாக நியமித்தல் வேண்டும். கஉகூ-கங0

அக் குதிரைத்தலைவனுக்குரிய குணங்களும், சுமந்து செல்லுங் குதிரையின் ஆற்றல், தேரின் வன்மை, தேர்ச் செலவு, தேர்ச்சுழற்சி, மாறுதல் இவைகளைப் பற்றிய அறிவும், அம்பு வாள் முதலியன தாங்கி எதிர்க்கும் பகைவர் தன்தேர்க்கண் உள்ள தலைவனைக் குறி வைத்தெய்யுங்கால் அதனைத் தேர்ச் செலவால் விலக்குந் திறனும், பகைவர் குதிரையோடு கலக்குங்கால் தன் குதிரைகளைக் காக்கு மறிவு மாகிய இவற்றை யுடையவன் தேர்ப்பாகனாவான். கங௧-கஙஉ

தறுகண், படைகளை அணிவகுக்குமறிவு, குதிரைகளின் செல வைப்பற்றிய அறிவு, மதிநுட்பம், அம்பு வாள் முதலியவற்றாற் போர் புரியுந் திறமையாகிய இவற்றையுடையார் குதிரை வீரராவர். கஙங

சக்கிரிதம், இரேசிதம், வற்கிதம், தௌரிதம், ஆப்புலுதம், துரம், மந்தம், குடிலம், சருப்பணம், பரிவருத்தனம், ஆற்கந்திதம் என்னும் இப்பதினொருவகைப்படுங் குதிரைநடைகளை யறிந்து, அக்குதிரை களின் ஆற்றலுக்குத் தக்கவாறு அவற்றை நன்றாகப் பயிற்றுவோன் குதிரைப் பயிற்சி செய்பவனாவான். கஙச-கஙரு

குதிரைக்குரிய பணியில் திறமையும், கல்லணை முதலியன அமை த்து அணிசெய்யுமறிவும், வலிய உடலும், வீரமும் உடையானைக் குதிரைக்குரிய வேலையாளாகச் செய்தல் வேண்டும். கஙசு

கஙச - கஙரு. சக்கிரிதம் - வட்டமாகச் சுழன்று செல்லல். இரேசிதம் - சிறிது துள்ளித்துள்ளித் தொடர்ந்து நடத்தல். வற்கிதம் - அசைந்து செல்லல். தௌரிதம் - கால்களை வளையாமல் விரைந்து அழகாகச் செல்லல்; இதனை நான் காம் அத்தியாயம் எ-ஆம் பிரகரணம் கசஅ-ஆம் சுலோகத்தில் தௌரீதகம் என்பர். ஆப்புலுதம் - நான்கு கால்களாலும் துள்ளிச் செல்லல். துரம் - விரைந் தோடல். மந்தம் - மெல்லிய நடை. குடிலம் - வளைந்து செல்லல். பரிவருத்த னம் - பின்பாற் செல்லல். ஆற்கந்திதம் - முன்னேக்கிச் செல்லல். இங்குக் குதி ரை நடை பதினொருவகையாகக் கூறப்பட்டன. ச-ஆம் அத்தியாயம் எ-ஆம் பிரகரணம் கசச-ஆம் சுலோகத்தில், ஆறுவகைப்படுமென்று கூறுவர்; இப்பதி னொருவகையும் இவ்வாறுவகையில் அடங்கும்போலும்.

கஙசு. கல்லணை - குதிரை மேலிடுந்தவிசு.

## கக. படைத்தலைவர் முதலியோ ரிலக்கணம்.

வெற்றியை விரும்பும் அரசன், செய்யத்தக்கன இன்ன தகாதன இன்னவென்று பகுத்துணரும் அறிவும், அம்பு வாள் முதலிய படைக்கலப் பயிற்சியும், படைகளை அணிவகுத்தன் முதலியவற்றிற் றிறமையும், பகைவரைப் பணியச்செய்யும் வன்மையும், பாலப்பருவமின்மையும், காளைப்பருவம் எய்துதலும், தறுகண்மையும், அடக்கமும், வன்மைமிக்க உடலும், தம் கடமையிற் பற்றும், எப்பொழுதும் தம் தலைவர்பால் அன்பும், பகைவர்பால் வெறுப்பும் ஆகிய இக்குணஞ் செயல் வாய்ந்தோர் சூத்திரராயினும், அரசகுலத்தவராயினும் வணிகராயினும், மிலேச்சராயினும், பிறசாதிக்கலப்பிற் பிறந்தவராயினும் அவர்களைப் படைத்தலைவராகவும் காலாட்படைகளாகவும் செய்தல் வேண்டும். கஙஎ-கஙகூ

ஐந்து அல்லது ஆறு காலாட்களுக்குத் தலைவன் **பத்திபாலன்** என்று கூறப்படுவான். முப்பது காலாட்களுக்குத் தலைவன் **கௌன்மிகனாவான்.** கச0

நூறு காலாட்களுக்குத் தலைவன் **சதானிகனாவான்.** அவனோடு சிறந்த **அநுசதிகன், சேனானி, எழுத்தாளனாகிய** இவரும் அந்நூறு காலாட்களைக் குறித்துத் தலைவராவர். அங்ஙனமே **சாகச்சிரிகனையும்** பெருமைமிக்க **ஆயுதிகனையும்** நியமனஞ்செய்தல்வேண்டும். கசக-கசஉ

காலையிலும் மாலையிலும் படைகளை அணிவகுத்துப் பழக்குதலும், அங்ஙனமே நன்கு போர்புரிதற்குரிய முன் ஏற்பாடுகளை யறிதலும் **சதானிகன் காரியங்களாம்.** கசங

அத்தகைய செயல்களை மேற்கொண்டு, சதானிகற்குத் துணை செய்பவன் **அநுசதிகனாவான்.** போர்க்குரிய கருவிகளையும், பொருள்களையும், போர்செய்தற்குத் தகுதியான போர்வீரர்களையும் அறிதலும், யாமங்காப்போரை நியமித்து, அவர் செய்யுங் காரியங்களைக் கட்டளை யிடுதலும், **சேனானியின்** தொழில்களாம். அவ் யாமங்காப்

*கசக-கசஉ. அநுசதிகன், சேனானி, எழுத்தாளன் என்னும் இம்மூவரும் சதானிகனுக்கு உடனிருந்து துணைசெய்பவராவர். ஆதலின், அவரும் தலைவரென்று கூறப்பட்டனர். சாகச்சிரிகன்-ஆயிரங்காலாட் படைகளுக்குத் தலைவன். சகச்சிரம் - ஆயிரம். ஆயுதிகன் - பதினாயிரங் காலாட் படைகளுக்குத் தலைவன். அயுதம் - பதினாயிரம்.*

போரை, அவர்தம் செயலின் மாற்றியமைத்தல் **பத்திபாலன்** தொழி லாம். கசச-கசரு

யாமங்காப்போர், தம் செயலில் விழிப்புடையரா யிருத்தலைக் **கௌன்மிகன்** அறிதல் வேண்டும். கசசு

**எழுத்தாளன்,** படைவீரர் எவ்வளவுள்ளார்? அவர் பெற்ற வேதனம் எவ்வளவு? அவருள் பழையராய்வலியிழந்தவர்யாவர்? வேற் றிடங்களில் யாண்டு எத்துணையோர் சென்றிருக்கின்றனர்? என்னுமி வற்றைக் கணக்கிட்டறிதல் வேண்டும். இருபது யானைகளுக்கும் இரு பது குதிரைகளுக்கும் தலைவன் **நாயகனென்**னும் பெயரையுடைய னவன். கசஎ

இங்குக் கூறப்பட்ட பத்திபாலன் முதலிய பெயருடையாரை அவரவர்க்குரிய அடையாளப்பொருள்களால் அடையாளமிட்டு நிய மனஞ் செய்தல் வேண்டும். கசஅ

வெள்ளாடு, செம்மறியாடு, பசு, எருமை, மான், மற்றை விலங் கினமாகிய இவற்றிற்கு அதிபராக, அவை பெருக்கமடைதற்குத் தக் கவாறு உணவு முதலியனவீந்து காக்கும் திறமையும்; அவற்றின்பால் நெருங்கிய நட்புரிமையு முடையோரை நியமித்தல் வேண்டும். அங்ங னமே அத்தகைய குணஞ்செயல் வாய்ந்தோரை, யானை ஒட்டக முத லியவற்றிற்குத் தலைவராகவும், அவற்றின் பணியாளராகவும் நியமித் தல் வேண்டும். கசகூ

சிச்சிலி முதலிய பறவைகளைப் போர்ச்செயலில் உதவிசெய்யும் வண்ணம் பயிற்றுந் திறமையுடையாரையும், உணவு முதலியன உதவி வளர்ப்பாரையும், கிளி முதலியவற்றிற்கு நன்றாக மொழி பயிற்று வோரையும், பருந்து முதலியவற்றிற்கு வீழ்ச்சி யறிவிப்போரையும், அவ்வவற்றின் உள்ளக்கருத்துக்களை எப்பொழுதும் நன்றாக அறியுந் திறன் வாய்ந்தவர்களாக ஆராய்ந்து, அவ்வச்செயல்களில் நியமித்தல் வேண்டும். கரு0

## கஉ. கருவூலத் தலைவன் முதலியோ ரிலக்கணம்.

அரதனங்கள், பொன், வெள்ளி, முத்திரைக்காசு என்னும் இவற்றை அவற்றின் அளவு, வடிவம், ஒளி, நிறம், சாதி, ஒப்புமை களால் விலைமதித்தறிபவன் அவற்றின் அதிபனாவான். கருக

---

கசச-கசரு. யாமங்காப்போர் - இரவிலும் பகலிலும் நகரைக் காவல்புரி வோர். இவர் செயன்முறைகளை ச-ஆம் அத்தியாயம் எ-ஆம் பிரகரணம் ச0உ-முதல் ச0க-வரையுள்ள சுலோகங்களிற் காண்க.

வணக்கமுடைமை, பொருளுடைமை, உலகியலறிவு, உயிரைப் போற் பொருளைக் கருதுதல், ஈகையின்மையாகிய இவைவாய்க்கப் பெற்றவனே **பொருட் கருவூலத்தின் தலைவனுவான்.** க௫உ

நாட்டின்வேறுபாடு, சாதிவேறுபாடு, பருமை, நுண்மை, வன்மை, மென்மை யாகிய இவற்றால் பட்டு முதலிய ஆடைகளின் அளவையும் விலையையும் நன்கறிபவன் **ஆடை யதிப**னுவான். க௫௩

குடில் குப்பாயம் சூத்தரங்கம் என்னும் இவை முதலியவற்றை யளவுணர்ந்து செய்தலையும், தைத்தற்றொழிலின் திறமையால் அமளி விதான முதலியவற்றை அமைத்தலையும், வண்ணமிடுதலையும், ஆடை முதலியன சீர்ப்படுத்துதலையும் செவ்வையாக அறிபவன் **அவ்விதான முதலியவற்றின் அதிப**னுவான். க௫௪-க௫௫

நெல் முதலிய தானியங்களின் சாதி, அளவு, விலை, உறுதி, கூறு, கொள்ளுமுறை, தூற்றித் தூய்மையாக்குமுறை இவற்றை யறிபவன் **தானியங்களுக்கு அதிப**னுவான். க௫௬

கழுவப்பட்டதும் கழுவப்படாததுமாகிய பொருள்களின் சிறந்த பக்குவத்தையும், அறுவகைச் சுவைகளின் கலப்பு வேறுபாட்டையும், உணவுப் பொருள்களின் குணங்களையும் நன்கறிந்து, மடைத்தொழிலில் திறன் வாய்ந்தவன் **அத்தொழிற்றலைவனுவான்.** க௫௭

மரஞ்செடிகளுக்கு மண்ணிடல் நீர்பாய்ச்சல் முதலியவற்றால் மலர் பழம் இவை மிகுதற்குரிய சாதனங்களையும், புதியனவாக உண்டாக்குதலையும், தூய்மைப்படுத்துதலையும் காலந்தோறுஞ் செய்யு மறிவும், புழு முதலியவைகளான் உண்டாகும் நோயைப் போக்கு மருந் தறியும் திறமையும் உடையவன் **ஆடற் பூஞ்சோலையின் தலைவனுவான்.** க௫அ

திருக்கோயில், அரண்மனை, அகழி, மதில், பிரதிமை, இயந்திரங்கள், அணைக்கட்டு, வாவி, கிணறு, தடாகம், புட்கரிணி, குண்டம், நீர்

---

க௫௩. நாடு - நெய்தவிடம். சாதி - பட்டுப் பருத்திகளின் வகைகள். பருமை முதலிய நான்கும் இழையின் குணங்கள்.

க௫௪-க௫௫. குடில் - ஓலை முதலியவற்றான் வேயப்படும் சிற்றில்லம். குப்பாயம் - சட்டை. அமளி - படுக்கை. விதானம் - மேற்கட்டி. வண்ணமிடுதல் - செம்மை முதலிய நிறங்களுண்டாகத் தீற்றுதல்.

க௫௭. கழுவுதல் - தூய்மை செய்தல். மடைத்தொழில் - உணவாக்கும் தொழில்.

முதலியவற்றை மேனோக்கிச் செலுத்தும் பொறி முதலியன வாகிய இவற்றைச் சிறந்த சிற்பநூன் முறைப்படி நன்றாகவும் அழகாகவும் அமைக்கும் அறிவுடையவனே இல்ல முதலியவற்றின் அதிபனாவான். கருசுா-கசுாக

வேந்தனுடைய காரியங்கட்கு வேண்டுவனவாகிய உபகரணப் பொருள்களை உண்மையாக அறிந்து அவ்வக் காலத்திற் சேர்த்து வைப்பவன் உபகரணப் பொருள் அதிபனாவான் கசுாஉ

தன் கடமைவழி யொழுகுதலிற் பற்றும், கடவுளுக்குச் செய்யும் தொண்டில் அன்பும், அவாவின்மையும் உடையவனைக் கடவுட் பூசைத் தலைவனாக நியமித்தல் வேண்டும். கசுாந

கொடைக்குணம், அவாவின்மை, பிறர்குணமறிதல், மடியின்மை, அருள், இன்சொல், தானத்திற்குத் தகுதியுடையாரை யறிதல், வணக்கம், இரப்போர் முகம் ஒருபொழுதும் வேறுபடச் செய்யாமை, தான் கவர்ந்துகொள்ளாமை யாகிய இக்குணஞ் செயல்களை என்று முடையவன் தானாதிகாரி யாவான் கசுாச-கசுாரு

எல்லாச் சாதியாரிடத்துமுள்ள கடன் கொடன் முதலிய வழக்குக்களை யறிதல், புலமை, ஒழுக்கம், அன்பு அருள் முதலிய உயர் குணங்கள், பகைவரையும் நட்டாரையும் ஒப்பமதித்தல், அறமுணர்தல், உண்மை யுரைத்தல், மடியின்மை, சினமின்மை, காமமின்மை, உலோபமின்மை, இன்சொற் கூறலாகிய இக்குணஞ் செயல்களையும், அவைக்களத் திருக்கும் தகுதியையும், யாண்டு முதிர்ச்சியையுமுடைய பெரியார், அரசவைக்கண் வீற்றிருந்து அரசியற் காரியஞ் சூழ்வோராவர். கசுாசுா-கசுாஎ

மன்னுயி ரனைத்தையும் தன்னுயிர் போல் எண்ணல், அவாவின்மை, எப்பொழுதும் விருந்தோம்பல், கொடைக்குணம் ஆகிய இவற்றை யுடையோன் சத்திரத்தலைவனாவான் கசுாஅ

கருசுா-கசுாக. இருபதுமுழ நீள அகலங்களையுடையது புட்கரிணி எனவும் நாற்பத்தைந்துமுழ நீள அகலங்களையுடையது ... கமெனவும் கூறப்படும். குண்டம் என்பது நீர்நிலை விசேடங்களுள் ஒன்றாகும்.

கசுாஅ. சத்திரம் (ஸத்ரம்) என்னுஞ்சொல் பல நாள் முயன்று செய்யப்படும் வேள்வியையு முணர்த்தும். ஈண்டு அவ்வேள்வித் தலைமைக்குரிய சிறப்பிலக்கணங்கள் கூறப்படாமையால் இச்சொற்கு அன்னசாலை யென்று பொருள் கொள்ளல் வேண்டும்.

பிறர்க்குதவிபுரியும் விருப்பம், பிறர்பழி தூற்றுமை, அழுக்காறின்மை, பிறர் குணங்கோடல், பிறர் குண மறிந்து மகிழ்த லாகிய இவற்றையுடையான் **பரீக்ஷைத் தலைவனாவான்.** கசுசு

குடிகள் அழிவெய்தாவாறு தண்டம்விதித்தல் மிக்க வன்கண் இன்மை, மிக்க இரக்கமின்மை யாகிய இவற்றை யுடையான் கள்வர் முதலியோரை ஒறுக்கும் **தண்டத்தலைவனாவான்.** கஎ0

தன்புறத்தும் கள்வராலும் தீயொழுக்கமுடைய அதிகாரிகளாலும் இடுக்கண் விளையாவண்ணம், குடிகளைத் தாய்தந்தையரையொப்பப் பாதுகாக்கும் திறன்வாய்ந்தோன் **கிராமத் தலைவனாவான்.** கஎக

மரஞ்செடிகளை முயன்று வேண்டுவன ஊட்டி நன்கு வளர்த்து, அவற்றினின்றும் மலர்பழமுதலியவற்றைக் கொள்ளுந் தோட்டத்தலைவனைப்போலக் குடிகளுக்கு வேண்டுவன உதவி, நலஞ் செய்து, அவர்பாற் குடியிறைகொள்ளுவோன் **இறைப்பொருட்டலைவனாவான்.** கஎ௨

கணக்கின் திறமை, நாடு மொழி இவற்றின் வேறுபாடறிதல், ஐயந்தோன்றாவாறு மறைபொருளின்றி விளக்கமாக எழுது முறையாகிய இவற்றையுடையான் **எழுத்தாளனாவான்.** கஎங

அம்பு வாள் முதலிய படைக்கலப் பயிற்சியில் திறமையும், உடல் வன்மையும், மடியின்மையும், வணக்கமு முடையனாய் (ப்பிறரை) த் தகுதி நோக்கி யழைப்போன் **வாயில் காப்போனாவான்** கஎச

வாணிகம் புரிவோரின் மூலப்பொருட்குக் கேடு பயவாவண்ணம் அவர் பெறும் ஊதியத்தில் அரசனுக்குரிய கூறு கொள்ளுவோன் **சுங்கம் வாங்குவோனாவான்.** கஎரு

மந்திரசெபம், பட்டினியிருத்தல், விரதங்காத்தல், மற்றை நாட்கடன், தியானம், பொறிவென்றி, பொறுமை, அவாவின்மை யாகிய இவற்றை எப்பொழுதும் பேணிச் செய்பவன் **தவஞ்செய்வோனாவான்.** கஎசு

மனைவிமக்கள்பொருட்டு ஒரு சிறிதுஞ் சேர்த்து வையாமல்

கசுசு. பிறர் குணங் கோடல் என்றமையால், குற்றம் அறிந்து விலக்கல் எளிதிற் புலப்படும்.

கஎஎ. இச்சுலோகத்திற்கு 'தன் பொருளையும் மனைவி மக்கள் முதலியோரையும் இரப்போர்க்கு ஈதலும், பிறரிடத்தினின்றும் ஒருசிறிதுங் கொள்ளாமையும் உடையான் **கொடையாளியாவான்**' என்றும் பொருள் கொள்ளலாம்.

எல்லாப் பொருள்களையும் இரப்போர்க்கு ஈயுங்குணம் வாய்ந்தோன் **கொடையாளி** யாவான். கள௭

வேதம், அறநூல், புராணம் இவற்றைப் பயிலுதலிலும் பயில் வித்தலிலும் திறமை வாய்ந்து, அப்பயிற்சியால் விளக்க முறுவோர் **வேத முணர்ந்தோராவர்.** கள௮

காப்பிய நூல்களில் திறமையும், இசைப் பயிற்சியும், இனிய குர லும், உலகத்தோற்ற முதலிய புராண இலக்கணங்கள் ஐந்தையுமுணர் தலு மாகிய இவற்றை யுடையார் **பௌராணிகராவர்.** கஎக

மீமாஞ்சை தருக்கம் வேதாந்தம் வியாகரண முதலிய நூல் களிற் சிறந்த அறிவும், உய்த்துணர்வும், பிறரை உண்மையாகப் பயிற்றும் திறமையுமாகிய இவற்றை யுடையான் **அங்கநூல் வல் லோனாவான்.** க௮௦

சங்கிதை ஓரை கணிதம் என்னும் மூன்றனையும் உண்மையாக வுணர்ந்து முக்காலமும் அறியும் திறன் வாய்ந்தோன் **ஒளிநூல் வல் லோனாவான்.** க௮க

மூலமந்திர முறையாக மந்திரங்களின் நலந்தீங்குகளை யறிந்து, அம்மந்திரங்களைச் செவ்விதிற் பயின்று, தெய்வசித்தி வாய்க்கப் பெற் றோன் **மாந்திரிகனாவான்.** க௮உ

காரணங்களாலும், குறிகளாலும், மருந்துகளாலும் நோய்க ளின் உண்மை துணிந்து, அவற்றுள் தீர்க்கத்தக்கன இன்ன தீர்க்கத் தகாதன இன்னவென் றுணர்ந்து மருத்துவஞ் செய்யத் தொடங்கு வோன் **மருத்துவனாவான்.** க௮௩

வேதம், அறநூல் ஆகமபுராண முதலியவைகளிற் கூறப்பட்ட மந்திரங்களைப் பயின்று, அவற்றாற் கடவுள்வழிபாடுபுரிதல் நலம் பயப்பதென்றெண்ணி, அதனைச் செய்ய முயல்பவன் **தாந்திரிகனா வான்.** க௮௪

கஎக. புராணஇலக்கணம் ஐந்தாவன:- உலகத்தோற்றம், ஒடுக்கம், முனி வர் அரசர்களின் மரபு, அம்மரபின் பின் வரலாறு, மனுவந்தரம் என்பனவாம்.

க௮க. எண்ணூல் - கணிதநூல். ஒளி நூல் - சோதிடநூல்.

க௮௩. காரணம் - ஒத்ததல்லாத உண்டிவேறுபாடு முதலியன. குறி- நோயால் உறுப்புக்களில் நிகழும் மாறுபாடு.

உண்மையுரைத்தல், ஒப்பனைகோடல், இன்சொற்கூறல், நற்குடிப்பிறப்பு, நல்லுருவாகிய இவற்றையுடைய அலிகளை யெப்பொழுதும் உவளகக் காவலாளராக நியமித்தல் வேண்டும். கஅரு

தம் தலைவனிடத்து அன்பு, பிறர்பாற் சாராமை, கடமைமேற்கோடல், உடல் வன்மை, பாலப் பருவமின்மை, காளைப் பருவம், பணிசெய்யு முறை யறிதல், இழிசெயல்கள் எவையாயினும் அவற்றைச் செய்யும் மனவொருப்பாடு ஆகிய இவற்றையுடையராய், எப்பொழுதும் அரசன் கட்டளைகளை நிறைவேற்றுவோரே அரசனுக்குரிய ஏவலாளராவர். கஅசு-கஅஎ

பகைவர், குடிமக்கள், வினைசெய்வார் ஆகிய இவர்களின் செய்திகளைத் திறமையாக வுணர்ந்து, அங்ஙனம் உண்மையாகக் கண்டுணர்ந்தவைகளை அரசனுக்கு மறைவில் அறிவிப்போர் ஒற்றராவர். கஅஅ

வணக்க முதலியவற்றில் நல்ல பயிற்சி பெற்று, அரசன்பக்கல் வருவோர்க்கு வணங்கு முறையையும், இருத்தற்குரிய விடத்தையும் அறிவிப்போரைப் பொற்றடி, பிரப்பங்கோல் இவை தாங்கி நிற்கச் செய்தல் வேண்டும். கஅகூ

மிடற்றினும் யாழ் முதலியவற்றின் நரம்புகளினும் தோன்றும் ஏழு சுரங்களையும் இடவேறுபாடறிந்து வெளிப்படுத்தல், சேர்க்கப்படுவனவும் பிரிக்கப்படுவனவு மாகிய சுரங்களை நன்குக அறிதல், பண்ணமைய இன்னிசை பொருந்தத் தாளத்துடனுதல் அன்றி அவற்றோடு ஆடலோடாதல் பாடுத லாகிய இவை வாய்க்கப் பெற்றோன் இசை பாடுவோர் தலைவனாவான். ககூ0-ககூக

அரசன் தன் மன மகிழ்தற்பொருட்டு, முற்கூறிய ஆடல்பாடல்களாகிய இசைப்பயிற்சியின் திறமை, நாணமின்மை, காதற்கிழமையைப் புலப்படுத்துங் குறிப்பு, இன்பச்சுவையின் உண்மையுணர்ச்சி, அழகமைந்த உடல், பிறர் மனத்தைக் கவரும் ஆற்றல், புத்திளம் பருவம், உயர்ந்து திரண்ட தனங்கள், அழகிய புன்முறுவலோடுங்

---

கஅரு. ஒப்பனைகோடல் - அலங்கரித்துக்கொள்ளுதல். உவளகம் - அந்தப்புரம்.

கஅசு - கஅஎ. இழிசெயல்களைச் செய்தல் - அரசனுக்குரிய ஏவலாளருள் ஒருவன், தன்னிற்றாழ்ந்தான் செய்யும் பணிகளைத் தான் செய்தல்.

கஅஅ. இக்கருத்தை "வினைசெய்வார் தஞ்சுற்றம் வேண்டாதா ரென்றாங், கனைவரையு மாராய்வ தொற்று" என்னுந் திருக்குறளினுங் காண்க.

கூடிய பார்வை ஆகிய இந்நலங்களமைந்த விலைமகளிரை வேண்டுவன உதவிக் காத்தல் வேண்டும். அங்ஙனமே மனத்தை இன்புறுத்துவன வாகிய வியக்கத்தக்க செயல்களைப் புரிவதிற் றிறன் வாய்ந்த பிறரை யும், நல்ல ஏவலாளரையும் காத்தல் வேண்டும். ககூஉ-ககூந

துயிலெடை பாடுவோர், சிறந்தகவிகள், பிரப்பங்கோல் தடி தாங்கி நிற்குங் காவலாளர், சிற்பிகள், இன்பநூல் வல்லார், எப்பொழு தும் பிறர்க்குதவி செய்வோர், பிறர் குற்றங்களை வெளிப்படுத்தி அத னால் நகைச்சுவை விளைவிப்போர், பலவகை வேடந் தாங்கி ஆடல்செய் வோர், ஆடற்பூஞ்சோலை செயற்கையிற்காட்டும் ஒப்பனைச்சோலை அரண் இவற்றை யுண்டாக்குவோர், மகாநாளிகமென்னும் பொறியி னின்று நெருப்புமயமான திரளைகளாற் குறிவைத்தெய்து பகைவரைத் தொலைப்போர், சிறுபொறிப்படை நெருப்புண்டாக்குந் துகள் அம்பு திரளை வாள் ஆகிய இவற்றையாக்குவோர், வேறு பல பொறிப்படை கள் விடுபடை விடாப்படைகள் வில் அம்பறாத்தூணி யாகிய இவை முதலியவற்றைச் செய்வோர், பொன் அரதனங்களால் அணிகலன் செய்யும் பொற்கொல்லர், தேரியற்றுவோர், கற்பணிசெய்வோர், கரும்பொற்கொல்லர், வண்ணம் பூசுவோர், குயவர், கன்னார், தச்சர், நடைவழி யாக்குவோர், மயிர் வினைஞர், வண்ணார், விறகுவெட்டு வோர், மல மூத்திர முதலியன வெளிப்படுத்துவோர், செய்தி தாங் கிப் போக்குவரவுபுரிவோர், துன்னகாரர், அரசியல் அடைப்பாளப்பொ ருள்களை முன்னிற்றுங்குவோர், படைகளை யணிவகுப்போர், போர் முரசு படகம் இரலை சங்கு வேய்ங்குழல் முதலிய இயங்களின் ஒலிகளாற் பகைவரை எதிர்த்துச் சேறல், அவர்பானின்று திரும்பி வருதல், அவரோடு பொருதல் முதலிய செயல்களை யறிவிப்போர், தோணி இயக்குவோர், மண்தோண்டுவோர், வேடர், குறவர், சுமை யெடுப்போர், ஆயுதங்களைத் தீட்டிக் கூர்மைப்படுத்துவோர், நீரெடுப் போர், தானியம் எடுப்போர், பண்டாரத்தொழில் புரிவோர்,

---

ககூச. துயிலெடை பாடுவோர் - வைதாளிகர் : வைகறைப் பொழுதில் அரசனைத் துயிலெழுப்பப் பாடுவோர்.

ககூரு. அரண் - நீர், நிலம், மலை, காடு இவைகளாற் செய்யப்படும் தலை நகர்க்காப்பு.

ககூசு. திரளை - திரண்ட வடிவமுள்ள கோளம், குண்டு. மகாநாளிகம் - இது பீரங்கி யாகும். நெருப்பு உண்டாக்குந் துகள் - வெடிமருந்து.

ககூகூ. மயிர்வினைஞர் - நாவிதர். துன்னகாரர் - தையற்காரர்.

உ00. இரலை - ஊதிடுகொம்பு. இயம் - வாத்தியப்பொது.

வரைவின் மகளிர், இசைக்கருவியாலும் மகளிராலும் சீவிக்கும் நடர் முதலியோர், நெய்தற்றொழில் செய்வோர், பறவைகளாற் சீவிப்போர், ஓவியம் வரைவோர், தோற்றுன்னர், இல்லங்களை யலகிடுவோர், பாத்திரம் தானியம் ஆடை இவற்றைத் தூய்மைசெய்வோர், அமளி விதானம் விரிப்பு இவற்றை யுண்டாக்குவோர், அரசன் ஆணையை நடத்துவோர், வியர்தோன்றுவாறு நறுமணப்புகை யுண்டாக்கும் பொருள்செய்வோர், அடைப்பையேந்துவோர், இழி தொழில் புரிவோர், சிறுதொழில் புரிவோராகிய இவ்வெல்லோரையும் அரசன் அவ்வக் காரியங்களுக்கேற்ப நியமித்தல் வேண்டும். கசூச-உ0ச

வாய்மைகூறல் பிறர்க்குதவிபுரித லாகிய இவ்விரண்டுஞ் சிறந்த அறங்களாகக் கூறப்படும். ஆதலின் அரசன், இவ்விரண்டினையுமுடைய வினைசெய்வாரை என்றுங் காத்தல் வேண்டும். உ0ரு

எல்லாத் தீவினைகளினுஞ் சிறந்தது பிறர்க்குத் துன்பஞ் செய்தலாகும். அதனினுஞ் சிறந்தது பொய் கூறுதலாம். ஆதலின் அரசன் இவ்விரண்டினையுமுடைய வினைசெய்வாரை ஒழித்துவிடல் வேண்டும். உ0சு

எவ்வமயம், எக்காரியம் செய்தற்கும் சொல்லுதற்கும் தகுதியுடையதோ, அவ்வமயம் அதனை அரசனுக்கு அறிவித்துச் சொல்லியுஞ் செய்தும் விரைந்து முடிக்கும் சிறந்த வினைசெய்வான் மிகவும் பாராட்டப்படுபவனாவான். உ0எ

## கரு. அரசன் திருமுன் அரசியல் வினைசெய்வார் ஒழுகு முறை.

அரசியல்வினைசெய்வான், இரவிற் கடையாமத்தில் துயில் நீத்தெழுந்து, இல்லத்திற் செயற்பாலனவற்றை யாராய்ந்து,பின் மலமூத்திரம் ஒழித்துத் திருமாலை நினைந்து நீராடி, அதன்பின் மூன்று நாழிகையளவிற் காலைக்கடனை முடித்துவிட்டுத் தன் காரியாலயத்தையடைந்து செய்யத் தக்கன தகாதனவற்றை யாராய்தல் வேண்டும். உ0அ-உ0கூ

உ0உ. தோற்றுன்னர் - சக்கிலியர்.

உ0ங. அலகிடல் - துடைப்பத்தால் இடத்தை விளக்கல்.

உ0ச. வியர்தோன்றுமை - வெப்பமின்மையானும்.

உ0ரு. வினைசெய்வார் - வேதனம்பெற்றுக் காரியம் புரிவோர்.

வாயில்காப்போன், அரசன்கட்டளை பெறுமல் அரண்மனையினுட் புகுவோனை உறுதியாகத் தடுத்துவிடல் வேண்டும். பின்னர்ச் சொல்ல வேண்டிய காரியத்தை அரசனுக்கு அறிவித்து அரசன் அனுமதி பெற்று அவனை உட்புகும்படி விடல் வேண்டும். உ௧0

கையிற் கோல் தாங்கி நிற்கும் வாயில்காப்போன் அரசவை நடுவண் அடைந்தோரைக் கண்டு, முறைப்படி அவர் வணக்கங்களை அரசனுக்கு அறிவித்துப் பின்னர் அன்னுரிருத்தற்குரிய இடங்களையுங் குறிப்பிடல் வேண்டும். உ௧௧

அதன்பின் அங்குச் செல்வோன் அரண்மனையை யடைந்து கட்டளை மேற்கொண்டு அரசன் திருமுன் எய்தல் வேண்டும். எய்தி மற்றொரு திருமாலைப் போல் வீற்றிருக்கின்ற வேந்தனை முறைப்படி வணங்கி, அருட்குணமும் பிறருள்ளக்குறிப்பு உணருந் திறனும் வாய்ந்த அம்மன்னவனது இருக்கையின் பாதியில் பார்வையைச் செலுத்தல் வேண்டும். மற்றெப்புறத்தினும் பார்த்தலாகாது. உ௧உ-உ௧௩

வணக்க முதலியன நன்கு பயின்ற அவன், உயிர்க்கும் பொருட்கும் தலைவனும் பிரபுவுமாகிய வேந்தனை எரிகின்ற நெருப்பைப்போலவும், சினமிக்க பாம்பைப் போலவுங் கருதி, அவன்பக்கல் அணுக வேண்டும். உ௧௪

எப்பொழுதும் வேந்தனை முயன்று உபசரித்தல் வேண்டும். "யான் தன்வயத்தனுவேன்" என்று கருதலாகாது. வேந்தன்கொள்கையை உறுதிப்படுத்தி அவற்கு நலந்தருஞ் சொற்களைக் கூறல் வேண்டும். நன்கு ஆராய்ந்து துணியப்பட்ட பொருளை வேந்தன் ஆணை வழிநின்று மொழிய வேண்டும். உ௧௫

மனத்திற்கு உவகைதரும் விளையாட்டுக் கூட்டங்களில் ஒருவர்க்கொருவர் வழக்கு நேர்ந்துழி அவ்வழக்கின்முடிவை அறிந்துளானுயினும், தன் தலைவன் தீர்மானித்த கொள்கையை எதிர்த்து ஒன்றுங் கூறலாகாது. உ௧௬

உ௧உ-உ௧௩. இருக்கையின் பாதியிற் பார்வையைச் செலுத்தல்-அரசிருக்கையை முக நிமிர்ந்து முழுதும் பார்க்காமற் சிறிது முகங்கவிழ்ந்து அவ்விருக்கையின் கீழ்ப் பாதியில் நாட்டத்தைச் செலுத்திப் பணிவு தோன்ற நிற்றல்.

உ௧௪. இக்கருத்து "அகலா தணுகா து தீக்காய்வார் போல்க, இகல்வேந்தர்ச் சேர்ந்தொழுகு வார்" என்னுந் திருக்குறளிற் புலப்படல் காண்க.

அரசனால் அழைக்கப்பட்டோன், எப்பொழுதும் பணிவுமிக்க வேடமுடையனாய்ச் சென்று கைகூப்பி நிற்றல் வேண்டும். தன் உடலின் முன்பாகத்தை ஆடையால் மறைத்து, வணக்கமுடையனாய், முதலில் அம்மன்னவன் மொழியைக் கேட்டு, அவன் கட்டளையை ஏற்றுப் பின்னர் மீண்டும் வணங்கித் தன் காரியங்களைத் தெரிவித்துக்கொள்ளல் வேண்டும். அவ்வேந்தன் பக்கங்களிலாதல் முற்பக்கத்தாதல் (அவன்கட்டளையிடினும்) இருக்கையில் இருத்தலாகாது. (அவன்கட்டளை கடவாமைப்பொருட்டு இருக்கையைக் கையாற்றொடல் வேண்டுமென்பது கருத்து.) உகஎ-உகஅ

பெருநகைபுரிதல், இருமுதல், உமிழ்தல், துரும்பு கிள்ளல் முதலிய வீண்செயல், ஆவித்தல், உடம்பு முறித்தல், கணுக்களை நொடித்தலாகிய இவற்றை ஒழித்தல் வேண்டும். உகசு

அரசன் கட்டளையிட்டருளிய இடத்தை யடைந்து மகிழ்ச்சியுடைனா யிருத்தல் வேண்டும். அனுபவ முதிர்ச்சியும் சிறந்த அறிவுமுடையனாயினும், அரசன் முன்னிலையில் இறுமாப்பை யொழித்தல் வேண்டும். உஉ0

நலத்தை விரும்புவோன், தன் தலைவனுக்குக் கேடு நேருங்காலத்தினும், அவன் நெறிபிறழ்ந்து செல்லும் பொழுதும், காரியத்திற்குரிய அமயங் கடக்குங்காலங்களினும் அவனால் வினவப்படாமலே நயம் பயக்குஞ் சொற்களைக் கூறலாம். உஉக

மகிழ்ச்சி செய்வனவும், உண்மையானவும், நெறி பிறழாதனவும், அறம் பொருள் பயப்பனவுமாகிய சொற்களைக் கூறல்வேண்டும். அளவைகளான் இயன்ற சொற்களால் வேந்தற்கு இதம் பயப்பனவற்றை யறிவித்தல் வேண்டும். உஉஉ

மற்றை அரசர்களின் புகழை யாதல் நீதியின் பயனை யாதல் எடுத்துரைத்தல் வேண்டும். இன்னும், "வேந்தர் பெரும! நீயே வள்ளலும், அறவோனும், வீரனும், நீதியாளனு மாகின்றாய். ஒருபொழுதும் நின்

உகசு. ஆவித்தல் - கொட்டாவி விடுதல், உடம்பு முறித்தல் - உடம்பை ஒலியுண்டாம்படி இயக்கல்.

உஉ0. அரசன் கட்டளையிட்ட இடமென்றது-அவன் இருமருங்கும் முன்னிலையு மல்லாத இடமாகும்; உகஅ-ஆம் சுலோகத்தில் அரசன் பக்கங்களிலும் முற்பக்கத்திலும் அவன் கட்டளையிடினும் இருத்தலாகா தென்றமையான்.

நெஞ்சத்தில் அநீதி இருப்பதின்று" எனவும், அநீதியால் இழிவெய்திய அரசர் இன்னர் இன்னரெனவும் அவன் முன்னிலையில் என்றுங் கூறல் வேண்டும். உஉரு-உஉச

அரசரெல்லோரினும்நீயே உயர்ந்தவனென்று சிறப்பித்துரைத்தலாகாது. காலம் இடங்களை யுணர்ந்து, உரிய காலத்திலும் உரிய விடத்திலும் பிறர் காரியத்தைச் செய்து முடித்தல் வேண்டும். உஉரு

பிறர் காரியத்திற்குக் கேடு விளையாவண்ணம் அரசன்பால் என்றும் பேசுதல் வேண்டும். குடிகளின் காரியத்தைக் குறித்து அரசன் பற்றில்லாதவனாக இருக்கும்வண்ணம் செய்தலாகாது. உஉசு

சிறந்த அறிவுடையான், பசிப்பிணியாற் பற்றப்பட்டுக் கட்டையைப்போல் உலர்ந்து வற்றினனாயினும், கேடு பயக்குந் தொழிலை ஒருபொழுதும் விரும்பலாகாது. உஉஎ

எவன் எச்செயலில் நியமிக்கப்பட்டானோ அவன் அச்செயலில் மிகவும் பற்றுடையனாக விருத்தல் வேண்டும். பிறனொருவனது அதிகாரத்தை விரும்புதலாகாது. அங்ஙனமே யார்மாட்டும் அழுக்காறு கொள்ளலுமாகாது. உஉஅ

எவன்மாட்டுங் குறை கண்டு வெளிப்படுத்தலாகாது. அக்குறையைத் தன் ஆற்றலாற் போக்கி நிறைவித்தல் வேண்டும். எப்பொழுதும் பிறர்க்குதவி செய்தலினுஞ் சிறந்ததாக நட்புரிமையை யுண்டாக்குவது வேறொன்று மின்று. உஉகூ

ஒருவனுக்கு 'நின் காரியத்தைச் செய்து தருவேன்' என்று உறுதி கூறி அதனைச் செய்யாமல் தாழ்த்தலாகாது. ஆற்றலுடையனாயின் விரைந்து முடித்தல் வேண்டும். அவா மேற்கொண்டு நெடுநாட் காத்திருக்குமாறு செய்தலாகாது. உ௩0

தன் தலைவனுடைய இரகசியச் செயலையும் சூழ்ச்சியையும் வெளிப்படுத்தலாகாது. அவற்குப் பகைமையினையும் கேட்டினையும் நெஞ்சத்தால் நினைத்தலுங் கூடாது. உ௩க

'அரசன் எனக்கு உரிமைநண்பனாவான்' என்று உறுதியாக நினைத்துக்கொள்ள லாகாது. வேந்தன் விருப்பத்திற்குரிய மகளிர், தீயொழுக்கமுடையார், விலக்கப்பட்டார், பகைவ ராகிய இவர்க

---

உஉ௩-உஉச. "வேந்தர் பெரும........இருப்பதின்று" என்னும் பாராட்டுரைகள் வஞ்சகத்தாற் கூறப்படுவன வல்ல. அரசனை நல்வழிப்படுத்தற்பொருட்டாம்; பின் அநீதியால் இழிவெய்திய அரசரை எடுத்துக் காட்டுதலின்.

ளோடு கலத்தலையும், கலந்து பேசுதலையும், கலந்து காரியஞ் செய்தலை யும் ஒழித்துவிடல் வேண்டும். அரசனுடைய வேடத்தினையும் மொழி யினையும் பிறர் நகையாடுமாறு ஒத்துக்காட்டலாகாது. உ௲உ-உ௲௩

ஒருவன் தான் நிறைந்த செல்வமும் பேரறிவுமுடையனுயிருப் பினும், அரசன் குணங்களை அவமதிக்க விரும்புதலாகாது. நற்செயல் நல்லுணர்ச்சியுடையனுய்த் தன் தலைவனுடைய விருப்புவெறுப்புக் களையும், இங்கிதம் ஆகாரம் செயல்களால் அவன் உள்ளக் கருத்தை யும் அறிந்துகொள்ளல் வேண்டும். உ௲ச

தன்மாட்டுப் பற்றில்லாத அரசனை விட்டுப் பற்றுமிக்க வேந்தன் பால் இருத்தல்வேண்டும். பற்றில்லாத அரசன், தனக்குக் கேட்டினை யும் தன்பகைவனுக்கு நலத்தையும் விளைவிப்பவனுவான். உ௲ரு-உ௲சு

அவாவை மிக வளர்வித்தும் பயன் விளையாவாறு வஞ்சித்தல், சினமில்லாதவனுயும் அஃதுடையான்போலாதல், அருண் முகங் காட்டியும் பயன்செய்யாதொழிதல், இறுமாப்புமிக்க சொற்களைக் கூறுதல், வாழ்க்கைத்தொழிற்குக் கேடுவிளைவித்தல், தன் குணங்கள் பாராட்டப்படுங்காலத்தும் முகம் வேறுபடத்தோன்றல், அதனேடு வேற்றிடத்திற் செய்யப்படும் மற்றொருசெயலில் நோக்கத்தைச் செலுத்தலாகிய இவை பற்றில்லாத அரசனுக்குரிய இலக்கணங்க ளாம். உ௲எ-உ௲அ

இனி, பற்றுமிக்க வேந்தன் இலக்கணங் கூறப்படும். தன்பால் வருவோனைப் பார்த்தவளவில் மலர்ச்சி யுடையனுதல், அவன் கூறுஞ் சொற்களை அன்போடு கேட்டல், நலமுதலியன வினவல், இருக்கை யீதல், அவனுக்குத் தனிமையிற் காட்சிகொடுத்தல், தனிமையில் அவ்வனை ஐயுருமை, அவன் செய்திகளைக் கேட்டு முகமலர்ச்சியுடைய னுய்த் தோன்றல், அவன்பாலுள்ள வேறு சில செயல்கள் தனக்குப் பிரியமில்லாதன வாயினும் அவற்றை மகிழ்ந்து ஏற்றுக்கொள்ளல், அவன் தரும் கையுறை சிறுவிலையுடையதெனினும் அவற்றைப் பெறுதல், வேறுபல நிகழ்ச்சிகளுக்கிடையில் மலர்ந்த முகமுடைய னுய் அவனை நினைந்து பாராட்டல் ஆகிய இவை பற்றுமிக்க அரசன் இலக்கணங்களாம். இவ்விலக்கணம் வாய்ந்த அரசன்பால் வினைசெய் தலே தக்கதாம். உ௲௯-உசா௩

அவ்வரசியல் வினைசெய்வான், அரசன் உதவிய ஆடை, அணி முதலிய அரசியல் அடையாளப் பொருள்களை எப்பொழுதும்

---

உ௲௩. ஒத்துக்காட்டல் - பரிகாசஞ் செய்தல்.

அணிந்துகொள்ளல் வேண்டும். தன் அதிகாரச்செயலில் உள்ள குறைவுமிகுதிகளை எப்பொழுதும் தலைவற்கு அறிவித்தல் வேண்டும். தலைவனைப் பற்றிய செய்திகளைப் பாராட்டல் வேண்டும். அவன் கூறுஞ் சொற்களைக் கேட்கவேண்டும். உசச

ஒற்றராலும் சூசகராலும் நேர்ந்த பிழையால் அரசன் மாறுபட்டுப் பேசுவானாயின், அச்சொல்லை வாய்வாளாமை மேற்கொண்டு கேட்கவேண்டும். ஆனால் அச்சொல்லை உண்மையைப்போல் ஏற்று உடன்படலாகாது. உசரு

பற்று மிக்க வேந்தன் கேடெய்தி யிருப்பின், அவனை ஒரு பொழுதும் விலக்கலாகாது. ஒருவன் அன்போடளித்த சோற்றை ஒரு பொழுது உண்ணினும், அது குறித்து அவன் நலத்தை என்றும் நினைத்தல் வேண்டும். அங்ஙனமாயின் தன்னை முழுதுங் காக்கும் தலைவனுக்கு யாதுதான் செய்யத் தகாதது? உசசு-உசஎ

தலைவனுக்குத் தக்க காலத்தில் மிகுதியான பணியைச் செய்தலால் தாழ்ந்தவனும் உயர்ந்தவனாவான், பணி யியற்றுவதில் மடி முதலியன மேற்கோடலான் உயர்ந்தவனும் தாழ்ந்தவனாவான். உசஅ

எப்பொழுதும் பணி செய்வதிற் பற்றுடைய வினைசெய்வான், வேந்தன் அன்பிற் குரியனாவான். அவன் தன் அதிகாரத்திற்குரிய காரியங்களை விரைந்து செய்தலால் அரசன் மனம் இன்புறும். உசகூ

வினைசெய்வான், தன்னிலைக்குத் தகாத இழிந்த செயலை ஆராயாமற் செய்தலாகாது. அரசனும் அவனை அங்ஙனஞ் செய்யும்வண்ணம் கட்டளையிடலாகாது. அவ்விழிதொழில் செய்தற்குரிய பணியாளில்லாதிருப்பின், அவ்வமயம் செய்தற்குரிய அவ்விழிதொழிலை உயர்ந்தவனும் அரசன்பொருட்டுச் செய்யக் கடவன். எக்காரியத்தில் அரசன் பிரியமுடையனா யிருக்கின்றானோ அச்செயலைத் தனக்கு விருப்பமில்லாததாக எண்ணலாகாது. தன் அதிகாரத்தின் பெருமையை ஒருபொழுதும் வெளிப்படுத்தலாகாது. உருO-உருஉ

அரசனால் அதிகாரம் பெற்று வினைசெய்வார், தத்தம் அதிகாரங்களைக் காத்தற்பொருட்டுத் தம்முள் ஒருவர்க்கொருவர் அழுக்காறெய்தலாகாது. ஒருபொழுதும் மனம் வேறுபடுதலு மாகாது. உருங

எந்நாட்டில் வினைசெய்வார்குழுவும் வேந்தனு மாகிய இருதிறத்தாரும் தம்முள் அன்பு பூண்டு நல்லொழுக்க முடையராய் இருக்

உசரு. சூசகர் - இவரை சரு - ஆம் சுலோகக் குறிப்பிற் காண்க.

கின்றார்களோ, அந்நாட்டில் திருமகள் அளவிலளாய்ச் செழித்து வளர்ந்து துணை நிற்பவ ளாவாள். உருச

ஒருவன், மற்றொருவன் அதிகாரத்தில் நிகழ்ந்த பிழையை அறிந்துளனாயினும், அதனை அரசனுக்கு உரைத்தலாகாது. அரசனும் வினைசெய்வான் ஒருவன்முகமாக மற்றொரு வினைசெய்வான் செயலை ஒரு பொழுதும் கேட்டலாகாது. உருரு

அரசனுக்கு நல்லன இன்ன தீயன இன்னவென்று அறிவியாத அதிகாரிகள், வினைசெய்வார் தன்மையை மேற்கொண்டு மறைந்தொழுகும் பகைவராவர். உருசா

அமைச்சர் முகமாக நல்லன தீயனவற்றைக் கேட்டுணராத அரசன், அரசுருவமாக நின்று குடிகளின் பொருள்களைக் கவர்ந்து கொள்ளுங் கள்வனாவான். உருஎ

அரசிளங்குமரர்களால் அரசியற்செய்திகளைப் பற்றி நன்கு வினவப்பட்ட அமைச்சர்கள், அது குறித்து அவர்களோடு பகைமை மேற்கொள்ளுவாராயின், அவ்வமைச்சர் மறைந்தொழுகுங் கள்வராவர். உருஅ

அரசிளங்குமரர் சிறுவராயினும் அவரை அமைச்சர்கள் சிறுமையாக எண்ணலாகாது. எப்பொழுதும் அழகிய பண்மைச்சொற்களால் அவரை விழிப்புடன் பெருமைப்படுத் தழைத்தல் வேண்டும். உருகூ

அவ்விளவரசரின் தீய செயல்களை ஒருபொழுதும் அரசனுக்கு அறிவித்தலாகாது. மகளிர்பாலும் புதல்வர்மாட்டும் உள்ள மையற் பற்று மிக்க வலி யுடையதாகும். ஆதலின், அவ்விருவரையும் பற்றிப் பழித்துரைத்தல், உரைப்போனது நலத்திற்குக் கேடு விளைவிப்பதாகும். உசா0

அரசியல்வினைசெய்வான், மிகவும் இன்றியமையாததும் உயிர் வாழ்க்கையில் ஐயமுறச் செய்வதுமாகிய ஒரு சிறந்த காரியத்தை "யான் உறுதியாகச் செய்து முடிப்பேன்" எனவும், "கட்டளை தருக" எனவும் அரசன் முன்னிலையிற் சூளுற்றறிவித்து, விரைந்து தன் ஆற்றற்கு ஏற்றவாறு அதனைச் செய்ய முயலல் வேண்டும். உசாக

---

உசாக. உயிர்வாழ்க்கையில் ஐயமுறச் செய்தலாவது - தொடங்கப்பட்ட காரியம் நிறைவேறுவதற்குள், தொடங்கினவன் உயிர் நீங்கிவிடுங்கொலோ, வென்று ஐயமுறுத்துவது. சூளுறல் - சபதஞ்செய்தல்.

அரசியல் வினைசெய்வான், தன் குடும்பத்தைக் காக்கும் நிமித்தம் ஓர் அரிய பெரிய காரியத்தில் அரசன்பொருட்டுத் தன் உயிரையுங் கொடுத்துவிடலாம். குடும்பத்தைக் காக்கும் நிமித்தம் இன்றேல், ஓரோவமயம் அங்ஙனம் உயிரைக் கொடுத்தல் வேண்டுமென்பது அவசிய மின்று. உசுஉ

அரசியல் வினைசெய்வாரெல்லோரும் காரணங் காட்டி அரசன் பாற் பொருள் கொள்ளுவோராவர். அரசனும் சில காரணத்தால் அவ்வினைசெய்வார் உயிரைக் கொள்பவனாவான். அரசன் போர்ச் செயன் முதலிய மிகப் பெருங்காரியம் நேர்ந்துழி, வேதனங்களால் அவ்வினைசெய்வார் உயிர்களைக் கொள்ளலாம். அவ்வினை செய்வாரும் வேதனமுகமாகவே அரசன்பொருளைக் கொள்ளல் வேண்டும். வேற்று வழியிற் கொள்ளலாகாது. அவ்வரசனும் வினை செய்வாரும் இங்குக் கூறிய முறைமையின் அன்றி, வேற்று முறைமையால் உயிரையும் பொருளையும் கொள்வாராயின், தமக்குத் தாமே அழிவு செய்பவராவர். உசுங-உசுரு

அமைச்சர் முதலியோரால் அரசன் எப்பொழுதும் தலைமையாக மதிக்கப்படுபவனாவன். அரசனுக்கு அடுத்தபடியாக வைத்து இளவரசன் மதிக்கப்படுவான். அவனுக்கு அடுத்தபடியாக அமைச்சனை இறுதியாகவுடைய ஒன்பதின்மரும் மற்றை வினைசெய்வாரான் மதிக்கப்படுவர். அவர்க்கு அடுத்தபடியாகவைத்து மற்றை அரசியற்றொழில்புரிவார் மதிக்கப்படுவர். ஆயுதிகன் மந்திரியையொப்ப மதிக்கப்படுவன். அவனுக்கு அடுத்தபடியாகச் சாகச்சிரிகன் மதிக்கப்படுவன். உசுசு

அரசனோடு கூடி விளையாடலாகாது. அங்ஙனம் விளையாட நேரின் வேந்தனைச் சிறப்பித்தல்வேண்டும். அரசனுடையமனைவி புதல்வி இவர்களை அமைச்சர் அவமதித்தெண்ணலாகாது. உசுஎ

அரசியல் வினை செய்வார், அரசனுடைய சுற்றத்தாரையும் நண்பர்களையும் அவரவர் தகுதிக்குத் தக்கவாறு பெருமைப்படுத்தல் வேண்டும். வேந்தன் அழைப்பின், பெரிய காரியம் பலவிருப்பினும் அவற்றை விட்டு விரைந்து போதல் வேண்டும். உசுஅ

---

உசுசு. ஆயுதிகன், சாகச்சிரிகன் இவ்விருவ ரிலக்கணங்களை இவ்வத்தியாயத்து கசஉ - ஆம் சுலோகக்குறிப்பிற் காண்க.

உசுஎ. சிறப்பித்தலாவது - விளையாட்டில் வேந்தன் தோல்வியுறும்படி செய்யாமை.

நன்றாகச் சூழ்ந்து துணியப்பட்ட அரசியற்காரியத்தை நெருங்கிய நண்பனுக்குங் கூறலாகாது. வேதனத்தையன்றி வேந்தன் பொருளில் தமக்குத் தரப்படாத தொன்றை விரும்புதலாகாது. உசாகூ

அரசன் கட்டளையின்றித் தாம் மேற்கொண்ட காரியத்தை நிறைவேற்றுதற்கிடையில், அக் காரியத்திற்குரிய வேதனத்தைப் பெற விரும்பலாகாது. பொருட்கண் ணுள்ள அவாவினால் எனுடைய நற்செயற்குங் கேடிழைத்தலாகாது. உஎ0

அரசியல் வினைசெய்வான் தன் மனைவியையும், மக்களையும், பொருளையும், உயிரையும் இழக்க நேரினும் தக்க காலத்தில் அரசனை நன்கு காத்தல் வேண்டும். கைக்கூலி வாங்குதலை அறவே யொழித்தல் வேண்டும். வேந்தனை மாறுபடப் போதித்தலாகாது. உஎக

முறைகடந்து தண்டித்தலையும் எப்பொழுதும் கடுந்தண்டம் இழைத்தலையு முடைய அரசனைத் தனியிடத் திருத்தி, அரசியல் அழியாமைப்பொருட்டு நன்கு இடித்துக் கூறல் வேண்டும். உஎஉ

புதிய இறைப்பொருள் சுங்கம் விதித்தலால், குடிகள் வேந்தனிடத்து மிக்க நடுக்கங் கொள்வாராதலின், அங்ஙனம் குடிகளுக்குத் தீங்குபயக்குமுகமாக அரசனுக்கு நலம் பயக்குங் காரியத்தைச் செய்தலாகாது. உஎங

வேந்தன் உயர்குலத் துதித்தோனாயினும், குணம் நீதி பலம் இவற்றில் வெறுப்புள்ளவனாகவும் அறமில்லாதவனாகவும் இருப்பானாயின், நாட்டிற்கு அழிவு செய்யும் அவ் வேந்தனை யொழித்துவிடலாம். உஎச

புரோகிதன், பிரதிநிதி முதலிய தலைமையதிகாரிகளின் உடன்பாடு பெற்று, அவ்வேந்தன்வழித் தோன்றிய நற்குண மிக்கானொருவனை அரசியலைக் காத்தற்பொருட்டு அவ்வேந்தன் பதவியில் வைத்து முடி சூட்டல் வேண்டும். உஎரு

விடுபடையாளன், அரசன்பால் நின்று ஓர் அம்பு வீழ்தற்குரிய சேய்மையிடத்து வெளிப்புறத்தே எப்பொழுதும் நிற்றல் வேண்டும். வாள் முதலிய விடாப்படையுடையான், பத்துமுழ அளவுள்ள தூரத்தில் நிற்றல் வேண்டும். அரசன் அன்பிற்குரியார் அவன் கட்

உஎங. இறைப்பொருள் - குடிகளின் வருவாயில் அரசனுக்குரிய ஆறிலொரு கூறு முதலியன. சுங்கம் - மரக்கலத்திலும் பண்டியிலும் வரும் பண்டங் கட்கு வாங்கும் இறை; வாணிகம் புரிவார்க்கு அதனாற் கிடைக்கும் ஊதியத்தில் அரசனுக்குரிய இறைக்கூறுமாம்.

டளேயிட்ட இடத்திலும், அமைச்சரும் எழுத்தாளரும் ஐந்துமுழ அளவுள்ள தூரத்திலும் எப்பொழுதும் இருத்தல் வேண்டும். அரசன் படைத்தலைவரோடன்றித் தானே ஆயுதங்களைத் தாங்கி அரசவைக்கட் புகுதலாகாது. உஎசு-உஎஎ

புரோகிதன் எல்லாரினும் மிகச் சிறந்தவனுவான். படைத்தலைவன் அவனுக்கு அடுத்துச் சிறந்தவனுக எண்ணப்படுவான். நண்பரும் உறவினரும் தம்முள் ஒப்பாவர். அமைச்சர் தலையாயாராக நினைக்கப்படுவர். உஎஅ

மற்றை அரசியல் வினைசெய்யும் அதிகாரிகள் இடையாயாராவர். தரிசகரும் எழுத்தாளரும் கடையாயாராவர். வேதனம்பெற்றுப் பணி புரியும் ஏவலாளர் மிகவும் கடையாயாராக அறியப்படுவர். இழிதொழில்புரிவோர் அவ்வேவலாளரினும் தாழ்ந்தவராக எண்ணப்படுவர். உஎகூ

அரசன் புரோகிதன் முதலியோர்க்கு, முறையே இருக்கையினின்றெழுதல் எதிர் செல்லல், சிறந்த இருக்கையில் இருக்கச் செய்தல், நலமுசாவல், புன்முறுவலோடு பார்த்த லாகிய இச்சிறப்புக்களைச் செய்தல் வேண்டும். மற்றை அரசியற்றொழில்புரிவார் முதலியோர்க்கு, அத்தாணி மண்டபத்து இருக்கையிலிருந்தவண்ணமே மடிமையின்றி அன்போடு கூடிய பார்வையைச் செய்தல் வேண்டும். உஅ0-உஅக

அரசன் புலவர்பாற் கூதிர்க்காலத்துத் திங்கள் போலவும், பகைவர்பால் முதிர்வேனிற்காலத்துக் கதிரவன் போலவும், குடிகள் பால் இளவேனிற் காலத்துப் பகலவன் போலவும், இங்ஙனம் முத்திறத்தார்மாட்டும் இம்மூன்று தன்மைகளையு முடையனுதல் வேண்டும். உஅஉ

அரசன், அந்தணர் அரசர் வணிகர் ஆகிய இவ்விருபிறப்பாளரிடத்தன்றி ஏனையோரிடத்து எளிமையை மேற்கொள்ளலாகாது. அங்ஙனம் மேற்கொள்ளின், அவ்விழிந்தோர், பாகர் யானையை யடக்கி

---

உஎசு-உஎஎ. முழமென்னும் நீட்டலளவையை முதல் அத்தியாயம் கசுஎ-ஆம் சுலோகத்திற் காண்க.

உஅஉ. அரசன் சாற்காலத்துச் சந்திரனைப்போற் புலவரிடத்து மிகவும் தட்பமுடையனுகவும், கடும் வெயிற்காலத்துச் சூரியனைப்போற் பகைவர்பால் மிகவும் வெப்பமுடையனுகவும், இளவெயிற்காலத்துச் சூரியனைப்போற் குடிகள்மாட்டு ஒத்த தட்ப வெப்பங்களை யுடையனுகவும் இருத்தல் வேண்டுமென்பது கருத்து.

வயப்படுத்தல் போல் அவ்வரசனையும் வயப்படுத்து அவமதிப்பர். உஅங

அரசன், தன் கீழ்ப்பட்ட வினைசெய்வாரோடு விளையாடுதலையும், எள்ளிநகையாடுதலையும் மேற்கொள்ளலாகாது. அங்ஙனம் விளையாடலும் நகையாடலும் அரசனுக்கு எப்பொழுதும் அவமதிப்பையும் அச்சத்தையும் உண்டாக்குவனவாம். உஅச

உடன்விளையாடுவோராகிய அவ்வினைசெய்வாரனைவரும் தம்காரியத்திற் பற்றுடையராய் அதனையே சிறந்ததாக ஏற்றுக்கொள்ளும்படி செய்து தம்காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளுதற்பொருட்டு அரசனைத் தனித்தனியே சூழ்ந்துகொள்வர். உஅரு

எள்ளிநகையாடல், நிக்க பொறுமை, விளையாடலாகிய இவற்றால் அரசனுக்கு உண்டாம் தீங்குகளாவன:— அங்ஙனம் விளையாடும் வினைசெய்வார் வேந்தன் சொல்லை விலாதித்தொழித்தல், பழித்துரைத்தல், கடத்தல், வேந்தற்குரிய நுகர்பொருள்களை அவன் உடன்பாடின்றி நுகர்தல், தம் நிலைக்குத் தக ஒழுகாமை, அரசன் சூழ்ச்சிச் செய்திகளையும் கூடாவொழுக்கத்தையும் வெளிப்படுத்தல், அரசனுக்குரிய வேடம் பூணல், எப்பொழுதும் அரசனை வஞ்சித்தல், அரசன்பொருட்டு மகளிரைத் திட்டஞ்செய்தல், அரசன் சினமுடையனுங்கால் அவன்முன்னின்று நகைத்தல், நாணின்றிப் பேசுதல், சிறிது பொழுதில் அரசனைக் கீழ்ப்படியச்செய்தல், அவன் ஆணையைக்கடத்தல், தகாத செயல்களிலும் அஞ்சாமை ஆகிய இவைகளாம். உஅசா-உஅஅ

## கச. எழுதப்படும் பத்திரங்களின் வகைகள்.

வினைசெய்வான் எப்பொழுதும் அரசனது எழுத்து மூலமான கட்டளையின்றி ஒரு காரியத்தையுஞ் செய்தலாகாது. அரசனும், காரியஞ் சிறிதெனினும் பெரிதெனினும் எழுத்தான் அன்றிக் கட்டளையிடலாகாது. உகூ0

எல்லாமனிதர்க்கும் மயக்கம் இயற்கையாதலின், எழுதப்படும் பத்திரமே சிறந்தபிரமாணமாகும். அப்பத்திரத்தாலன்றிக் கட்டளையிடும் அரசனும், அஃதின்றி அரசியற்றொழில் புரியும் வினைசெய்வானுமாகிய இவ்விருவரும் எப்பொழுதும் கள்வராவர். அரசனது

அடையாளமிடப்பட்ட பத்திரமே அரசனாகும்; அரசன் அரசனல்லன். உகுக-உகுஉ

அரசியன்முத்திரையிட்டு அரசனால் எழுதப்படும் பத்திரமே மிகச் சிறந்த தலையாயதாகும். அம்முத்திரையின்றி அவனால் எழுதப்படுவது தலையாயதாகும். அமைச்சர் முதலியோரால் எழுதப்படுவது இடையாயதாகும். நகரத்துமக்களால் எழுதப்படுவது கடையாயதாகும். இவ்வெல்லாம் காரிய நிறைவேற்றத்திற்கு உரிய துணைகளாம். உகுங

அரசனால் நியமனஞ்செய்யப்பட்டுத் தத்தமக்குரியவாகிய அவ்வத்தொழில்களை மேற்கொண்டிருக்கும் அமைச்சரோடு கூடிய இளவரசன் முதலாயினோர், தாம் புரிந்த செயன்முறைகள் வரையப்பட்ட நாட்குறிப்புக்களையும், திங்கட் குறிப்புக்களையும், ஆண்டுக் குறிப்புக்களையும், பலவாண்டுக் குறிப்புக்களையும் முறையே அரசனுக்கு நன்கு அறிவித்தல் வேண்டும். உகுச-உகுரு

காலங் கடப்பின் மக்களுக்கு மறதியும் மயக்கமும் உண்டாகுமாதலின், வினைசெய்வார், அரசன் முதலியோர் அடையாளமிட்டருளிய பத்திரங்களைப் பற்றிய ஞாபகக் குறிப்பைப் பாதுகாத்தல் வேண்டும். உகுசு

முற்காலத்திற் பிரமன், செய்த காரியங்களை நினைவுகூர்தற் பொருட்டு முயன்று சொற்களுக்குரிய எழுத்து ஒலிகளால் நன்கு அடையாளஞ் செய்யப்பட்ட பத்திரத்தை அமைத்து வைத்தனன். உகுஎ

செயன்முறைப் பத்திரம் எனவும் வரவுசெலவு பத்திரம் எனவும் பத்திரம் இருவகைப்படும். வழக்க ஒழுக்கங்களின் வேறுபாட்டால் அவ்விரண்டும் இன்னும் பலவகைப்படுவனவாம். உகுஅ

உண்மையாகக் கூறப்பட்ட விவாத விடயத்தையும், பிரதிவாதியின் எதிர்வாதமாகிய உத்தரத்தையும், ஆராய்ந்து துணிந்த தீர்மானத்தையு முடையது வெற்றிப்பத்திரம் (சயபத்திரம்) என்று கூறப்படும். உகுகூ

---

உகக - உகஉ. எழுத்தினாலேயே அரசியர்காரியம் அனைத்தும் செய்யப்படுதலின் இவ்வாறு கூறப்பட்டது.

உகக. இது நீதிபதியால் வாதி பிரதிவாதிகளின் வழக்குக்களை யாராய்ந்து முடிவு செய்யப்படும் விடயத்தைக் குறிக்கும் பத்திரமாகும்.

சாமந்தர்க்கும், நாடுகாவலன் முதலிய அரசியல் வினைசெய்வார்க்கும் அன்னோர் செய்யவேண்டிய காரியங்களைப் பற்றிக் கட்டளையிடும் பத்திரம் **ஆஞ்ஞாபத்திரம்** என்று கூறப்படும். ௩௦௦

வேள்விசெய்வோர், புரோகிதர், ஆசிரியர், மற்றைப் பெரியோராகிய இவர்கள்பால் வணக்கத்தோடு தெரிவித்துக்கொள்ளுங் காரியம் வரையப்படும் பத்திரம் **பிரஞ்ஞாபன பத்திரம்** என்று கூறப்படும். ௩௦௧

“நீவிர் எல்லீரும் எனது ஆணைவழி நின்று உறுதியாகச் செயற்பாலவற்றைக் கேண்மின்” என்றின்னணம் கூறி அரசன் தன் கையெழுத்தோடு காலத்தையுங் குறிப்பிட்டு எழுதி வெளிப்படுத்தும் பத்திரம் **சாசன பத்திரம்** என்று கூறப்படும். ௩௦௨

அரசன் ஒருவன்செய்த பணியாற்றுதல் வீரச்செயல் முதலியவற்றுக்கு மகிழ்ச்சியுடையனாய், அவனுக்கு அவற்றின் அறிகுறியாக வழங்கும் நில முதலியவற்றைக் குறிப்பிடும் பத்திரம் **பிரசாத பத்திரமாகும்.** ௩௦௩

ஒருவனுக்கு “நீ இப்பொருளை அனுபவித்துக்கொள்” என்று அப்பொருளைப்பற்றி எழுதிக்கொடுக்கப்படும் பத்திரம் **போகபத்திரமாகும்.** இவனுக்கு இவ்வளவு இறைப்பொருள் என்று குறிப்பிட்டு எழுதிக்கொடுக்கப்படும் பத்திரம் **கரதபத்திரமாகும்.** கையுறையாகக் கொடுக்கப்படும் பொருளைப் பற்றியது **உபாயன பத்திரமாகும்.** இப்பொருள் ஒருவன் அன்றி இருவர் மூவர் மக்களால் அனுபவிக்கற்பாலது என்று அளவிட்டு எழுதிக்கொடுக்கப்படும் பத்திரம் **புருடாவதிக பத்திரமாகும்.** காலத்தைக் குறிப்பிட்டு எழுதிக்கொடுக்கும் பத்திரம் **காலாவதிக பத்திரமாகும்.** ௩௦௪

உடன்பிறந்தார் முதலியோர் மனவொற்றுமையோடு தம் குடும்பத்துப்பொருளைக் கூறிட்டுக்கொண்டு, அதுபற்றித் தம்முள் எழுதிக்கொள்ளப்படுவது **பாக பத்திரமாகும்.** ௩௦௫

இல்லம் நில முதலியவற்றை இடையூறின்றியும், பொய்யுரையின்றியும், வெளிப்படையாகவும், ஒருவனுக்கு நன்கொடையாக உதவி எழுதிக்கொடுக்கப்படுவது **தான பத்திரமாகும்.** ௩௦௬

---

௩௦௧. பிரஞ்ஞாபனம் - வணக்கத்தோடு அறிவித்துக்கொள்ளல்.

௩௦௨. சாசனம் - கட்டளை.

௩௦௪. கரதம் - அரசிறை கொடுத்தல். புருடாவதிகம் - புருடரின் அளவை அறுதியிடுவது. காலாவதிகம் - காலத்தின் அளவை அறுதியிடுவது.

இல்லம் நில முதலியவற்றை அவற்றிற்குத் தக்க அளவுள்ள விலைப்பொருள் பெற்றுக்கொண்டு விற்று எழுதிக்கொடுக்கப்படுவது **கிரய பத்திரமாகும்.** ௩௦௭

இயங்கியற்பொருள் நிலையியற்பொருள்களை ஈடாக வைத்துப் பாதுகாத்து அனுபவித்தலாகிய செயலைக் குறிப்பிட்டு எழுதிக் கொடுக்கப்படுவது **சாதி பத்திரமாகும்.** ௩௦௮

சிற்றூர்களும், பெரிய நாடும் ஒருங்கு கூடித் தம்முள் ஒற்றுமை குறித்தெழுதிக்கொள்ளும் பத்திரம் **சத்திய லேக்கியம்** என்று கூறப்படும். அரசர்கள் தம்முட் பகைமையின்றி அரசியலறங்களைப் பேணுதற்பொருட்டு எழுதிக்கொள்ளும் பத்திரம் **சம்விற்பத்திரமாகும்.** ௩௦௯

வட்டி கொடுப்பதாகப் பொருள்பெற்றுக்கொண்டு நல்ல சான்றுகளோடு எழுதிக்கொடுக்கப்படுவது **கடன் பத்திர**மென்று அறிவுடையோர் கூறுவர். ௩௧௦

ஒருவனைப் பற்றிய பழி, ஆதாரமின்மையால் விலக்கப்பட்டுழிச் சான்றுகளோடு எழுதிக்கொடுக்கப்படுவதும், கழுவாய் செய்யப்படுங் கால் சான்றுகளோடு எழுதிக் கொடுக்கப்படுவதும் **சுத்தி பத்திரம்** என்று அறிவுடையோரால் கூறப்படும். ௩௧௧

வாணிகம் புரியும் முயற்சி யுடையார், தத்தம் பங்குப் பொருள்களைத் தொழிற்பொருட்டு ஒன்றுகூட்டிச்சேர்த்து, அது குறித்து எழுதிக்கொள்ளும் பத்திரம் **சாமயிகபத்திர**மென்று கூறப்படும். ௩௧௨

நீதிமன்றத்தவர், அமைச்சன் முதலிய பிரகிருதிகள், மற்றை அரசியல் அதிகாரிகள், வழக்கறிஞர் முதலிய அவைக்களத்துள்ளோராகிய இவர்களால் எழுதப்படாமல், வாதி பிரதிவாதிகள் தம்முள் உடன்பட்டு எழுதிக்கொள்வது **சம்மதபத்திர**மென்று அறியப்படும். ௩௧௩

ஆண்டான் அடிமை என்னும் இவ்விருவருடைய தன்மைகளையும் புலப்படுத்துதற்பொருட்டு, "திரு", "மங்கலம்" என்றெழுதப்படுஞ் சொற்களோடு கூடித் திகழ்வதும், தடையின்மைகளையுடையதும், ஐயமொழிப்பதும், வெளிப்படையான பொருளையுடையதும், விளக்கமான எழுத்துக்களையுஞ் சொற்களையு முடையதும், மற்றையோரினின்று வேறுபடுத்துச் சிறப்பின் உணருமாறு ஆண்டான்

---

௩௦௮. சாதி பத்திரம் - இஃது ஒற்றிப் பத்திரமாகும்.

௩௧௧. கழுவாய் - பிராயச்சித்தம்.

அடிமை இவ்விருதிறத்தினரின் தந்தை முதலியோரின் பெயர்களையுடையதும், ஒருமை இருமை பன்மை மொழிகளால் தகுதிக்குத் தக்கவாறு பாராட்டப்படுவதும், ஆண்டு திங்கள் பக்கம் நாள் பெயர் சாதி முதலியன குறிக்கப்படுவதும், காரியத்தைப் புலப்படுத்துவதும், இயைபுடையதும், அடிமையின் வணக்கத்தையும் தலைவன் வாழ்த்தினையுமுடையதும், தலைவனையும் பணியாளையும் அவன் வினையையுங் குறிப்பிட்டு அத்தலைவனும் பணியாளனும் தம்முள் எழுதிக்கொள்வதுமாகிய பத்திரம் மங்கலபத்திரமென்று கூறப்படும். ௱.கச-௱.கஎ

முற்கூறிய குணங்கள் வாய்ந்ததும், ஒருவன் தனக்குப் பிறர் செய்த தீங்கை விளக்கமாக அறிவிப்பதுமாகிய பத்திரம் அபியோக பத்திரமெனவும், துன்பநிலை யுணர்த்தும் பத்திரமெனவுங் கூறப்படும். ௱.கஅ

இதுகாறும், காரிய நிகழ்ச்சிகளைப் பற்றிய பத்திரவகைகளின் இலக்கணங்கள் சுருக்கிக் கூறப்பட்டன. இனி, வரவு செலவு எச்சங்களை அறிவிக்கும் ஆயவிய பத்திரவகைகள் சுருக்கிக்கூறப்படும். ௱.ககூ

### கரு. அரசனுக்குரிய வரவு செலவு முதலியன.

அவ் வரவுசெலவுபத்திரம், வியாப்பிய வியாபக வேறுபாட்டாலும், தனித்தனி சிறந்த குறிப்பிடுதலாலும், உண்மையான விலை அளவு முதலியவற்றாலும் பல்வேறுவகைப்படும். ௱.உ0

யாண்டுதோறும் திங்கடோறும் நாடோறும் தனக்குரியனவாக வரும் பொன், பசு, நெல், முதிரை முதலிய பொருள்கள் வரவு(ஆயம்) என்னும் பெயரினவாம். பிறர்க்குரியனவாகச் செய்யப்படும் அப் பொன் முதலியன செலவு (வியம்) என்னும் பெயரினவாம். ௱.உக

வரவு, புதியதெனவும் பழையதெனவும் இருவகைப்படும். அவற்றுட் பழையது சஞ்சிதம் என்னும் பெயரினையுடையதாம். செலவு நுகரப்படுவதெனவும், பொருண்மாற்றெனவும் இருவகைப்படும். ௱.உஉ

---

௱கஎ. மங்கலபத்திரம் - இதனை க்ஷேமபத்திரம் என்று கூறுவர்.

௱கஅ. அபியோகபத்திரம் - இதனைப் பாஷாபத்திரம் என்று கூறுவர்.

௱உ0. இங்குக்கூறிய வியாப்பியம் வரவுசெலவுகளின் சிறு பிரிவுகளையும் குறைவையும், வியாபகம் பெரும்பிரிவுகளையும் மிகுதியையும் உணர்த்துவனவாம். பின்வரும் சுலோகங்களிலுள்ள வியாப்பிய வியாபகங்களுக்கும் இங்ஙனமே ஏற்ற பெற்றி பொருள் கொள்க. வியாப்பிய வியாபகங்கள் இன்னவென்பதைப் பின்வரும் ௱எச-ஆம் சுலோகத்திற் காண்க.

௱உக. முதிரை - துவரை, பயறு முதலியன.

சஞ்சிதப்பொருள் வரவு பிறர்க்குரியதெனத் துணியப்பட்டதும், இன்னார்க்குரியதெனத் துணியப்படாததும், தனக்குரியதெனத் துணியப்பட்டதும் என மூன்று வகைப்படும். ௩௨௩

அவற்றுள், பிறர்க்குரியதெனத் துணியப்பட்ட வரவுப்பொருள் **ஔபநிதிகம் யாசிதகம் ஔத்தமர்ணிகம்** என மூவகைப்படும். ௩௨௪

நல்லோரால் நம்பி அடைக்கலமாக வைக்கப்பட்ட பொருள் **ஔபநிதிக**மாகும். வட்டி முதலியன வின்றிக் கொடுப்பதாகப் பிறர்பால் வேண்டிப்பெற்ற பொருளும், அங்ஙனம் பெற்ற பிறர் அணிகலன் முதலியனவும் **யாசிதக**மென்று கூறப்படும். ௩௨௫

வட்டியோடு தருவதாகப் பேசிக் கடனாக வாங்கிய பொருள் **ஔத்தமர்ணிக**மாகும். வழி முதலியவற்றிற் கண்டெடுக்கப்பட்ட பொருள் முதலியன இன்னார்க்குரியவெனத் துணியப்படாதனவாகும். ௩௨௬

தனக்குரியதெனத் துணியப்பட்ட பொருள், **இயல்பினுயது மிகுதி** என இருவகைப்படும். ௩௨௭

தாயப்பொருளினின்றும், தன்னெறியின் முயற்சியினின்றும், நாடோறும் திங்கடோறும் ஆண்டுதோறும் உறுதியாகக்கிடைத்து வரும் ஊதியம் இயல்பினுயது என்று கூறப்படும். தாயப்பொருளும் தானத்தாற் கிடைக்கும் பொருளும் இயல்பினும்பொருள்களுள் மிகச் சிறந்தனவாகும். ௩௨௮

கொண்டுவிற்றலின் ஊதியமாகக் கிடைக்கும் பொருளும், வட்டியாற் கிடைக்கும் பொருளும், வேள்விசெய்வித்தன் முதலியவற்றாற் பெறும் பொருளும், பரிசிலாகவந்த பொருளும், வேதனமாகப்பெறும் பொருளும், போரில் வெல்லுதன் முதலியவற்றால் அடைந்த பொருளும், தனக்குரிய வெனத் துணியப்பட்டபொருள் வகையில் **மிகுதி**யின்பாற்படுவனவாம். இவை யல்லாத பிறவெல்லாம் இயல்பினுய தன்பாற் படுவனவாம். ௩௨௯-௩௩0

தனக்குரியனவாய எல்லாச் சஞ்சிதப்பொருளும் முன்னை ஆண்டின் எஞ்சியதெனவும், நிகழும் ஆண்டில் உண்டாயதெனவும் இருவகைப்படுவனவாம். ௩௩௧

---

௩௨௪. ஔபநிதிகம் - உபநிதியாக வைக்கப்பட்டது. ஔத்தமர்ணிகம் - கடனுவாங்கியது. உத்தமர்ணன் - கடன்கொடுப்பவன்.

மிருதி இயல்பினுடையது என்னும் இருவகைத்தாய அப்பொருள், பார்த்திவம் அதனின் வேறு எனப் பின்னரும் இருவகைப்படும். நிலப் பகுதிகளினின்று உண்டாகும் ஊதியம் பார்த்திவமென்று கூறப்படும். கூகூஉ

அப் பார்த்திவப்பொருள் இயற்கையாகப் பெய்யு மழைநீர் முதலியவற்றாலும், செயற்கையாக அமைக்கப்படும் ஏரி குள முதலியவற்றின் நீராலும், நாடு நகரம் சிற்றூர்களாலும், தனித்தனி நிலப் பகுதிகளாலும் பல்வேறு வகைப்படும். இன்னும் அது, மிருதி நடுத்தரம் சுருக்கமாகிய பயன்களாலும் பல பிரிவுகளை யுடையதாகும். கூகூகூ

அப் பார்த்திவத்தின் வேறான வரவு வாணிகம் புரிவோர்பாற் பெறும் சுங்கங்களாலும், தண்டங்களாலும், சுரங்கங்களாலும், அரசிறைகளாலும், வாடகைகளாலும், காணிக்கை முதலியவற்றாலும் எய்துவதாகுமென்று அதனை யறிந்த எழுத்தாளர்கள் கூறுவர். கூகூச

எதனை முன்னிட்டு வரவு நேர்ந்துளதோ செலவும் அதனை முன்னிட்டதாக இருத்தல் வேண்டும். அச்செலவும் வரவைப்போல வியாப்பிய வியாபகங்களை யுடையதாகுமென்று கூறப்படும். கூகூரு

அச்செலவு தன்பால் மீண்டு வருவதெனவும், தன் உரிமையொழிவதெனவும் இருவகைப்படும். அவற்றுள், நிதியாக வைக்கப்பட்ட பொருளும், உபநிதியாகச் செய்யப்பட்ட பொருளும், பண்டமாற்றுப் பொருளும், வட்டியோடாயினும் அஃதின்றியாயினுமுள்ள ஆதமர்ணிகப் பொருளும் ஆகிய இவை மீண்டு வருவதன்பாற்படுவனவாம். கூகூசு

கூகூரு. அரசனுக்கு எவ்வெத்துறைகளினின்றும் வருவாய் உண்டாகுமோ, அவ்வத்துறைகளைப்பற்றிய செலவும் இவ்வளவென்று ஆங்காங்குக் குறிப்பிட்டு எழுதவேண்டுமென்பது கருத்து. உதாரணம்:— உழவுநிலங்களுக்கு நீர் விடுதற்பொருட்டுக் கொள்ளும் இறைப்பொருள் இவ்வளவெனவும், அதுபற்றிய செலவு இவ்வளவெனவும் எழுதி, எஞ்சிய வரவுசெலவு அறிதல் வேண்டும். இங்ஙனமே வழிநடை (Road) முதலியவைகளைப் பற்றிய வரவுசெலவுகளையு முணர்க.

கூகூசு. ஆதமர்ணிகம் - அதமர்ணனுக்குக் கொடுக்கப்படுவது. அதமர்ணன் - கடன்வாங்குவோன். நிதி உபநிதி முதலியவற்றைப் பின்வரும் சுலோகங்களிற் காண்க.

**நிதியாவது,** நிலத்திற் றோண்டிப் புதைத்து வைக்கப்பட்டதாகும். **உபநிதியாவது,** மற்றொருவன்பால் நம்பி அடைக்கலமாக வைக்கப்பட்ட தாகும். **பண்டமாற்றாவது,** ஒரு பொருளைப் பெறுதற்கு விலையாகக் கொடுக்கப்படும் பிறிதொரு பொருளாகும். ௩௩எ

**ஆதமர்ணிகமாவது,** வட்டியுடனாதல் அஃதின்றியாதல் பெற் றுக்கொள்வதாகக் கொடுக்கப்பட்ட பொருளாகும். வட்டியோடு பெறுவதாகக் கொடுக்கப்பட்ட பொருள் **கடன்** என்று கூறப்படும். வட்டியின்றிப் பெறுவதாகக் கொடுக்கப்பட்ட பொருள் **யாசிதக் மாகும்.** ௩௩அ

தன்னுரிமை யொழிவதாகிய செலவு இம்மையது, மறுமையது என இருவகைப்படும். ௩௩௯

அவற்றுள், இம்மைச்செலவு பிரதிதானம், பரிசில், **வேதனம்,** **போக்கிய**மென நான்கு வகைப்படும். மறுமைச்செலவு அளவின்றிப் பல்வேறுவகைப்படும். ௩௪0

இவையன்றி மற்றைச் செலவனைத்தும் எப்பொழுதும் மீண்டு வருவதன்பாற்படுவனவாம். **பிரதிதானமாவது** ஒன்றற்கு விலையாகக் கொடுக்கப்படும் பொருளாகும். ௩௪௧

**பரிசிலாவது** பணிசெய்தல் குறித்தும் வீரமுதலியன குறித்தும் ஒருவனுக்கு உவகையோடுகொடுக்கப்படுவதாகும். கூலியாகக் கொடுக் கப்படுவது **வேதன**மென்று கூறப்படும். ௩௪௨

நெல் முதிரை முதலிய தானியங்கள், ஆடை, இல்லம், பூஞ் சோலை, பசு, யானை, தேர், கல்வி, அரசியல், பொருளாகிய இவை முத லியவற்றை ஈட்டுதற்பொருட்டும் காத்தற்பொருட்டும் செலவு செய்யப்படும் பொருள் **உபபோக்கிய**மென்று கூறப்படும். ௩௪௩

---

**௩௪௧.** இங்குக் கூறிய பிரதிதானத்திற்கும் ௩௩எ - ஆம் சுலோகத்திற் கூறப்பட்ட பண்டமாற்றிற்கும் வேறுபாடுண்டு. பண்டமாற்று - பண்டங்களுள் ஒன்றைக் கொடுத்து மற்றொன்றை வாங்குதல். அது கொடுக்கப்பட்ட அளவு வேற்று வடிவத்தோடு தன்பால் மீண்டு வருதலால் மீண்டு வருவதன்பாற் படுவதாயிற்று. பிரதிதானம் ஒரு பண்டத்தின் விலையாகக் கொடுக்கப்படும் பொருளாதலாலும், கொடுக்கப்படுவது பண்டமின்றாதலாலும், அது மீண்டு வாராமையாலும் தன்னுரிமை யொழிவதன்பாற்படுவதாயிற்று.

**௩௪௨.** முதலியனவென்றதால், பல்வகைக் கல்விகளையும் ஓவியஞ் சிற்ப முதலிய கலைகளையுங் கொள்க.

அரசன் தன் நுகர்ச்சியின் நிமித்தம் பொன் அரதனம் வெள்ளி பொற்காசு என்னு மிவற்றிற்கும், தேர் குதிரை பசு யானை ஒட்டகம் வெள்ளாடு செம்மறியாடு என்னு மிவற்றிற்கும், இயம் அம்பு வாள் முதலிய படைக்கலங்கள், ஆடை தானியம் மற்றைப்பண்டங்களாகிய இவற்றிற்கும், சூழ்ச்சி சிற்பம் நாட்டியம் மருத்துவம் விலங்கு பறவை அடிசிலாகிய இவற்றிற்கும் தனித்தனியே சாலைகள் அமைத்தல் வேண்டும். அச்சாலைகளின்பொருட்டுச் செய்யப்படும் செலவு போக்கிய மென்று கூறப்படும். ௩௪௪-௩௪௫

மறுமைச்செலவு, செபம் ஓமம் அருச்சனை தானம் என நான்கு வகைப்படும். ௩௪௫இ

விசேட வரவின் நிமித்தம் செய்யப்படுஞ் செலவு புனர்யாதம் நிவிர்த்தம் எனவும், விசேடச் செலவினுலுண்டாகும் வரவு ஆவர்த்தகம் நிவர்த்தி எனவும் தனித்தனி இரண்டு வகைப்படும். ௩௪௬

எழுத்தாளன் ஆவர்த்தகம் ஒழிந்த வரவுசெலவுகளை எழுதி வைத்தல் வேண்டும். ௩௪௭

நம்பிக்கையுள்ள எழுத்தாளன், விற்றல் கடன்கொடுத்தல் முதலிய பிற எல்லா நிகழ்ச்சிகளிலும் தானே எழுதிக்கொண்டு பொருளைக் கொடுத்தலும், பொருளைப் பெற்றுக்கொண்டு எழுதிக் கோடலும் செய்தல் வேண்டும். ௩௪௮

இவ்வாறு வரவுசெலவுகளை எழுதிவைத்தலால் அவை கூடுதல் குறைதலில்லாதனவாகும். ௩௪௯

இங்குக் கூறியன வல்லாத மற்றை வரவுசெலவுகள் தனித்தனி காரணங்களாலும், காட்சி முதலிய அளவைகளாலும், இயைபுகளாலும், காரிய உறுப்புக்களாலும், வியாப்பிய வியாபகங்களாலும், நீட்டல் எண்ணல் எடுத்தல் முகத்தலாகிய அளவைகளாலும் பல்வேறு வகைப்படுவனவாம். ௩௫௦

அளவை முதலியன அறிந்தோர்க்கு, வழங்குதற்பொருட்டுச் சிலவிடத்து எண்ணலளவையும், சிலவிடத்து நீட்டலளவையும், சிலவிடத்து எடுத்தலளவையும், சிலவிடத்து முகத்தளலவையும், சிலவிடத்து எண்ணல் முதலிய எல்லா அளவைகளும் உடன்பாடானவாம். ௩௫௧

௩௪௩. இச் சுலோகக் கருத்துச் செவ்விதிற் புலப்பட்டிலது.

அங்குலம் முழம் முதலிய அளவை நீட்டலளவையாகும். துலையளவை எடுத்தலளவையாகும். படி முதலிய பாத்திரங்களின் அளவை முகத்தலளவையாகும். ஒன்று இரண்டு முதலிய எண்கள் எண்ணலளவையாகும். இவ்வளவை எவ்விடத்து எவ்வாறு வழங்கப்படுமோ, அவ்விடத்து அவ்வாறு வழங்கும்வண்ணம் அரசன் செய்தல் வேண்டும். ௩௫௨-௩௫௩

உலகத்தில் வழங்குதற்பொருட்டு அரசியன் முத்திரை யிடப்பட்ட பொன் வெள்ளி செம்பு முதலிய காசுகள் மக்களால் வழங்கற்பாலனவாம். பலகறைமுதல் இரத்தினம் இறுதியாக வுள்ளன வெல்லாம் திரவியம் என்று கூறப்படும். பசு, தானியம், ஆடை முதல் புல் இறுதியாகவுள்ளன வெல்லாம் தனம் என்னும் பெயரினவாம். ௩௫௪

வழங்குதற்பொருட்டுத் துணிவுசெய்யப்பட்ட பொன் முதலியன விலைத்தன்மையை யெய்தும். ௩௫௫

இந்நிலத்திற் காரண முதலியவற்றின் கூட்டுறவால் பொருள்கள் உண்டாகின்றன. ஒரு பொருளை ஆக்குதற்கு நேருஞ் செலவே அப்பொருளின் விலையாகும். ௩௫௬

பொருள்களின் விலை, அவற்றின் எய்தற்கெளிமை யருமைகளாலும், குணமின்மையாலும், அஃதுடைமையாலும் வேண்டியாங்குக் குறைவு மிகுதிகளை யுடையதாகும். ௩௫௭

அரசன் இரத்தினங்களுக்கும், பொன் வெள்ளி முதலியவற்றிற்கும் யாண்டும் விலையைக் குறைவாக அமைத்தலாகாது. இவ்விரத்தினம் பொன் முதலியவற்றிற்கு விலைக்குறைவு வேந்தன் பிழையா லுண்டாவதாகும். ௩௫௮

---

௩௫௨-௩௫௩. துலை - தராசு.

௩௫௪. பலகறை - சோகி. திரவியத்தைப் பொருளெனவும், தனத்தைச் செல்வமெனவும் கூறுதல் பொருந்தும்.

௩௫௫. பொன்முதலியன, ஈண்டு அரசியன் முத்திரை யிடப்பட்ட காசுகளைக் குறிப்பனவாம். அவை ஒரு பண்டத்தை விலைக்குக் கொள்ளுங்கால் கொடுக்கப்படுமாதலின் விலைத்தன்மையை யெய்தும் என்றார்.

௩௫௬. ஒரு பண்டத்தை உண்டாக்கல், கொணர்தல், பாதுகாத்தல் முதலியவற்றால் ஏற்படும் பொருட்செலவே அதன் விலையாகு மென்பதாம்.

## ௧௬. அரசன் முதலியோர் கையெழுத்திடு முறையும் கணித பத்திரம் எழுது முறையும்.

வியாப்பிய வியாபகமான விடயங்களைப்பற்றி யெழுதுங்கால், எழுதப்படும் நீண்ட பத்திரத்தை நான்கு கூறிட்டு, அவற்றுள் முறையே முக்காற்கூறு, அரைக்கூறு, காற்கூறுகள் நிரம்பவும், நடுவிடத்தைப் பொருந்திக் குறுக்காகவும் இருக்கும் வண்ணம் சொற்களைப் பத்திபட எழுதல் வேண்டும். ௩௫௯

அம்மூவகைச் சொன்னிரைகளுள், இடப்புறத்தில் நடுவிடம் பொருந்த முக்காற்பங்கு நிரம்புமாறு எழுதப்படுஞ் சொற்பத்தி சிறந்ததாகும். வலப்புறத்தின் முக்காற்பங்கு நிரம்புமாறு எழுதப்படுஞ் சொற்பத்தி மேலதனை நோக்கச் சிறிது தாழ்ந்ததாகும். அரைக்கூறு நிரம்ப எழுதப்படுவது அதனிற் சிறிது தாழ்ந்ததாகும். காற்கூறு நிரம்ப எழுதப்படுவது அதனிற் சிறிது குறைந்ததாக மதிக்கப்படும். ௩௬௦

அழகிய இடைவெளிகளமைய எழுதப்படும் ஒத்த சொற்களினுள்ள எழுத்துக்கள், வடிவத்தால் வேறுபடாதனவாகவும், ஒத்த அளவினவாகவும் இருத்தல் வேண்டும் அப்பத்திரத்தின் தொடக்கத்திலும் இறுதியிலுங் குறிக்கப்படுங் காரியங்கள் எப்பொழுதும் ஒத்தனவாக விருத்தல் வேண்டும். ௩௬௧

---

௩௫௯. இது முதல் ௩௬௧ - வரையுள்ள சுலோகங்களிற் பண்டைக்காலத்துக் கணக்குப்பத்திரம் எழுது முறைகள் கூறப்படுகின்றன. ஈண்டுப் பத்திரமென்றது ஓலையை. முக்காற் கூறு என்றது அவ்வோலையின் நீளத்தை நான்கு கூறிட்டு இடப்புறத்தாதல் வலப்புறத்தாதல் காற் கூறொழித்து எஞ்சியதை. அரைக்கூறு என்றது இடப்புறத்தும் வலப்புறத்தும் காற் காற் கூறொழித்து எஞ்சியநடுப்பாகத்தை. காற்கூறென்றது அங்ஙனமே இருபுறத்தும்காலேஅரைக்கால் காலேஅரைக்காற் கூறொழித்து எஞ்சிய நடுப்பாகத்தை. நடுவிடத்தைப் பொருந்தி என்பது, அவ்வோலையின் மேலுங்கீழுஞ் சிறிதிடம் விட்டு எழுத வேண்டுமென்பதையும், குறுக்காக வென்பது, வேறு சில மொழியாளர் போல் பத்திரத்தின் கீழ்த்தொடங்கி மேலாகவாதல் மேற்றொடங்கிக் கீழாகவாதல் எழுதாமல், அவ்வோலையின் இடப்புறந் தொடங்கி நீண்டவயமாக எழுதவேண்டுமென்பதையும் புலப்படுத்துவனவாம்.

௩௬௦. ஈண்டு நடுவிடம் பொருந்த என்பதற்கு மேலுரைத்தாங்குப் பொருள் கொள்க.

௩௬௧. காரியங்கள்ஒத்தனவாக விருத்தல் - ஒரு விடயத்தைப் பற்றி யெழுதப்படும் பத்திரத்திற் பிறவிடயங்கள் கலவாவண்ணஞ் செய்தல்.

அரசன் தன்பால் வரும் பத்திரத்தைப் பார்த்து ஆராய்ந்து, அதன்கண் எழுதப்பட்ட பொருட்கேற்ப விரும்பியவண்ணம் தன் கையெழுத்தடையாளத்தைச் செய்தல் வேண்டும். ௩௬௨

மந்திரி, நீதிபதி, பண்டிதன், தூதனுகிய இவர்கள் அரசன் காண்டற்பொருட்டு, "எம் அதிகாரத்திற்கு முரணுததாகும் இப்பத்திரம்" என்று அதன்கண் முதலில் எழுதல் வேண்டும். ௩௬௩

அமைச்சன், "இது நன்ருக எழுதப்பட்டுளது" என்று முதலில் எழுதல் வேண்டும். அதன் பின் சுமந்திரன், "இது நன்ருக ஆராய்ந்து பார்க்கப்பட்டது" என்று எழுதல் வேண்டும். ௩௬௪

பிரதானன், "இஃது உண்மைப் பொருளுடையதாகும்" என்று தானே எழுதல் வேண்டும். அதன் பின் பிரதிநிதி, "இஃது அரசனுல் ஏற்றுக்கொள்ளத் தகுதியுடையதாகும்" என்று எழுதல் வேண்டும். ௩௬௫

இளவரசன், "இஃது ஏற்றுக்கொள்ளற்பாலதாகும்" என்று எழுதல் வேண்டும். புரோகிதன், "இப்பத்திரம் எனக்குடன்பாடாகும்" என்று எழுதல் வேண்டும். ௩௬௬

இங்ஙனம் மந்திரி முதலியோர் எழுதிப் பத்திரத்தின் இறுதியில் தத்த முத்திரைகளால் அடையாளமிடல் வேண்டும். அதன்பின் அரசன், "இஃது ஏற்றுக்கொள்ளப்பட்டது" என்று எழுதித் தன் பெயரடையாள முத்திரையை யிடல் வேண்டும். ௩௬௭

இளவரசன் முதலியோர், தமக்குப் பிறகாரியங்களில் மனம் பற்றிநிற்பது குறித்துத் தம்மால் அப்பத்திரம் நன்கு படித்துப் பார்க்கக் கூடவில்லையாயின், அப்பொழுது அவர்கள், "இன்னுல்நன்கு ஆராய்ந்து பார்க்கப்பட்டது" என்று எழுதல் வேண்டும். ௩௬௮

மந்திரி முதலிய எல்லோரும் தத்த முத்திரைகளோடு எழுதிய பின்னர், அரசன் அப்பத்திரத்தை நன்கு படித்துப்பார்ப்பதற்கு அவகாச மில்லாதிருப்பின், மந்திரி முதலியோரிடத்துள்ள நம்பிக்கையால், தாழ்த்தலின்றிப் "பார்க்கப்பட்டது" என்று எழுதல் வேண்டும். ௩௬௯

---

௩௬௨. அரசன் விருப்பின் வண்ணம் பத்திரத்தின் தகுதிக்கேற்பச் சுருக்கமாகவும் விளக்கமாகவும் கையெழுத்திடலாமென்பது கருத்து.

முதற்கண் வரவை நன்றாக எழுதிப் பின்னர் நேர்ந்தவண்ணஞ் செலவையும் எழுதல் வேண்டும். பத்திரத்தின் இடப்பாகத்தில் வரவையும் வலப்பாகத்திற் செலவையும் வரைதல்வேண்டும். ௩எ0

எப்பத்திரத்தில் எழுதப்படும் இரண்டு விடயங்கள் வியாப்பிய வியாபகங்களாகவாதல் ஆதார ஆதேயங்களாகவாத லுள்ளனவோ, அப்பத்திரத்தில் அவற்றை முறையே இடப்பக்கத்து மேலிடத்திற் குறிப்பிடல்வேண்டும். அவ் வெண் காலநியமத்தைப் பற்றியதாகும். ௩எக

அப்பத்திரத்தில் வியாபகப் பொருளை இடப்பக்கத்துக் கீழ்க்கீழ் முறையே எழுதல் வேண்டும். வியாப்பியப் பொருள்களின் விலை அளவு முதலியவற்றை அவ்வியாப்பியத்திற்குரிய பத்தியில் வரைதல் வேண்டும். ௩எ உ

எப்பத்திரத்தில் வியாப்பிய வியாபகங்களான பொருள்கள் மிகுதியான எண்களை யுடையனவாக வுள்ளனவோ, ஆண்டு மேலிடத்துள்ள அவற்றின் எண்களைக் கீழ்ப்பத்தியில் அமைத்தல் வேண்டும். ௩எ௩

மிகுதியைப் பற்றிநிற்பது வியாபகமாகும். குறைவைப் பற்றிநிற்பது வியாப்பியமாகும். உறுப்புக்கள் வியாப்பிய மெனவும், உறுப்பிகள் வியாபகமென்வுங் கூறப்படுவனவாம். ௩எச

ஒத்தசாதிப் பொருள்களைக் குறிப்பிடுங்கால், ஓரிடத்திலேயே தொகுத்தெழுதல் வேண்டும். மற்றைப் பல்வேறு சாதிப்பொருள்

௩எ0. இது முதல் ௩அ௩ - ஆம் சுலோகம் வரை வரவுசெலவுக் கணக்குக் கலைப் பத்திரங்களில் எழுதும் முறையைப் பற்றிக் கூறுகின்றார். இம்முறைகளுட் சில இக்காலத்திற்கு ஒத்தனவாகவும் சில ஒவ்வாதனவாகவும் உள்ளனவாதலின், ஒவ்வாதனவாக இங்குக் கூறப்பட்ட பண்டைக்காலத்து முறைகள் சில செவ்விதிற் புலப்பட்டில.

௩எக - ௩எஉ. கீழ்க்கீழ் முறையே எழுதல்: ௩எ0 - ஆம் சுலோகத்தில் வரவு இடப்புறத்திற் குறிப்பிடவேண்டு மென்று கூறியபடி, இங்கும் வியாபக வியாப்பியங்களையும் ஆதார ஆதேயங்களையும் இடப்புறத்தில் வரைதல் வேண்டுமென்று குறிப்பிடுவதால், இச்சுலோகங்க ளிரண்டிலுமுள்ள வியாபக வியாப்பியங்களும் ஆதார ஆதேயங்களும் வரவைப் பற்றினவாகத் தோன்றுகின்றன.

௩எச. இதன்கண்வியாபகவியாப்பியங்கள் இன்னவென்று கூறப்பட்டன,

களைக் குறிப்பிடுங்கால், நேர்ந்தவாறே முதலிறுதிகளிலும் தொகுத்தும் எழுதலாம். ௩௭௫

யாண்டுப் பொருள்களும் நிலங்களும் மிகுதியாகவுள்ளனவோ ஆண்டு வரவுசெலவுகளை எப்பொழுதுங் காலந் தாழ்த்தலின்றி எழுதல் வேண்டும். ௩௭௬

நிலங்களைப் பற்றிய குறிப்புவிளக்கம் ஒன்றாகும். அதனின் வேறாகப் பொருட்குழுவைப்பற்றிய குறிப்புவிளக்கம் மற்றொன்றாகும். முற்கூறியவற்றுள் மிகப் பெரிதாகவுள்ள வரவுசெலவுப் பத்திரம் **விசிட்டம்** என்னும் பெயரினையுடையதாகும். ௩௭௭

வரவு எவ்வளவு? செலவு எவ்வளவு? எப்பொருளின் எஞ்சியது எவ்வளவுள்ளது? என்னும் இவற்றைப்பற்றிய தெளிவுணர்ச்சி விசிட்டம் எனப்பெயரிய பத்திரங்களாலுண்டாவதாகும். ௩௭௮

முதலில் வரவுசெலவுகளை நேர்ந்தவண்ணம் வரைந்து, அதன் பின் அவற்றின் எண்களைக் குறித்தல் வேண்டும். மிகுதியான பொருளையும் நிலத்தையும் பற்றி எழுதுங்கால், அவற்றிற்குத் தக்கவாறு விளக்கக்குறிப்புக்களோடு எழுதல் வேண்டும். ௩௭௯

மற்றை வரவுசெலவுகளைப்பற்றிய அறிவு, முறையே அவ்வவற்றைக் குறிப்பிடும் பத்திரங்களா லுண்டாவதாகும். மிகப்பெரிய நிலத்தின் வரவுசெலவைப்பற்றிய விசேட அறிவு, அந்நிலப்பகுதியைப் பற்றிய ஆராய்ச்சியாலுண்டாகும். ௩௮௦

பொருளளவிற்கு நிலஅளவு சுருங்கியும் நிலஅளவிற்குப் பொருளளவு சுருங்கியும் இருப்பதுண்டு. எழுதுங்கால் மக்கள் விருப்பின்வண்ணம் திதி முதலியன குறிக்கப்பட்டுப் "பிறர்க்குரியதெனத் துணியப்பட்டது" முதலிய வரவைப் பற்றி நிற்கும் பத்திரங்களும், அங்ஙனமே திதி முதலியன வரையப்பட்டு "மீண்டு வருவது" முத

---

௩௭௭. நிலத்தைப்பற்றிய குறிப்புவிளக்கம், பல்வேறு நிலப்பகுதிகளை எல்லைகாட்டி விளக்குவதாகும். பொருட்குழுவைப் பற்றிய குறிப்புவிளக்கம், மணி பொன் நெல் முதலிய பொருள்களைப் பற்றியதாகும்.

௩௮௧-௩௮௨. சுருங்கிய நிலப்பகுதியில் அதன் அளவின் மிகுதியாகப் பொருளுண்டாதலும், விரிந்த நிலப்பகுதியில் அதன் அளவிற்குறைவாகப் பொருளுண்டாதலும் இல்பாமென்பது கருத்து. திதி முதலியன குறிக்கப்படுதல் பிறர்க்குரிய தெனத்துணியப்பட்டது முதலிய வரவுகளுக்கும், மீண்டு வருவது முதலிய செலவுகளுக்கும் உரிய கொடுக்கல் வாங்கற் காலத்தை உணர்த்துதற்கென வுணர்க. பிறர்க்குரியதெனத் துணியப்பட்டது முதலிய வரவை

லிய பிறரைச் சார்ந்து நிற்கும் செலவைப்பற்றிய பத்திரங்களும் பிறர் கையெழுத்தை யிறுதியி லுடையனவாய், விசிட்ட மென்னும் பெய ரினவாய், முடிவில் வியாபக எண்களை யுடையனவாம். ௩அ௧-௩அ௨

முதலிற் பிரமாணபலத்தை இச்சையினாற் பெருக்கி அதன்பின் அவ்வெண்ணைப் பிரமாணத்தால் வகுக்கவேண்டும். அங்ஙனம் வகுக்கப் படுங்கால் கிடைக்கும் வகுப்புத் தான எண் மனிதர்க்கு இச்சாபல மாகும். ௩அ௩

இதுகாறும் எல்லோர்க்கும் நினைவுகூர்தற்கு ஏதுவாக எண்முத லியன வரையு முறைகள் சுருக்கிக் கூறப்பட்டன. ௩அ௪

க௭. அளவைகள்.

குன்றி, மாடம், கருடம், பதார்த்தம், பிரத்தம் ஆகிய இவை முறை யே ஒன்றினொன்று பதின்மடங்கு அளவு மேம்பாடுடையனவாம். பிரத்தம் ஐந்து கொண்டது ஆடகமாகும். ௩அ௫

ஆடகம் எட்டுக்கொண்டது அருமணமெனவும், அருமணம் இரு பது கொண்டது, காரிகை யெனவுங் கூறப்படும். நாடுகடோறும் இவ் வளவை வேறுபட்டனவாகும். ௩அ௬

---

௩௨௪-ஆம் சுலோகத்திலும், மீண்டு வருவது முதலிய செலவை ௩௩௬-ஆம் சுலோகத்திலுங் காண்க. பிறர் - பெற்றுக்கொள்ளுவோரும் மீண்டு தருவோரு மாவர்.

௩அ௩. இது திரைராசிக விதியினால் வரவு செலவு கணக்குக்களை யறியு முறையைக் கூறுகின்றது. திரைராசிகமாவது—இச்சை, பிரமாணம், பிரமாண பலம் என்னும் மூன்றனையுங் கொண்டுமுடிவது. பத்துப்பெயர்க்குக் கூலி பதி னைந்து வெண்பொற்காசுகளானால், பதினெட்டுப்பெயர்க்கு எவ்வளவாம்? என்புழிப் பதினெட்டு என்னும் எண் இச்சையாகும். பத்தென்னும் எண் பிரமாணமாகும். பதினைந்து என்னும் எண் பிரமாணபலமாகும். பிரமாணபல மாகிய க௫-ஐ இச்சையாகிய க௮ - ஆற் பெருக்க உ௭o ஆகும். அதனைப் பிர மாணமாகிய கo - ஆல் வகுக்க அவ்வகுப்புத்தானஎண் உ௭ ஆகும். இவ்விரு பத்தேழே இச்சாபலமாகும். ஆகவே இச்சுலோகத்திற் கூறியது கo-பெயர்க்கு க௫ - என்றால் க௮ - பெயர்க்கு உ௭ - ஆகுமென்று அறிதலே யாகும். இங் ஙனமே வரவினுங் கணக்கிட்டுக்கொள்க.

௩அ௫. குன்றி பத்துக்கொண்டது மாடம்; மாடம் பத்துக்கொண்டது கரு டம்; கருடம் பத்துக்கொண்டது பதார்த்தம்; பதார்த்தம் பத்துக்கொண்டது பிரத்தமாகும். பிரத்தமென்பது இக்காலத்து வழங்கும் வெண்பொற்காசு (ரூபாய்) நூறுகொண்ட எடை யென்று தோன்றுகின்றது. அங்ஙனமாயின், அது, முகத்தலளவையில் ஏறக்குறைய ஒருபடியாகும்.

ஐந்தங்குல ஆழமும் நான்கங்குல அகலமும் உள்ள பாத்திரம் முகத்தலளவையிற் காற் பிரத்த மாகுமென்று அறிவுடையோர் கூறுவர். ௩௮௭

மேலிடத்துள்ள எண்ணலளவைக்குறி, குறிப்பிட்ட அளவேயாகும். அதன் கீழாக இடப்புறத்து வரையப்படும் எண்குறி, முன்னதிற் பத்துமடங்கு மிகுதியுடையதாகும். இங்ஙனம் பின்னரும் இடப்படும் எண்குறிகள், முறையே ஒன்றை நோக்க மற்றது பதின்மடங்கு மிகுதியுடையதாகப் பரார்த்தம் இறுதியாகக் கூறப்படுவனவாம். ௩௮௮

காலத்திற்கு எல்லையின்றாதலின், பரார்த்தத்திற்கு மேலும் எண்ணலளவைக்குறி யிட்டாளக் கூடவில்லை. பிரமதேவனுக்கு வாழ்நாள் இரண்டு பரார்த்த அளவாகுமென்று அறிவுடையோர் கூறுவர். ௩௮௯

ஒன்று, பத்து, நூறு, ஆயிரம், பதினாயிரம், இலக்கம், (நியுதம்) பத்திலக்கம், (பிரயுதம்) கோடி, பத்துக்கோடி, (அர்ப்புதம்) நூறு கோடி, (அப்ஜம்) ஆயிரங்கோடி, (கர்வம்) பதினாயிரங்கோடி, (நிகர்வம்) இலக்கங் கோடி, (பதுமம்) பத்திலக்கங்கோடி, (சங்கம்) நூறிலக்கங்கோடி, (அப்தி) மத்தியம், அந்தம், பரார்த்தம் என்னுமிவை எண்ணலளவைக் குறியீடுகளாம். ௩௯0

## ௧௮. கால அளவை.

காலத்தின் அளவு சாந்திரம், சௌரம், சாவனம் என மூன்று வகைப்படும். திங்கள் வேதனங் கொடுக்குங்காற் சௌரமானத்தையும், கடன்கோடல் கடன்கொடுத்தன் முதலியவற்றிற் சாந்திரமானத்தையும், நாட்பணி செய்வோர்க்குக் கூலி கொடுக்குங்காற் சாவன

---

௩௮௭. காற்பிரத்தம் - காற்படி.

௩௮௮. ௧ - இஃது ஒன்று.

௨0 - இது முன்னதன் கீழ் இடப்புறமாக இடப்படுதலின் முன்னதற்குப் பத்தாம் தானமாகிய இருபதாகும்.

௩00 - இது முற்கூறியவாறே முன்னதன்கீழ் இடப்புறத்தில் இடப்படுதலின், தனக்கு முன்னுகிய பத்திற்குப் பத்தாம் தானமாகிய நூருந்தானமாதலின் முந்நூறாகும். இவ்வாறே மேலுங் குறியிட்டு எண்ணி யுணர்க.

௩௮௯. பரார்த்தத்திற்குமேல் எண்ணலளவைக்குறியின்மையால் இரண்டு பரார்த்தம் என்று கூறப்பட்டது.

மானத்தையும் அவ்வக்கால இறுதியில் வைத்து எப்பொழுதும்மேற்கொள்ளல் வேண்டும். ௩௬௧

**௬௬. வேதன விளக்கம்.**

வேதனம் **காரியமானம், காலமானம், காரிய காலமானம்** என மூவகைப்படும். இம்மூன்றனுட் பேசிக்கொள்ளப்பட்டதொன்றின்படி அது கொடுக்கற்பாலது. ௩௬௨

ஒருவன் மற்றொருவனை நோக்கி, "நீ இச்சுமையைச் சுமந்து கொண்டு இன்ன இடத்தில் வைத்தல் வேண்டும்; அதற்காக யான் இவ்வளவு கூலி தருவல்" என்றிவ்வாறு பேசிக்கொள்ளப்படுவது **காரியமானம்** என அக்கூலியை யறுதியிடுவோர் கூறுவர். ௩௬௩

ஆண்டுதோறுமாதல், திங்கடோறுமாதல், நாடோறுமாதல் "இவ்வளவு வேதனம் நினக்கு யான் தருவேன்" என்று பேசிக்கொள்ளப்படுவது **காலமான**மாகும். ௩௬௪

"நீ இத்துணைக்காலத்துள் இன்ன காரியத்தைச் செய்துமுடிப்பையாயின், இவ்வளவு வேதனம் தருவேன்" என்று பேசிக்கொள்ளப்படுவது **காரியகால மானமா**கும். ௩௬௫

கூலிகொடாமையும், அதனை உரியகாலத்துக் கொடாது தாழ்த்தலுஞ் செய்தலாகாது. ஒருவன், தன்னால் அவசியம் காக்கப்படுபவராகிய தாய் தந்தை முதலிய சுற்றத்தாரோடு பிறரையும் உதவிக் காத்தற்குத் தக்கவாறு பெறும் வேதனம் தலையாயதாகும். அவசியம் காக்கப்படுபவராகிய தாய்தந்தை முதலியோரை ஓம்புதற்கும், தனக்கு வேண்டிய உண்டி உடுக்கைகளுக்கும் போதியஅளவு பெறும் வேதனம் இடையாயதாகும். தற்காப்பளவிற் பெறும் வேதனம் கடையாயதாகும். ௩௬௬-௩௬௭

அரசன், தன் பணியாளன் எத்துணை எத்துணைக் குணமிக்கானோ அத்துணை அத்துணை அவனுக்குத் தன் நலங் குறித்து வேதனம் உயர்த்திக் கொடுத்தல் வேண்டும். ௩௬௮

பணியாளனொருவன், அவன் தாய் தந்தை முதலியோரைக் காத்தல் இன்றியமையாக் கடனாக விரும்பின், அப்பணியாளனுக்கு அதற்குத் தக்கவாறு வேதனங் கொடுத்து உதவல் வேண்டும். ௩௬௯

---

௩௬௧. சாந்திரம் - பூருவ பக்கத்துப் பிரதமை தொடங்கி அமாவாசை இறுதியாகவுள்ள காலம். சௌரம் - சூரியன் ஓர் இராசியிற் புகுதல் தொடங்கி மற்றோர் இராசியிற் பிரவேசிக்கும் வரையுள்ள காலம். சாவனம் - சூரியன் றோன்றி மறையும்வரையுள்ள காலம்.

மிகச்சிறு வேதனம் பெறும் பணியாளர் தம் தலைவன் காரியத்தை யொழித்துப் பிறர்க்கு வினைபுரிதல், அவன்பாற் புரைவழி கண்டு செல்லவெண்ணுதல், அவன் பொருளைக் கவர்தல், குடிகளைத் தூன் புறுத்தலாகிய இவற்றை மேற்கொள்வராதலின் அன்னார் அரசனாற் றானே யாக்கிக்கொள்ளப்பட்ட பகைவராவர். சOO

இழிகுலத்தார்க்கு உண்டியுடுக்கைகளுக்கு வேண்டிய அளவிற் கூலி கொடுக்கவேண்டும். அங்ஙனமின்றி அவ்வளவின் மிகுதியாகக் கொடுத்தலாற் புலாலுண்ணும் அவ்விழிகுலத்தாரைக் காக்குந் தலைவன் அன்னார் பாவப்பயனை எய்துபவனாவான். சOக

அந்தணனாற் கவரப்பட்ட பொருள் அப்பொருளுடையானுக்கு மறுமைநலம் தருவதாகும். இழிந்தோன் பொருட்டுக் கொடுக்கப்பட்ட பொருள் அப்பொருளுடையானை நரகத்தில் வீழ்த்துவதாகும். சOஉ

வினைசெய்வார் சீக்கிரன், மத்தியன், மந்தன் என மூவகைப்படுவர். அவர்க்குக் கொடுக்கப்படும் வேதனமும் முறையே தலை இடை கடை என மூவகையாகக் கூறப்படும். சOஙு

இரவும் பகலும் பணிசெய்யும் ஏவலாளர்க்கு, அவர் தம் வீட்டுக் காரியநிமித்தம் பகலில் ஒரு யாமமும், இரவில் மூன்று யாமங்களும் ஒழிவு கிடைக்கும்படி நாடோறும் விடல் வேண்டும். பகலின் மாத்திரம் ஏவற்றொழில் செய்வோர்க்கு, வீட்டுக் காரிய நிமித்தம் அரையாமம் அவகாசங் கொடுத்தல் வேண்டும். சOச

அரசன், மணமுதலிய விழாக்காலங்களல்லாத மற்றை நாட்களில், முற்கூறிய வினைசெய்வாரைக்கொண்டு காரியஞ் செய்வித்தல் வேண்டும். விழாக்காலங்களுள்ளும், தென்புலத்தார் கடன் இறுக்கும் நாளினன்றி மற்றைக் காலங்களில் இன்றியமையாது செயற்பாலதாகிய காரியத்தைச் செய்வித்துக் கொள்ளலாம். சOரு

வினைசெய்வானொருவன் சில திங்கள்வரை நோய் கோட்பட்டிருப்பின் அவனுக்கு முக்காற்பங்கு வேதனமும், ஓர் யாண்டுவரை

சOரு. அரசன் தன்பால் என்றும் வினைசெய்வாரையே விழாக்காலங்களிலும் வினைசெய்யும்படி ஏவலாகாதென்பதும், விழாக்காலங்களுக்கெனப் புதிய பணியாளரை நியமிக்க வேண்டுமென்பதும், அங்ஙியமாயின் பிதிர்க்கடன் அல்லாத மற்றைக் காரியங்களில் பழைய பணியாளரையும் நியமிக்கலாமென்பதும், பிதிர்க்கடன் இறுக்குங்கால் அங்ஙனஞ் செய்யலாகாதென்பதுங் கூறியவாறு.

நோய் கோட்பட்டிருப்பின் மூன்று திங்கள் வேதனமுங் கொடுத்தல் வேண்டும். ஐந்து யாண்டு தொழில் செய்தோன் நோய் கோட்படின், அவனுக்கு அந்நோயின் கால அளவிற்குத் தக்கவாறு வேதனம் குறைத்துங் கூட்டியும் கொடுக்கலாம். சOசு

ஒருவன் நெடுங்காலம் நோய்கோட்பட்டிருப்பானாயின், அவனுக்கு ஆறு திங்கள் வேதனங் கொடுத்தல் வேண்டும். அதற்கு மேற் கொடுத்தலாகாது. ஒரு வாரம் நோய் கோட்பட்டிருப்போனுக்குச் சிறிதும் வேதனம் பிடித்தலாகாது. சOஎ

ஒருவன் ஓர் யாண்டு வரை நோய் கோட்பட்டிருப்பானாயின், அவனுக்குப் பிரதிநிதியாக அவன்பானின்றே மற்றொருவனை ஏற்றுக் கொள்ளலாம். அங்ஙனம் நோய்கோட்பட்டிருக்கும் வினைவலான், குணங்களாற் சிறந்துளானாயின் அவனுக்கு அரைக்கூறு வேதனம் ஏற்படுத்தல் வேண்டும். சOஅ

அரசன் வினைசெய்வார்க்கு வேலைகொள்ளாமல் ஓர் யாண்டிற் பதினைந்து நாட்களுக்குரிய வேதனங் கொடுத்தல் வேண்டும். சOகூ

வினைசெய்வானொருவன் நாற்பது யாண்டுகள்வரை அரசனுக்குத் தொழில் செய்திருப்பானாயின், அதன்பின் அவனுக்கு அவன் வாழ்நாள்காறும் அரசன் (வேலை கொள்ளாமலே அரைக்கூறு வேதனம்) உதவி வரல் வேண்டும். அவன் மகன் தொழில் செய்யும் ஆற்றலில்லாதவனாக விருப்பின் வாழ்நாள்வரையும், ஆற்றலுடையனாயிற் பாலப்பருவம் நீங்குங்காறும், அவனுக்கு அவன் தந்தையின் வேதனத்தின் பாதியிற் பாதியாகிய காற்கூறு வேதனம் உதவல் வேண்டும். அவன் மனைவி நல்லகற்புடையளாயின் அவட்குவாழ்நாள் வரையும், அவன் மகள் கன்னிகையாயின் அவட்குக் கன்னிப்பருவம் நீங்கும் வரையும், அக் காற்கூறு வேதனம் உதவல் வேண்டும். அரசன் இங்ஙனம் உதவல் தன்நலம் வளர்தற்பொருட்டாம். சகO-சகக

யாண்டுதோறும் வினைசெய்வோற்கு அவன் வேதனத்தில் எட்டில் ஒரு கூறு பரிசிலாக உதவல் வேண்டும். அவன் மிகுதியான காரியங்களை விரைவிற் செய்துமுடிப்பானாயின், அக்காரிய முடித்தற்குச் செலவாகும் பொருளில் எட்டில் ஒரு கூறு அவனுக்குப் பரிசிலாக உதவல் வேண்டும். சகஉ

---

சகஉ. எட்டிலொரு கூறென்றது, ஓராண்டிற்குரிய வேதனத்தில் எட்டிலொரு பாகத்தை.

எவன் தன்றலைவன் காரியத்தின்பொருட்டு உயிர் நீங்கப் பெற்றானோ, அவன் வேதனத்தை அவன் மகன் பாலப் பருவம் நீங்கும்வரை முழுதும் அடைதற்குரியவனாவான். பாலப்பருவங் கடந்த பின் அப்புதல்வன் தகுதி நோக்கி வேதனங் கொடுத்தல் வேண்டும். சகந

வினைசெய்வானது வேதனத்தில் ஆறிலொரு கூறுதல், நான்கி லொரு கூறுதல் பிடித்துப் பாதுகாத்தல் வேண்டும். இரண்டு அல்லது மூன்று யாண்டுகளின் பின்னர் அத்தொகையின் பாதியையாதல், முழுவதையுமாதல் அவனுக்குக் கொடுத்துவிடல் வேண்டும். சகச

## உo. அரசன் வினைசெய்வாரை இன்புறுத்து முறை.

அரசன் கடுஞ்சொற்களாலும், வேதனத்தைக் குறைத்தலாலும், கொடுந்தண்டத்தாலும், மானத்திற்குக் கேடிழைத்தலாலும், வினைசெய்வானை எப்பொழுதும் பகைவனும்வண்ணம் பயிற்றுபவனாகின்றான். சகரு

வேதனம் குறையாது கொடுத்தலால் மகிழ்ச்சியும், மானத்தாற் சிறப்பும், இன்சொற்களாற் சாந்தமும் எய்தப்பெற்ற வினைவலார் தம் தலைவனை விட்டொழியார். சகசு

கடையாயார் பொருளையே விரும்புவர். இடையாயார் பொருளையும் மானத்தையும் விரும்புவர். தலையாயார் மானத்தையே விரும்புவர். மானமே பெரியோர்க்குப் பொருளாகும். சகஎ

அரசன் தன்பால் வினைசெய்வோரையும், தன் கீழ் வாழுங் குடிகளையும் அவரவர் தகுதிக்கேற்பச் சிலரை ஏதாவது சிறிது கொடுத்தலாலும், வேறு சிலரை அதனினுஞ் சிறிது மிகுதியாகக் கொடுத்தலாலும், மற்றுஞ் சிலரை மலர்ந்த பார்வையாலும், சிலரைப் புன்முறுவலாலும், இன்சொற்களாலும், நிறைந்த உண்டிகளாலும், அழகிய ஆடைகளாலும், தாம்பூலம் ஈதலாலும், பொருள் கொடுத்தலாலும், சிலரை நலம் வினவலாலும், அதிகாரக் கொடையினாலும், யானை குதிரை முதலிய ஊர்தி கொடுத்தலாலும், தக்க அணிகலன் முதலியன ஈதலாலும், குடை கவரி விளக்கு முதலியன கொடுத்தலாலும், பிழை பொறுத்தலாலும், பெரியோரை வணங்குதலாலும், பெருமைப் படுத்தலாலும், உடன் செல்லுதலாலும், பூசித்தலாலும், நூலாராய்ச்சியறிவினாலும், விருப்பமிக்க முயற்சியாலும், அடக்கத்தாலும், அன்பினாலும், அருகிருத்தலாலும், தன் இருக்கையிற் பாதி யீதலாலும்,

தன் இருக்கை முழுதும் ஈதலாலும், புகழ்ந்துரைத்தலாலும், செய்ந் நன்றியறிந்து பாராட்டுதலாலும் இன்புறுத்தல் வேண்டும். சகஅ-சஉஉ.

அரசன் தன் வினைசெய்வாருள் இன்னார் இன்ன காரியத்தில் நியமிக்கப்பட்டிருக்கின்றன ரென்று அன்னாரைத் தெரிந்துகொள் ளுதற்பொருட்டு, அவர் தகுதிக்கேற்ப இரும்பு, செம்பு, பித்தளை, வெள்ளி, பொன், இரத்தினமாகிய இவற்றாற் செய்யப்பட்ட தன் முத்திரையோடுங்கூடிய காரிய அடையாளப் பொருள்களால் இலச் சினையிடல் வேண்டும். சஉ௩இ

அரசன் தன்வினைசெய்வாரைச் சேய்மையினின்று உணர்ந்து கொள்ளுதற்பொருட்டு ஆடைகளாலும், தலைச்சாத்துக்களாலும் இயங்களின் வேறுபாட்டாலும், ஊர்திகளின் வேறுபாட்டாலும், தனித்தனி சிறப்படையாளமுடையோராகச்செய்தல்வேண்டும். தனக் குரிய குடை கவரி முதலிய சிறந்த அடையாளங்களை எவர்க்குங் கொடுத்தலாகாது. சஉ௫

புரோகிதன் முதலாகக் கூறப்பட்ட பிரகிருதிகள் பதின்மரும் அந்தணராக இருத்தல் வேண்டும். அவரில்லையாயின், அரசர் குலத்த வராக இருத்தல் வேண்டும். அவரும் இல்லையாயின், வணிகர்களாக இருத்தல் வேண்டும். சூத்திரர்கள் குணமிக்கோராயினும் அன்னாரை அப்பதவியில் அரசன் நியமித்தலாகாது. சஉ௬-சஉ௭

மன்னர்குலத்தவனை அரசிறைப்பொருள் வாங்குவோனாகவும், தண்டத்தலைவனாகவும் நியமித்தல் வேண்டும். அந்தணனைக் கிராமத் தலைவனாகவும், காயத்தனாகவும், எழுத்தாளனாகவும் நியமித்தல் வேண்டும். சஉஅ

---

சகஅ-சஉஉ. வணங்குதல் முதலியனவாக இங்குக் கூறப்பட்டன வெல் லாம் குரவர் நட்டோர் முதலிய பெரியோர்களைக் குறித்துச் செய்யப்படுவன வாம். ஈண்டுக் கூறிய குடை கவரிகள் அரசனுக்குரிய சிறந்த அடையாளங்களல் லாதன.

சஉ௩இ. காரிய அடையாளம் அதிகாரச் செயலைக் குறிப்பது. இலச்சினை- அடையாளம்.

சஉ௫. இயம் - வாத்தியம்.

சஉஅ. காயத்தன் - கணக்குவேலை பார்ப்போன். "காயத்தனை எழுத் தாளனாகவும்" எனவும் பொருள் கொள்ளலாம். அங்ஙனங் கொள்ளுங்கால் 'காயத்தன்' என்பது ஒரு சாதியைக் குறிப்பதாகும். அச்சாதி இக்காலத்தில் வடநாட்டிலுள்ளது.

வைசியனைப் பண்டமாற்று முதலியவற்றின் சுங்கங் கொள்பவனாகவும், சூத்திரனை வாயில்காப்போனாகவும் நியமிக்கலாம். அரசர் குலத்தவனைப் படைத்தலைவனாக நியமித்தல் வேண்டும். அவன் இல்லையாயின் அந்தணனை அப்பதவியில் நியமிக்கலாம். சஉகூ

வைசியனையும், சூத்திரனையும், அச்சமுடையானையும் படைத்தலைவராக்கலாகாது. எல்லாச் சாதிகளிலும் வீரமிக்கவனே படைத்தலைவனாக நியமிக்கத் தக்கவனாவான். சங0

சங்கரசாதிகளோடுகூடிய நால்வகைச்சாதி மக்களுக்கும், படைத்தலைமை ஏற்றலாகிய இக்கடமை தூய்மையுடையதன்று. அரசன் எக்குலத்தவனோ அக்குலம் நலம் எய்துவதாகும். சஙக

எவ்வரசன்பால் செய்ந்நன்றி மறத்தல், நற்பணி கண்டு மகிழாமை, பிற நிகழ்ச்சிகளுக்கிடையில் நினைவுகூராமை, ஐயுறல், பயனின்றிப் பேசுதல், கலக்கமுற்றுப் பிறரைத் துன்புறுத்தலாகிய இவையுள்ளனவோ அவ்வரசனை வினைசெய்பவர் விட்டொழிதல் வேண்டும். சஙஉ

இளவரசன் முதலியோரின் இலக்கணங்களுங் காரியங்களும் சுருக்கமாக இங்குக் கூறப்பட்டன. சஙங

சுக்கிரநீதியில்

“இளவரசன் முதலியோரின் இலக்கணம்” என்னும்

**இரண்டாம் அத்தியாயம் முற்றிற்று.**



சஙக. படைத்தலைமை ஏற்றல் வீரர்க்குரியதாயினும், அதனாற் கொலைத் தொழிலாகிய பெரும்பாவம் நேர்தலால் அது தூய்மையுடையதாகா தென்பது கருத்து.

# மூன்றாம் அத்தியாயம்.

(அரசனுக்கும் குடிகளுக்கும் உரிய பொதுநீதிகள்.)

## க. எல்லோர்க்கும் உரிய நல்லொழுக்கங்கள்.

இனி, அரசன் குடிகள் முதலிய எல்லோர்க்கும் பொதுவான நீதிகள் கூறப்படும். எல்லா உயிர்த்தொகுதிகளின் காரிய முயற்சிகளனைத்தும் இன்பத்தின்பொருட்டே உள்ளனவாம். க

அறமின்றி இன்பம் உண்டாகாது. ஆதலின், மனிதன் அறத்திற் பற்றுடையனாக விருத்தல் வேண்டும். அறம், பொருள், இன்பங்கள் இல்லாத காரியத்தைத் தொடங்கலாகாது. அவற்றோடு முரணாது நடுநிலை யுடையனாய் எல்லாக்காரியங்களிலும் அடிதோறும் பின்றொடர்ந்து செல்லல் வேண்டும். உ

ஒவ்வொருவனும் குறைந்த அளவினையுடைய மயிர் நகம் மீசைகளையும், கழுவுதலாற் றூயனவாகிய காலடிகளையும், அழுக்குகளைவெளிப்படுத்தும் இருவகைப் பொறிவாயில்களையும், நீராடும் நியமத்தையும், நறுமணக் கலவை பூசுதலையும், நல்லாடை யுடுத்தலையும், இறுமாப்பின்றி விளங்கும் தோற்றத்தினையும் உடையனாய், மணி, மந்திரசித்தி, உயர்ந்த மருந்து ஆகிய இவற்றை எப்பொழுதும் வைத்துக்கொள்ளல் வேண்டும். ந

வெளிச் செல்லுங்கால் குடை செருப்புக்களையுடையனாய், ஒரு நுகத்தடியளவு நீளம் நிலத்திற் கண் செலுத்தி நடத்தல் வேண்டும். இரவிலும், தீயகாரியம் நேர்ந்தவிடத்தும், தடியையும் தலைச்சாத்தினையுமுடையனாய்த் துணையாட்களுடன் போதல் வேண்டும். ச

---

உ. அடிதோறும் தொடர்தல் - முரணின்மையையும் நடுவுநிலைமையையும் இடையறாது மேற்கொள்ளல்.

ந. "குறைந்த அளவினையுடைய" என்னும் விசேடணத்தை நகம் மீசைகளுக்கும், "கழுவுதலாற் றூயனவாகிய" என்னும் விசேடணத்தை இருவகைப் பொறிவாயில்களுக்கும் கொள்க. இருவகைப் பொறிவாயில்கள் - ஞானேந்திரிய கன்மேந்திரிய துவாரங்கள். மயிர் நகம் மீசைகளை மிகுதியாக வளரவிடாமல் அடிக்கடி களையவேண்டு மெனவும், கால்களையும் பொறிவாயில்களையும் அடிக்கடி நீராற் கழுவவேண்டு மெனவும் கூறியவாறு.

ச. மிகுதூரப் பார்வையாற் கால் தடுமாறும்; ஆதலின், நுகத்தடியளவிற் கண் செலுத்திச் செல்லல் வேண்டுமென்றனர். தீயகாரியம் - உயிர் பொருள் முதலியவற்றிற்கு அழிவு பயக்கும் வினை. தலைச்சாத்து - தலைப்பாகு.

ஒரு காரியத்தில் விரைந்துநிற்குங்கால், பிறிதொரு காரியத்திற் புகுதலாகாது. விரைந்துவரும் பொருள்களை வலிமையாற் றடுத்தலாகாது. பகைவரைப் பொருந்தாது தூர விலகி நல்ல நண்பர்களை யடுத்து அவர்பால் அன்புமேற்கொண்டொழுகல் வேண்டும். ௫

உயிர்க்கொலை, களவு, நெறிதவறிய காமம், குறளை, கடுஞ்சொல், பொய், அறம் பொருள் இன்பங்களின் வேறுபட்டுப் பிறர் மனத்தைக் கலக்கும் பயனில்சொல், அடக்கமின்மை, நாத்திகம், மாறுபட்டுணர்தல் ஆகிய மன மொழி மெய்களால் நிகழும் இப்பத்துத் தீவினைகளையும் ஒழித்தல் வேண்டும். ௬

மனிதன் ஓர் அறச்செயலைச் செய்யத் தன் ஆற்றலால் முயன்றும் அது நிறைவேறப் பெற்றிலனாயினும், அவன் அவ்வறப்பயனாகிய புண்ணியத்தை உறுதியாக அடைவான். இதன்கட் சிறிதும் ஐயமின்று. எ

---

௫. மூலத்திலுள்ள "வேகிதன்" என்பதற்கு விரைவுடையான் என்பது பொருள். ஆதலின் மல மூத்திரங்களை விரைந்து வெளிப்படுத்தும் நிலையிலுள்ளவன், அவற்றை யடக்கிக்கொண்டு பிற காரியத்திற் புகுதலாகாதென்று பொருள் கொள்ளுதலும் பொருந்தும். விரைந்து வரும் பொருள் - ஒருவன் எதிரில் வரும் விலங்கு முதலிய இயங்கியற்பொருளும், பிறரால் எறியப்பட்டு வரும் கல் முதலிய நிலையியற்பொருளுமாம். அவை வேகமாக வருங்கால் அவற்றிற் கெதிரே செல்லலாகாதென்பது கருத்து.

௬. இப் பத்துத் தீவினைகளுள் கொலை, களவு, காமம், இம்மூன்றும் உடலால் நிகழ்வனவாம்; குறளை, கடுஞ்சொல், பொய், பயனில்சொல் இந்நான்கும் மொழியால் நிகழ்வனவாம்; மற்றைய மூன்றும் மனத்தால் நிகழ்வனவாம். அடக்கமின்மையால் விருப்பமும், தான் விரும்பின பெறாமையால் வெகுளியும் உண்டாம். வெகுளி நிகழுங்கால், கடவுளும் அறமும் மறுமையின்பம் முதலியனவும் இல்லை யென்னும் நாத்திகக் கொள்கை தோன்றுமாதலின் "நாத்திகம்" என்பது வெகுளியைப் புலப்படுத்துவதாகும். மாறுபட்டுணர்தல் - மயக்கம். இங்ஙனம் மன மொழி மெய்களால் நிகழும் தீவினைகளை மணிமேகலை நூலாசிரியர் "தீவினை யென்பது யாதென வினவின், ஆய்தொடி நல்லாய் ஆங்கது கேளாய், கொலையே களவே காமத் தீவிழைவு, வுலையா வுடம்பிற் றோன்றுவ மூன்றும், பொய்யே குறளை கடுஞ்சொற் பயனில், சொல்லெனச் சொல்லிற் றோன்றுவ நான்கும், வெஃகல் வெகுளல் பொல்லாக் காட்சியென், றுள்ளந்தன்னி லுருப்பன மூன்றுமெனப், பத்து வகையால்" என்றிங்ஙனங் கூறி விளக்கியுள்ளார். (மணிமே. ௩0-ஆம் காதை. ௬௪-எ௨.)

எ. இச்சுலோகத்தின் நுண்பொருள் "அறஞ் செயவிரும்பு" என்னும் ஔவை முதுமொழியிற் புலப்படுதல் காண்க. ஈண்டுச் "செய்" என்னாது "செய விரும்பு" என்றது உய்த்துணரற்பாலதாகும்.

ஒருவன் தீவினையை நெஞ்சத்தால் நினைத்தலும், செயலிற் காட்ட விரும்புதலுமாகா. அங்ஙனம் நினைப்பினும் விரும்பினும் அதன் பயனை அவன் எய்துவான் என்று அறநூலுணர்ந்தோர் கூறுவர். அ

வாழ்க்கைக்குரிய தொழில் அற்றார்க்கும், நோய் கோட்பட்டார்க்கும், துன்பமுடையார்க்கும் தன் ஆற்றற்கியைந்தவாறு துணை நின்று உபகரித்தல் வேண்டும். எப்பொழுதும் புழு, எறும்பு முதலிய சிற்றுயிர்களையும் தன்னைப்போற் பார்த்தல் வேண்டும். கூ

தனக்குத் தீங்கிழைக்கும் பகைவனுக்கும் உதவி செய்யுங் குணத்தையும், தனக்கு வரும் வாழ்விலுந் தாழ்விலும் ஒரு நிலைப்பட்ட மனத்தினையும் உடையனாக விருத்தல் வேண்டும். மற்றொருவனுக்கு நேரும் பயன் கண்டு அழுக்காறு கொள்ளலாகாது; அப்பயன் விளைதற்கு முன்னாகவுள்ள ஏதுவிற் பொறாமைகொள்ளல் வேண்டும். க0

ஒருவன் மற்றொருவன்மாட்டு இறுமாப்பின்றி முற்படப் பேசுதல், முகமலர்ச்சி, நல்லொழுக்கம், அருட்குணம் ஆகிய இவற்றையுடையனாய், உரியகாலத்தில் நலம் பயப்பனவும், அளவுட்பட்டனவும், இயைபுடையனவும், இனிமையாயினவுமாகிய சொற்களைக் கூறுதல் வேண்டும். கக

ஒருவனுக்குத் தன்னளவில் இன்பம் நுகர்தலும், எல்லோரிடத்திலும் நம்பிக்கையை மேற்கொள்ளுதலும், எல்லோரையும் ஐயமுறுதலுங் கூடாவாம். கஉ

இன்னான் எனக்குப் பகைவனாவான் என்றாவது, இன்னானுக்கு யான் பகைவனாவேன் என்றாவது வெளிப்படுத்தலாகாது. தன் றலைவனால் தனக்கு நேர்ந்த அவமானத்தையும், அவன் தன்பால் அன்பில்லாதிருத்தலையும் வெளிப்படுத்தலாகாது. கங

---

அ. தீவினையை ஒருவன் செய்தலே யன்றி, நினைப்பினும் செய்ய விரும்பினும் அதன் பயனை அவன் அநுபவிப்பான் என்பது கருத்து.

க0. ஒருவன் மற்றொருவனுடைய செல்வம், வாழ்க்கை முதலிய நலங்களைக் கண்டால், அவனுக்கு அவை யுண்டாதற்கு ஏதுவாகவுள்ள நல்வினை, முயற்சி முதலியன எனக்குக் கிடைத்திலவே என்று எண்ணி வருந்துவானாயின், அக்காரணங்களை யடைதற்கு அவனுக்கும் விருப்பம் நிகழுமென்பது கருத்து.

கக. முற்படப்பேசுதல் - பிறரோடு உரையாடநேருங்கால் தன்பெருமை குறித்து அவர் பேசுங்காறுந் தாழ்க்காது முன் மொழிதல்.

பிறரை இன்புறுத்தும் அறிஞன், பிறர் எண்ணங்களையுணர்ந்து, யார் எவ்வாற்றான் மகிழ்ச்சி யடைவரோ அவரை அவ்வாற்றானே பின்பற்றி மகிழ்வித்தல் வேண்டும். கச

கண் முதலிய பொறிகளை அவ்வப் புலனுகர்ச்சியிற் செல்லவொட்டாது அறவே தடுத்தலுங் கூடாது. கலக்கஞ் செய்யும் இயல்பினவாகிய அப்பொறிகள் மனத்தை வலிந்து தன்வயப்படுத்துமாதலின், அவற்றை அந்நுகர்ச்சியில் மிகவும் ஈடுபடும்படி செய்தலுமாகாது. கரு

மான், யானை, விட்டில், வண்டு, மீன் ஆகிய இவ்வைந்தும் முறையே ஓசை, ஊறு, ஒளி, நாற்றம், சுவை ஆகிய இப்புலன்களாற் கேடெய்துவனவாம். கசா

இவ் வைம்புலன்களுள்ளும், அழகிற்சிறந்த மகளிர்பால் நுகரும் ஊற்றின்பம் முனிவரது மனத்தையும் ஈர்ப்பதாகும். ஆதலின் களித்து மயங்குதலின்றித் தக்க அளவு புலன்களை நுகர்தல் வேண்டும். கஎ

தாயுடனுதல், தங்கை தமக்கைமாரோடாதல், மகளோடாதல் ஒருவருமில்லாத இடத்தில் தனித்துறைதலாகாது. தனக்குரிய மனைவியையும் பிறர் மனைவியையும் அழைக்குங்கால், இவைபின்வண்ணம் முறையே "சுபகே" எனவும், "பகினி" எனவுஞ் சொல்லியும் ஆறுதலளித்தும் அழைத்தல் வேண்டும். கஅ

பெண்கள் பிற ஆடவரோடு உடனுறைதலையும், அவரோடு உரையாடுதலையும் வெளிப்படையாகவுஞ் செய்தலாகாது. அங்ஙனமே ஒரு கணப்பொழுதேனும் சுதந்திரத்தன்மை மேற்கொள்ளுதலும், பிறரில்லத் திருத்தலு மாகாவாம்.

கரு. பொறிகளைப் புலன்களிற் செல்லவொட்டாமல் அறவே தடுத்தலும், மிகுதியாகச் செல்லவிடுதலும் ஆகா வென்பது கருத்து.

கசா. மான் முதலிய இவ்வைந்தும் புலன்களாற் கேடெய்துதலை முதல் அத்தியாயம் க0உ-முதல் க0எ-வரையுள்ள சுலோகங்களிற் காண்க.

கஅ. தன் மனைவியை அழைக்குங்கால் "சுபகே" யெனக் கூறி யழைத்தல் வேண்டும். பிறர் மனைவியை அழைக்குங்கால் "பகினி" என ஆறுதலளித்து அழைத்தல் வேண்டும். பகினி - உடன் பிறந்தாள். சுபகா - பாக்கியவதி.

கக. வெளிப்படையாகவும் என்றதனால் தனிமையில் அறவே கூடாதென்பது எளிதிற் புலப்படும்.

பெண்பாலர்க்கு அவர்தம் கணவர், தந்தையர், அரசன், புதல்வர், மாமன்மார், உறவினர் ஆகிய இவர்கள் வீட்டுக்காரியங்கள் செய்யாமலிருக்குமாறு ஒரு கணப்பொழுதேனும் அவகாசங் கொடுத்தலாகாது. உ0

மகளிர் தம் கணவர் கொடிய தன்மையுடையராகவும், அலிகளாகவும், தண்டஞ் செய்வோராகவும், பற்றில்லாதவராகவும், நீண்டகாலம் பிரிந்து வேறிடத்து வாழ்பவராகவும், மிக்க வறுமையாளராகவும், நோயாளராகவும், எப்பொழுதும் பிறமகளிரிடத்துப் பற்றுடையராகவும் இருக்கக் காண்பாராயின், அவர்பாற் பற்றற்றிருப்பர்; அன்றி, அக் கணவரை யொழித்துப் பிற ஆடவரை விரும்பி யடையவராவர். ஆதலின், மனிதர்கள் இங்குக் கூறிய கொடுந்தன்மை முதலிய தீய குணங்களை முயன்று ஒழித்துப் பெண்மக்களைக் காத்தல வேண்டும். உக-உஉ

ஆடவர், தம்பெண்டிரையும் மக்களையும் உண்டி உடுக்கை அணிகலன்களாலும், அன்பினாலும், இன்சொற்களாலும் மகிழ்வித்து, மிகவும் தம்பக்கலில் வைத்துத் தம்மாலியன்றவரை காத்தல் வேண்டும். உந

தெருவிலுள்ள கடவுட்டன்மை வாய்ந்த மரங்கள், கொடிமரம், இழிபிறப்புயிர்த் தொகுதி ஆகிய இவற்றின் நிழலையும், தாய் தந்தை ஆசிரியன் முதலிய பெரியோர்களின் நிழலையும், சாம்பல், உமி, தூயனவல்லாப் பொருள்கள், கற்றுண்டு, ஓடு, வழிபாட்டிற்குரிய பொருள்கள், நீராடுமிடம் ஆகிய இவற்றையும் மிதித்துச்செல்லலாகாது. உச

கைகளால் ஆறு முதலியவற்றில் நீந்திச் செல்லலாகாது. மறைந்திருக்கும் நெருப்பிற்கு நேராகச் செல்லலாகாது. கடக்கும் ஆற்றலில் ஐயமுறுதற்குரிய தோணியிலும், தாங்கும் வன்மையில் ஐயமுறுதற்குரிய மரத்திலும், அடங்காக் குணம் வாய்ந்த குதிரைமுதலிய ஊர்திகளிலும் ஏறலாகாது. உரு

மூக்கை மிகுதியாக வருடுதலும், நிலத்தைக் காரணமின்றிக் கீறுதலும், இரண்டு கைகளையுஞ் சேர்த்துக்கொண்டு தலையைச் சொறிதலுங் கூடாவாம். உசா

---

உச. கடவுட்டன்மை வாய்ந்த மரங்கள் - சுற்றிலும் திண்ணை கட்டப்பட்டு வழிபடுதற்பொருட்டுப் பிரதிட்டை செய்து அமைக்கப்பெற்றஅரசு முதலியனவாம். தூயனவல்லாப் பொருள்கள்-எலும்பு, மலம், எச்சில் முதலியன.

உறுப்புக்களை மாறுபட இயக்கலாகாது. ஒன்றைப் பெறவேண்டு மென்னும் அவாவை நெடிது மேற்கொண்டிருத்தலாகாது. மன மொழி மெய்கட்குத் துன்பம் நேருமுன்னரே அவற்றின் செயல்களை யொடுக்கிவிடல் வேண்டும். உஎ

முழந்தாளை நெடுநேரம் உயர்த்துவைத்தலாகாது. இரவில் மரங் களினடியிலும், இல்லத்து முற்றங்களிலும், சிறு தெய்வ நிலயங் களிலும், நாற்றெருக் கூடுமிடங்களிலும், திருக்கோயில்களிலும் இருத் தலாகாது. உஅ

பாழுங் காட்டினையும், பாழும் இல்லத்தினையும், சுடலையையும் பகலினும் அடைதலாகாது. கதிரவனை உற்றுப்பார்த்தலும் சுமை யைத் தலையாற் சுமத்தலுங் கூடாவாம். உக

நுண்ணிய பொருளையும், மிக்க ஒளியுடைப் பொருளையு , தூயனவல்லாப் பொருள்களையும், வெறுப்புண்டாக்கும் பொருளை யும் எப்பொழுதுங் காண்டலாகாது. ௩0

சந்தியாகாலங்களில் உணவுகொள்ளல், பெண்புணர்ச்சி, உறங் குதல், படித்தல், ஆராய்தல், கட்குடித்தல், கள்விற்றல், கள்ளிறக் கல், கொடுத்தல், வாங்குதல் ஆகிய இவற்றைச் செய்தலாகாது. ௩க

அறிவுடையார்க்கு எல்லாச் செயல்களிலும் உலகமே ஆசிரியனு கும். ஆதலின் பகுத்துணரும் அறிஞன், உலகியல் உணர்தற்பொருட்டு அவ்வுலகத்தையே பின்பற்றல் வேண்டும். ௩உ

---

உஎ. மன மொழி மெய்களின் செயல்கள் அளவின் மேற்படுமாயின் அவற்றிற்குத் துன்பமுண்டாமாதலின், அச்செயல்களை அளவோடு செய்ய வேண்டுமென்பது கருத்து.

உஅ. இரவில் என்பதைப் பின்னுள்ளவற்றிற்குங் கூட்டிக்கொள்க.

உக. பகலினும் என்றமையால் இரவில் அடைதலாகாதென்பது எளி திற் புலப்படும். மிகு சுமையைத் தலையாற் சுமப்பின் கழுத்துநரம்பு முதலிய உறுப்புக்கள் பிறழ்ந்து துன்புறுத்து மென்பது கருத்து.

௩க. முதனூலிலுள்ள "ஸந்தாநம்" என்பது "கள்ளிறக்கல்" என்றுமொழி பெயர்க்கப்பட்டது. "வில்லில் அம்பு பூட்டி எய்தல்" என்றும் பொருள் கொள் ளலாம்.

௩உ. உலகம் என்பது ஈண்டு உயர்ந்தார் மேலதாம். இச்சுலோகத்தின் கருத்து, திருக்குறளில், "ஒப்புரவறிதல்" என்னும் அதிகாரத்தின் பொருளை நினைவுறுத்துவதாகும்.

இராசதருமம், தேயதருமம், குலதருமம், ஞாதிதருமம், ஆன்றோர்தருமம் ஆகிய இவற்றைப் பழித்தலாகாது. தான் ஆற்றலுடையனாயினும் உலகிய லாசாரத்தைக் கடக்க மனத்தாலும் எண்ணலாகாது. ௫௩

ஒருவன் தான் செய்த தகுதியில்லாத செயலையும், கூறிய தகுதியில்லாத சொல்லையும் முறையே தன் ஆற்றலாலும், ஏதுவினாலும் நிலைப்படுத்த முயலலாகாது. ௫௪

ஒருவன் எதிரில் அவன் தீய குணங்களை எடுத்துரைப்பார் மிகச் சிலரே யாவர். ஆதலின், அறிவுடையான், உலகியலாலும் நூலுணர்ச்சியாலும் மெய்ம்மை பொய்ம்மைகளை யறிந்து, விலக்கற்பாலனவற்றை விலக்கல் வேண்டும். நீதியல்லாத தொன்மை நீதியை யொப்புக்கொள்ள மனத்தாலும் எண்ணலாகாது. ௫௫

"இம்மனிதன் ஆயிரங் குற்றங்களை யுடையனாக இருக்கின்றான்; யான் செய்யும் ஒரு குற்றத்தால் வரக்கடவதென்?" என்று கருதி ஒருவன் சிறிதும் பாவ கன்மத்தைச் செய்ய எண்ணலாகாது; என்னை? நீர்த் திவலைகள் பல வீழின் குடமும் நிறையுமாகலான். ௫௬

ஒருவன் "இப்பொழுது யான் எத்தகைய நிலைமையிலிருந்து பகல் இரவுகளைப் போக்குகின்றேன்" என்றிவ்வாறு நாடோறும் இடைவிடாது எண்ணுவானாயின் அவன் துன்பம் எய்துவானல்லன். ௫௭

அறிவுமிக்க மனிதன், வேதம் அறநூல் புராணங்களிலுள்ள அதி அருத்தவாதங்களையும், அன்மொழித்தொகை முதலிய சொல் வினைபுகளாலும் விசேடணங்களாலும் ஏது முதலியவைகளாலும் தான் விரும்பிய கொள்கையை நிலைப்படுத்துதலையும் ஒழித்து, முயன்று சாரமான பாகத்தைக் கண்டு, ஆன்றோர் மேற்கொண்

௫௬. இங்குக் கூறப்பட்ட தருமங்களில் விதி விலக்கிறந்தன சில வுளவெனினும், அவை தேயம் குலம் முதலியவற்றின் வேறுபாடுபற்றிப் போற்றற்பாலவாம் என்பது கருத்து.

௫௭. ஒருவன், தன் வாழ்நாள் எவ்வாறு கழிகின்றது என்று நாடோறும் தான் செய்த நன்று தீதுகளை யாராய்வானாயின், அப்பொழுது அவனுக்குத் தீயன வொழித்து நல்லன புரிதற்கு விருப்பம் நிகழுமாதலின் இவ்வாறு கூறப்பட்டது.

டொழுகும் அறவினைகளைச் செய்தல் வேண்டும்; என்னை? அறத்தி னுண்மை யறிதற் கரியதாகலின். ௩அ-௩௯

அரசன், தன் நண்பர் புதல்வர் குரவர் என்னு மிவர்கள் மற நெறி யொழுகுவாராயின் அவர்களையும், கள்வனையும், ஆததாயிகளை யும் தன்னாட்டில் வைத்துக்கொள்ளலும் அவரைக் காத்தலுஞ் செய்தலாகாது. ௪0

இல்ல முதலியவற்றில் நெருப்பிடுவாரும், நஞ்சிடுவாரும், ஆயுத முதலியவற்றாற் கொலை புரிவாரும், பிறர் பொருளை அறவே கவர் வாரும், பிறர் நிலத்தை யபகரிப்பாரும், பிறர் மனை நயப்பாரும் ஆகிய இவ்வறுவரும் ஆததாயிகள் ஆவர். ௪௧

அறிவுமிக்க மனிதன் தன்மனைவி, குழந்தை, வேலையாள் ஆகிய இவர்களையும், நோய், பசு, பொருள், கல்விப்பயிற்சி, பெரியார்வணக் கம் ஆகிய இவற்றையும் ஒரு கணப்பொழுதேனும் பொருட்படுத்தாம லிருத்த லாகாது. ௪௨.

எந் நாட்டில் ஒருவனுக்கு அரசனும், பெரும்பொருளாரும், அந்தணரும், மருத்துவரும் ஆகிய இவர்கள் பகைமை யுடையரா யிருக்கின்றனரோ, எந்நாட்டின் இயல்பும் ஒழுக்க வழக்கங்களும் அவனுக்கு மாறுபட்டிருக்கின்றனவோ, அந்நாட்டில் அவன் ஒரு நா ளேனும் இருத்தலாகாது. ௪௩

எந்நாட்டில் அலிகளும், பெண்களும், சிறுவரும், சினமிக்கா ரும், அறிவில்லாரும், பகுப்புணர்ச்சியில்லாரும் ஆகிய இவர்கள் அதி காரிகளாக இருக்கின்றனரோ, அந்நாட்டில் ஒரு நாளேனும் வாழ்தலா காது. ௪௪

எந்நாட்டில் அரசன் விவேகமற்றவனாகவும், அரசவைக்கண் ணுள்ளார் ஒருதலைச் சார்புள்ளவராகவும், புலவர்கள் நல்லொழுக்க மில்லாதவராகவும், சான்றுகூறுவார் பொய்யராகவும் உள்ளாரோ; தீயோர்க்கும், பெண்களுக்கும், இழிந்தோர்க்கும் செல்வாக்குண் டோ; அந்நாட்டில் ஒருவன், பொருள், மானம், இருப்பு, வாழ்க்கை ஆகிய இவற்றுள் ஒன்றனையும் விரும்பலாகாது. ௪௫-௪௬

---

௧௧. தந்தி - மந்திரம். அருத்தவாதம் - புனைந்துரை.

௪௧. இவரைப் பற்றிப் பரிமேலழகர் பின்வருமாறு கூறுவர்:—"கொடி யவர் என்றது—தீக்கொளுவுவார், நஞ்சிடுவார், கருவியிற் கொல்வார், கள்வர், ஆறலைப்பார், குறை கொள்வார், பிறனில் விழைவார் என்றிவர் முதலாயினாரை. இவரை வடநூலார் ஆததாயிக ளென்ப" (குறள் ௫௫0-உரை.)

தாய் சிறு பருவத்திற் காத்திலளாயினும், தந்தை நன்றாகக் கல்விப் பயிற்சி செய்வித்திலனாயினும், அரசன் பொருளைக் கவர்ந்துகொள்ளுவானாயினும் இந்நிகழ்ச்சிகளில் வருந்துவதாற் பயனென்? ௪௭

ஒருவன், தன் நண்பர் உறவினர் அரசன் ஆகிய இவர்களிடத்துச் செவ்வையாக ஒழுகவும் அவர் சினங்கொள்ளுவராயினும், தன் இல்லம் தீயினாலும் இடியினாலும் அழியுமாயினும், இந்நிகழ்ச்சிகளில் வருந்துவதாற் பயனென்? ௪௮

பெரியோர்களுடைய சொற்களைப் பொருட்படுத்தாமற் செருக்கினாற் செய்யப்படுங் காரியம், தனக்குக் கேடுபயக்கும் பயனை விளைவிக்குமாயின், அது குறித்து வருந்துவதிற் பயனென்? ௪௯

அரசனையும், கடவுளரையும், குரவர்களையும், அக்கினியையும், தவஞ் செய்வாரையும், அறத்தின் முதிர்ந்தாரையும், அறிவின் முதிர்ந்தாரையும் விழிப்புமிக்க மனமுடையனாய் நன்கு வழிபடல் வேண்டும். ௫0

தாய், தந்தை, குரு, தலைவன், உடன்பிறந்தார், புதல்வர், நண்பர் ஆகிய இவர்களிடத்து ஒருபொழுதுஞ் சிறிதாய் நெஞ்சத்தாலும் மாறுபடலாகாது. அவர்க்குத் தீங்கிழைத்தலுமாகாது. ௫௧

தன் சுற்றத்தாரோடு பகைகொள்ளலாகாது. எவ்வியவனுக்கு மானக்கேடு செய்ய விரும்பலாகாது. பெண்கள், சிறுவர், கிழவர், அறிவிலர் ஆகிய இவர்களோடு கலகஞ் செய்தலாகாது. ௫௨

சுவைமிக்க பொருளைத் தனியனாக இருந்து உண்ணுதலும், செயற்பாலனவற்றைத் தனிமையாக இருந்து ஆராய்தலும், தனியனாக வழி நடத்தலும், பலர் உறங்குங்கால் அவர்களுக்கிடையில் தனியனாக விழித்திருத்தலுமாகாவாம். ௫௩

பிறர் உடைமையைத் தான் பெற்றுக்கொள்ளலாகாது. ஒருபொழுதும் பிறர்க்குத் தீங்குசெய்தலாகாது. எவ்விடத்தும் இழிந்த குணஞ் செயல்களையுடைய தீயவர்களோடும், பெண்களோடும் ஒரே இருக்கையில் உடனிருத்தலாகாது. ௫௪

இந்நிலவுலகத்திற் செல்வத்தை விரும்பும் மனிதன், துயில், மனத்தளர்ச்சி, அச்சம், சினம், மடிமை, காலந்தாழ்த்தல் ஆகிய இவ் வறுவகைக் குற்றங்களையும் ஒழித்தல் வேண்டும். இன்றேல் இக்குற்றங்கள் காரியங்களுக்கு இடையூறு விளைவிப்பனவாம். இதன்கண் ஐயமின்று. ௫௫

உபாயஞானம், காரியத்தைக் கூட்டி முடிக்குந் திறமை, உண்மையுணர்ச்சி, புதிது புதிதாகப் பொருள்களை யாராய்ந்து காணும் அறிவு, எப்பொழுதும் தன் கடமையிற் பற்று, பிறர்மனை நயவாமை, சொல்வன்மை, நுண்ணுணர்வு, இன்சொல், தட்டின்றி நிரல்படப்பேசல் ஆகிய இவற்றை என்றும் உடையனாக இருத்தல் வேண்டும். ௫௬

எப்பொழுதும் ஒரு பொருளை விரைவின்றி விளக்கமாகக் கேட்டல் வேண்டும். கேட்டதனை விரைந்து தெளிதல் வேண்டும். அங்ஙனந் தெளிந்த பின் அதனைச் செய்கையின் மேற்கொள்ளல் வேண்டும். ஒருபொழுதும் தான் விரும்பியவாறு ஒழுகலாகாது. ௫௭

விலைக்கு வாங்கல் விற்றல்களிற் பேராவாவினையும், தன் எளிமையையும் வெளிப்படுத்தலாகாது. பிறர் இல்லத்தில் அவர் அறியப்படாத நிலையிலும், காரியமின்றியும் புகுதலாகாது. ௫௮

ஒருவன் வினவாதிருக்க அவன்பால் தன் வீட்டுக் காரியங்களைப் பற்றிச் சொல்லலாகாது. காரிய நிறைவேற்றத்திற் றுணையாவனவும், சில்வகையெழுத்திற்பல்வகைப் பொருளைச் செறித்துக்காட்டுவனவுமாகிய சொற்களால் உரையாடல் வேண்டும். ௫௯

தனக்கு அனுபவமில்லாத பொருளைப் பற்றித் தன் கருத்து இன்னதென்று வெளியிடலாகாது. பிறர் கருத்தை நன்றாக வுணர்ந்து அவர் எளிதில் விளங்கிக்கொள்ளுமாறு விடை கூறுதல் வேண்டும். ௬௦

கணவன் மனைவி, தந்தை மகன் இவர் தம்முட் கலகம் நேர்ந்துழி அதன்கட் சான்று கூறலாகாது. தன் காரியச் சூழ்ச்சிகளை மறைத்துப் பேணல் வேண்டும். தன்பால் அடைக்கலம் புகுந்தானை விலக்கலாகாது. ௬௧

---

௫௬. புதிது புதிதாகப் பொருளை ஆராய்ந்து காணும் அறிவை "பிரதிபை" என்ப.

௫௮. வாங்குதலிற் பேராவா - ஒரு பண்டத்தை விலைக்குக் கொள்ளுங்கால் அதனை அவ் விலையளவின் மிகுதியாகக் கொள்ள விரும்புதல். விற்றலிற் பேராவா - அங்ஙனங் கொண்ட பண்டத்தை விற்குங்கால் அதனை விலையளவிற் குறையக் கொடுக்க விரும்புதல்.

௬௦. அநுபவம்-அழுந்தியறிதல். இச்சுலோகத்தின் பிற்கூறு "எண்பொருளவாகச் செலச்சொல்லித் தான்பிறர்வாய், நுண்பொருள் காண்ப தறிவு" என்னும் திருக்குறட் பொருளை நினைவுறுத்தல் காண்க.

தன் ஆற்றற் கியைந்தவாறு காரியங்களைச் செய்ய விரும்புதல் வேண்டும். அங்ஙனஞ் செய்யுங்கால் இடையூறு கண்டு கலங்கலாகாது. எவர்க்கும் உயிர்நிலைக்கு ஊறுசெய்தலும், பழிமொழி பகர்தலுங் கூடாவாம். சு௨

பிறர்க்கு எளிமை, நாண், அருவருப்பு முதலியவற்றை யுண்டாக்குஞ் சொற்களையும், பொருளில்லாத மொழிகளையும் ஒரு சிறிதுங் கூறலாகாது. சுக

அறத்தின்பாற் பட்டதொரு காரியம் உலகத்தாரால் பழிக்கப்படுமாயின், அஃது உம்பருலகின்பம் தாராது. (ஆதலின் அதனைச் செய்யலாகாதென்பது கருத்து.) ஒரு பொழுதும் எவன் சொற்களையும் தன்னுடைய ஏதுக்களால் அழித்தலாகாது. சுச

நன்முக ஆராய்ந்து விடைகூறல் வேண்டும். ஒருபொழுதும் விரைந்து கூறலாகாது. பகைவனயினும் அவன்பாலுள்ள குணங்களைக் கொள்ளுதலும், குருவாயினும் அவன்பாலுள்ள குற்றங்களைத் தள்ளுதலும் வேண்டும். சுரு

உயர்வாகிய இன்பநிலையும், இழிவாகிய துன்பநிலையும் ஒருவன்பால் நித்தியமாக விரும்பனவல்ல. எஞ்ஞான்றும் முற்பிறப்பிற் செய்த வினைவயத்தாற் பொருளுடையனுதலும், அஃதிலனுதலுங் கூடும். ஆதலின் எல்லா வுயிர்களிடத்தும் அன்புரிமையை விலக்கலாகாது. சுசு-சுஎ

எக்காலத்தும் நெடிது ஆராய்ந்து செய்தலையும், இடையறாத அறிவுவிளக்கத்தையும் உடையனுதல் வேண்டும். ஆராயாது செய்தலையும், சோம்பலையும், காலந் தாழ்த்தலையும் ஒரு பொழுதும் மேற்கொள்ளலாகாது. சுஅ

செய்தற் கரிய காரியத்தை அறிந்து விரைந்து செய்ய முயல்பவன், முதலில் நெடிதாராய்ந்து உணர்தல் வேண்டும். அங்ஙனம் உணர்ந்து செய்வான் அக்காரியத்தால் நலம் எய்துவான். சுகூ

---

சுச. ஒரு காலத்தில் அக்காலவியல்பு நோக்கி அறநூலில் விதிக்கப்பட்டதொரு காரியம் பின்னொரு காலத்தில் உலகத்தாற் பழிக்கப்படுமாயின், அதனை அறநூலில் விதித்ததுபற்றி மேற்கொள்ளாமல், உலகம் பழித்ததுபற்றி விலக்கல் வேண்டுமென்பது கருத்து. தன்னுடைய ஏதுக்களால் அழித்தலாவது-பேசுவோன் சொற்களையும், பிற பெரியோர் மொழி நன்முறைகளையும் ஏதுக்களாக எடுத்துக் காட்டாது தன் கருத்திற் றோன்றியவற்றையே ஏதுவாகக் காட்டி விலக்கல்.

இடையறுத அறிவுவிளக்கமுடையான், நேர்ந்த ஒரு காரியத்தை நெடிதாராயாமல் விரைந்து செய்ய முயல்வானாயின், அக்காரியங் கைவரப் பெறுதல் அதன் பெருமையாலும், தன் மனத் தளர்ச்சியாலும் (சித்தி யாங்கொல் ஆகாதுகொல் என்னும்) ஐயத்தின் பாற் படுவதாகும். ௭0

எவன், சோம்பலுடையனாய் உரிய காலத்திற் செயற்பாலவற்றைச் செய்ய முயன்றிலனோ, அவனுக்கு எச்செயலினுஞ் சித்தி யின்றாம். குலத்தோடும் அழிவெய்துவான். ௭௧

எவன், பயனை யறியாமல் வினையின்கண் முயல்கின்றானோ, பகுப்புணர்வில்லாத அவன், அவ்வினையினாதல் அதன் பயனாதல் துன்பத்தை யடைவான். ௭௨

காலந்தாழ்த்துச் செய்யும் இயல்புடையவன், மிகுதியான கால அளவிற் சிறிய கன்மத்தைச் செய்து முடிப்பான். அச்சிறு செயலால் விளையும் சுருங்கிய பயனாற் றுன்பமும் எய்துவான். ஆதலின் அவற்றை நெடிதாராய்ந்து செய்யும் பகுப்புணர்வுடையனாதல் வேண்டும். ௭௩

ஆராயாது செய்யும் வினை, ஒரோவமயம் நற்பயனையும் விளைவிக்கும். நன்கு ஆராய்ந்து செய்யப்படும் வினை ஒரோவமயம் பயனின்றியும் ஒழியும். அங்ஙன மாயினும், ஆராயாது செய்யும் வினை தன் விருப்பத்திற்கு மறுதலைப்பயனை விளைவிக்குமாதலின் அதனைச் செய்ய எண்ணுதலாகாது. செய்யத் தகாத செயலினின்றும் ஒரோவமயம் தான் விரும்பிய பயன் விளையுமாயினும் அதனைச் செய்தலாகாது. நற்செயலினின்றும் தான் விரும்பியதல்லாத பயன் விளையுமாயினும், அது, செய்யத் தகாத செயலைச் செய்யும்வண்ணம் தூண்டுவதாக மேற்கொள்ளலாகாது. ௭௪-௭௬

௭௨. அவ் வினையினாற் றுன்பமுறுதல் அதனைக்கொண்டு முடித்தற்குரிய பொருள் ஆற்றல் முதலியன வின்மையாலும், அதன் பயனாற் றுன்ப முறுதல் விரும்பியதற்கு மறுதலையாகிய பயன் விளைதலாலு மாம்.

௭௩. அவற்றை யென்றது காலம் கன்மம் பயன்களை.

௭௪. நன்கு ஆராய்ந்து செய்யப்படும் வினை ஒரோவமயம் பயனின்றி யொழியினும் தீய பயனைப் பயவாதென்பது கருத்து.

௭௬. நற்செயலினின்றும் வேண்டாப்பயன் விளைதல், காகதாலீயம் போல ஒரோவமயம் பிற காரணங்களானும்; அதுபற்றி அந்நற்செயலை வெறுக்கலாகாதென்பது கருத்து.

வேலைக்காரன், உடன்பிறந்தார், புதல்வர், மனைவி ஆகிய இவர்களாற் செய்யப்படாத காரியத்தை நண்பர்கள் ஐயுறவின்றிச் செய்பவராவர். எஎ

ஒருவன் நட்புரிமையை உண்மையாக அறியாமல் நல்ல நண்பன் என்று கருதி அவன்மாட்டு ஒரு காரியத்தை வைக்கும் அறிவிலான் அக்காரியமும் அழிவெய்தக் கண்டு வருந்துவான். எஅ

எந்த மனிதனுடைய உள்ளக்கிடக்கையையும் உள்ளவாறறிய முடியாது. ஆதலின், நல்ல நண்பனை யடைதற்பொருட்டு மிகவும் முயலவேண்டும். மனிதர்களுக்கு நல்ல நண்பரைப் பெறுதலே எப்பேறுகளிலுஞ் சிறந்ததாகும். எகூ

அரசன், தான்நம்புதற்குரிய புதல்வர், உடன்பிறந்தார், மனைவி, அமைச்சர், மற்றை வினைசெய்வார் என்னும் இவருள் எவர்பாலும் எப்பொழுதும் மிகவும் நம்பிக்கை கொள்ளலாகாது. அ0

உலகத்து மக்கள் எல்லோர்க்கும் பொருள்விருப்பம், பெண் விருப்பம், அரசியல்விருப்பம் ஆகிய இவை மிக்கிருத்தல் இயல்பாம். ஆதலின், காட்சி முதலிய அளவைகளாற் றுணியப்பட்டவனும், நன்கு பழகினவனும், தனக்கு நலத்தை விரும்புகின்றவனும் ஆகிய ஒருவனை ஆராய்ந்து நம்புதல் வேண்டும். அக

தன்னைப்போல் தன் நண்பனையும் நம்பிப் பின்னர் அவன் செயல்களைப் பற்றி மறைவிடத் திருந்து தானே ஆராய்தல் வேண்டும். அங்ஙனம் ஆராய்ந்து நம்பப்பட்டோன் கூறுஞ் சொற்களை ஐயுற்று அவை கேடுபயப்பனவாகவும், மாறுபட்டனவாகவும் கொண்டு தருக்கித்து எண்ணலாகாது. அஉ

தனக்குரிய கடமையிலும் நீதியிலும் திறமை வாய்ந்த ஒருவன், தன்னால் நம்பப்பட்டோன் தன் காரியத்தின் அறுபத்து நான்கில் ஒரு கூற்றிற்குக் கேடு செய்வானாயின், அது பற்றி அவனை வெறுது பொறுத்தலோடு, அவன்பால் வைத்த நட்புரிமையையும் காத்தல் வேண்டும். அங

---

எஎ. இதனால் நட்பின் சிறப்புக் கூறப்பட்டது.

எஅ-எகூ: இவ்விரண்டு சுலோகங்களினாலும் நட்பை யாராய்ந்து கொள்ள வேண்டு மென்பது புலப்படும்.

அ0. நம்புதற்குரிய என்னும் விசேடணத்தை உடன்பிறந்தார் முதலியோர்க்குங் கொள்க.

நன்கு போற்றற்பாலராகிய பெரியாரை எப்பொழுதுங் கொடையாலும், பெருமைப்படுத்தலாலும், பணிசெய்தலாலும் போற்றி யொழுகல் வேண்டும். அச

கொடுந் தண்டமிடுதலையும், வன்சொல் வழங்குதலையும் ஒருபொழுதும் மேற்கொள்ளலாகாது. வன்சொற் கூறல், கொடுந்தண்டமிடுதல் ஆகிய இவற்றால் தன் மனைவி மக்களும் வெறுப்பெய்துவர். அரு

புல் முதலியன கொடுத்தலாலும், இன்சொற்களாலும் பசு முதலியனவும் அடங்கி வயப்பட்டொழுகுவனவாம். அசு

கல்வியினாலும், வீரத்தாலும், பொருளாலும், உயர்குடிப் பிறப்பாலும், வலிமையாலும், மானத்தாலும் ஒருபொழுதுஞ் செருக்குறலாகாது. அஎ

கல்விச்செருக்குள்ளவன், தனக்குத் தோன்றிய ஏதுக்களைக் கொண்டு, தன்னாற் போற்றப்படும் பெரியோர்களின் உபதேச மொழிகளை நன்கு அறிந்துகொள்வானல்லன். தன் கொள்கை கேடுபயப்பதெனினும் அதனை உண்மைப் பொருளையொப்பக் கருதுவன். அஅ

பெரியார் மேற்கொண்ட நெறியைத் தன் வலிமையால் விலக்கி வீரத்தாற் செருக்குற்ற ஒருவன், படைகளின் அணிவகுப்பு முதலிய போர்த் திறமையை மேற்கொள்ளா தொழித்துக் கைப்படை தாங்கி விரைந்து போர்செய்து தன் உயிரைப் போக்கிக்கொள்வான். அகூ

பொருட் செருக்குள்ள மனிதன், ஆடு தன் மூத்திரத்தால் தன் முகத்தை நனைத்துக்கொண்டு அம்மூத்திர நாற்றத்தையு முணராமை போலப் பழியின் மூழ்கி அப்பழியையும் அறிவானல்லன். கூ0

உயர்குடிப் பிறப்பாற் செருக்குற்றவன், குணஞ் செயல்களாற் றன்னினுஞ் சிறந்த பிறரெல்லோரையும் அவமதிப்பான்; செய்யத்தகாத காரியத்தில் தன் அறிவை நன்கு செலுத்துவான். கூக

அஎ. இதன்கட் கூறிய கல்விச்செருக்கு முதலியவற்றாலாம் குற்றங்களையும், அச்செருக்கில்வழி அக்கல்வி முதலியவற்றாலாம் பயன்களையும் அடுத்து வரும் சுலோக முதல் முறைப்படுத்துக் கூறுதல் காண்க. மானமாவது - நிலையிற் றாழாமையும், தெய்வத்தாற் றாழ்வு வந்துழி உயிர் வாழாமையுமாம்.

அஅ. பெரியாருபதேசங்களைத் தனக்குத் தோன்றிய மாறுபட்ட ஏதுக்களால் விலக்கிவிடுவானென்பது கருத்து.

வலிமையாற் செருக்குற்றவன், விரைந்து போர்செய்தலில் மனத்தைச் செலுத்துவான். இன்றேல், மற்றை மக்களையும், பசு முதலிய உயிர்களையும் தன் வலிமையாற் றுன்புறுத்துவான். கூஉ

மானத்தாற் செருக்குற்றவன், எல்லா வுலகத்தையும் துரும்பை யொப்ப எண்ணுவான்; உயர்ந்த விலைமதிப்புள்ள இருக்கையில் இருத்தற்குத் தான் தகுதியில்லாதவனாயினும், மற்றை எல்லோரினும் மிகுதியாக அதனைப் பெற விரும்புவான். கூங

இங்ஙனங் கூறிய கல்வி முதலியவை பொல்லார்க்கு வாய்ப்பின், செருக்கை யுண்டாக்குவனவாம்; நல்லார்க்கு வாய்ப்பின், பணிவு முதலிய உயர் குணங்களை உண்டாக்குவனவாம். கூச

கல்வியின் பயன் அறிவும் பணிவுமாம். செல்வத்தின்பயன் கொடையும் வேள்வியுமாம். வலிமையின் பயன் பெரியாரைக் காத்தல் என்று கூறப்படும். கூரு

வீரத்தின்பயன் பகைவரை வணக்கலும், அவர்பால் அரசிறை பெறுதலுமாம். உயர்குடிப்பிறப்பின் பயன் சமமும் தமமும் நேர்மையுமாம். மானத்தின் பயன் பிறரெல்லோரையுந் தன்னை யொப்பக் கருதலாம். கூசு

காரியத்திற் கண்ணுடையான் தன் பெருமையைப் பொருட்படுத்தாமல், தாழ்ந்த குலத்தவன்பானின்றும் சிறந்த கல்வியையும், மந்திரங்களையும், மருந்தையும், அழகு நிறைந்த பெண்ணையும் மிகமுயன்று பெற்றுக்கொள்ளலாம். கூஎ

கைவிட்டுப்போன பொருளைப் பற்றிச் சிந்தித்தலாகாது. வரக்கடவ பொருளைக் கொள்ளல் வேண்டும். குழந்தைகளையும், பெண்களையும் மிகுதியாகப் பாராட்டுதலும், மிகுதியாக அடித்துத் துன்புறுத்தலுங் கூடாவாம். அவ்விருவரையும் முறையே கல்விப் பயிற்சியிலும் வீட்டுவேலையிலும் சேர்ப்பித்தல் வேண்டும். கூஅ

பிறர் பொருள் சிறிதாயினும் அவராற் கொடுக்கப்படாமல் தானே கவர்ந்துகொள்ளலாகாது. எவனுடைய பாவத்தையுஞ் சிறிதும் பேசுதலாகாது. பெண்களைப் பழித்தலாகாது. கூகூ

---

கசு. சமம் - மன முதலிய அகக் காரணங்களை யடக்கல். தமம் - பொறிகளைப் புலன்களிற் செல்லவிடாமற் றடுத்தல். தன்னை யொப்பக் கருதலாவது-பிறரைத் தன்னிலும் இழிந்தவராகக் கருதாமல் மேம்படநினைத்தல்.

பொய்ச் சான்று கூறலாகாது. உண்மைச் சான்றை மாறுபடக் கூறலாகாது. உயிர் போகுந் தறுவாயிலும், மிகப் பெருங்காரியத்தைக் கடைபோக்குங் காலத்தும் பொய் கூறலாம். க00

மகட்கொடுப்போன்பாற் பொருளில்லாதவனையும், கள்வன்பாற் பொருளுடைய மனிதனையும், கொலை செய்ய விரும்புவோன்பால் மறைந்திருக்கும் மனிதனையும், அறிந்திருந்தாலுங் காட்டிக்கொடுத்தலாகாது. க0க

கணவன் மனைவி, தாய் தந்தை, தமையன் தம்பி, தலைவன் ஏவலாளன், தங்கை தமக்கை, நண்பர், ஆசிரியன் மாணாக்கன் ஆகிய இவர்களுக்குள் மனவேற்றுமை யுண்டாம்வண்ணம் செய்யலாகாது. க0உ

இருவர் பேசிக்கொண்டிருக்கும்பொழுதாம், கூடியிருக்குங் காலும் அவர்தம் நடுவண் செல்லலாகாது. நண்பர், உடன்பிறந்தார், சுற்றத்தார் ஆகிய இவர்களை எப்பொழுதும் தன்னைப்போற் கருதி உபசரித்தல் வேண்டும். க0ங

தன் இல்லத்திற்கு வந்தோன் தாழ்ந்தவனாயினும், அவனைத் தகுதிக்குத் தக்கவாறு அவனது நலத்தை வினவுதலாலும், நீர் முதலியன கொடுத்தலாலும், பொருட் கொடையாலும் தன்னால் இயன்றவரை எப்பொழுதுஞ் சிறப்பித்தல் வேண்டும். க0ச

---

க00. உயிர் போகும் நிலையிலும், மிகப் பெரிய காரிய நிறைவேற்றத்திலும் பொய் கூறலாமாயினும், அப்பொய்யால் இந்நன்மைகளே யன்றிப் பிறர் யார்க்குந் தீங்கு விளைதலாகாதென்பது கருத்து. இதனைப் "பொய்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த, நன்மை பயக்கு மெனின்" என்னுந் திருக்குறளானு முணர்க.

க0க. பொருளில்லாதவனைக் காட்டலாகாதென்பது - பெண் கொடுப்போனிடத்து, அவனாற் கருதப்பட்ட மணமகன் பொருளில்லாதவன் என்று தனக்குத் தெரிந்திருப்பினும் அதனை வெளிப்படுத்தாமையாம்.

க0உ. தாய்தந்தையர்க்கு மனவேற்றுமை செய்யலாகாதென்பது புதல்வனை நோக்கிக் கூறியதாகும். அது பிறனொருவன் செயலாயின் "கணவன்மனைவி" என்பதனுள் அடங்கும். ஆனால் பிறவெல்லாம் மற்றொருவன் செயலாகக் கூறி இவ்வொன்றை மாத்திரம் புதல்வன் செயலாகக் கூறுதல் பொருத்தமாகத் தோன்றவில்லை. ஆதலின், தாய் தந்தை என்புழிப் புதல்வனைக் குறித்துக் கூறியதாகக்கொண்டு, தாய்தந்தையர்க்கும் மகனுக்கும் மனவேற்றுமை யுண்டாக்கலாகாதென்பது கருத்தாகக் கொள்ளுதல் பொருத்தமாகத் தோன்றுகின்றது.

புதல்வரை யுடையான் ஒருவன், புத்திரவதியான தன் மகளை யும், கணவரோடு கூடியிருக்குந் தங்கை தமக்கைமார்களையும் எப் பொழுதும் தன் இல்லத்தில் வைத்துக்கொள்ளலாகாது. அவ்விரு பகுதியினரும் சார்பற்றவராக விருப்பின் அவர்களைப் பரிபாலித்தல் வேண்டும். கO௫

பாம்பு நெருப்பு நோய் ஆகிய இவற்றையும், தீயவன் அரசன் மருமகன் உடன்பிறந்தாள்மகன் பகைவன் ஆகிய இவர்களையும் முறையே சிறியனவென்றும், சிறியவரென்றுங் கருதிப் பழகுங்காற் பொருட்படுத்தாமல் இருத்தலாகாது. கOசு

கொடுந்தன்மை குறித்துப் பாம்பையும், சுட்டெரிக்குந் தன்மை குறித்து நெருப்பையும், தீய இயற்கை குறித்துத் தீயோனையும், தலைமை குறித்து அரசனையும், மகட்குத் துன்பம் நேரு மென்னும் அச்சங் காரணமாக மருமகனையும், தன் முற்றோன்றிய பிதிர்க்களுக் குப் பிண்டங் கொடுத்தல் பற்றி உடன்பிறந்தாள் மகனையும், மிகுதல் குறித்து நோயையும், அச்சம் நோக்கிப் பகைவனையும் பொருட்படுத் தல் வேண்டும். கOஎ

கடன் எச்சமும், நோய் எச்சமும், பகை எச்சமும் வைத்துக் கொள்ளலாகாது. இரப்போர் முதலியோர் இரவுரை கூறி வேண்டுங் கால், அவர்க்கு வன்சொற்களால் விடை கூறலாகாது. ஆற்றலுடை யனாயின், அவ்விரப்போர்க்கு வேண்டுவன செய்தலும், இன்றேல் செய்வித்தலும் வேண்டும். கOஅ

கO௫. அவர்களைத் தன் இல்லத்தில் வைத்துக்கொள்ளுவானாயின் அவர்க் கும் தன் மருகியர்க்குங் கலகம் விளையு மென்பது கருத்து. சார்பற்ற அவரைக் காக்குங்காலும் தன் இல்லத்தில் வைத்துக் காக்கவேண்டு மென்று கூறாமையும் அது நோக்கியேயாம்.

கOஎ. பொருட்படுத்தல்வேண்டு மென்பதற்கு, அரசன்,மருமகன் உடன் பிறந்தாள் மகன் என்னும் இவரைக் குறித்து விழிப்புடையனாய்ச் சிறப்பிக்க வேண்டு மெனவும், பாம்பு நெருப்பு நோய் என்னும் இவற்றைக் குறித்தும், தீயவன் பகைவன் என்னும் இவரைக் குறித்தும் முறையே அவற்றாலும், அவரா லும் நேரும் தீங்குகளைச் சோர்விலனாய் நின்று ஒழித்தல் வேண்டு மெனவும் பொருள் கொள்க.

கOஅ. எச்சம் - குறை; சேடம்.

வள்ளல், அறவோர், வீரர் ஆகிய இவர்களைப் பற்றிய புகழ் மொழிகளை எப்பொழுதும் முயன்று கேட்டல் வேண்டும். இவர்கள் பாற் புரைவழி காண்டலாகாது. க௦க

மனிதன், உரிய காலத்தில் நலம் பயப்பதும் அளவுட்பட்டது மாகிய உண்டியையும், சிற்றின்ப நுகர்ச்சியையும், கடவுள் முதலி யோர்க்கு நிவேதித்து எஞ்சிய துண்டலையும், நல்லுறக்கத்தையும், எளிமை யின்மையையும், தூய்மையையும் எப்பொழுதும் உடையனு யிருத்தல் வேண்டும். கக௦

எப்பொழுதும் மக்கள் இயக்கமில்லாத இடத்திலேயே சிற்றின்ப நுகர்தலையும், உணவுட்கொள்ளுதலையும், மல மூத்திரம் ஒழித்தலையும் செய்தல் வேண்டும். இடை விடாது முயற்சி யுடையனுகவும், வன்மை நலம் உண்டாதற்பொருட்டு உடற்பயிற்சி யுடையனுகவும் இருத் தல் வேண்டும். கக்க

சோற்றைப் பழித்தலாகாது. உடல்நல முடையனு யிருக்குங் கால், பிறர் அன்போ டளிக்கும் நிமந்திரண உணவு முதலிய உண்டி களை ஏற்றுக்கொள்ளல் வேண்டும். அறுவகைச் சுவையுடன் கூடி யதும், இனிப்புச்சுவை மிக்கதும் ஆகிய உணவையே சிறந்ததாக அறிதல் வேண்டும். ககஉ

தன் மனைவியோடு கூடி இன்பம் நுகர்தல் வேண்டும். விலைமாத ரோடு ஒருபொழுதுங் கூடலாகாது. திறமைமிக்காரோடு மற்போர் செய்தலும், வணக்க முதலியவற்றால் உடற்பயிற்சி செய்தலுஞ் சிறந்தனவாம். ககங

இரவில் முதல் யாமத்தையும், கடை யாமத்தையும் ஒழித்து இடைநின்ற இரண்டு யாமங்களிலும் துயில்கொள்ளல் சிறந்த

---

க௦க. புரைவழி - குற்றங் காணும் நெறி.

கக௦. நலம் பயத்தலையும், அளவுட்படுதலையும் சிற்றின்ப நுகர்ச்சிக்குங் கொள்க.

ககஉ. நிமந்திரண உணவு - சிராத்தத்திற் பிதிர் தேவதைகளைக் குறித் துக் கொடுக்கப்படுவதாகும். அது பலவகைப் பொருளாலும் ஆக்கப்பட்டு மிகுதி யாக இருக்குமாதலின், அதனை உண்ணுங்கால் உடல்நலம் இருக்கவேண்டு மென்பது இன்றியமையாததே. இனி, மூலத்திலுள்ள " பிரீதி போஜநம் " என்னும் சொற்குப் பிறர் அன்போடு செய்யும் விருந்துணவு என்று பொருள் கோடலும் பொருந்தும்.

ககங. வணக்கம் - சூரிய நமஸ்காரம் முதலியன.

தாகும். வறியவரையும், குருடரையும், மூடவரையும், செவிடரையும் ஒருபொழுதும் எள்ளி நகையாடலாகாது. கக௪

செய்யத் தகாத காரியத்தில் அறிவைச் செலுத்தலாகாது. காரிய நிறைவேற்றத்திற் கண்ணுடையான், தற்பெருமையை விட்டு முயற்சியினுலும், வலிமையினுலும், அறிவினுலும், அஞ்சாமையினு லும், பராக்கிரமத்தினுலும், நேர்மையினுலும் தான் மேற்கொண்ட காரியத்தைச் சுருசுருப்போடு விரைந்து முடித்தல் வேண்டும். கக௫

ஒரு கலகம் பொருட்பேற்றைத் தருவதாயின், அதனை மேற்கொள் ளுதல் நன்றும். இன்றேல், அக்கலகம் வாழ்நாளையும், பொருளையும், நட்பையும், புகழையும், பிற நலங்களையுங் கெடுப்பதாகும். கக௬

எவனிடத்தும் வருத்தம் விளைவிக்குஞ் சொற்களைக் கூறுதலும், எவன்பாலுங் குற்றநெறி காண்டலுங் கூடாவாம். ஒருபொழுதும் பெரியோர்களுடையவும், அரசனுடையவுமாகிய ஆணைகளைக் கடத் தலாகாது. கக௭

இழிந்த காரியத்தில் ஏவுவோன் குருவாயினும், அவனை அது நீதென்று அறிவுறுத்தல் வேண்டும். நல்ல காரியத்தை அறிவிப் போன் தாழ்ந்தவனாயினும், அவன்மொழியைக் கடத்தலாகாது. கக௮

ஒருவன், இளம்பருவத்தளாகிய தன்மனைவியைத் தான் காவாது சுதந்திரமுடையவளாக விட்டுப்போதலாகாது. பெண்கள் பொது வாகக் கேட்டிற்குக் காரண மாவர். அங்ஙன மாயின், அயலாரோடு கூடியிருக்கும் இளம் பெண்களைப் பற்றிக் கூறற்பால தென்? கக௯

மதத்தை விளைவிக்கும் பொருள்களாற் களித்து மயங்குதலும், கெட்ட புதல்வனிடத்து மகன்மை அபிமானம் மேற்கொண்டு மயங் குதலும் ஆகா. க௨0

கற்பிற் சிறந்த மனைவி, மாற்றாந்தாய், தாய், மருகி, மணஞ்செய் யப்படாதமகள், தந்தை ஆகிய இவர்களையும், கணவனும் புதல்வனும்

---

கக௬. "பொருள்வருவா யுளதாயின் கலகத்தை மேற்கொள்ளலாம்" என் னும் இஃது ஏற்புழிக்கோடலால் அரசனுக்கு உரியதாகக் கருதப்படுவதாகும். அரசன் அங்ஙனங் கலகம் விளைத்தலும் மற்றைப் பகை அரசரோடன்றிக் குடி களோடு அன்றென்பதும் ஈண்டுக் கருதற்பாலது.

க௨க-க௨௨-க௨௩. மாற்றாந்தாய்-தன் தாயல்லாத தந்தையின் மற்றொரு மனைவி. "கற்பிற் சிறந்த" என்பது மனைவி முதலிய நால்வரையும், "கணவ னும் புதல்வனு மில்லாத-கைம்மை நோன்பினர்" என்பது மகள் முதலிய எல்

இல்லாத கைம்மை நோன்பினராகிய மகள், தமக்கை, தங்கை, மாமி, தமயன்தம்பிமார்களின் மனைவியர், தந்தையுடன்பிறந்தவள், தாயுடன்பிறந்தவள் ஆகிய இவர்களையும், சந்ததி யில்லாதவ ராகிய தாய் வழிப் பாட்டன், குரு, மாமன், அம்மான் ஆகிய இவர்களையும், தந்தை யில்லாதவரும் சிறுவருமாகிய தௌகித்திரன், தம்பி, உடன்பிறந்தாள் புதல்வன் ஆகிய இவர்களையும் இயன்றவரை முயன்று அவசியம் பரிபாலித்தல் வேண்டும். கஉக-கஉங

செல்வம் இல்லாதபொழுதும் முற்கூறப்பட்டாரைக் காத்தல் வேண்டும். செல்வம் நிறைந்திருக்குமாயின் தன்பால் அன்புமிக்க தந்தை குலத்தவரையும், தாய் குலத்தவரையும், மனைவி பிறந்த குலத்தவரையும், அடிமையாள், அடிமைப்பெண், வேலைக்காரர் ஆகிய இவர்களையும் காத்தல் வேண்டும். கஉச

உறுப்பறைகளையும், துறவிகளையும், வறியவரையும், சார்பில்லாதவரையும் காத்தல் வேண்டும். கஉரு

எவன் தன் குடும்பத்தைக் காப்பதில் முயற்சி யில்லாதவனாக இருக்கின்றானோ அவனுக்குக் கல்வி முதலிய பிற குணங்களாலாகும் பயன் யாது? அவன் உயிரோடு கூடிநின்றே இறந்தவனாவான். கஉசா

எவன் தன் குடும்பத்தைத் தாங்காமலும், பகைவரை யழிக்காமலும், உள்ளபொருளைக் காவாமலும் இருக்கின்றானோ அவனுக்கு உயிர்வாழ்க்கையாலாகும் பயன் யாது ? கஉஎ

எப்பொழுதும் பெண்களால் வயப்படுத்தப்பட்டவனும், கடனாளியும், மிக்க வறுமையாளனும், இரப்பவனும், இழிகுணத்தவனும், இழிந்த பொருள்வருவா யுள்ளவனும் ஆகிய இவர்கள் உயிர்வாழ்க்கையோடு கூடியிருந்தும் இறந்தவராவர். கஉஅ

---

லோரையும், "சந்ததி இல்லாதவர்" என்பது தாய்வழிப் பாட்டன் முதலிய எல்லோரையும், "தந்தை யில்லாதவரும் சிறுவருமாகிய" என்பது தௌகித்திரன் முதலிய எல்லோரையும் பற்றி நிற்கும் அடைமொழிகளாம்.

கஉரு. உறுப்பறைகள் - அங்கவீனர்கள்.

கஉஅ. இச் சுலோகத்தில் அறவே பொருளில்லாதவனைத் தரித்திரன் என்று கூறியபடியால் "அர்த்தஹீநன்" என்பது இழிந்த பொருள்வருவாயை யுடையவன் என்று மொழிபெயர்க்கப்பட்டது. எப்பொழுதும் என்பதனை எல்லாவற்றிற்கும் அடையாகக் கொள்க.

ஒருவன் தன் வாழ்நாளின் அளவு, பொருள் நிலை, இல்லத்தில் நிகழும் பிழை, மந்திரம், பெண்புணர்ச்சி, மருந்து, கொடை, மானம், அவமானம் ஆகிய இவ்வொன்பதையும் வெளிப்படுத்தலாகாது. கஉகூ

## உ. பிறநாட்டுச் செலவு, அரசவை புகுதல், நூலாராய்ச்சி முதலியன.

பிற தேய யாத்திரை, அரசவை புகுதல், பல நூல்களை யாராய்தல், பொருட்பெண்டிர் முதலியோரைக் காண்டல், புலவரோடு நட்புக்கொள்ளல் ஆகிய இவற்றை மடியின்றிச் செய்தல் வேண்டும். கஙo

ஒருவன் பிற தேய யாத்திரையால், பலவகைப்பட்ட வழக்க ஒழுக்கங்களையும், பொருள்களையும், விலங்கு முதலியவற்றையும், மனிதர்களையும், மலைகளையும் காட்சி யளவையில் வைத்து நன்கு அறிந்துகொள்ளலாம். கஙக

ஒருவனுக்கு அரச மன்றம் புகுதலால், அரசியற் காரியம் புரியும் அமைச்சன் முதலியோர் எத்தகையர்? நியாய அநியாயங்கள் எத்தகையன? பொய் கூறுவார் யாவர்? உண்மை மொழிவார் யாவர்? நியாய நான் முறை உலகியல்களின்படி நடைபெறும் கடன்கோடல் முதலிய வழக்குகளின் நிலைமைகள் எத்தகையன? என்னும் இன்னோரன்ன ஆராய்ச்சியறிவு உண்டாகும். கஙஉ-கஙங

பல நூல்களின் உண்மை யாராய்ச்சிகளால் அறங்களின் உண்மையைக் காண்டலும், செருக்கின்மையும் உண்டாவனவாம். ஒரு நூலை மாத்திரம் பயின்றவன், காரியங்களின் உண்மையைத் துணிந்தறியான். கஙச

பல நூல்களை யாராய்ந் தறிபவன், மிக்க உலகியலுண்மைகளை யறியுந் திறனுடையனுவான். ஆதலின் அறிவுடையான் சோம்பலின்றி

கஙo. பொருட் பெண்டிர் முதலியோரைக் காண்டல்: அவர் இயல்பை ஒரு பயன் குறித்து ஆராய்தல். அப்பயனைப் பின்வரும் கஙரு-ஆம் சுலோகத்திற் காண்க.

கஙக. பலவகைப்பட்ட என்பது பின்னுள்ள எல்லாவற்றிற்கும் அடையாகும். இச்சுலோகக் கருத்து — "மண்மிசைக் கிடந்தன மலையுங் கானமும், நண்ணுதற் கரியன நாடும் பொய்கையும், கண்மனங் குளிர்ப்பன வாறுங் காண்பதற், கெண்ணமொன் றுளதெனக் கிலங்கு பூணினுய்." "வேற்றுநீர்க் கூவலுள் உறையும் மீனனுர், வேற்றுநாட் டதன்சுவை விடுத்தன் மேயினர்" என்னும் சீவகசிந்தாமணிச் செய்யுட்களை நினைவுறுத்துகின்றது.

எப்பொழுதும் பலவகைப்பட்ட நூல்களையும் பயிலல் வேண்டும். கஙரு

விலைமகள், ஒருமனிதனுடைய பொருளைக் கவர்ந்துகொண்டும் அவன்வயப்பட மாட்டாள். அங்ஙனந் தான் வயப்படாம லிருந்தும், அம்மனிதனைத் தன் வயப்படுத்துவதில் திறனுடையளாவள். அது போல, ஒருவன் தான் யார்க்கும் வயப்படாமல் இவ்வுலகத்தைத் தன்வயமாம்வண்ணஞ் செய்தல் வேண்டும். கஙசு

புலவர் பழக்கத்தால் வேதம், அறநூல், புராண முதலியவற்றின் பொருளுணர்ச்சியும் சிறந்த மதி நுட்பமும் உண்டாம். கஙஎ

ஒருவன், கடவுளர் பிதிரர் விருந்தினர் ஆகிய இவர்க்கு அன்னங் கொடாமல் ஒருபொழுதும் தான் உண்ணலாகாது. எவன் அறியாமையால் தன்பொருட்டு அடிசில் ஆக்குகின்றானோ அவன் பின்னர் நரகத்திற்கு ஆளாதற்பொருட்டு உயிர் வாழ்பவனாவன். கஙஅ

தாய் தந்தை ஆசிரியன் முதலிய குரவர்களுக்கும், வலியவர்க்கும், நோயாளர்க்கும் பிணஞ் சுமந்து வருவார்க்கும், அரசர்க்கும், பெரியார்க்கும், தவஞ் செய்வார்க்கும், ஊர்தி முதலியவற்றில் ஏறி வருவார்க்கும் வழிவிட்டு விலகல் வேண்டும். கஙசு

வண்டிக்கு ஐந்து முழ தூரமும், குதிரைக்குப் பத்துமுழ தூரமும், யானைக்கு நூறுமுழ தூரமும், எருதுக்குப் பத்து முழ தூரமும் விலகிச் செல்லல் வேண்டும். கச0

கொம்புடைய எருது முதலியன, நகங்களையுடைய புலி முதலியன, வளைந்த பற்களையுடைய பன்றி முதலியன, வெள்ளமிக்க ஆறு முதலியன ஆகிய இவற்றின்பக்கலிலும், தீயோர்பாலும், பெண்களிடத்தும் நம்பிக்கை வைத்தலாகாது. கசக

தின்றுகொண்டு வழி நடத்தலும், சிரித்துக்கொண்டு பேசுதலும், சென்றதற் கிரங்கலும், தான் செய்த காரியத்தை வெளிப்படுத்திக் கூறுதலுங் கூடாவாம். கசஉ

தன்னால் ஐயுறப்பட்டோன் பக்கல் இருத்தலையும், இழிந்தவரிடத்து வேலை செய்தலையும் ஒழித்துவிடல் வேண்டும். எவருடைய பேச்சையும் மறைந்துகொண்டு எப்பொழுதுங் கேட்டலாகாது. கசங

கஙஅ. இக்கருத்து "தமக்கென் றுலையேற்றார்" என்னும் நீதிச் செய்யுளை நினைப்பூட்டுவதாகும்.

பெரியோர்கள் தன்னோடு கலந்து செய்ய உடன்படாத காரியத்தைத் தானே அவரோடு கலந்து செய்ய விரும்பலாகாது ; என்னை ? தேவர்கள் ஏற்றுக்கொள்ளாதிருப்பவும் அவரோடு கூடி அமிர்தம் உண்டமையால் இராகுவின் தலை அறுக்கப்பட்டதாகலின். கசச

நல்லோரான் மேற்கொள்ளப்படாததொரு காரியத்தை ஒரு பெரியான் செய்வானாயின், அவனுக்கு அஃது அணிகலனாகும்; என்னை ? பிறரெல்லோர்க்கும் மரணத்தை விளைவிக்கும் நஞ்சு சிவபிரானுக்கு அணிசெய்து திகழ்தலின். கசரு

தவ வன்மையால் ஒளிமிக்க பெரியான், பாவமற்ற நெருப்பைப் போல் எல்லாவற்றையும் அழிக்கும் ஆற்றலுடையனாவான். குரு, அரசன் சிறப்புமிக்கான் ஆகிய இவர்களின் எதிரில் நிற்றலாகாது. கசசூ

அரசன் நமக்கு நண்பனாவனென்று கருதித் தன் மனம் விரும்பியவாறு காரியஞ் செய்யலாகாது. அறிவிலார்க்குத் தலைமைத் தன்மையும் அடிமைத்தன்மையும் ஈதலும், பெரியவர்களோடு பகைத்தலும், அறப் அறிவினால் இறுமாந்திருப்பவனை மகிழ்வித்தலும் விரும்பத் தகாதனவாம். கசஎ

அறிவுடையான் தான் செய்ய நேர்ந்துள்ள மிகவும் இன்றியமையாத காரியத்தையும், அங்ஙன மல்லாத காரியத்தையும் முறையே முன்னும் பின்னும் விரைந்துந் தாழ்த்துஞ் செய்தல்வேண்டும். கசஅ

---

கசச-கசரு. இவ்விரு சுலோகங்களாலும் முறையே, பெரியோர் அநுமதியின்றி இழிந்தவன் ஒரு காரியத்தைச் செய்வானாயின், அது நல்லதாயினும், அவனுக்குத் தீங்கு பயக்கு மென்பதும், செய்யத்தகாத தொன்றைப் பெரியோன் செய்வானாயின் அவனுக்கு அஃது அழகு செய்யு மென்பதும் புலப்படுதல் காண்க.

கசசூ. தவ வன்மை யுடையார் வெகுளி, நெருப்பைப் போல் அழிக்கும் ஆற்றலுடைய தாகு மென்பது கருத்து. "குணமென்னுங் குன்றேறி நின்றார் வெகுளி, கணமேயுங் காத்த லரிது" என்னுந் திருக்குறளிலும் இக்கருத்து வந்திருத்தல் காண்க. அருத்தாபத்தியால் அருளும் ஆற்றலுடையனாவான் என்பதும், ஆற்றலுடையனாவான் என்றமையால் நேர்ந்த விடத்தன்றி எஞ்ஞான்றும் அவன் அவ் வழித்தற்றொழிலை மேற்கொள்ளுவானல்லன் என்பதும் போதரும்.

கசஅ. இன்றியமையாத காரியத்தை விரைந்து முற்படச் செய்யவேண்டுமெனவும், அங்ஙன மல்லாத காரியத்தைத் தாழ்த்துப் பிற்படச் செய்யவேண்டுமெனவும் கூறியவாறும்.

கௌதம புத்திரரான சதானந்தர், செய்யத் தகாத காரியமாகிய தாய்க் கொலையில், தந்தையின் கட்டளை பெற்றுங் காலந் தாழ்த்தலை மேற்கொண்டனர். அக் காலத் தாழ்வு மிகவும் பாராட்டப்படுவதாயிற்று. கசசசு

## ௩. உலகத்தைத் தன்வயப்படுத்தும் வழி.

ஒருவன் எப்பொழுதும் அன்பினாலும், அருகிருத்தலாலும், புகழ்ந்து கூறுதலாலும், வணக்கத்தாலும், பணிசெய்தலாலும், திறமையாலும், இசை முதலிய பல்வகைக் கலைகளாலும், கதைகளாலும், ஞானோபதேசத்தாலும், ஆதரவாலும், நேர்மையாலும், வீரத்தாலும், கொடையாலும், கல்வியாலும், இருக்கையினின் றெழுதலாலும், எதிர்செல்லுதலாலும், இன்பம் விளைவிக்கும் புன்முறுவலோடு கூடிய இன்சொற்களாலும்,உதவிபுரிதலாலும், நல்ல உள்ளப்பண்பாலும் உலகத்துமக்களைத் தன் வயப்படுத்துக்கொள்ளல் வேண்டும். கரு0-கருக

பிறரை வசீகரித்தற்குரிய அன்பு முதலிய இவ்வுபாயங்கள், தீயவர்பாற் பயன் செய்யாதனவாம்; அறிவுடையான் அத்தீயவர் சேர்க்கையை ஒழித்துவிடல் வேண்டும்; தான் ஆற்றலுடையனாயின் தண்டோபாயங்களாலும், வஞ்சக வுருவமான முற்கூறிய அன்பு முதலிய உபாயங்களாலும் அத்தீயோரை வெல்லல் வேண்டும். கருஉ

வியாகரண முதலிய ஆறு அங்கங்களோடு கூடிய வேதம் அறநூல் புராணங்களையும், பல்வகைக் கலைகளோடுங் கூடிய தநுவேத முதலிய உபவேதங்களையும் இடையறாது பயிலுதல் மனிதர்க்கு நலம் பயப்பதாகும். கருங

மனிதர்க்கு வேட்டையாடல், சூதாடல், பெண்புணர்ச்சி, கட்குடித்தல் ஆகிய இவை எப்பொழுதும் மேற்கொள்ளப்படுமாயின், துன்பம் பயப்பனவாம். ஆதலின், இந்நான்கனையும் என்றும் மேற்கொள்ளாமல் ஓரோ வமயம் பொருந்துமாற்றாற் சிறிதளவு மேற்கொள்ளலாம். கருச

---

கசசு. கௌதமர் தம்மனைவியாகிய அகலியை தேவேந்திரனோடு காமவின்பந் துய்த்தமைபற்றி அவளைக் கொன்றுவிடும்படி தம்புதல்வராகிய சதானந்தர்க்குக் கட்டளையிட்டனர். அவர் செய்யத் தகாத அத்தாய்க் கொலையில் மனமிசைவின்று காலந்தாழ்த்தனர். அதன் பின் கௌதமர் சினந்தணிந்து கொலை செய்விக்காது சபித்தனர். இச்செய்தியால் அகாரியத்தில் காலந்தாழ்த்தல் நன்மை பயக்கு மென்பதுபோதரும்.

* கருக. பல்வகைக் கலைகளாவன - ஓவியம், சிற்பம் முதலியன.

எவன்மாட்டும் வஞ்சகமாகப் பேசுதலும், எவனுக்கேனும் வாழ்க்கைக் கேடு விளைத்தலுமாகா. பிறர்க்குப் பொல்லாங்கு செய்தலை ஒருபொழுதும் நெஞ்சத்தாலும் நினைத்தலாகாது. கருரு

ஒருவன், தனக்கு நிகழ்கால எதிர்காலங்களில் உறுதியான இன்பத்தை விளைவிப்பதும், தான் இறந்தபின் தனக்கு விட்புல வாழ்க்கையைத் தருவதும், நிலையான நல்ல புகழை யுண்டாக்குவதுமாகிய காரியத்தைத் தெரிந்து செய்தல் வேண்டும். கருசு

கவலையுடையான், உள்ளநோயாலும் உடல்நோயாலும் பற்றப்பட்டான், சோரநாயகன், கள்வன், வலியவனோடு பகைத்தவன், காமுகன், பொருளிற் பேரவாவுடையான், இழிந்த துணைவனை யுடையான், உள்ளம் வேறுபட்டொழுகும் அமைச்சரையும் நண்பரையும் குடிகளையுமுடைய இழிந்த அரசன் ஆகிய இவர்களுக்கு விழிப்பன்றி உறக்கம் நேராது. ஆதலின், மனிதன் இன்னோரன்ன தீங்குகள் அணுகாவண்ணம், நன்கு ஆராய்ந்து இன்பம் நெடிது நிலைக்குமாறு துயிறற்குரிய காரியத்தைச் செய்தல் வேண்டும். கருஎ-கருஅ

அரசனுடையவும், பிற சான்றோருடையவும் ஆகிய வழக்க ஒழுக்கங்களை ஒத்து நடித்துக்காட்டலாகாது. ஒருவன் பாம்பும், புலியும், கள்வரும் எதிரே வருங்கால் தடுத்தற்குத் தனியே செல்லலாகாது. கருகூ

தன்னைக் கொல்ல விரும்புவோனாகவும், ஆததாயியாகவும் இருப்பவன் குருவாயினும் அவனைக் கொன்றுவிடலாம். கலகம் நேர்ந்துழி ஒரு பக்கச் சார்புடையனாதலாகாது. பலர்க்குந் தலைவனாக இருப்பவனைக் காத்தல் வேண்டும். கசுO

தந்தை தாய் முதலிய குரவர்கள், அரசன் இவர்கள்முன்னர் உயர்ந்த இருக்கையில் இருத்தலாகாது. அங்ஙனமே இருக்கையிலேற்றிய காலை யுடையனாய், அவர்தம் சொற்களைத் தருக்க ஏதுக்களான் மறுத்து விகாரப்படுத்தலுமாகாது. கசுக

---

கருஅ. "உள்ளம் வேறுபட்டொழுகும்" என்னும் விசேடணத்தை நண்பர்க்குங் குடிகளுக்குங் கொள்க.

கருகூ. ஒத்து நடித்துக் காட்டுதல், பிறர்க்கு நகைச்சுவை யுண்டாக்குதற் பொருட்டாம்.

கசுO. ஆததாயிகளை இவ்வத்தியாயம் சக-ஆம் சுலோகத்திற் காண்க.

உயர்ந்த மனிதன், செயற்பாலனவற்றையும், செய்தவற்றையும் பற்றி வெளிப்படுத்துக் கூறமாட்டான். இழிந்த மனிதன், செய்யத் தக்கன இன்ன வென்று ஒரு சிறிதும் அறியான்; செய்ததையே அறிபவனுவன். கசுஉ

## ச. மகளிர்பால் இயற்கையாக நிகழும் பிழைகள்.

ஒருவன் தன்றாய், மருகி, உடன்பிறந்தாருடைய மனைவியர், தன்னுடைய மற்றொரு மனைவி ஆகிய இவர்களைப் பற்றித் தன் மனைவி குற்றங் கூறுவாளாயின், அதனைத் தான் நேரிற் கண்டாலன்றி உண்மையென எண்ணலாகாது. கசுங

பொய்யுரை மொழிதல், ஆராயாது வலிந்து செய்தல், வஞ்சகம், அறிவின்மை, பேராசை, தூய்மையின்மை, இரக்கமின்மை, செருக்கு ஆகிய இவ்வெட்டும் மகளிர்பால் இயற்கையாக உள்ள பிழைகளாகும். கசுச

தன் புதல்வனைப் பதினறு யாண்டுகளின் பின்னரும், மகளைப் பன்னிரண்டு யாண்டுகளின் பின்னரும் அடித்தொறுத்தலாகாது. மருமகள் முதலியோரைக் கொடுஞ் சொற்களாற் றுன்புறுத்தலாகாது. கசுரு

தௌகித்திரர்களையும், தங்கை தமக்கைமாருடைய புதல்வர்களையும், உடன்பிறந்தாரையும் தன் புதல்வரினுஞ் சிறப்பாகவும், உடன்பிறந்தார் மனைவிமாரையும், மருகியையும், தங்கை தமக்கைமாரையும் தன் புதல்வியினுஞ் சிறப்பாகவுங் காத்தல் வேண்டும். கசுசு

ஒரு தலைவன், தன் குடும்பத்தை யோம்புதற்பொருட்டுப் பொருள் ஈட்டுதலினும், அதனைக் காத்தலினும், இடையறாது முயற்சியுடையனு யிருத்தல் வேண்டும். என்னை? அத்தலைவன் அல்லாத மற்றையோர் அப்பொருளைக் கவருங் கள்வரை யொப்பாவராதலின். கசுஎ

மகளிர்பாற் பொய்மை, பகுத்தாராயாச் செய்கை, அறிவின்மை, மிக்க காமம் ஆகிய இவை யுள்ளன வாதலின், காம வின்பங் குறித்தன்றி அம்மகளிரோடு ஓரே படுக்கையில் துயிலலாகாது. கசுஅ

## ரு. மகட் கொடை முறை.

பொருள், குலம், ஒழுக்கம், உருவம், கல்வி, வலிமை, யாண்டு ஆகிய இவற்றின் ஒப்பு நோக்கி ஒருவனுக்கு மகட்கொடுத்தல்

வேண்டும். அங்ஙனங் கொள்ளுவோன் தலையாயோனாயின் அவன் பால் தனது நட்புரிமையைச் செய்தல் வேண்டும். கசுகூ

ஒருவன், தன் மகளை மனைவியாக விரும்பும் மணவாளன் இளமை, கல்வி, உருவம் இவற்றை யுடையனாயிருப்பின் அவன் வறியனாயினும் அவனை யழைத்து மகட்கொடுத்தல் வேண்டும். உருவ மாத்திரத்தாலும், பருவ மாத்திரத்தாலும், பொருள் மாத்திரத்தாலும் பெண் கொடுத்தலாகாது. கள0

முதலிற் குலத்தையும், அதன்பின் கல்வியையும், அதன்பின் பருவத்தையும், அதன் பின் ஒழுக்கத்தையும், அதன்பின் பொருளை யும், அதன்பின் உருவத்தையும், அதன்பின் இடத்தையும் ஆராய்ந் தறிந்து, பின்னர்ப் பெண்ணை மணஞ்செய்து கொடுத்தல் வேண் டும். களக

பெண் உருவத்தை விரும்புவள். தாய் செல்வத்தையும், தந்தை கல்வியையும், சுற்றத்தார் குலத்தையும் விரும்புவர். மற்றையோர் இனிய அறுசுவைமிக்க நல்ல உணவை விரும்புவர். கள உ

தனக்கு ஒத்த இருடி கோத்திரம் இல்லாதவளும், உடன்பிறந்த ஆண்மக்களை யுடையவளும், நற்குலத்தி லுதித்தவளும், தாய்தந்தை வழிக் குற்றமில்லாதவளும் ஆகிய பெண்மகளை இல்லறக்கிழத்தியாக அடைதல் வேண்டும். களங

## சு. கல்வி செல்வங்களை யடையும் வழி.

கணந்தோறுஞ் சிறிது சிறிதாகக் கல்வியையும், பொருளையும் ஈட்டல் வேண்டும். அங்ஙனங் கல்வியையும் பொருளையும் ஈட்ட விரும்புவோனால் எப்பொழுதும் அக்கணப்பொழுதும், அக்கல்வி செல்வங்களின் சிற்றளவும் பொருட்படுத்தாமல் விடற்பாலன வல்ல. களச

நல்ல மனைவி, மக்கள், நண்பர் ஆகிய இவர்பொருட்டும், தானஞ் செய்தற்பொருட்டும் இடையறாது பொருளீட்டல் நலமாகும். இம் மனைவி மக்கள் முதலியோர்பொருட்டன்றிப் பொருளாலும், பணி யாளர்களாலும் வரக்கடவதாகிய பயன் யாதுளது? கள௫

---

களச. கல்வியையும் செல்வத்தையும் சிறிது சிறிதாக ஈட்டுதலில் வெறுப் புறலாகா தென்பது கருத்து.

எதிர்காலத்தில் தனக்கு வரக்கடவ காரியங்களை நிறைவேற்று தற்குத் தக்க அளவு பொருளை முயன்று காத்தல் வேண்டும். கல்வி செல்வங்களை யீட்டுங்கால், "யான் நூறு யாண்டு வாழ்ந்திருப்பேன், பொருட் பெருக்கான் மகிழ்ச்சி யெய்துவேன்" என்றிவ்வாறு நினைவுமேற்கொண்டு, இருபத்தைந்து யாண்டு வரையேனும், அன்றி அவ்வளவிற் பாதியாகிய பன்னிரண்டரை யாண்டுவரையேனும், அவ் வளவிற் பாதியாகிய ஆறேகால் யாண்டு வரையேனும், கல்வி முதலி யவற்றையும், பொருளையும் இடைவிடாது ஈட்டித் தொகுத்து வைத் தல் வேண்டும். களசு-களஎ

கல்விப்பொருளொன்றே எப்பொருளினு மிகச் சிறந்ததாகும். மற்றைப் பொருளெல்லாம் அக்கல்வியை மூலமாகக்கொண்டு உண் டாவனவாம். அக் கல்விப்பொருள், என்றுந் தானத்தால் வளர்ச்சி யெய்துவதாகும்; உடையார்க்குச் சுமையு மாகாது; பிறராற் கவரப் படுவது மன்று. களஅ

ஒருவன் நிறைந்த பொருளுடையனு யிருக்குங்காறும் அவனை யெல்லோருங் கொண்டாடுவர். பொருள் ஒழிந்து வறியனு யிருப்பின், நற்குண முடையானுயினும் அவனை அவன்மனைவி, மக்கள் முதலியோ ரும் வெறுத்து நீக்குவர். இதனுற் குடும்பவாழ்க்கைக்குப் பொருளே இன்றியமையாச் சிறப்புடையதாகக் கருதப்படுவதாகும். ஆதலின் மனிதரனைவரும் உபாயங்களாலும், துணிவுச் செயல்களாலும் அப் பொருளை யடைவதற்கு முயலவேண்டும். களகூ-கஅ0

உயர்ந்த குண மிக்க மக்களும், பொருளுடையாரது வீட்டு வாயி லில் ஏவலாளரை யொப்ப நிற்கின்றனராதலின், நல்ல கல்வியினுலும், உயர்ந்ததொண்டுகளாலும், வீரத்தாலும், வட்டி ஊதியத்தாலும், வாணிகத்தாலும், ஓவியம் சிற்பம் முதலிய கலைகளாலும், தானம் பெறுதலாலும், பிற எத்தகைய தொழில்களாலும் நிறைந்த பொ ருளை யுடையனு யிருக்கும்வண்ணம் முயன்றொழுகல் வேண் டும். கஅக-கஅஉ

களசு-களஎ. ஒருவன் கல்வி செல்வங்களை ஈட்டுங்கால் தன் வாழ்நாள் நெடிதிருப்பதாகக் கருதி முயலவேண்டு மென்பதும், அங்ஙன மின்றி வாழ் நாளின் குறுமை கருதப்படுமாயின் ஈட்டு முயற்சி தளர்ந்து பயன் செய்யா தென்பதுங் கருதற்பாலன.

பொருளுடையான்குற்றங்களும் குணங்களைப்போ லாகின்றன. பொருளில்லாதவன் குணங்களுங் குற்றங்களைப்போ லாகின்றன. ஆதலின், பொருளற்ற வறிய மனிதன் பிறரெல்லாராலும் பழிக்கப் படுபவனாகின்றான். ௧௮௩

ஆற்றொணா வறுமையை யடைந்தோருட் சிலர் மரண மெய்தினர். சிலர் அயல்நாட்டை யடைந்தனர். வேறு சிலர் மலைக்கண் எய்தினர். மற்றுஞ்சிலர் தற்கொலையை மேற்கொண்டனர். ௧௮௪

பொருள்நிமித்தஞ் சிலர் அறிவுமயக்க மெய்தினர். வேறு சிலர் பகைவர் வயப்பட்டனர். மற்றுஞ்சிலர் பகைவரின் ஏவலாளராயினர். ௧௮௫

ஒருவன், தன் பொருள் இன்ன இடத்தில் இவ்வளவு சேர்த்து வைக்கப்பட்டிருக்கின்ற தென்பதைத் தன் மனைவி, மக்கள், நண்பர் ஆகிய இவர்கள் அறியாமலிருக்கும்வண்ணம் கடன் கொடுத்து எழுதி வாங்கும் பத்திரங்களால் அப்பொருளைப் பேணிக் காத்தல் வேண்டும். ௧௮௬

கொடுக்கல்வாங்கல் செய்வோர்க்கு எழுத்து மூலமான பத்திரங்களையன்றி நினைவுறுத்துவது வேறொன்று மின்று. ஆதலின் அப்பத்திரமின்றி அறிவுடையான் ஒருபொழுதுங் கொடுக்கல்வாங்கல் செய்தலாகாது. ௧௮௭

ஒருவன் தான் திரட்டிச் சேர்த்த பொருளை உலோப குணமில்லாதவன்பாலும், பொருளாளன்பாலும், வேந்தன்பாலும், நம்பிக்கையுள்ளவன்பாலும், பொறுமை முதலிய குணங்களாற் சிறந்தவன் பாலும் பத்திர மெழுதி வாங்கிக்கொண்டு வைத்துப் போற்றல் வேண்டும். ௧௮௮

ஒருவன் மற்றொருவனுக்கு நட்புரிமைபற்றி எப்பொழுதும் வட்டியின்றி யாசிதப்பொருள் கொடுத்தல் வேண்டும். அந்நண்பன்பால் மிகுபொருள் அங்ஙனங் கொடுத்துவைக்கப்பட்டிருக்குமாயின் அவை கேடில்லாதனவாம். ௧௮௯

---

௧௮௬. ஒருவனுக்குரிய பொருள் அவன்மனைவி முதலியோரால் அறியப்படுமாயின் அவர் செலவிடக் கருதுவாராகலின் அதனை மேன்மேலும் வளர்த்துக் காத்தற் கியலாதென்பது கருத்து.

௧௮௯. யாசிதம்: இதனை உ-ஆம் அத்தியாயம் ௬௨௫-ஆம் சுலோகத்திற் காண்க.

கடன்கொள்ளுவோன் வட்டியோடு கொடுக்கல்வாங்கல் செய்தற்கு ஆற்றலுடையனாதலை யறிந்து, எப்பொழுதும் ஈடு குறித்தாதல் பிணையினாதல் தக்க சான்றுகளோடு பத்திரமெழுதி வாங்கிக்கொண்டு, அப்பொருள் மீண்டு வருங்கால் எளிதாக விருக்கும்வண்ணம் அளவின் தகுதி நோக்கிப் பொருள்கொடுத்தல் வேண்டும். வட்டி ஊதியத்தின் பேராசையால் "எங்ஙனமாயினுமாக" என்று கருதிக் கொடுத்தலாகாது. அங்ஙனங் கொடுப்பின் முதற்பொருட்குக் கேடுண்டாம். கசுo-கசுக

உண்டி கொள்ளுங்காலும், கடன்கொடுத்தல் முதலிய வாணிகச்செயல்களிலும் நாணை யொழித்த மனிதன் நலமுடையனாவான். பொருளைக் கொடுத்தல் நட்புரிமையை உண்டாக்கும். அதுகொடாமை பகைமையை உண்டாக்கும். கசு௨

மனிதன் தன்னுள்ளத்தில் வள்ளன்மையையும், வெளியில் ஈகையின்மையையும் மேற்கொண்டு உரிய காலத்திற் றகுதியான செலவைச் செய்தல் வேண்டும். உரியதல்லாத காலமும், தகுதியின்மையும் நேர்ந்துழிச் செலவிடலாகாது. கசுஙு

மனிதன் தன் நன்மனைவி, புதல்வர், நட்பாளர் ஆகிய இவர்களைத் தன்னுயிரன்றவாறு பொருண் முதலியவற்றாற் காத்தல் வேண்டும். தன் உடல் அழியின் அது மீண்டு வாராமையானும், தான் உயிரோடு கூடியிருப்பின் பலவகை நலங்களைக் கண்டு இன்புறக்கூடுமாதலானும், மனைவி முதலியோர் மீண்டும் மீண்டும் பெறற்பாலராதலானும் அவ்வெல்லோராலுந் தான் காக்கப்படல் வேண்டும். கசுச

## எ. தந்தைவழிப் பொருளைக் கூறுசெய்யு முறை.

நலத்தை விரும்பும் தந்தை, மனைவிமாரோடு கூடி வாழ்க்கையை நடாத்தும் ஆற்றல் வாய்ந்த புதல்வர்களுக்கு விரைந்து தன் பொருளைக் கூறிட்டுக் கொடுத்து அவரைப் பிரித்து வைத்தல் வேண்டும். கசுரு

கசுo-கசுக. ஈடு - பந்தகம். இது, கொடுக்கப்படுங் கடன்தொகைக்குத் தகுதியான நில முதலிய அடைமானமாகும்.

கசு௨. முதனூலிலுள்ள "வியவஹாரம்" என்ற சொல் கடன்கொடுத்தல் முதலிய வாணிகச் செயல் என்று மொழிபெயர்க்கப்பட்டது; உண்டியோடு உடனெண்ணப்பட்டமையால் சிற்றின்ப நுகர்ச்சி எனவும் பொருள் கொள்ளலாம்.

மனைவிமாரோடு கூடி வாழ்க்கையை நடாத்துந் திறன்வாய்ந்த தமையன்தம்பிமார், ஒரு வயிற்றிற் பிறந்தவராயினும், அவர் தம் முட் பிரிந்து வாழ்தல் நன்று. இன்றேற் பெரும்பாலும் அப்பிரி வின்மை கேடு விளைப்பதாகும். கசுசு

ஒரு மனிதனுடைய மனைவியர் இருவர் ஓரிடத்திற் கூடி இரார். பொலி எருதுகள் இரண்டு ஓரிடத்திற் கூடி இரா. அங்ஙனமாயின் பெண்கள் பலர் தம்முட் கூடி வாழ்தலும், எருதுகள் பல தம்முட் கூடியிருத்தலும் எங்ஙனங் கூடும்? கசுஎ

ஒரு குடும்பத் தலைவன், வட்டி ஊதியங் கருதிப் பிறர்பாற் கடனாகக் கொடுத்துவைத்த பொருளையும், அங்ஙனமே பிறர்பாற் கடனாகக் கொண்ட பொருளையும் அவன் புதல்வர் கூறிட்டுக்கொள்ள லாகாது. கசுஅ

ஒருவன், எவனோடு சிறந்த நட்புரிமையைப் பெற விரும்புகின் றானோ அவனுடைய பொருளைப் பெற அவாவுதலும், அவனது மறை விடத்தில் அவன் அறியாமற் செல்லுதலும், அவன் மனைவியோடு தனிமையில் உரையாடுதலுங் கூடாவாம். (அங்ஙனஞ் செய்யின் நட் புக் கெடு மென்பது கருத்து.) இன்னும் அவன்பாற் குறையேறிட் டுக் காண்டலும், அவனுக்கு எதிர்மறையாகப் பேசுதலும், அவன் காரியத்திற்குத் துணை செய்யாமையும், அவனுக்குத் தீங்கு நேர்ந் துழிப் புறக்கணித்தலு மாகாவாம். கசுசு-உ00

ஒருவன், தன் நண்பன்பால் வட்டியுடனுதல், அஃதில்லாமலா தல், கடன்வாங்கிய பொருளைத் திருப்பிக் கொடுக்குங்கால், இருவரு டைய நட்புரிமைக்குங் கேடு பயவாவண்ணஞ் சான்றுகள் இல்லாம

---

கசுசு. பிரிந்து வாழ்தல்-தந்தைவழிப் பொருளை முறைப்படி கூறு செய் துகொண்டு தனித்தனியே குடும்பவாழ்க்கை நடாத்தல். இன்றேற் கலகம் விளையு மென்பது கருத்து.

கசுஎ. இச்சுலோகப் பொருள் இதன் முன்னுள்ள சுலோகப் பொருட்கு ஏதுவாய் நின்று அப்பொருளை வலியுறுத்தல் காண்க. இச்சுலோகத்தின் பிற் பாதிக்கு "பசுக்கள் பல ஓரிடத்திற் கூடிவாழும்; மனிதர் இருவர் அங்ஙனம் வாழ ஒருப்படார்" என்று பொருள் கோடலும் பொருந்தும்.

உ0க-உ0உ. உண்மையாக ஆராய்ந்து செய்த நட்புரிமை யுடையார் தம் முட் கடன்கொண்டு கொடுக்குங்கால், சான்று முதலியன இல்லாமல் நம்பிக்கை

லும், கடன்பத்திரத்தின் பின்புறத்தில் எழுதாமலும், கடன் கொண்டு கொடுப்பதுபோல் இல்லாமலும் எளிதிற் கொடுத்துவிடல் வேண்டும். உ0க-உ0உ

தன் குணங்களாலும், தந்தைதாயரின் குணங்களாலும் பெருமையுடையவன் உத்தமோத்தமனாவான். தன் குணங்களான் மாத்திரம் பெருமையுடையான் தலையாவான். தன் தந்தை குணங்களான் மாத்திரம் பெருமையுடையான் இடையாவான். தாய் குணங்களான் மாத்திரம் பெருமையுடையான் கடையாவான். உடன்பிறந்தாரின் குணங்களான் மாத்திரம் பெருமையுடையான் கடையிற் கடையாவான். தன் மகள், மனைவி, உடன்பிறந்த பெண்மக்கள் ஆகிய இவர்களாற் பெருமையுடைய மனிதன் மிக இழிந்தவனாகக் கருதப்படுவான். உ0ங-உ0ச

## அ. கொடை மாட்சி.

அறிவுடையான், பொருண் மிகவுடையனாய்த் தன்னாற் காக்கப் படுங் குழுவை நன்கு காத்தல் வேண்டும். பிறர்க்குச் சிறிதேனும் ஈயாமல் ஒருநாளேயேனும் வறிதாகக் கழித்தலாகாது. உ0ரு

"யான் கூற்றுவன் வாயில் இருக்கின்றேன்; என் வாழ்நாள் ஒரு கணமேனும் நிலையுறுதல் உடைத்தன்று; தானம், தருமம் இவைகளையன்றி மறுமையில் எனக்குத் துணையாவன பிறவில்லை; இவ்வுலகம் கொடைக் குணம் வாய்ந்தோரைப்பற்றி நிலை பெறுவதாகும்; அக்குணம் இல்லாத தீயோரைப்பற்றி நிலைபெறுவதன்று" என்றிவ்வாறு எண்ணித் தான் விரும்பியவாறு ஒல்லும்வகையால் தான தருமங்களை நன்கு செய்தல் வேண்டும். உ0சு-உ0எ

கொடையாற், பகைவரும் நண்பராவரெனின் மற்றையோரைப் பற்றிக் கூறவேண்டுவதென்? உ0அ

கடவுளர்க்கும், வேள்விக்கும், அந்தணர்க்கும், பசுவோம்பற்கும் கொடுக்கப்படும் பொருள் மறுமையின்பம் பயப்பதாகும், அது (சம்வித்தத்தம்) அறிவுடைக் கொடை யென்று கூறப்படும். உகூ

---

மேற்கொண்டு ஒழுகவேண்டு மென்பதும், இன்றேல் அந் நட்புரிமைக்கு இழுக்குண்டா மென்பதும் தோன்றுதல் காண்க.

வந்தியர், மாகதர், மல்லர் முதலியோர்க்கும், ஆடல் பாடல்களுக்கும் கொடுக்கப்படும் பொருள் (பாரிதோஷிகம்) பரிசிற் கொடையாகும். புகழ்ப் பயன் கருதிக் கொடுக்கப்படும் பொருள் (கீர்த்தம்) செல்வக் கொடை யென்று கூறப்படும். உகO

நண்பர், சம்பந்திமார், உறவினர் ஆகிய இவர்களிடத்தும், விவாக முதலிய காரியங்களிலும், ஆன்றோ ராசாரப்படி உபாயனமாகக் கொடுக்கப்படும் பொருள் (லஜ்ஜா தத்தம்) நாண் கொடை யென்று கூறப்படும். உகக

அரசனுக்கும், வலியவர்க்கும், காரியம் நிறைவேறுதற்பொருட்டு அக் காரியத்திற்குக் கேடு விளைப்போர்க்கும் கொடுக்கப்படும் பொருளும், கொடாதிருப்பிற் பாவம் நேரிடுமென்னும் அச்சங் காரணமாகக் கொடுக்கப்படும் பொருளும் (பய தத்தம்) அச்சக் கொடை என்று கூறப்படும். உகஉ

மங்கைகளுக்குத் துன்பம் விளைவிக்குந் தீய விலங்குகளுக்கும், பிறர்மனைவியரைப் புணர்தற்பொருட்டுங் கொடுக்கப்படும்பொருளும், சூது முதலியவற்றால் இழந்த பொருளும், கள்வராற் கவரப்பட்ட பொருளும் (பாபதத்தம்) தீவினைக் கொடை யென்று கூறப்படும். உகங

எத்தெய்வத்தை வழிபடுகின்றானோ அத்தெய்வத்தை மற்றைத் தெய்வங்களினும் மிகச் சிறந்ததாகப் பாராட்டிக் கூறல் வேண்டும். அத்தெய்வத்திற்குக் குறை கருதலாகாது. அத்தெய்வத்தின்பொருட்டு மகிழ்ச்சியோடு வணக்கஞ் செய்தல் வேண்டும். உகச

கொடை, நேர்மை ஆகிய இவ்விரண்டு மன்றிப் பிறரைத் தன் வயப்படுத்தும் உபாயம் மற்றொன்று இந்நிலவுலகத்தில் இன்று இதனாலன்றே, கொடையாற் குறைந்தவனும், மீண்டும் மீண்டும் வளர்ச்சியெய்தும் இயல்பினனு மாகிய திங்களஞ்செல்வன், கோட்டமுடையோனாயினும் நலமுடையவனாகவே கருதப்படுகின்றான். உகரு

---

உகO. வந்தியர் - புகழ்வோர். மாகதர் - இருந்தேத்துவோர். மல்லர் - மற்போருஞற்றுவோர்.

உகக. உபாயனம் - பெரியோரைக் காணும்பொழுதும் நற் காரியங்களிலும் மகிழ்ச்சி யுண்டாதற்பொருட்டுக் கொடுக்கப்படும் உபகாரப்பொருள். இதனைச் சேதுபுராணம் - சேதுப்படலம் கO-ஆம் செய்யுளிற் காண்க.

உகரு. கொடையாற் குறைதல் - தேவர்கள் தன் கலைகளை உண்ணக் கொடுத்தலாற் குறைதல். கோட்டம் - வளைவு.

நட்பினையாதல், பகையினையாதல் ஆராய்ந்து தெளிந்துகொள்ளல் வேண்டும். அங்ஙனங் கொண்டபின் பிறழ்தலும், நட்டோர்க்குத் தீங்கு செய்தலும், பகைவர்க்கு உதவி செய்தலுங் கூடாவாம். அங்ஙனஞ் செய்யின் அவ்விருதிறத்தாருந் துன்பம் விளைவிப்பவராவர். உகசா

மிக்க வன்கண்மை, மிக்க வஞ்சகம், மிக்க எளிமை, மிகைபடப் பேசல், ஒரு காரியத்தின் மிகுபற்று, கடுஞ்சினம் ஆகிய 'இவற்றை மேற்கொள்ளலாகாது. உகஎ

எல்லாம் அளவின் மிகுதல் அழிவிற்குக் காரணமாகும். ஆதலின், எவற்றினும் மிகையாதலை யொழித்துவிடல் வேண்டும். மனிதர் மிக்க வன்கண்மை கண்டுழி நடுக்க மெய்துவர்; தகுதி நோக்கியும் பொருளைச் செலவிடாது திரட்டி வைக்கும் விருப்பங் கண்டுழி மிகவும் பழித்துரைப்பர். உகஅ

மிக்க எளிமை கண்டுழிப் பொருட்படுத்தெண்ணார். மிகைபடப் பேசுதலான் மானக்கேடும், மிக்க கொடையால் வறுமையும், மிக்க உலோபத்தால் இகழ்ச்சியும் உண்டாவனவாம். உகசு

கடுஞ் சினத்தான் மனிதர்க்கு அறிவின்மை யுண்டாம். ஆசாரமின்மையால் அறத்திற்குக் கேடும், அளவின் மிக்க ஆசாரத்தால் மூர்க்கத்தன்மையும் உண்டாவனவாம் உஉ0

அறிவுமிக்க மனிதன் "யானே எல்லோரினும் மேம்பட்டவன்" என்றும், "யானே எல்லோரினுஞ் சிறந்த அறிவுள்ளவன்" என்றும், "அறத்தின் உண்மை இதுதான்" என்றுங் கருதுதலாகாது. உஉக

கடல் நீரில் வாழும் திமி எனப் பெயரிய பெரிய மீனை விழுங்குவது திமிங்கில மாகும்; அத் திமிங்கிலத்தையும் விழுங்கும் திமிங்கில கில மென்னும் மீனும் உள்ளது; அதனையும் விழுங்கும் இராகவம் எனப் பெயரிய ஒரு பிராணியு முள்ளது; அதனையும் விழுங்கும் மற்

உஉ0. மூர்க்கத்தன்மை - அறிவின்மை.

உஉக. பல்வகை அறப பகுதிகளை யாராய்ந்து அவற்றுள் ஒன்று மற்றொன்றோடு முரணுமல் இயைத்து உண்மை துணிதல் மிக அரிதாகலின், அறிவுடையான் அறத்தின் உண்மை இதுதான் என்று ஆராய்ச்சி யின்றி எளிதில் துணிந்துவிட லாகா தென்பது கருத்து.

றொரு பெரிய பிராணியும் இருக்கின்றது என்று மிவ்வுண்மையை யுணர்ந்து எப்பொழுதும் நினைவுகூர்தல் வேண்டும். உஉஉ

ஒருவன் கடவுளர்க்கும், பசுக்களுக்கும், அந்தணர்களுக்குந் தலைவனு யிருக்குந் தன்மையை விரும்பலாகாது. அங்ஙனம் விரும்பு வானுயின், அஃது அவன் குல முழுதுங் கெடுத்து மிக்க துன்பம் விளைவிப்பதாகும். உஉங

அக்கடவுளர் முதலியோர்பால் முறையே எப்பொழுதும் பத்தி பூண்டொழுகல், பூசித்தல், பணிவிடை செய்தல் ஆகிய இவற்றை விரும்பல் வேண்டும். எவர்மாட்டு எத்தகைய பிரமதேசசு நிலைபெற் றிருக்கின்ற தென்பது அறியக்கூடாததொன்றாம். உஉச

இளம் பெண்ணையும், பொருளையும், சுவடியையும் பிறர் ஆட்சி யில் வைத்தலாகாது. அங்ஙனம் வைக்கப்பட்டுத் தெய்வவயத்தான் மீண்டெடுத்துங்கால் முறையே இளம்பெண் கற்பிழந்தும், பொருள் கேடுற்றும், சுவடி கசக்குண்டும் வரும். உஉரு

அறிவுடையான் சிறு காரணத்தை முன்னிட்டுப் பெரும்பொரு ளைச் செலவிடலாகாது. ஒருபொழுதும் அபிமானத்தாற் பெரும் பொருளைச் செலவிட்டுச் சிறிய காரியத்தை நிறைவேற்ற முயலலா காது. உஉசா

உஉஉ. இதனால், ஒருவன் எவ்வெத்துறைகளிற் சிறந்தவனாயினும் அவ் வத் துறைகளில் தன்னினுஞ் சிறந்தார் இருப்பரென்னும் உண்மையையுணர்ந் து அடங்கி நடத்தல் வேண்டும் என்பது புலப்படும்.

உஉங. பசுக்களுக்குத் தலைவனு யிருக்குந் தன்மையை விரும்பலாகாதென் றது, பசுவின் உடம்பு முழுதிலும் தேவர்கள் வாழ்கின்றனரென்று முதுநூல் கூறுகின்றமையால், அப்பசுவை வைத்திருப்போன் அதனை வேண்டுவன உதவிக் காத்து, அதன் பயனைப் பெறவேண்டுமே யன்றித் தனக்கு அடிமைப் பட்டதாகக் கருதித் தான் நினைத்தவாறெல்லாம் வருத்தலாகாதென்பதுபற்றி யாம்.

உஉச. கடவுளர்பால் பத்தி செய்தலும், பசுக்களைப் பூசித்தலும், அந்த ணர்க்குப் பணிவிடை செய்தலும் வேண்டுமென்பதாம். அறியக்கூடாததொன் றென்பது, ஆராய்ந்தறிந்து செய்தலின் அருமையையும், ஆராய்ச்சியின்றியே இவ்வொழுக்கங்களை மேற்கொள்ளவேண்டுமென்பதையும், அங்ஙன மேற்கொள் ளின் அத் தேசசு யாண்டேனும் ஓரிடத்திலிருந்து நலஞ் செய்தல் கூடுமென்ப தையும் புலப்படுத்தி நிற்பதாம்.

பெரும்பொருள் செலவாகிவிடு மென்னும் அச்சத்தால் நல்ல புகழை எப்பொழுதும் இழந்துவிடலாகாது. படைவீரர் தகாத சொற்களைக் கூறின், அது குறித்துப் பொறுமை மேற்கொண்டு அவர்மாட்டுச் சினங் கொள்ளலாகாது. உஉஎ

அறிவுடையான், தன் நண்பனுக்கு நாண் விளைப்பதும், வேறுபாடுண்டாக்குவதும், மனத்தைத் துன்புறுத்துவதும் ஆகிய சொல்லை விளையாட்டுநிமித்தமாகவும் ஒரு சிறிதுங் கூறலாகாது. உஉஅ

எவன்பால் நன்மொழியும், தீமொழியும், பயனின்றி ஒத்த தன்மை யெய்துவனவோ, அவன்பால் அறிவுடையான் செவிடனிடத்து இசை பாடுவோனைப்போல ஒன்றும் பேசலாகாது. உஉகூ

தன் நண்பன் கள் காம முதலிய தீய ஒழுக்கங்களிற் றலைப்படின் அவனை அவற்றினின்றுந் தன்னு லியன்றவரை இதங்கூறி மீட்டல் வேண்டும். அங்ஙனம் மீட்க முயன்றிலனேல் அவனை அறிவுடையார் இரக்கமற்றவ னென்று எண்ணுவர். உநூ0

உடன்பிறந்தார் முதலிய சுற்றத்தினர், தம்முண் மன வேற்றுமை யடைந்திருக்குங்கால், அவர்தம் நண்பர் எவ்வாற்றானும் ஒரு தலைச் சார்பின்றி நடுநிலையை மேற்கொள்ளல் வேண்டும். இன்றேல் அவரை யறிவுடையார் நட்புரிமை யுடையவராக மதியார். உநூக

மக்கண் மனம், தன்பா லழுந்திய கடுஞ்சொல்லாகிய அம்பின் கூரிய நுனியைப் பிடுங்கி யெடுக்கும் ஆற்றலுடையதன்றாதலின், பிறந்தநாட்டொட்டுப் பயிலப்பட்டதும், கொடையினாலும் பிற சிறப்புக்களாலும் காக்கப்பட்டதும் ஆகிய நட்புரிமையை யுடையார், கடுஞ்சொற் கூறுதலால் அப்பொழுதே அந்நிலை மாறிப் பகைமை யெய்துவர். உநூஉ

ஒருவன், தன்னாற்றலினும் மேம்பட்ட ஆற்றலுடையவனைத் தன் பகைவன் இருக்குங்காறும் அவனைத் தன் றோளினாற் றாங்கல் வேண்டும். அப்பகைவன் ஆற்றற்கு அழிவு நேரக் கண்டவிடத்துக் கல்லிற் குடத்தை மோதித் தகர்த்தல் போல் அப்பொழுதே அவனைத் தொலைத்துவிடல் வேண்டும். உநூநூ

உஉகூ. ஒத்த தன்மை - முறையே நன்மையாகவும் தீமையாகவும் கொள்ளப்படாமையாலாகிய வேற்றுமையின்மை.

உநூஉ. தன்பால் - மனத்தின்பால்.

## கூ. குணஞ் செயல்களின் நன்மை தீமைகள்.

ஒருவனுக்கு நன்மக்கட் டன்மையாகிய குணமே சிறந்த அணிகலனாகும். மற்றை அணிகலன்களும், அரசியலும், ஆண்மையும், கல்வியும், பொருளும் அத்துணைச் சிறந்த அணிகலன்களாகா. உருச

குதிரைக்கு விரைந்து செல்லுதலும், எருதுக்குச் சுமை தாங்கலும், பசுக்களுக்கு மிக்க பால்வளமும், இரத்தினத்திற்கு ஒளியும், அரசர்க்குப் பொறுமையும், விலைமகட்குக் காமக் குறிப்பும் அதனைப் புலப்படுத்தும் இன்பச் செயலும், இசைபாடுவார்க்கு இனிய குரலும், பொருளுடையார்க்குக் கொடைக் குணமும், போர்வீரர்க்குப் பராக்கிரமமும், தவஞ் செய்வார்க்குப் பொறி யடக்கமும், புலவர்க்குச் சொல்லாற்றலும், அவைக்களத் திருப்போர்க்கு ஓரங் கூறாமையும், சான்று கூறுவார்க்கு உண்மை யுரைத்தலும், ஏவலாளர்க்குத் தம் தலைவன்பாற் சிறப்பன்பும், அமைச்சர்க்கு நலந் தரு சொற்கூறலும், அறிவிலார்க்கு வாய்வாளாதிருத்தலும், பெண்களுக்குக் கற்புடைமையும் சிறந்த அணிகலன்களாம். இங்குக் கூறிய குதிரை முதலியவற்றிற்கும் அரசன் முதலியோர்க்குங் கூறப்பட்ட குணஞ் செயல்கள் மாறுபட்டிருப்பின், அவை அவற்றிற்கும் அவர்க்கும் நலனழிக்கும் பெரிய விகாரப் பணிகளாகும். உருரு-உருஅ

ஒரு தலைவனை யுடைய இல்லம், பல குடும்பங்களாலும், விளக்குகளாலும், பசுக்களாலும், அழகிய குழந்தைகளாலும் எப்பொழுதும் விளக்க முறுவதாகும். பல தலைவர்களை யுடைய இல்லம் அங்ஙனம் விளங்குவதின்று. உருகூ

ஆற்றலுடையான் பொல்லாங்கு புரியும் உயிர்களைப் பொருட்படுத்தாம லிருத்த லாகாது. அவ்வுயிர்களைக் கண்ட அக்கணத்தே கொன்றுவிடல் வேண்டும். உச0

பிற நற்குணங்களெல்லாம் நிரம்பிய ஒருவனிடத்துக் குறளை கூறல், கொடுந்தன்மை, களவு, அழுக்காறு, மிக்க உலோபத்தன்மை, பொய்மை, காரியக்கேடு விளைவிக்குந் தன்மை, சோம்பல் ஆகிய இவற்

உருச. நன்மக்கட்டன்மை—இதனை "ஸௌஜந்யம்" என்று முதனூல் கூறும்.

உருகூ. ஓரில்லத்திற்குத் தலைவர் பலரிருப்பின், எப்பொழுதும் பகைமையும் கலகமும் உண்டாமாதலின், அவ்வில்லம் விளக்கமுறா தென்பது கருத்து.

றுள் ஒன்றிருப்பினும், அஃது அவன் நற்குணங்களனைத்தையும் மறைத்துத் தானே முன்னின்று மிக்க தீங்கை விளைவிக்கும். உசக

ஒருவன் பாலப்பருவத்தில் தாயை இழத்தலும், காளைப்பருவத்தில் காதலியை இழத்தலும், முதுமைப்பருவத்தில் புதல்வரையும் பொருளையு மிழத்தலும் அவனுடைய பெரிய தீவினைப் பயன்களாம். உசஉ

பொருளுடையார்க்குப் புதல்வர்ப்பே றின்மையும், வறியவர்க்கு அறிவில்லாத் தன்மையும், பெண்களுக்கு ஆடவர் அலியா யிருத்தலும், விரும்பிய பொருள் கைகூடாமையும் நலஞ்செய்வன வல்லவாம். உசங

ஒருவனுக்குத் தன் புதல்வன் அறிவிலனாக விருத்தல், புதல்வி அறிவிலளாக விருத்தல், மனைவி மிக்க சினமுடையவளாக விருத்தல், வறுமை, இழிந்தோரிடத்துப் பணிசெய்தல், என்றுங் கடனாளியா யிருத்தல் ஆகிய இவ்வாறும் நலந்தருவன வல்லவாம். உசச

பிறர்க்குக் கல்வி பயிற்றுதலினும், தான் கல்வி பயிலுதலினும், தேவர்களிடத்தும், குரவர்பாலும், அந்தணரிடத்தும், ஓவியஞ் சிற்பம் முதலிய கலைகண்மாட்டும், இசையின்கண்ணும், பணிசெய்தலினும், நேர்மையினும், மகளிர்பாலும், வீரத்தினும், தவஞ் செய்தலினும், காவிய முதலியவற்றினும் எவன் மனம் இன்புறுதலில்லையோ அவன் துறவியாக, அன்றிக் கயவனாக, அன்றி மனித வுருவந் தாங்கிய விலங்காக இருத்தல் வேண்டும். உசரு-உசசு

உசஉ. பாலப்பருவம் காளைப்பருவம் முதுமைப்பருவங்களில், முறையே தாயையும் மனைவியையும் புதல்வரையும் பொருளையும் இழத்தலால், வளர்க்கப் படுதலும் இன்பநுகர்ச்சியும் உற்றிடத் துதவலும் இல்லாமல் கவர்ச்சி யெய்த நேருமாதலின், அவை பெரிய தீவினைப் பயன்களாம் என்றனர்.

உசரு-உசசு. குரவர்-ஈண்டுத் துறவியை நோக்க ஞானசாரியனல்லாத வித்தியாகுரு, கிரியாகுரு, தந்தை, தாய் முதலியோராவர். துறவியின் மனம் கல்வியிலின்புறாமையை "கற்றுரை யான்வேண்டேன் கற்பனவு மினியமையும்" "கல்வி யென்னும் பல்கடற் பிழைத்தும்" என்னுந் திருவாக்குக்களானறிக. அவர் மனம் தேவர்களிடத்து இன்புறாமை- இந்திரன் முதலிய இறையவர் பதங்களை விரும்பாமை. அந்தணர், ஈண்டு வருணத்தைக் குறிப்பதாகும். அவரிடத் தின்புறாமை-பற்றறத் துறந்தார்க்கு வருண வேறுபாடு பற்றிய உணர்வின் மையாலும். தவம், ஈண்டு அணிமா முதலிய எண்வகைச் சித்திகளையும் அளிக்க வல்லது. அதன்கண் மனம் இன்புறாமை முற்றத் துறந்தார்க்கு இயல்பாகும்.

பிறர் ஆக்கங் கண்டு பொறாமையும், பிறரிடத்துப் புரைவழி காண்டலும், பிறர் பழி தூற்றலும், பிறர்க் கின்னு செய்யுங் குணமும், மலர்ந்த முகமும், இருண்ட அகமும் உடையவன் கயவனென்று கூறப்படுவான். உசஎ

பிரமாண்டத்திற் றேன்றியுள்ள எல்லாப் பொருள்களும் பேராவாமிக்க ஒருவனது விருப்பத்தை நிறைவிக்கச் சிறிதும் போதியன வாகாவாம். உசஅ

அவாமிக்குடையான் செய்யத்தகாத காரியத்தைச் செய்வன்; பிறரையும் அத்தகாத காரியத்தைச் செய்யும்படி போதிப்பான்; அத்தகாத செயலை நோக்கி மகிழ்ச்சியும் அடைவான். உசகூ

படிற்றெழுக்க முடையார் எப்பொழுதும் பிறர்க்கு உபதேசிக்குங்கால் மிகவும் நல்லவராக இருப்பர். பின்னர் அவர்கள் தம் பொருட்டு நேர்ந்துழிச் செய்யத்தகாத காரியங்களெல்லாவற்றையும் தாமே துணிந்து செய்வர். உரு0

தந்தைதாயர் ஆணைவழி நிற்பவனும், அவர்க்குப் பணிவிடை செய்வதிற் சோம்ப லில்லாதவனும், அவரை நிழல் போற் பிரியாது எப்பொழுதும் பின்றெடர்ந்து செல்பவனும், பொருள்வருவாயில் முயல்பவனும், எல்லாக் கலைகளினுந் திறமை வாய்ந்தவனும் ஆகிய புதல்வன், அவ்விரு முதுகுரவர்க்குப் பெரிதும் இன்பஞ் செய்பவனுவன். இங்குக் கூறியவற்றின் மாறுபட்ட தீய குணங்களையும், பொருட்கு அழிவு செய்தலையும் உடைய புதல்வன் தந்தை தாயர்க்கு என்றுந் துன்பஞ் செய்பவனுவன். உருக-உருஉ

கணவன்பால் எப்பொழுதும் உண்மைக் காதலையும், வீட்டுக் காரியங்களில் திறமையையும், புதல்வரைப் பெறுதலையும், சிறந்த கற்பொழுக்கத்தையும், நல்ல யௌவனத்தையும் உடைய பெண் தன்றலைவனுக்கு இன்பஞ் செய்பவளாவள். உருந

தன் மக்களைப் போற்றி வளர்ப்பவளும், அம்மக்கள் செய்யுங் குற்றங்களைப் பொறுத்துக்கொள்பவளும் ஆகிய தாய் எப்பொழுதும் மக்களை இன்புறுத்துபவளாவள். இவற்றின் மாறுபட்ட குணங்களை யுடைய கற்பொழுக்கிறந்த தாய், தன் மக்களுக்கு எப்பொழுதும் மிக்க துன்பந் தருபவளாவள். உருச

---

உசஅ. ஆசைக்கோரளவில்லை என்றவாறும்.

உரு0. படிறு-வஞ்சகம்.

புதல்வனுடைய கல்விவளர்ச்சியின்பொருட்டும், அவன் வாழ்க்கையின்பொருட்டும் முயற்சியை மேற்கொள்ளுபவனும், எப்பொழுதும் புதல்வனை நல்லன கூறி நன்னெறிப்படுத்துபவனும், கடன் எச்சமில்லாதவனும் ஆகிய தந்தை புதல்வனுக்கு இன்பஞ்செய்பவனாவன். உருரு

எப்பொழுதுந் துணைசெய்தல், எவன்மாட்டும் மாறுபடப் பேசாமை, உண்மையானவும் நலம் பயப்பனவு மாகிய சொற்களைக் கூறுதல் ஆகிய இவற்றை யுடையோனே, நட்புரிமையை யெய்துபவனும், அதனைப் பிறர்க்குக் கொடுப்பவனும், அதனைப் பிறர்பானின்றும் பெறுபவனும் ஆவன். உருசு

கீழ்மக்களோடு நெருங்கிப் பழகுதலும், பிறர் இல்லத்திற்கு எப்பொழுதுஞ் செல்லுதலும், சாதியிலுங் குழுவிலும் மாறுபட ஒழுகுதலும் வறுமையையும் மானக்கேட்டையும் விளைவிப்பனவாம் உருஎ

வேந்தனையடுத்துப் பணிசெய்தல் பற்றிப் பிறரை மதியாது செருக்குறுதல் நலம் விளைப்பதன்று. அங்ஙனமே புலி, நெருப்பு, பாம்பு, மற்றைத் துன்பம் விளைவிக்கும் உயிர்கள் ஆகிய இவற்றோடு நெருங்கிப் பழகுதலும் நலந் தருவதன்றாம். அரசன் எவற்குத் தான் நட்பாளனாவன் ? புலி முதலியனவும் எவற்கு நட்புரிமை யுடையனவாம் ? (அரசனும் ஒருவன் வயப்படான் ; புலி முதலியனவும் ஒருவன் வயப்படா என்றபடி.) உருஅ

நட்டோர்தம்முள் மன வருத்தம் நேர்தலும், எப்பொழுதும் பகைவர்க்கு மேம்பாடுறுதலும், புலவர்மாட்டு வறுமையும், வறுமைக் காலத்துப் புதல்வர் பலரைப் பெறுதலும், பொருளுடையார் குணமுடையார் மருத்துவர் அரசன் இவர்களில்லாத நீர்வள மற்ற இடத்தில் என்றும் வாழ்தலும், தாய் தந்தையர்க்குப் பெண் மகவு ஓ ...றே பிறத்தலும், இரத்தலும் துன்பந் தருவனவாம். உருகூ-உசூ0

தலைவன், தான் சிறந்த அழகும், நிறைந்த பொருளும், புலமையும், மிக்க வலிமையும் உடையனாயினும் பெண்கள் விரும்பியவன்

---

உருஎ. சாதியில் மாறுபட ஒழுகல்—அவ்வச் சாதிகளில் விதித்த நியமங்களில் தப்புதல். குழுவில் மாறுபட ஒழுகல்—இன்ன இன்ன நியமங்களின் படி ஒழுகல் வேண்டுமென்று தீர்மானித்த கூட்டத்தில் இசைந்து சேர்ந்த ஒருவன் இடைக்கண் அந் நியமம் தவறி நடத்தல்.

உசூ0. *அரசன் என்பது ஈண்டு அரசனையும், அரசியற்றொழில் புரியும் மற்றை அதிகாரிகளையும், அரசாட்சியையும் புலப்படுத்துவதாகும்.

ணம் தன் காதற்கிழமையைப் புலப்படுத்திலனேல், அவன் அப் பெண்களுக்கு இன்பம் விளைவிப்பவனாகான். உசுக

தலைவன், பெண்கள் விரும்பியவாறு தன் காதற்கிழமையைப் புலப்படுத்தி யொழுகுவானாயின், மடித்தல முதலியவற்றிற் றாங்குத லாலும், சீராட்டலாலும் குழந்தைகள் ஒருவனுக்கு வயப்படுதல் போல் அவனுக்கு அப் பெண்கள் வயப்படுவர். உசுஉ

அறிவுமிக்க மனிதன், ஒரு காரியத்தைச் செய்யுங்கால் அதற் குத் துணையாக வேண்டுவனவற்றையும், அதற்குரிய செலவை யும், அதனாலுண்டாகும் பயனையும் நன்கு துணிந்து ஆராய்ந்து செய்தல் வேண்டும். அங்ஙன மாராயாது ஒரு சிறு காரியத்தையும் ஒருபொழுதுஞ் செய்தலாகாது. உசுரு

அறிவுடையான், மிகுந்த செலவிற் குறைந்த ஊதியந் தரத் தக்க காரியத்தைச் செய்தற்கு விரும்பலாகாது. முயற்சியுடையார், குறைந்த செலவில் மிகுந்த ஊதியந் தரத்தக்க காரியத்தைச் செய் தல் வேண்டும்., எப்பொழுதும் விலைப்பண்டங்களின் அளவினையும் விலையையும் உண்மையாக விசாரித்தறிதல் வேண்டும். உசுச

ஒருவன் தவஞ் செய்தலிலும், தன் மனைவியின்பால் இன்பம் நுகர்தலிலும், உழவுத்தொழில் செய்வதிலும், ஆலய வழிபாடு முத லிய பணிகளிலும், உணவு செய்வதிலும், மற்றை நுகர்பொருள்களி லும் தனக்குப் பிரதிநிதியாக மற்றொருவனை நியமனஞ் செய்தல் தக் கதன்று. இவை யல்லாத பிற காரியங்களில் அப் பிரதிநிதி நியமனம் எப்பொழுதும் பொருந்துவதாகும். உசுரு

இனிய உணவை உண்ண விரும்புவோனும், மறைந் தொழுகுங் காமுகனும், கள்வனும் எப்பொழுதும் மக்கள் வழங்குத லில்லாத இடத்தை விரும்புவர். வலிமைமிக்க பகைவரை யுடையான் துணை யையும், விலைமகள் பொருண்மிக்காரின் நட்புரிமையையும், இழிந்த அரசன் வஞ்சகத்தையும், இழிந்த ஏவலாளன் தலைவன் பொருளை யும், அறிவுடையான் உண்மைப் பொருளையும், தேவர்களை வழிபட் டுச் சீவிப்போன் இடம்பம் தவம் நெருப்பு ஆகியஇவற்றையும் விரும் புவர். உசுசு-உசுஎ

உசுசு-உசுஎ. தேவர்களை வழிபட்டுச் சீவிப்போன்- வேள்வி முதலியன, செய்வித்துப் பொருள் பெறுவோன்.

கற்புடையவள் தன் கணவனையும், அஃதில்லாதவள் சோர நாயகனையும், நோய் கோட்பட்டான் மருத்துவனையும், விலைப்பண்டமுடையான் விலையளவின் மிகுதியையும், இரப்பவன் வள்ளன்மையுடையானையும், அச்சமுடையான் காப்பவனையும், தீயவன் பிழை நெறியையும் விரும்பித் தேடுவர். உசுஅ

அறிவிலான், கொடுந்தன்மையையும் கலகத்தையும் மிகுதியிலையும் களிப்பு மயக்கந் தரும் பொருளை உண்ணுதலையுமுடையனாய், வீண் செயலையும் தன் விருப்பத்திற்குக் கேடு விளைக்குங் காரியத்தையுஞ் செய்வான். உசுக

## கO. நல்லொழுக்க மிக்க அந்தணர் பெருமை.

அரசரைப் பற்றிய மாணொளி தமோ குணத்தை மிகுதியாக வுடையது. அந்தணரைப் பற்றிய மாணொளி சத்துவ குணத்தை மிகுதியாக வுடையது. இவரை யல்லாத மற்றையோரைப் பற்றி நிற்கும் மாணொளி இராசத குணத்தை மிகுதியாக வுடையது. இம்மூவகை மாணொளிகளுள் சத்துவகுணத்தை மிகுதியாகவுடையதே சிறந்ததாகும். உஎO

அந்தணன் தனக்குரிய ஒழுக்கஙகளால் மற்றை எல்லோரினுஞ் சிறந்தவனாவான். அவ் வந்தணனது மாணொளியிற் சிறிது குறைந்த மாணொளிகள் அரசர் முதலியோரிடத்து உள்ளனவாம். உஎக

அந்தணனொருவன் தன் கடமையிற் பிறழா தொழுகுதலைக் கண்டுழி அரசர் முதலிய பிறரெல்லோரும் அச்ச மெய்துவர். அவ்வந்தணன் பிறப்பொழுக்கங் குன்றுவானாயின் பிறர் அங்ஙனம் அஞ்சுவாரல்லர். ஆதலின், அந்தணன் தன் ஒழுக்கத்தை நன்கு போற்றல் வேண்டும். உஎஉ

## கக. தொழில்களின் தலைமை முதலியவைகள்.

வாழ்க்கைக்குரிய தொழில்களுள், யாது ஒருவன் கடமைக்குக் கேடு விளைக்காததோ அதுவே சிறந்ததாகும். தன் குடும்பத்தை எல்லா வழியானுங் காத்தற்கு எவ்விடம் தகுதி வாய்ந்துள்ளதோ அவ்விடமே சிறந்ததாகும். உஎங

---

உஎO. மாணொளி - தேசசு.

உஎஉ. இச்சுலோகக்கருத்து "மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான், பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்" என்னுந் திருக்குறளை நினைவுறுத்துவதாகும்.

ஆற்றுநீரைத் தாயகமாகவுடைய உழவுத்தொழிலே தலையாய தொழிலாகக் கருதப்படும். பண்டமாற்று முதலிய வாணிகத்தொழில் இடையாயதாம். பிறர் ஏவின செய்யுஞ் சூத்திரர் தொழில் கடையாயதாம்.　　　　உஎச

இரத்தற்றொழில் கடையிற் கடையாயதாம். துறவொழுக்க முடையார்க்கு அவ் விரத்தற்றொழில் தலையாயதாக எண்ணப்படும். ஒரோ வமயம் அறநெறி யொழுகும் அரசன்பால் அவன் ஏவின செய்தலும் தலையாய தொழிலாம்.　　　　உஎ௫

வேள்வித்தொழில் செய்யும் அத்துவரியு முதலியோராக இருந்து அவ்வேள்வி வினைகளைச் செய்து அதன்கட் பெறும் வேதனம் எங்ஙனம் பெரும் பொருளாகும்? வாணிகத்தான் ஈட்டும் பொருளும் பெரும் பொருளாதற்குப் போதியதாக எங்ஙனம் ஆகும்? உஎசா

இராசசேவை யின்றி மிகுபொருள் உண்டாகாது. இராசசேவையும் செவ்விதிற் செய்தல் மிக அரியதாகும். அஃது அறிவின்றிறம் வாய்ந்தவர்களுக்கன்றி மற்றையோர்க்குச் செய்ய இயலாததாகும். அவ் விராசசேவை வாளின் கூர்மைபோல்வது; ஆதலின், அறிவிலாரால் எப்பொழுதுஞ் செய்தற்கு இயலாத தொன்றும்.　　　　உஎஎ

## கஉ. அறிவின் மாட்சி.

பாம்புபிடிப்பவன் பாம்பை மந்திரவன்மையால் தன் வயப்படுத்துதல் போல், அமைச்சனும் மந்திரவன்மையால் அரசனைத் தன் வயப்படுத்துவான். அறிவுடையார் அரசன்பாற் பெரிதும் அஞ்சி யொழுகல் வேண்டும்.　　　　உஎஅ

அறிவுடையார்பால் அந்தணர் மாணெளியும், அரசன்பால் அரசர் மாணெளியும் உள்ளனவாம். அறிவுடையான் சேய்மைக்கண் இருந்தும் எப்பொழுதும் அணிமையிலேயே இருப்பவனுவான். அவன் தன் னறிவாகிய கயிறுகளால் அரசனைப் பிணித்து ஈர்த்தலும், ஆட்டுவித்தலுஞ் செய்வான். துணைசெய்யும் விதம் இன்னதென் றுணராத

உஎசா. அத்துவரியு - வேள்வி வினை இயற்றுவோருள் ஒருவன்.

உஎஅ. மந்திர வன்மைகளுட் பின்னது சூழ்ச்சித் திறன்.

உஎக-உஅ௦. அறிவுடையார் எவ் வருணத்தவராயினும் அவர்பாற் பிரம தேசசு நிலைபெறு மெனவும், வேந்தன் எவ்வருணத்தவனுயினும் அவன்பால்

அறிவிலான் அணிமையி லிருந்துஞ் சேய்மைக்கண் இருப்பவனு வான். ௨௭௯-௨௮௦

வேதாநுவாக படனப் பயிற்சியான் மழுங்கிய அறிவு மற்றை உலகியல் வழக்குக்களில் திறனுடைய தாகாது. ஆதலின் எவ்வறிவு வேதாநுவாக படனப் பயிற்சியான் மழுக்க மெய்தி யுள்ளதோ அவ் வறிவு யாண்டுஞ் செல்லாதென்பது போதரும். ௨௮௧

ஒருவனுக்கு முதலில் வறுமையும் பின்னர்ச் செல்வமும் நேர்த லும், அங்ஙனமே முதலிற் கால்நடையிற் செல்லவும் பின்னர் ஊர்தி களி லிவர்ந்து செல்லவும் நேர்தலும் சிறப்புடன் இன்பந் தருவனவாம். இங்குக் கூறியவற்றின் மாறாக முதலிற் செல்வமும் ஊர்தியிற் செல வும் நேர்தலும், பின்னர் வறுமையும் கால்நடைச்செலவும் நேர்த லும் துன்பம் பயப்பனவாம். ௨௮௨

ஒருவன், பிறந்தவுடன் இறந்துபோம் புதல்வரைப் பெறுதலி னும் எப்பொழுதும் புதல்வற் பேறில்லாதவனாதலும், பொல்லாத ஊர்திகளில் ஏறிச் செல்லுதலினும் கால்நடையிற் செல்லுதலும், ஒருவனோடு பகை கொள்ளுதலினும் நடுநிலை மேற்கொள்ளுதலும் சிறந்தனவாம். ௨௮௩

ஒருவன், தான் நடந்து செல்லுதற்பொருட்டு எல்லா இடத் தையுந் துணி முதலியவற்றான் மறைப்பதினும், செருப்பினால் தன் கால்களைக் காத்தல் சிறந்ததாகும். சிற்றறிவாற் செருக்குறுதலினும் அறிவின்றியிருத்தல் சிறந்ததாகக் கருதப்படும். ௨௮௪

பிறரில்லத்தில் வாழ்தலினுங் காட்டில் வாழ்தல் சிறந்ததாகும். பொல்லாத மனைவியோடு கூடி இல்லறத்தில் வாழ்தலினும் துறவு மேற்கொள்ளுதல், அன்றி இறந்துவிடுதல் சிறந்தனவாம். ௨௮௫

நாய்களின் புணர்ச்சியும், கடன்வாங்குதலும், கருப்ப முண்டாத லும், ஒரு காரியத்திற் றலைமை ஏற்றலும், கயவரோடு நட்புக் கொள்ளலும், நலமில்லுணவும் தொடக்கத்தி லின்பத்தையும் இறுதி யிற் றுன்பத்தையுஞ் செய்வனவாம். ௨௮௬

---

க்ஷத்திரிய தேசசு நிலைபெறு மெனவுங் கொள்க. அரசனுக்குச் சேய்மைக்கண் எனவும் அரசனுக்கு அணிமையில் எனவு மியைக்க.

௨௮௧. அநுவாகம் - வேதத்திலுள்ள சிறு பிரிவுகள். வேதாத்தியயனம் மாத்திரம் உள்ளார் உலகியலை நன்கு அறியாரென்பதாம்.

இழிந்த அமைச்சரால் அரசனும், இழிந்த மருத்துவரால் நோயாளியும், இழிந்த அரசாற் குடிமக்களும், இழிந்த அறிவால் அஃதுடையானும் எப்பொழுதும் குறைவெய்துவர். இழிந்த புதல்வனால் அவன் பிறந்த குலமுங் குறைவெய்தும். உஅஎ

யானை, குதிரை, எருது, கிளி என்னு மிவை தம்மைப் பயிற்றுவோன் குணங்களைப் பற்றி நிற்பனவாம். அங்ஙனமே பாலரும் பெண்களும் தம்மைப் பயிற்றுவோரின் குணங்களைப் பற்றி நிற்பர். உஅஅ

அமய மறிந்து பேசுதலால் வெற்றி யுண்டாம். அழகிய ஆடைகளாற் காண்டன்மாத்திரத்தில் அழகுண்டாம். கல்வியால் அவைக்களத்திற் பெருமை யுண்டாம். ஒருவன் அதிகாரியா யிருக்குமளவில் இம்மூன்று முண்டாம். உஅகூ

இல்லற வாழ்க்கை யுடையார்க்கு நல்ல மனைவியும்,நன்மக்களும், சிறந்த கல்வியும், சிறந்த பொருளும், நண்பரும், நல்ல பணிசெய்வானும், பணிப்பெண்ணும், நோய் முதலியன இல்லாத உடலும், அழகிய இல்லமும்,நல்ல அரசனும் வாய்த்தல் அவர் நலத்திற்குரியதாகும். இங்குக் கூறப்பட்ட மனைவி முதலியோரும்,கல்வி முதலியனவும் மாறுபட்டிருப்பின் அஃது அவர்க்குக் கேடு விளைவிப்பதாகும். உகூ0

யாண்டுமுதிர்ச்சியும், நற்குணங்களும், நம்பிக்கையும், நல்லொழுக்கமும் வாய்ந்த பெண்களையாதல், ஆண்மக்களையாதல், அலிகளையாதல் உவளகத்தி லிருக்கும்வண்ணம் நியமனஞ் செய்தல் வேண்டும். இளமைமிக்க ஆண்மகன், தனக்குரிய நண்பனுயினும் அவனை அங்ஙனம் உவளகத்தி லிருக்க நியமயனஞ் செய்தலாகாது. உகூக

இன்ன காலத்தில் இன்னது செய்வதென்று காலத்தை வரையறைப்படுத்திக் காரியம் புரிதல் வேண்டும். அங்ஙனம் காலவரையறை செய்யாமல் ஒன்றுஞ் செய்தலாகாது. பசு முதலியவைகளைத் தன்னைப் போல் ஓம்புதல் வேண்டும். மனிதன் அறம் பொரு ளீட்டுதற்குத் தன்னையுப் உண்டி யமைத்தற்குத் தாயையும், தன்னை நன்னெறியிற் பயிற்றுதற்கு ஆசிரியனையும் நியமனஞ்செய்தல் வேண்டும். உகூஉ

---

உகக. உவளகம் - அந்தப்புரம்.

உகஉ. அறம்பொரு ளீட்டுதற்குத் தன்னை நியமனஞ் செய்தலாவது—தன்மனத்தை அவ்வறம் பொரு ளீட்டத்தில் விருப்பமுறச் செய்தல்.

மனிதன், நியமமின்றித் தன் மகளிர் உறையும் உவளகத்திற்கு அடுத்தடுத்துச் செல்லல் வேண்டும். உ௯௩

மனிதர்க்கு அயலிடஞ் செல்லுங்கால், புதல்வரை யில்லாத மனைவியும், சிறந்த ஊர்தியும், சுமை தாங்குவோனும், நல்ல காவலாளும், பிறர் துன்பங்களை நீக்குதற்குரிய கல்வியும், சோம்ப லில்லாத பணியாளும் வாய்த்தல் எப்பொழுதும் நலந் தருவதாகும். உ௯௪

ஒருவன், ஆற்றலுடையனாயினும் அவன் ஒருபொழுதும் மக்கள் வழங்கும் வழியில் தடை செய்து இருத்தலாகாது. நல்ல ஊர்தியாயினும் அதன்கண் ஏறி அரசன் கடைத்தெருவிற் செல்லலாகாது. உ௯௫

வழிச்செல்வோன் எப்பொழுதுந் துணையோடு செல்லல் வேண்டும். துணையின்றிப் போதல் கூடாது. அவன் தங்குங்கால் அணிமையில் நல்ல வழியையும், நீர்வளத்தையும், அச்சமின்மையையும் உடைய கிராமத்தில் இருத்தல் வேண்டும். அத்தகைய தல்லாத வழியிலும், காட்டிலுந் தங்கியிருந்து இளைப்பாறுதல் கூடாது. உ௯௬-உ௯௭

மிகு நடை, உணவின்மை, மிக்க பெண்புணர்ச்சி, மிக்க வேலை செய்து அலுத்தல் ஆகிய இவை எல்லோர்க்கும் விரைந்து பெருங் கிழத்தன்மையை உண்டாக்குவனவாம். உ௯௮

பல்வகைக் கல்விகளிலும், ஓவியம் சிற்பம் முதலிய பல்வகைக் கலைகளிலும் மிகப் பயின்று இளைத்தலும் கிழத்தன்மையை உண்டாக்குவதாகும். உ௯௯

எவன் உலகத்தவரின் தீய குணங்களை நற்குணங்களாக எறிட்டுப் பாராட்டுகின்றானோ, அவன் மக்கள் அன்பிற்குரியனாவன். எவன் குண மிகுதியைப் புகழ்ந்து பாராட்டுகின்றானோ அவன் எங்ஙனம் உலகத்தவர்க்கு நண்பனாகாமல் இருப்பான்? ௩00

ஒருவனது உண்மையான தீய குணத்தை எடுத்துச் சொல்லுபவன் அவனுக்கு அன்பனாயினும் அவனால் வெறுக்கப்படுபவனாவன்.

உ௯௩. அடுத்தடுத்து உவளகத்திற் செல்லவேண்டு மென்பது, அங்கு உறையும் மகளிர் கற்பொழுக்கம் மாசுபடாமைப்பொருட்டும் அம்மகளிர் மன ஒற்றுமையோடு கூடியிருத்தற் பொருட்டுமாம்.

உ௯௫. அரசன் கடைத்தெருவிற் செல்லின் வாணிகம் புரிவோர்க்கு எழுந்து உபசரித்தல் முதலியவற்றால் வாணிகத்திற்கு இடையூறு நேரு மென்பது கருத்து. பொல்லாத ஊர்தியிற் செல்லின், அதுவே வழிக்கண் வரும் மக்களுக்குத் துன்பம் விளைக்குமாதலின், "நல்ல வூர்தியாயினும்" என்றார்.

அங்ஙனமாயின், ஒருவனது நற்குணத்தைத் தீய குணமாக எறிட்டுத் தூற்றுவோன் எங்ஙனம் அவன் அன்பிற் குரியவனுவன்? (சிறிதும் ஆகான் என்றபடி.) ௩0௧

கடவுளரும் குணம் பாராட்டலால் விரைந்து ஒருவன் வயமாவர். அங்ஙனமாயின், மக்களைப்பற்றிக் கூறவேண்டியதென்? எவனும் ஒருவன் முன்னிலையில் அவன் தீய குணங்களை எடுத்துக் கூறமாட்டான். ஆதலின், ஒருவன் தன்பாலுள்ள தீய குணங்களை உலகியலாலும், நூலுணர்ச்சியாலும் தானே ஆராய்ந்தறியக்கடவன். ௩0௨-௩0௩

தன் தீயகுணங்களைப் பிறர் சொல்லக் கேட்ட அளவில் மகிழ்ச்சியடைதலையும், அதுபற்றிச் சினங் கொள்ளாமையையும், தன் பிழைகளை நன்முக அறிந்துகொள்வதில் முயற்சியையும், பிறர்வாய்க் கேட்டவுடன் அப்பிழைகளை ஒழித்தலையும், எப்பொழுதும் தன் குணங்களைப் பிறர் சொல்லக் கேட்டஅளவில் செருக்குறுமற் சமநிலை எய்துதலையும், "யானே தீயகுணங்களுக் கெல்லாம் உறைவிடமாவேன்; என்மாட்டு எங்ஙனம் நற்குணங்கள் நிலைபெறும்? என்பாலே அறியாமைக் குண முள்தாம்" என்றிவ்வாறு எண்ணுதலையுமுடையான் எல்லோரினும் உயர்ந்தோனுவான். அவனே பெரியான். தேவர்களும் அவன் கலைகளின் ஒரு சிறு கூற்றையும் எய்துவா ரல்லர். ௩0௪-௩0௬

நல்லோர்க்குச் செய்யும் உதவி சிறிதெனினும் என்றும் பெரியதாகும். தீயோன் தனக்குப் பிறர் செய்த உதவி பெரிதெனினும் அதனைக் கடுகளவினுஞ் சிறியதாக எண்ணுவான். ௩0௭

நல்லோன் பொறுமையுடையானை ஆற்றலுடையவனுக எண்ணுவான். தீயோன் அவனை ஆற்ற லில்லாதவனுக எண்ணுவான். ஆதலின், நல்லோன் கூறுங் கடுஞ்சொற்களையும் பொறுத்தல் நன்றும். தீயோன் கூறுங் கடுஞ்சொற்களை அங்ஙனம்பொறுத்துக்கொள்ளலாகாது. ௩0௮

எவரோடுங் கலகம் விளைக்கத்தக்க விளையாடல்களைச் செய்தலாகாது. ஒருவனை நோக்கி "நின்மனைவி கற்பில்லாதவள்" என்று விளையாட்டிலுங் கூறலாகாது. ௩0௯

---

௩0௭. இச் சுலோகத்தின் முற்பகுதி "தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக், கொள்வர் பயன்றெரி வார்" என்னுந் திருக்குறட் கருத்தை ஒத்திருத்தல் காண்க.

௩0௮. நல்லோனும் தீயோனும் தாம் கூறுங் கடுஞ் சொற்களைப் பொறுத்தல் பற்றி, ஒருவனை முறையே ஆற்றலில்லாதவனுகவும் ஆற்றலுடையவனுகவும் எண்ணுர் என்பது கருத்து.

எவர்மாட்டும் நட்புரிமைபற்றியும் கடுஞ்சொற்கள் கூறத்தகாதனவாம். உண்மை நண்பன்பால் இரகசியச் செய்தியையும் மறைத்தலாகாது. அந்நண்பனது இரகசியச் செய்தியைச் சிறிதும் வெளிப்படுத்தலுங் கூடாது. ௩௧0

நட்டோனொருவன் பின்னர்ப் பகைவனாயினும், முன்னர் நண்பனா யிருக்குங் காலத்தில் அவனாற் சொல்லப்பட்டனவும், அன்றி அவன்பால் தன்னாலறியப்பட்டனவும் ஆகிய பொல்லாங்குகளை ஒருபொழுதும் எவ்வாற்றானும் வெளிப்படுத்துக் கூறலாகாது. ௩௧௧

ஒருவன் தற்காப்புச் செய்துகொண்டு பகைவரோடு எதிர்க்க முயலல் வேண்டும். அங்ஙனமே எதிர்வினையுஞ் செய்தல் வேண்டும். ௩௧௨

வலியவருடைய மாறுபட்ட ஒழுக்கம் உண்மையாயினும் அதனைக் கூறலாகாது. ஒரோவமயம் அது காணப்பட்டதாயினும் காணாதவன் போலவும், கேட்கப்பட்டதாயினும் கேளாதவன் போலவும் இருத்தல் வேண்டும். ௩௧௩

மனிதன் தனக்குக் கேடு நேர்ந்த காலத்தில் ஊமனாகவும், குருடனாகவும், செவிடனாகவும், முடவனாகவும் இருத்தல் வேண்டும். இன்றேல், உலகியலினின்றும் விலக்குண்டவனாவான்; துன்பமு மெய்துவான். ௩௧௪

அறிவின் முதிர்ந்த பெரியார்க்கு மாறுபடாத சொற்களைக் கூறல்வேண்டும். எப்பொழுதும் சிறார்களையொப்பப் பேசுதலாகாது. பிறர் இல்லத்துட் புகுந்தவன் அவர்தம் மனைவியரைப் பார்த்தலாகாது. ௩௧௫

௩௧௨. எதிர் வினை - ஒருவன் செய்த காரியத்திற்கு மாறாகச் செய்யப்படும் செயல்.

௩௧௩. இச் சுலோகத்தின் முற்பகுதிக்கு "மிக்க விபரீதச் செயலொன்று நிகழ்ந்தது உண்மை யாயினும் அதனைக் கூறலாகாது" என்று பொருள் கோடலும் பொருந்தும்.

௩௧௪. இதனால் ஒருவன், தனக்குக் கேடு நேர்ந்துழிப் பிறரைப் பற்றி மிகுதியாகப் பேசுதலும், அத்தகைய சொற்களைக் கேட்டலும், பிறரைக் காண்டலும், பிற விடங்கட்குச் செல்லுதலுங் கூடாவென்பதும், அங்ஙனம் பேசுதன் முதலியவற்றை மேற்கொள்ளின் உலகத்தவரால் இழிக்கப்பட்டுத் துன்புறுவன் என்பதும் புலப்படுதல் காண்க.

வறியவனிடத்தினின்றும் அவன் உடன்படாத தலைமைத்தன்மையை எக்காரியத்திலுங் கவர்ந்துகொள்ளலாகாது. தன் சிறுவர்க்கும் பிற சிறார்க்கும் விளையாட்டுக் கலகம் நேர்ந்துழித் தன் சிறுவரை அறிவுறுத்து ஒறுத்தல் வேண்டும். பிறர் சிறாஎர் குற்ற மிழைத்தவராயினும் அவரை அங்ஙனஞ் செய்தலாகாது. ௩௧௬

மறநெறியிற் பற்று, நீதி பிழைத்தல், நிலையில்லாத மனம், பிறர் பொருளை வலிந்து பற்றுதல், கொடுந் தண்டமிடுதல் ஆகிய இவற்றையுடையானது கிராமத்தில் வாழ்தலை யொழித்து யாதாயினும் மற்றோரூரில் வாழ்தல் வேண்டும். ௩௧௭

ஒருவன், வழக்காளி எதிர்வழக்காளியாகிய இருவருடைய கருத்துக்களையும் உண்மையாக உணர்ந்துளானாயினும், அரசனாலாதல், மற்றை அதிகாரிகளாலாதல் கேட்டுக்கொள்ளப்படாமல் தானே அவர் வழக்கின் இயல்பைப் பற்றி ஒன்றுங் கூறலாகாது; என்னை? அங்ஙனங் கூறின் அவ்வழக்கில் தோல்வி யெய்தினோன் தனக்குப் பகைவனாவனாதலின். ௩௧௮

பிறன் ஒருவனுடைய வழக்கை ஏற்றுக்கொண்டு மற்றெவனோடுங் கலகஞ் செய்தலாகாது. கூட்டங் கூட்டமாகத் திரண்டு அரசியற் சூழ்ச்சியைப் பற்றி ஆராய்தலாகாது. ௩௧௯

சோதிடத்தைப் பற்றியும், அறத்தின் உண்மையைப் பற்றியும், நீதியைக் குறித்தும், தண்டத்தைக் குறித்தும், மருத்துவத்தைப் பற்றியும், கழுவாயைப் பற்றியும் அவ்வந் நூல்களைப் பயின்றுணராத ஒருவன் ஒன்றுங் கூறலாகாது. ௩௨௦

பிறர்வயப்பட்டிருத்தலினும் மேலான துன்பமு மில்லை. தன் வயப்பட்டிருத்தலினும் மேலான இன்பமு மில்லை. அயல் நாட்டில் வாழ்பவனும், தன் வயத்தனாயிருப்பவனும், இல்லற வாழ்க்கை யுடையவனும் எப்பொழுதும் இன்பம் எய்துவர். ௩௨௧

புதியனவும் பழையனவுமாகிய மக்கள் வழக்க ஒழுக்கங்களை அறிந்தவர்களுடைய அறிவினால் காணுந்தோறும் புதிய புதிய வழக்க

---

௩௧௬. வறியவன், தன் சீவன நிமித்தம் ஒரு காரியத்திற் றலைப்பட்டிருக்குங்கால், அவன் அநுமதி பெறாமல் மற்றொருவன் அக் காரியத் தலைமையை அபகரித்தலாகாதென்பது கருத்து.

௩௨௦. கழுவாய் - பிராயச்சித்தம்.

ஒழுக்கங்கள் உண்டாகின்றன. ஆதலின் அவற்றை முற்றும் ஆராய்ந்து பெரும்பாலும் அறுதியிட்டுக் கூற இயலாது. காட்சியளவையானும், வழியளவையானும், உவமையளவையானும், பெரியோரருளிய நூலளவையானும் அவ்வழக்க ஒழுக்கங்களின் இயல்பை அறிந்து கொள்ளல் வேண்டும். ரு௨௨—ரு௨ரு.

அரசனுக்கும் நாட்டில் வாழும் மக்களுக்கும் இதுகாறும் பொதுவாகச் சுருக்கிக் கூறப்பட்ட இந்நீதிநூல் அன்னார் நலத்திற்குரியதாகும்; இதன்கட் சிறப்பாகக் கூறப்பட்டவை அரசற்குரியவாம் என்று கருதற்பாலன. ரு௨௪

சுக்கிர நீதியில்

"அரசனுக்கும் குடிகளுக்கும் உரிய பொது நீதிகள்" என்னும்

மூன்றாம் அத்தியாயம் முற்றிற்று.

---

கஉக. வழியளவை - அநுமானப்பிரமாணம்.

# நான்காம் அத்தியாயம்.

## முதற் பிரகரணம்.

(நண்பர் முதலியோர் இலக்கணங்கள்.)

---

### க. நட்டார் பகைவர் இலக்கணங்கள்.

இனிப் பலவகைப் பொருள்களைப் பற்றிய மிச்சிராத்தியாயத்தினுள்ள முதற்பிரகரணத்தைச் சுருக்கிக் கூறுவேன். அவற்றுள், முதலில் நட்டோர் முதலியோரின் இலக்கணங்களைச் சுருக்கமாகக் கேட்பீர்களாக. க

உபகாரத்தால் நட்டோரும், அபகாரத்தாற் பகைவரும் செய்பவன், செய்விப்பவன், உடன்படுவோன், துணையாளனெனத் தனித் தனி நான்கு வகைப்படுவர். உ

எப்பொழுதும் பிறர் துன்பங் கண்டுழி மனமுருகுதல், பிறர்க்கு விருப்பமான பொருளைக் கூட்டுவிக்கு முயற்சி, வேண்டிக்கோடலின்றிப் பிறர்க்குபகரித்தல், உரிய காலத்தில் தம் நட்டோர்க்கும் அவன் மனைவிக்கும் பொருட்கும் மற்றை மறைபொருள்களுக்கும் புகலிடமாத லாகிய இந் நான்கிலக்கணங்களையு முடையார் தலையாய நண்பரென்று கூறப்படுவர். மற்றையோர் இவற்றுள் முதலிற் கூறிய மூன்றிலக்கணங்களை யுடையாரெனவும், முதல் இரண்டிலக்கணங்களையுடையாரெனவும், ஓரிலக்கணமுடையாரெனவும் பல திறப்படுவர். ங-ச

ஒரு பொருளைப் பற்றி இது பிறர்க்கின்றி எனக்குரியதென்று இருவர் தனித்தனியே தம்முண் மாறுபட்டு விரும்புதலும், பிறர் விரும்பும் பொருட்குக் கேடு செய்தலு மாகிய இவ்விரண்டும் பகைமையின் இலக்கணங்களாம். ரு

---

க. கேட்பீர்களாகவென அசுரர்களை முன்னிலைப்படுத்திச் சுக்கிராசிரியர் கூறினாரென வுணர்க.

ங-ச. பொருளும் மறைபொருளும் அந்நட்டோனுடையனவாம். மறைபொருள் - இரகசிய விடயம். மனமுருகுதல் கூட்டுவிக்கு முயற்சி பிறர்க்குபகரித்தலாகிய இம் மூன்றனையுமுடையாரெனவும், மனமுருகுதல் கூட்டுவிக்குமுயற்சி ஆகிய இவ்விரண்டனையு முடையாரெனவும், மனமுருகுதன்மாத்திர முடையாரெனவும் பின்னையோர் மூவகைப்படுவர் என்பதாம்.

"உடன்பிறந்தான் இல்லையாயின் தந்தையின் பொருண் முழுதும் எனக்கே உரியதாகும்" எனவும், "இவ்வுடன்பிறந்தானுக் குரிமையாதல் கூடாது" எனவும், "இவ்வுடன்பிறந்தான் என் வயப்பட்டிருத்தல் வேண்டும்" எனவும், "இவ்வெல்லாப் பொருள்களையும் பிறர்க்கின்றி யானே நுகர்வல்" எனவும் இருவர் தனித்தனி மாறுபட்டு எண்ணுவாராயின், அவர் தம்முட் பெரும் பகைவராவர். வெறுப்பவன் வெறுக்கப்படுபவன் ஆகிய இவ்விருவரும் ஒருவர்க்கொருவர் பகைவரென்னும் பெயரை யுடையராவர். சு-எ

வீரம், முயற்சியின் எழுச்சி, வலிமை, நீதி யாகிய இவற்றை யுடையார்மாட்டு எப்பொழுதும் உட்பகை யுடையராய்க் காலத்தை எதிர்பார்த்திருக்கும் அரசரனைவரும், நட்புரிமை யுடையரா யிருப்பரென்னும் இதன்கண் வியக்கற்பாலது யாதுளது? அவ்வேந்தரெல்லோரும் அரசியல் விருப்பம் உள்ளாரே யாவர். அரசனுக்கு எவனும் நண்பனாகான். அரசனும் எவனுக்கும் நண்பனாகான். அ-கூ

அரசனுங் குடிமக்களும் பெரும்பாலும் தம்முட் காரியங் கருதியே நட்புரிமை யுடையரா யிருப்பர். ஒருவனுக்குச் சிலர் இயற்கையாகவே நண்பராவர். சிலர் இயற்கையாகவே பகைவ ராவர். க0

ஒருவனுக்கு அவன் தாய், தாயின் குலத்தவர், தந்தை, தந்தையின் தந்தைதாயர், தந்தையின் சிறியதந்தை பெரியதந்தையர், தன் புதல்வி, தன் மனைவி, மனைவிபிறந்த குலத்தவர், தன் தந்தையின் உடன்பிறந்தாள், தாயின் உடன்பிறந்தாள், தன்னுடன்பிறந்த தங்கை தமக்கையர், அவர்தம் பெண்மக்கள், அவர் பின்வழித் தோன்றல்கள், அரசன், குரு ஆகிய இவர்கள் இயற்கையான நண்பராவர். கக-கஉ

சு-எ. இல்லையாயின் என்னும் இதனால் உடன்பிறந்தான் இருத்தல் உணரப்படும்.

அ-கூ. உட்பகை யுடையராய்க் காலங் கருதி யிருத்தலின் நண்பராவர் என்பதில் வியப்பின்றென்பதும், வேந்தன் காலம் நேர்ந்துழி நட்புரிமையைப் பொருட்படுத்தா னென்பதும் புலப்படுதல் காண்க.

க0. இயற்கை நண்பரையும் இயற்கைப் பகைவரையும் பின் வருஞ் சுலோகங்களிற் காண்க.

கக-கஉ. முதனூலில் சந்ததி என்றது பின்வழித் தோன்றல்கள் என்று மொழிபெயர்க்கப்பட்டது. அதற்குப் புதல்வன் என்றும் பொருள் கொள்ளலாம். கச - ஆம் சுலோகத்தில் நல்ல புதல்வனையும், கஎ - ஆம் சுலோகத்தில் தீயபுதல்வனையும் விதந்து கூறினமையால் ஈண்டுப் பொதுவாகப் புதல்வனென்று கூறுதலும் பொருந்தும்.

கல்வியுடைமை, வீரம், திறமை, வன்மை, அஞ்சாமை யாகிய இவ்வைந்தும் ஒருவனுக்கு இயற்கையாக வுள்ள நட்புரிமைக் குணங்களாம். இவற்றானே யறிவுடையார் வாழ்க்கை யுடைய ராகின்றனர். கங

தாய்தந்தையரின் ஆணைவழி கடவாது ஒழுகும் மகனே போருளோடு பொருந்தும் பெயரை யுடையனாவன். நற்குணமிக்க புதல்வன் ஒருவனே சிறந்தவனாவன். குணமிலிகளாகிய புதல்வர் நூற்றுக்கணக்காக விருப்பினும் அவரால் வரக்கடவதாம் பயன் யாது? கச

பிறரைத் துன்புறுத்துதலையும் தீயொழுக்கத்தையும் கடன் கோடலையுமுடைய தந்தை, கற்பிழந்த தாய், கற்பிழந்த மனைவி, தன் தமையன் தம்பிமார், சிற்றப்பன் பெரியப்பன்மார், அவர்தம் மனைவியர், அவர்தம் புதல்வர்கள், மருகி, மாமி, மாற்றவள், நாத்தூணங்கை, கொழுந்தன்மார் மனைவியர், அறிவில்லாத புதல்வன், இழிந்த மருத்துவன், மனைவியைக் காவாத கணவன், சினமிக்க தலைவன், சினமிக்க குடிமக்கள், ஈகை யில்லாத பொருளாளன் ஆகிய இவர்கள் இயற்கை யாகவே பகைவராவர். கரு—கஎ

தீயவற்கு அரசனும், கற்பொழுக்க மில்லாத பெண்களுக்குக் கற்புடையாரும், கீழ்மக்களுக்கு நல்லோரும், அறிவிலார்க்கு நற்பொருளை யறிவிப்போரும் பகைவராவர். கஅ

அறிவிலார்க்குச் செய்யும் உபதேசம் அவர்தம் சினத்தை வளர்த்தலே யன்றி அடக்கத்தை யுண்டுபண்ணமாட்டாது. பாம்புகளுக்கு அருத்தும் பால் அவற்றின் நஞ்சைப் பெருக்குதலே யன்றி அமிருதத்தை யுண்டாக்காது. கசு

ஓரரசனுக்கு நாற்புறத்தும் யாண்டுஞ் சூழ்ந்திருப்போரும் குறைந்த வலிமையும் பகைமையு முடையாருமாகிய மற்றை அரசர்களுள், மிக அணிமையிலிருப்போரும், அவர்க்கு அப்பாலிருப்போரும், அவர்க்கு அப்பாலிருப்போரும் முறையே இயற்கையான பகை

---

கச. மகன்மைப் பொருட் குரியனாவான் என்பதாம்.

கரு - கஎ. மருகி முதலிய ஐவரும் ஒரு பெண்பாலைக் குறித்து அவட்குப் பகைவராவ ரெனவும், மனைவியைக் காவாத கணவன் மனைவிக்குப் பகைவனாவானெனவும், சினமிக்க தலைவன் ஏவலாளர்க்குப் பகைவனாவானெனவும், சினமிக்க குடிகள் அரசனுக்குப் பகைவராவ ரெனவும் கொள்க. மாற்றவள் கணவனுடைய மற்றொரு மனைவி. நாத்தூணங்கை-கணவனுடன் பிறந்தவள்.

வராகவும், நொதுமலராகவும், நண்பராகவும் இருப்பர். அன்றி நாற்புறத்தும் அணிமையிலிருப்போர், அதற்கப்பாலிருப்போர், அதற்கப்பாலிருப்போ ராகிய அரசர்கள் முறையே பகைவராகவும், நண்பராகவும், நொதுமலராகவும் இருப்பாரெனக் கோடலும் பொருந்தும். அங்ஙனமே தன்னால் துன்புறுத்தப்பட்டுத் தனக்கு மிகவும் அணிமையி லிருக்கின்ற ஏவலாளரும் அமைச்சர் முதலியோரும் பகைவராக அறியப்படுவர். உ0-உஉ

ஆற்றல் குறைந்த நண்பனையும் ஆற்றல்மிக்க நண்பனையும் முறையே உயர்த்தியுந் தாழ்த்தியும் நடத்தல் வேண்டும். உங

உ. சாம முதலிய உபாயங்களை மேற்கொள்ளு முறை.

சாம தான பேத தண்டங்கள் என்னும் நால்வகை உபாயங்களாலும் இப் பகைவரெல்லோரையும் வேறுபடுத்தலும், வசீகரித்தலும், துன்புறுத்தலும், அழித்தலும் செய்யலாம். உச

ஒருவன் உபாயத்தால் பாம்பு யானை சிங்கம் ஆகிய இவற்றை வயப்படுத்துதல்போலத் தக்க உபாயங்களால் நண்பரையும் பகைவரையும் வசீகரித்துத் தன் வயப்படுத்தல் வேண்டும். உபாயத்தினாலேயே இந் நிலவுலகத்துள்ளார் அடைதற்கரிய துறக்கத்தை யடைகின்றனர்; பிளத்தற்கரிய வயிரத்தைப்பிளக்கின்றனர். உரு-உசு

சாம தான பேத தண்டங்களாகிய இந்நான்கு உபாயங்களையும் நண்பர், சம்பந்திமார், பெண்கள், புதல்வர், குடிமக்கள், பகைவராகிய இவர்கள்மாட்டுத் தனித்தனி பொருந்துமாற்றான் ஆராய்ந்து செய்தல் வேண்டும். உஎ

ஒழுக்கம், பருவம், கல்வி, குலம், பழக்கம், வாழ்க்கைத்தொழில் ஆகிய இவற்றை நேர்மையாக வுடையார் தம்முட் கூடுங்கால் நட்புண்டாமாயின், அவர்தம்முள் ஒருவன் மற்றொருவனை நோக்கி, "எனக்கு நின்னையொத்த நண்பன் வேறொருவனும் இலன்" என்று இவ்வாறு கூறுதல் நட்புப் பற்றிய சாமம் என்னும் உபாயமாகும். அத்தகைய நண்பன்பால் "என்னுடைய வாழ்க்கைக்குரிய எல்லாப்

---

உ0 - உஉ. நொதுமலர்- விருப்புவெறுப்பின்றி நடுநிலைமேற்கொண்டிருப்போர். ஓரரசனுக்கு அணிமையிலுள்ள மற்றோரரசன் வலிகுறைந்தவனாக விருப்பின், அவன் தான் நினைந்தவண்ணம் ஒன்றுஞ் செய்ய முடியாமையாற் பகைவனாவா னென்பது கருத்து.

உஎ. பொருந்துமாறு-யுக்தி.

பொருள்களும் நின்னுடையவை யாகும்" என்று கூறுதல் நட்புப் பற்றிய தானம் என்னும் உபாயமாகும். ௨அ-௨௯

ஒரு நண்பன்பாற் பிற நண்பர்களின் நற்குணங்களை ஒருவன் பாராட்டிப் பேசுவானாயின், அஃது அந் நண்பனது மனத்தை வேறுபடுத்துமாதலின் **நட்புப் பற்றிய பேதம்** என்று கூறப்படும். ஒருவன் தன் நண்பனை நோக்கி "நீ இத்தகையனாயின் யான் நின்னோடு நட்புக் கொள்ளேன்" என்றிவ்வாறு கூறுதல் **நட்புப் பற்றிய தண்டம்** என்று கூறப்படும். ௩௦

எவன் பிறர்க்கு நன்மைசெய்யாமலும் பிறர்க்குவரும் தீமையைப் பொருட்படுத்தாமலும் இருக்கின்றானோ அவன் **நொதுமலனாவான்.** அந் நொதுமலனும் இன்சொற் கூறுதலாகிய சாமோபாயத்தால் நன்கு வசீகரிக்கத் தக்க பகைவனாகான் கொல்? (பகைவனாவானென்றபடி.) ௩௧

ஒருவன் தன் பகைவனை நோக்கி, "நீயும் யானும் ஒருவர்க்கொருவர் கேடு செய்ய எண்ணுதலாகாது; துணை செய்பவராதல் வேண்டும்" என்றிவ்வாறு கூறுதல் **பகைமை பற்றிய சாம** மென்னும் உபாயமாகும். ௩௨

ஒருவன் தனக்குரிய பகைவர் பலருள், வலிமை மிக்க பகைவனை ஆண்டுதோறும் இவ்வளவென் றளவிடப்பட்ட அரசிறைப்பொருள் கொடுத்தும் சிற்றூர் பல ஈந்தும் மகிழ்வித்தல் **பகைமை பற்றிய தானம்** என்று கூறப்படும். ௩௩

பகைவர்க்குத் துணையாகவுள்ள பொருள் முதலிய கருவிகளுக்குக் குறைவு செய்தலும், அப்பகைவரினுஞ் சிறந்த வலியுடையாரைச் சார்ந்திருத்தலும், அப்பகைவரிற் றாழ்ந்தாரை வலியுடையராகச் செய்தலும் **பகைமை பற்றிய பேதம்** என்று கூறப்படும். ௩௪

பகைவரைக் கள்வராற் றுன்புறுத்தலும், அப் பகைவருடைய பொருள் தானியங்களைக் கெடுத்தலும், அவர்பாற் புரைநெறி கண்டு அது காரணமாக அவரினுஞ் சிறந்த வலியுடையாரால் நீதி முறை பற்றி அச்சுறுத்தலும், போர்த்தொழில் நேர்ந்துழிப் புறமுதுகிடாத வீரர்களால் நடுக்கஞ் செய்தலும் **பகைமை பற்றிய தண்டம்** என்று கூறப்படும். ௩௫

---

௩௧. நொதுமலனைத் தன் வயப்படுத்துக்கோடற்கு உபாயங் கூறியவாறு.

இச் சாம முதலிய உபாயங்கள் வினைவேறுபாடு குறித்து அவரவர் தகுதிக்குத் தக்கவாறு செய்யப்படுதலின், பல்வேறு வகைப்படுவனவாம். ருசு

நீதி யுணர்ந்து நிலம் புரக்கும் வேந்தன் இச்சாம முதலிய எல்லா உபாயங்களாலும் தன் நண்பர், பகைவர், நொதுமலராகிய இவர்கள், தன்னினும் மிக்க வலி யுடையரா யில்லாதவாறு செய்தல் வேண்டும். ருஎ

முதலிற் சாமோபாயமே சிறந்ததாகும். அதனாற் காரியம் முடிந்திலதாயின் பின் தானோபாயத்தையும், அதனாலும் முடிந்திலதாயின் பின்னர் எவ்வாற்றானும் பேதோபாயத்தையும், அதனாலும் இயன்றிலதாயின் உயிர்க்கு இறுதி நேர்ந்துழிப் பகைவர்பால் தண்டோபாயத்தையும் மேற்கொள்ளல் வேண்டும். ருஅ

பகைவன் பேராற்றலுடையனாயின் அவன்பாற் சாம தான உபாயங்களையும், தன்னின் மிக்க வன்மை யுடையனாயின் அவன்மாட்டுச் சாம பேத உபாயங்களையும், தனக்கு ஒத்த பகைவனாயின் அவன்பால் பேத தண்ட உபாயங்களையும், தன்னிற் றாழ்ந்தோனாயின் அவன்பால் தண்டோபாயத்தையும் மேற்கொள்ளல் வேண்டும். ருகூ

நண்பன்பாற் சாம தான உபாயங்களை செயற்பாலனவாம். ஒருபொழுதும் பேத தண்ட உபாயங்கள் மேற்கொள்ளற்பாலன வல்ல. சு0

பகைவருடைய குடிகளை வேறுபடுத்தி அவரைத் துன்புறுத்தல் ஒருவனுக்கு வெற்றி தருவதாகும். பகைவரால் துன்புறுத்தப்பட்ட நற்குண மிக்கோரைச் சாம தான உபாயங்களால் தன் வயப்படுத்திக்கொள்ளல் வேண்டும். தீயோரைத் தன் நாட்டினின்றும் வெளிப்படுத்தல் எப்பொழுதும் நலம் பயப்பதாகும். சுக

எப்பொழுதும் முயற்சி மேற்கொண்டு சாம தான உபாயங்களால் தன் குடிமக்களைக் காத்தல் வேண்டும். பேதோபாயத்தையும் தண்டோபாயத்தையும் அவர்பொருட்டு மேற்கொள்ளலாகாது. சுஉ

தன்கீழ் வாழுங் குடிகள்மாட்டுத் தண்டோபாயமும் பேதோபாயமுஞ் செய்யப்படுமாயின் தன் அரசியற்கு அழிவுண்டாம். ஆதலின், தன் குடிகள் மிக்க எளிமையுடையராகவும், மிக்க வலிமையுடையராகவும் இல்லாம லிருக்கும்வண்ணம் அவரை எப்பொழுதுங் காத்தல் வேண்டும். சுரு

உயிர்த் தொகுதிகள் தீய ஒழுக்கங்களினின்று மீளுதலும் அடங்கி நடத்தலும் தண்டோபாயத்தினாலே யாம். ஆதலின், எவ்வுபாயத்தினாலே உயிர்த் தொகுதிகள் நன்கு அடக்கப்படுகின்றனவோ, அதுவே தண்டோபாய மென்று கூறப்படும். சச

அரசன் எல்லோர்க்குந் தலைவனாதல் தண்டத்தினால் ஆதலின் அத்தண்டோபாயம் அரசனுக்கு மிகவும் உரிமையுடையதாம். சரு

## ங. தண்டத்தின் வகையும் பயனும்.

கடுஞ் சொற் கூறி விலக்கல், மானக்கேடு செய்தல், உணவின்றி யிருக்கச்செய்தல், தளையிட்டுச் சிறைப்படுத்தல், அடித்தல், பொருள் கவர்தல், நகரத்தினின்றும் வெளிப்படுத்தல், உடலில் என்றும் நிலைத்திருக்கும் அடையாளமிடுதல், மாறுபட மழித்தல், கழுதை முதலிய தீய ஊர்திகளிலேற்றிப் போக்கல், கை கால் முதலிய உறுப்புக்களைக் குறைத்தல், கொலைபுரிதல், பொருதல் ஆகிய இவைகளெல்லாம் தண்டோபாயத்தின் வகைகளாகக் கூறப்படுவனவாம். சசு-சஎ

தண்டோபாயத்தாற் குடிகள் அறத்திற் பற்றுடையராவர்; எளியவரைத் துன்புறுத்துதலையும் பொய் கூறுதலையும் மேற்கொள்ளார். இன்னும் அவ்வச்சத்தானே வன்கண்ணர் அருளுடைய ராவர்; தீயவர் தீங்கினை யொழிப்பர்; பசுக்கள் வயப்படுவனவாம்; கள்வர் சேய்மைக்கண் ஓடுவர்; குறளை கூறுவோர் வாய்வாளாதிருப்பர்; ஆததாயிகள் அச்சமெய்துவர்; அரசிறை கொடாதவர் அவ் இறைப் பொருளைக் கொடுப்பர்; மற்றையோர் மிகவும் நடுங்குவர். ஆதலின், அரசன் அறத்தைக்காத்தற்பொருட்டு எப்பொழுதுந் தண்டத்தை மேற்கொள்ளல் வேண்டும். சஅ-ருo

செய்யத்தக்கன வின்ன தகாதன வின்ன வென்று அறியாமற் செருக்குற்று நெறிபிழைத் தொழுகுவோன் குருவாயினும் அவனுக்குத் தண்டம் செயற்பாலதாம். ருக

அரசர்களுக்குத் தண்டத்தோடுங் கூடிய நீதியினாலேயே எல்லாக் காரியங்களும் நிறைவேறுகின்றன. ஆதலின், அறங்கள் எல்லாவற்றிற்கும் தண்டமே சிறந்த புகலிடமாக எண்ணப்படும். ருஉ

வேதத்திற் கூறியபடி வேள்வியிற் பசுக்கொலை புரிதல் கொலைத் துன்பம் ஆகாதவாறு போல, தீயவர்களைத் தண்டத்தால் ஒறுத்தல் துன்பஞ் செய்ததாகா தென்பதாம். ருங

ஒறுத்தற்குரிய குற்ற முடையாரை ஒறுமல் விடுதலும், ஒறுத்தற்குரிய குற்ற மில்லாதவரை ஒறுத்தலும், அளவின் மிக ஒறுத்தலு முடைய வேந்தனை விட்டு அறிவுடையார் விலகுவர். அவ்வேந்தன் தீவினையாளனு மாவன். ருச

மக்கள் தானதருமங்களிற் பற்றுடைய ராதற்பொருட்டுச் சிறு கொடையாற் பெரும் பயன் விளையுமென்று முனிவரரால் அறநூல் களிற் கூறப்பட்டது. அங்ஙனமே உலகத்துள்ள மக்கள் அச்ச முற்று நன்னெறிக்கண் ஒழுகுதற்பொருட்டு நூன்முறைப்படி தண்டஞ் செய்தலாற் பெரும் பயன் விளையுமென்பதுங் கூறப்பட்டுளது. ருரு

பரிமேத முதலிய வேள்விகளானும் புண்ணியம் தோத்திரபா டங்களான் எங்ஙனமுண்டாம்? பொறுமையினுலுண்டாம் புண்ணியம் தண்டமிடுதலா லெங்ஙனமுண்டாம்? (உண்டாகா தென்றபடி.) ருசா

தன்கீழ் வாழுங் குடிகளைத் தண்டித்தலால் அரசனுக்கு எங்ஙனம் நலமுண்டாகும்? அக்குடிகளைத் தண்டித்தலால் அரசனுடைய புகழ் பொருள் புண்ணியமாகிய இவைகளுக்கு அழிவுண்டாம். ருஎ

கிருதயுகத்தில் அறம் நிறைவுற்றிருந்தமையால், அரசனுக்குத் தண்டம் அறவே வேண்டாததாயிற்று. திரேதாயுகத்தில் குடிகள் காற் கூறு அதன்ம முடையரா யிருந்தமையால், அரசன் தண்டத்தை முற்றும் மேற்கொள்ளவேண்டியதாயிற்று. துவாபரயுகத்தில் அரைக் கூறு அறமுடைமையான், முக்காற்கூறு தண்டம் விதிக்கப்பட்டுளது. கலியுகத்தில் அரசன் முறை பிறழ்ந்து ஒழுகுதலானும், அதனாற் குடிகள் பொருளற்று வறியவராயிருத்தலானும் அரைக்கூறு தண்டம் விதிக்கப்பட்டுளது. ருஅ-ருகூ

உலகத்துமக்களை அறத்தினும் மறத்தினும் ஆணையிட்டு நடத்துபவன் அரசனாதலின், அவனே கிருதயுக முதலியயுகங்களையும் நடத்துபவனுவான். ஆதலின் தீங்கு நிகழ்தற்குக் காரணம் யுகங்களின் குற்றமுமன்று; குடிகளின் குற்றமுமன்று; அரசனது குற்றமேயாம். கூ0

---

ருஅ-ருகூ. அறம் முக்காற்கூறு நிலைபெறும் இரண்டாம் யுகத்தில் மக்கள் தீங்கு செய்தல் பெரிதுந் தவறுடைத்தாதலின் அது நோக்கி முழுத்தண்டம் விதிக்கப்பட்டுளது. மூன்றும் நான்காம் யுகங்களிலும் இக்கருத்துப்பற்றியே முக்காற்கூறு அரைக்கூறு தண்டங்கள் விதிக்கப்பட்டன வென்பதும் உய்த்துணரற்பாற்றும்.

எச் செயல் கண்டு அரசன் மகிழ்ச்சி யெய்துகின்றானோ, அச் செயலையே அவாவினாலும் அச்சத்தினாலும் குடிகள் மேற்கொண்டொழுகுவர். அங்ஙனமாயின், அரசன் ஆணையிட்டுரைத்த தொன்றைக் குடிகள் எங்ஙனம் மேற்கொள்ளாதிருப்பர்? சுக

எந்நாட்டில் அரசன் அறமுடையனாக வுள்ளானோ, அந்நாட்டிற் குடிகளும் அறமுடையராவர். எந்நாட்டில் அரசன் பெருந் தீவினையாளனாக வுள்ளானோ, அந்நாட்டிற் குடிகளும் தீவினையாளராவர். சுஉ

அரசன் அறமுடையோ னல்லாக்கால் மழை உரிய காலத்திற் பெய்யாது; நிலம் பெரும் பயன் விளைக்காது; அரசியற்குக் குறைவும், பகைவர்க்கு ஆக்கமும், பொருட்கு அழிவும் உண்டாவனவாம். சுங

அரசன் கட்குடித்தலால் இழிந்தவனாகான்; மகளிர்காமத்தாலும் கடுஞ்சினத்தாலும் இழிவுடையோனாவன். கடுஞ்சின முடைய வேந்தன் குடிகளை மிகவுந் துன்புறுத்துபவ னாவான். மகளிர்பாற் காம முடைய அரசன், கலப்புச் சாதிகளை யுண்டுபண்ணுதலால் அந்தணர் முதலிய சாதிகளைக் கெடுப்பவ னாவான். கட் குடிப்போன் தானொருவனே அறிவொழுக்கங்களிற் பிறழ்வன். (குடிகளைப் பிறழ்விப்பானல்லன்.) காமம் வெகுளி இவ்விரண்டும் அறிவை மயக்கும் பொருள்களெல்லாவற்றுள்ளும் மிகவுஞ் சிறந்தனவாம். (ஆதலின் கள்ளினுங் கொடியன காமம் வெகுளிகள் என்பது போதரும்.) சுச-சுரு

அரசன் மிக்க உலோபத்தாற் குடிகளின் பொருளையும் உயிரையும் கவர்பவனாவான். ஆதலின், வேந்தன் காமம் வெகுளி உலோபமாகிய இம் மூன்றனையும் ஒழித்துத் தண்டத்தைத் தாங்குவோனாக இருத்தல் வேண்டும். சுசு

அரசன் உள்ளத்தே இரக்கமும் புறத்தே வன்கண்மையு முடையனாய்த் தன் குடிகளை ஒறுத்தல் வேண்டும். இயற்கையாகவே உயிர்களுக்குத் தீங்கு செய்வோரைக் குறித்து அரசன் மிகக் கொடுந் தண்டம் செய்பவனை யொப்ப இருத்தல் வேண்டும். சுஎ

இயற்கையாகவே குறளைகூறுவோரால் அரசியற்கு என்றுங் கேடு விளைவதாகும். ஆதலின் அரசன் குறளைகூறுவோரால் அறிவிக்கப்படினும், செய்யத்தக்க காரியங்களை முயன்று ஆராய்ந்து செய்தல் வேண்டும். சுஅ

---

சுசு. உலோபம் - ஈண்டுப் பிறர் பொருட்கட் செல்லும் பேரவா.

தலையாய அரசன் தன்னுடையனவும் குடிகளுடையனவு மாகிய குற்றங்களைக் காண்பவனாவான். ஆதலின் அவ்வரசன்முதலிற் றன்னை யும், அதன்பின் அமைச்சர் முதலிய வினைசெய்வாரையும், அதன் பின் குடிகளையும் நன்கு அடக்கி ஆளுதல் வேண்டும். சுசுக

ச. குற்றங்களும் அவற்றிற் குரிய தண்டங்களும்.

உடலைப் பற்றியதும், மொழியைப் பற்றியதும், மனத்தைப்பற்றி யதும்,சேர்க்கையாலாவதும் எனக் குற்றம் நான்கு வகைப்படும். அஃது அறிந்து செய்தல் அறியாது செய்தல் எனப் பின்னும் இரண்டு வகைப்படும். எ0

அக்குற்றம் செய்விக்கப்படுவது, உடன்பட்டு மகிழ்வது என மீண்டும் இருவகையாகவும், ஒருமுறை செய்யப்படுவது, பன்முறை செய்யப்படுவது, செயற்கையிற் செய்யப்படுவது, இயற்கையிற் செய் யப்படுவது எனப் பின்னரும் நான்குவகையாகவும் கூறப்படும். எக

கண் முகம் முதலியவற்றின் விகாரத் தோற்றங்களான் மனத் தின்கண் நிகழுங் குற்றத்தையும், செயலால் உடலின்கண் நிகழுங் குற்றத்தையும், கடுஞ்சொற்களாற் சொல்லின்கண் நிகழுங் குற்றத் தையும், உடன்பழகுவோரால் சேர்க்கையால் நேருங் குற்றத்தையும் உணர்ந்து, அவற்றின் வன்மை மென்மைகளைச் சீர்தூக்கி, நிகழ்ந்தன வும் நிகழ்வனவு மாகிய தீவினைகளுக்குத் தக்கவாறு தண்டம் செய்தல் வேண்டும். எஉ-எங

தலையாயோன் கடையாய குற்றம் புரிவானாயின், அவன் பிரதம சாகச தண்டத்திற் குரியனாவன். அன்றி முதலில், "இத் தீச்செயல் நீ செய்ததன்றே; இங்ஙனஞ் செய்தல் அறமாகுங் கொல்?" என்று வினவி ஒறுத்துரைத்தற்கும், அதன் பின்னரும் அக்குற்றத்தைச் செய்வானாயின் முற்கூறியாங்குப் பிரதம சாகச தண்டத்திற்கும்,

---

எச இ. சாகசமென்பது ஈண்டுத் தண்டப் பணத்தின் அளவைக் குறிப்ப தாகும். இது பிரதமசாகச மெனவும், மத்திமசாகச மெனவும், உத்தமசாகச மெனவும் மூன்றுவகைப்படும். இவற்றின் பணஅளவு முதலியவற்றை இப்பிர கரணத்தின் ககங-ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க. முதனூலில் இது முதல் அஎ - ஆம் சுலோகம்வரை குற்றங்களையும் அவற்றிற்குரிய தண்டங்களை யும் "ஸாஹஸம்" என்னும் ஒரு சொல்லாற் குறிப்பிடுவர். 'அன்றி' எனத்

அதன் பின்னரும் அக்குற்றத்தையே செய்வானாயின் குற்றத்திற்குத் தக்கவாறு அப் பிரதம சாகசத்தின் இருமடங்கு மும்மடங்கு தண்டங்களுக்கும் உரியனாவான் என்பதுமாம். எசஇ

தலையாயோன் இடையாய குற்றம் புரிவானாயின், அவன் மத்திம சாகச தண்டத்திற் குரியனாவன். அன்றி, முதலில் இகழ்ந்துரைத்தலாகிய சொல்லளவுத் தண்டத்திற்கும், அதன்பின் பிரதம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னரும் அக் குற்றத்தைச் செய்வானாயின் முற்கூறியாங்கு மத்திம சாகச தண்டத்திற்கும், அதன் பின்னருஞ் செய்வானாயின் குற்றத்தின் மிகுதிக் கேற்ப மிக்க தண்டத்திற்கும் உரியனாவான் என்பதுமாம். எசு

தலையாயோன் தலையாய குற்றம் புரிவானாயின், அவன் உத்தம சாகச தண்டத்திற்குரியனாவன். அன்றி, முதலிற் பிரதம சாகச தண்டத்திற்கும், அதன்பின் மத்திம சாகச தண்டத்திற்கும், அதன்பின் முற்கூறியாங்கு உத்தம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னரும் அக்குற்றத்தைச்செய்வானாயின் அவ் வுத்தம சாகச தண்டத்தின் இருமடங்கு தண்டத்திற்கும், சிறைப்படற்கும் உரியனாவான் என்பதுமாம். எஎ-எஅ

அறிந்து செய்யும் மனிதக்கொலை யல்லாத பிற குற்றங்களுக்கே இங்குக் கூறிய பிரதம சாகச முதலிய தண்டங்கள் விதிக்கப்பட்டுள என. எகூ

இப் பிரகரணத்திற் கூறப்படும் தலையாயதன்மை இடையாய தன்மை கடையாயதன்மைகள் முக்கியமாகக் குணத்தாலும் குலத்தாலும் பொருளாலு மாம். அ0

இடையாயோன் கடையாய குற்றம் புரிவானாயின், அவன் பிரதம சாகச தண்டத்திற் குரியனாவான். அன்றிமுறையே இகழ்ந்துரைத்தலாகிய சொல்லளவுத் தண்டத்திற்கும், அரைக்கூறு தண்டத்திற்கும், முழுத்தண்டத்திற்கும், பின்னரும் அக்குற்றத்தையே செய்வானாயின் குற்றத்திற்குத் தக்கவாறு பிரதம சாகசத்தின் இருமடங்கு மும்மடங்கு தண்டங்களுக்கும், அதன்பின் சிறைப்படற்கும், இழிதொழில் புரிதற்கும் உரியவனாவான் என்பதுமாம். அகஇ

---

தொடங்கிக் கூறுவன கொள்கை வேறுபாடாகும். இங்ஙனமே பின்னரும் இவ்வாறு 'அன்றி' எனத் தொடங்கிக் கூறப்படுவன வெல்லாவற்றையுங் கொள்க.

இடையாயோன் இடையாய குற்றம்புரிவானாயின், மத்திம சாகச தண்டத்திற்குரியனாவான். அன்றி, முதலிற் பிரதம சாகச தண்டத்திற்கும், அதன்பின் முற்கூறியாங்கு மத்திம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னருஞ் செய்வானாயின் அம்மத்திம சாகச தண்டத்தின் இருமடங்கு தண்டத்திற்கும், அடித்தொறுத்தல், விலங்கிடல், உடலின்கண் என்றும் நிலைத்திருக்கும் குற்ற அடையாளமிட்டு நகரத்தினின்றும் வெளிப்படுத்தலாகிய தண்டங்களுக்கும் உரியனாவான் என்பதுமாம். அ௨-இ

இடையாயோன் தலையாய குற்றம் புரிவானாயின், அவன் உத்தம சாகச தண்டத்திற் குரியனாவான். அன்றி, முதலில் மத்திம சாகச தண்டத்திற்கும், அதன் பின் முற்கூறியாங்கு உத்தம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னரும் அக்குற்றத்தைச் செய்வானாயின் அவ்வுத்தமசாகச தண்டத்தின் இருமடங்கு மும்மடங்கு மிக்க தண்டங்களுக்கும், அதன்பின் வாழ்நாள்காறும் தளை பூண்டு சிறைப்படற்கும் உரியனாவான் என்பதுமாம். அ௩-இ

கடையாயோன் கடையாய குற்றம் புரிவானாயின், அவன் பிரதம சாகச தண்டத்திற் குரியனாவான். அன்றி, முதலில் அப்பிரதம சாகச தண்டத்தின் அரைக்கூறு தண்டத்திற்கும், அதன்பின் முற்கூறியாங்குப் பிரதம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னரும் அக்குற்றத்தைச் செய்வானாயின் அப்பிரதம சாகசத்தின் இருமடங்கு மும்மடங்கு மிக்க தண்டங்களுக்கும் தளை பூண்டு சிறைப் படற்கும் உரியனாவான் என்பதுமாம். அச-இ

கடையாயோன் இடையாய குற்றம் புரிவானாயின், அவன் மத்திம சாகச தண்டத்திற் குரியனாவான். அன்றி, முதலில் பிரதமசாகச தண்டத்திற்கும், அதன்பின் முற்கூறியாங்கு மத்திம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னரும் அக்குற்றத்தைச் செய்வானாயின் அம் மத்திம சாகசத்தின் இருமடங்கு தண்டத்திற்கும் சிறைப்பட்டு நாடோறும் தெருவலகிடன் முதலிய இழிதொழில் புரிதற்கு முரியனாவான் என்பதுமாம். அரு-இ

கடையாயோன் தலையாய குற்றம் புரிவானாயின், அவன் உத்தம சாகச தண்டத்திற் குரியனாவான். அன்றி, முதலில் மத்திம சாகச தண்டத்திற்கும், அதன்பின் முற்கூறியாங்கு உத்தம சாகச தண்டத்திற்கும், அதன்பின்னரும் அக்குற்றத்தைப் புரிவானாயின் அவ்வுத்

தம சாகசத்தின் இருமடங்கு தண்டத்திற்கும் வாழ்நாள்காறும் தளை பூண்டு சிறைப்பட்டு இழிதொழில்களையே செய்தற்கும் உரிய னுவான் என்பதுமாம். அரு-அஎ

ஒருவன் பொருட்செருக்கால் தீங்கு புரிவானாயின், முதன் முறை அவன் பொருளினின்றுங் கால்கூறு கோடலும், இரண்டா முறை அரைக்கூறு பொருள் கோடலும், மூன்றாமுறை அவன் பொருண் முழுதுங் கோடலும் அவனுக்குச் செய்யுந் தண்டங்க ளாம். அதன்மேலுங் குற்றம் புரிவானாயின் அவனை வாழ்நாள் காறும் விலங்கிட்டு ஒறுத்தல் வேண்டும். அஅ

வலிய துணையுடைமையானாதல், கல்விச்செருக்கானாதல், உடல் வலிமையானாதல் தீங்குபுரிவாரை எப்பொழுதும் விலங்கிட்டுச் சி றைப்படுத்தியும் அடித்தும் தண்டித்தல் வேண்டும். அசு

ஒருவன் தன்மனைவி, புதல்வர், உடன்பிறந்த பெண்கள், மாணாக் கர், ஏவலாளர், மருமகள், தம்பி ஆகிய இவர்கள் குற்றஞ் செய்யின், அவர்களைச் சிறிய கயிற்றினாலும் சிறு மூங்கிற்கோலாலும் அவர்தம் உடலின் பின்புறத்தில் அடிக்கலாம். ஒருபொழுதும் தலைக்கண் அடித் தலாகாது. இங்ஙனமன்றி வேறுவிதமாக அடிப்பானாயின் அவன் கள்வனை யொப்ப அரச தண்டத்திற் குரியனாவான். சுO-சுக

குற்றம் புரிவாரை ஒரு திங்களாதல், மூன்று திங்களாதல், ஆறு திங்களாதல், ஓராண்டாதல், வாழ்நாள்காறுமாதல் விலங்கிட்டுச் சிறைக்கோட்டம் புகுவித்து இழிதொழில் செய்யும்படி தண்டிக்க லாம். அவருள் எவனும் கொலைத் தண்டத்திற் குரியனாகான். சுஉ

**உயிர்களைக் கொலை செய்தலாகா தென்று வேதங்கள் வற்புறுத்திக் கூறுகின்றன.** ஆதலின், அரசன் எவ்வாற்றானு முயன்று கொலைத் தண்டத்தை ஒழித்தல் வேண்டும். சுரு

குடிகள் குற்றம் புரிவராயின் அவரை அரசன் சிறைப்படுத்தி யும் விலங்கிட்டும் அடித்தும் ஒறுத்தல் வேண்டும். உலோபத்தால் அவர்தம் பொருளைக் கொள்ளுதலாகிய தண்டம் செய்து துன்புறுத் தலாகாது. சுச

---

**சுரு. ஈண்டுக் கொலைத்தண்டத்தை ஒழித்தல் வேண்டு மென்பது அறிந்து செய்த மனிதக்கொலை யல்லாத பிற குற்றங்களுக் கென வுணர்க. இதனை எக- ஆம் சுலோகக் கருத்தானும் சஎ-ஆம் சுலோகத்தில் தண்ட பேதங்களுள் ஒன் றாகக் கொலையையுங் கூறினமையாலும் உய்த்துணர்க.**

ஒருவன் குற்றம் புரிவானாயின், அவனுக்குத் துணை செய்யா அவன் தந்தை முதலியோர் அக்குற்றங் குறித்துத் தண்டிக்கற்பால ரல்லர். இங்குக் கூறிய தண்ட ஒழுங்குகள் பொறுமைமிக்க அரச னாற் கொள்ளற்பாலனவாம். ௬௫

எப்பொழுது அரசன் குடிகள் செய்யுங் குற்றங்களைப் பொறுத் துக்கொள்ளாமல் அவர்க்குக் கடுந் தண்ட மிடுதலையும், அவர்தம் பொருளைக் கவர்தலையும் மேற்கொள்ளுகின்றனனோ, அப்பொழுது அக்குடிகள் அரசன்பாற் பற்றொழிந்து கலக்க மெய்துவர்; அவ்வா சனுடைய பகைவராலும் வேறுபடுக்கப்படுவர். ௬௬

ஆதலின், அரசன் நன்கு ஆராய்ந்து தண்டிப்பவனாகவும், பொறு மையாளனாகவும், குடிகளால் விரும்பப்படுபவனாகவும் இருத்தல் வேண்டும். ௬௭

கட்குடிப்போன், சூதாடுவோன், கள்வன், பிறர்மனை நயப்போன், கடுஞ்சினமுடையான், உயிர்களைத் துன்புறுத்துவோன், வருணாச்சி ரம தருமங்களை யிழந்தோன், நாத்திகன், கீழ்மகன், பிறர்பாற் பொய்ப் பழி சுமத்துவோன், குறளை கூறுவோன், பெரியோரையும் கடவுள ரையும் பழித்துரைப்போன், பொய்பேசுவோன், அடைக்கலப் பொ ருளைக் கவர்வோன், மற்றொருவன் பிழைப்பிற்குக் கேடு செய் வோன், பிறர் செல்வ முதலியனகண்டு பொறாதவன், கைக்கூலி பெறு தலில் அவாவுடையான், தகாதன செய்வோன், மந்திராலோசனைகளுக் கும் காரியங்களுக்குங் கேடு விளைவிப்போன், வெறுக்கத்தக்க சொற்க ளைப் பேசுவோன், கடுஞ்சொற் கூறுவோன், நீர்நிலைகளுக்கும் பூஞ் சோலைகளுக்குங் கேடு செய்வோன், * வீண்குறி சொல்லுவோன், அர சனுடைய பகைவன், இழிந்த அமைச்சன், வஞ்சகச்செயல்களை யி ழிந்து செய்வோன், இழிந்தமருத்துவன், அமங்கலசீலன், தூய்மையில் லாதவன், வழிகளைத் தடைசெய்வோன், பொய்ச்சான்று கூறுவோன், செருக்குமிக்க வேடமுடையோன், தலைவனுக்குத் தீங்கு புரிவோன், பொருளை மிகுதியாகச் செலவுசெய்வோன், இல்ல முதலியவற்றில் தீயிடுவோன், நஞ்சிடுவோன், விலைமகளிர்பால் மிக்க விருப்புடையோன், கடுந்தண்டமிடும் அரசியல் வினைசெய்வோன், மன்றோரஞ் சொல்லு வோன், வலிந்து பொய்ப் பத்திரம் எழுதிவாங்குவோன், நடுநிலை

---

* வீண்குறி சொல்லுவோன் - சோதிடம் தெரிந்துளேன் என்று பொய்ம் மையாக நடித்துக் குறிசொல்லிப் பிழைப்போன்.

பிறழ்ந்தோன், கலகப்பிரியன், போரில் விருப்பற்ற படைவீரன், அறிந்திருந்தும் சான்றுகூற ஒருப்படாதவன், தந்தைதாய் கற்புடைய மனைவி நண்பனாகிய இவர்க்குத் தீங்குசெய்வோன், அழுக்காறுடையான், தன் றலைவருடைய பகைவரை யடுப்போன், பிறர்க்கு உயிர்நிலை வேறுபடத்தக்க செயலைப் புரிவோன், வஞ்சகன், தன் சுற்றத்தாரை வெறுப்போன், மறைந்து தொழில்செய்வோன், அறத்திற்குக் கேடு விளைவிப்போன், கிராமங்களைத் துன்புறுத்துவோன், தன் குடும்பத்தைக் காவாமல் எப்பொழுதுந் தவத்திலுங் கல்வியிலும் பற்றுவைத் தொழுகுவோன், புல் விறகு முதலியன கொண்டு பிழைத்தற்கு ஆற்றவிருந்தும் இரந்துண்போன், பெண்ணை விற்றுப் பணம் வாங்குவோன், குடும்ப வாழ்க்கையிற் குறை செய்வோன், அறமில்லோன், உட்பகையுடையோன், அரசனுக்கு வரும் தீங்கைப் புறக்கணிப்போன், கற்பொழுக்க மில்லாத பெண், கணவனுக்கும் புதல்வர்க்கும் அழிவு செய்பவள், தன் விருப்பின்படி நடப்பவள், பெரியோராற் பழிக்கப்பட்டவள், வீட்டுக் காரியங்களைச் செய்யாது ஒழிந்தவள், எப்பொழுதும் தீயொழுக்க முடையவள், மருகியிடத்து அன்பில்லாதவள் ஆகிய இயற்கையாகவே பொல்லாங்குமிக்க இவர்களை அரசன் அறிந்து தன் னாட்டினின்றும் வெளிப்படுத்திவிடல் வேண்டும். ௯௮-௧0எ

முற்கூறிய கட்குடிப்போன் முதலிய இவர்களை அயற் றீவுகளி லிருக்கும்படி செய்தல் வேண்டும்; அன்றிச் சிறைக்கோட்டத்துட் புகுத்தி விலங்கிட்டு இழிந்த உணவைக் குறைந்த அளவிற் கொடுத்து உண்பித்துத் தெருவலகிடன் முதலிய இழிதொழில்களைப் புரியும்படி நியமித்தலும் பொருந்தும். ௧0அ

அரசன் முற்கூறிய கட்குடித்தல் முதலிய குற்றம் புரிந்து சிறைப்பட்டாரை அவர்தம் சாதிக்குத் தக்கவாறு சிறைக்கூடத்திற் றொழில் செய்யும்படி நியமித்தல் வேண்டும். ௧0௯

அரசன் இத்தகைய தீயவர்களையும் அவர்தம் கூட்டுறவால் தீங்கெய்தினோரையும் தண்டித்து, எப்பொழுதும் அவரை நன்னெறிக் கண் ஒழுகுமாறு பயிற்றல் வேண்டும். ௧௧0

பகைவரின் சூழ்ச்சியால் அரசனுக்கும், நாட்டிலுள்ள குடிகளுக்கும், அமைச்சர் முதலிய அரசியல் வினைசெய்வார்க்கும் மாறுபாட்டுத்தன்மையை விரும்புவோரை' அரசன் விரைந்து அழித்துவிடல் வேண்டும். ௧௧௧

அரசன், ஒரு குழுவினர் தீங்கு புரிவாராயின் அக் குழுவினரை ஓரே காலத்தில் ஒருங்கு அழித்துவிட விரும்பலாகாது. ஒரு குழந்தை பாலுண்ணுங்கால் தனத்தை ஒவ்வொன்றாகப் பற்றி உண்ணுதல் போல, அரசனும் அத்தீயோரை முறையே ஒவ்வொருவராகப் பற்றி அழித்துவிடக் கடவன். ககஉ

எப்பொழுது அரசன் அறநெறி பிறழ்ந்து ஒழுகுகின்றானோ, அப்பொழுது குடிகள், மிக்க வலிமை வாய்ந்து அறநெறிக்கண் ஒழுகும் பகையரசனைச் சார்ந்து, அச் சார்பினால் தம் அரசனை என்றும் அச்சுறுத்தக் கடவர். ககங

அரசன் அறமுடையனா யிருக்குங்காறும் அரசனாகவே வாழ்வன். அன்றி அறநெறி பிறழ்ந்து ஒழுகுவானாயின், உலகமுங் கேடெய்தும்; அவ் வரசனும் விரைந்தழிவெய்துவான். ககச

எவன் தன் தந்தை தாய் மனைவி யாகிய இவர்களைக் காவாமல் விட்டுத் தன் விருப்பின்வண்ணம் திரிகின்றானோ, அவனைக் கால் விலங்குகளாற் பிணித்துத் தெருவலகிடன் முதலிய தொழில்களில் நியமனஞ் செய்தல் வேண்டும். அவனுக்குரிய கூலியிற் பாதியை முயன்று பிடித்து அவன் தந்தை முதலியோர் பொருட்டு அரசன் கொடுத்தல் வேண்டும். ககரு

ஆயிரம் பணங் கொண்டது உத்தம சாகச மென்னுந் தண்டமாகும். அரசியன் முத்திரை யிடப்பட்டதும் பத்து மாட எடை கொண்டது மாகிய செம்பு பணம் என்னும் பெயருடையதாகும். அப் பணம் ஒன்று நூற்றைம்பது பலகறைகளின் விலையாகவும் அது காருடாபணம் என்னும் பெயருடையதாகவும் அறியப்படும். ககசு

அவ்வுத்தமசாகசத்தின் பாதியாகிய ஐந்நூறு பணம் மத்திம சாகசமெனவும் அம் மத்திம சாகசத்தின் பாதியாகிய இருநூற் றைம்பது பணம் பிரதம சாகச மெனவும் முறையே பெயர்பெறும். கடையாய குற்றத்திற்குப் பிரதம சாகச தண்டம் உரியதாகும். அங்ஙனமே மற்றையவற்றிற்கும் கொள்ளப்படும். ககஎ

---

ககசு-ககஎ. இவ்விரண்டு சுலோகங்களிலுங் கூறப்பட்ட தண்டப்பணங்களின் அளவுகளை மநுஸ்மிருதி அ - ஆம் அத்தியாயம் கங்அ - ஆம் சுலோகத்திலுங் காண்க. அச் சுலோக மொழிபெயர்ப்பு வருமாறு:— "இருநூற்றைம்பது பணம் பிரதம சாகச மெனவும், ஐந்நூறு பணம் மத்திம சாகச மெனவும், ஆயிரம் பணம் உத்தம சாகச மெனவும் எண்ணப்பட்டன."

இடையாய குற்றத்திற்கு மத்திம சாகச தண்டத்தையும், தலையாய குற்றத்திற்கு உத்தம சாகச தண்டத்தையும், அரசன் மேற்கொள்ளல் வேண்டும். மிச்சிரமென்னும் இந் நான்காம் அத்தியாயத்தினுள்ள முதற் பிரகரணமாகிய இதன்கண் நட்டார் பகைவர் நொதுமலராகிய இவர்கள்பாற் சாம தான பேத தண்டோபாயங்களை மேற்கொள்ளு முறை இத்துணையுங் கூறப்பட்டதாம். ௧௧௮

சுக்கிரநீதி நான்காம் அத்தியாயத்தில்,
" நண்பர் முதலியோரின் இலக்கணங்கள் " என்னும்
முதற் பிரகரணம் முற்றிற்று.



## இரண்டாம் பிரகரணம்.
(கோச நிரூபணம்.)

### ௧. கருவூலம் அமைக்கு முறை.

இனி மிச்சிரமென்னும் இந்நான்காம் அத்தியாயத்திற் கருவூலத்தைப் பற்றிய இரண்டாம் பிரகரணத்தைக் கூறுவேன். ஒரு சில பொருளின் கூட்டமே கருவூலமாகும். அது தனித்தனியாக எண்ணுங்கால் பல்வேறு வகைத்தாம். ௧

அரசன் எவ்வழியாலேனும் பொருளை யீட்டல் வேண்டும். அங்ஙனம் ஈட்டிய பொருளால் தன் நாட்டினையும், படைகளையும், வேள்வியினை முதலியவற்றையும் காத்தல் வேண்டும். ௨

படைகளையும், குடிகளையும், வேள்வி முதலியவற்றையுங் காத்தற்பொருட்டுச் சேர்க்கப்படுங் கருவூலமே அரசனுக்கு இம்மை மறுமைகளில் இன்பம் விளைவிப்பதாகும். இங்ஙனமல்லாது சேர்க்கப்படுங் கருவூலம் துன்பந் தருவதாகும். ௩

தன் மனைவி மக்கள் பொருட்டும், தான் இன்பம் நுகர்தற் பொருட்டுமே கருவூலம் சேர்க்கப்படுமாயின், அது மறுமைக்கண் நலந்தருவதன்று; நரகத்திற்கும் உரியதாகுமென்று அறியப்படும். ௪

ஒருவன் மற்றொருவனிடத்தினின்றும் நியாயமின்றிப் பொருளை யீட்டுவானாயின், அவன் அங்ஙனம் ஈட்டப்பட்டோனது பாவத்தையடைவான். சற்பாத்திரமாயினாரிடத்தினின்றும் வாங்கப்பட்டதும்

அவர்பொருட்டுக் கொடுக்கப்பட்டதுமாகிய பொருளே வளர்ச்சி யெய்துவதாகும். ரு

பொருளை அறத்தாறீட்டி அவ்வழியே செலவிடுவோனே சற்பாத்திரமாவான். அங்ஙனமன்றித் தீயவழியான் ஈட்டி அவ்வழியே செலவிடுவோன் அபாத்திரமாவான். அரசன் அபாத்திரமாவானது பொருள் முழுதையுங் கவர்ந்துகொள்ளலாம். அதனால் அவன் குற்றமுடையனாகான். சு

அரசன் மறநெறிக்கண் ஒழுகுவோனிடத்தினின்றும் அவன் பொருளை எல்லாவழியாலுங் கவர்ந்துகொள்ளலாம். அங்ஙனமே பகைவர்நாட்டினின்றும் அவர் தம்பொருளையும் வஞ்சத்தாலும், வலிமையாலும், களவுத்தொழிலாலும் கவர்ந்துகொள்ளலாம். எ

எவ்வரசன் நீதிமுறையைக் கைவிட்டுத் தன் குடிகளைத் துன்புறுத்தி, அவர்தம் பொருளைக் கவர்கின்றானோ, அவனுடைய அப்பொருள் அவன் இராச்சியத்தோடு பகைவர்வயமாய்விடும். அ

அரசன் தனக்குத் துன்பம் நேராத காலத்தில் தண்ட வருவாயையும், நிலக்கூற்றின் வருவாயையும், சுங்கவருவாயையும் மிகைப்படுத்தி அப்பொருள்களாலும், புண்ணியதலம் தேவாலயங்களின் காணிக்கைப் பொருள்களாலும் தன் கருவூலத்தை நிறைக்க எண்ணலாகாது. கூ

பகைவரை யழித்தற்பொருட்டுப் படைகளைப் பெருக்கிக் காக்க முயலுங்கால், குடிகளிடத்தினின்றும் தண்டம் சுங்கம் முதலிய இறைப்பொருள்களை மிகைப்படுத்தி வாங்கலாம். ௧௦

அரசன் தனக்குத் துன்பம் நேர்ந்துழித் தன் குடிகளுட் பொருள்மிக்காரிடத்தினின்றும் வட்டி தருவதாகக் கூறி அவர்தம் பொருளைப் பெற்றுக்கொள்ளலாம். பின்னர் அத்துன்பம் தீர்ந்துழி அப்பொருளை வட்டியோடு அவ்வுரியாரிடத்துக் கொடுத்துவிடல் வேண்டும். ௧௧

அரசன் இங்ஙனம் பொருள் கொண்டு படைகளைக் காத்திலனேல், மிகப் பெருந் தண்டத்தையுடைய பகைவனால் தானுங் கேடெய்துவன்; குடிகளும் அரசியலும் கருவூலமும் அழிவெய்து

---

கூ. துன்பம் நேர்ந்துழி அப்பொருள்களாற் கருவூலத்தை நிறைக்கலாமென்பது கருத்து.

னவாம். சுரதன் முதலிய அரசர்களும் இங்ஙனமே தம் படைகளைக் காவாது மிகப் பெருந்தண்டத்தையுடைய பகைவரால் அழிவெய் தினர். கஉ

அரசன் தண்டவருவாய், நிலக்கூற்றுவருவாய், சுங்கவருவாய் ஆகிய இவைகள் இல்லாமலே இருபது யாண்டுவரை தன் படைகளை யும் குடிகளையும் நன்கு காத்தற்குத் தக்க பொருட் கருவூலத்தைச் சேர்த்துவைத்தல் வேண்டும். கங

கருவூலம் படைகளை மூலமாக வுடைத்தாம்; படைகளும் கரு வூலத்தை மூலமாக வுடையனவாம். படைகளை நன்கு காத்தலாற் கரு வூலம் அரசிய லாகிய இவற்றிற்கு ஆக்கமும், பகைவர்க்கு அழிவும் உண்டாம்; தன்குடிகளை நன்கு காத்தலால் அம் மூன்றனோடு மறுமை யின்பமும் உண்டாகும். கச-கரு

வேள்வியின்பொருட்டுப் பொருளும், இம்மை யின்பம், மறுமை யின்பம், வாழ்நாள்வளர்ச்சி யாகிய இவற்றின்பொருட்டு வேள்வி யும் உண்டாயினவாம். பகைவரின்மை, படை, பொரு ளாகிய இம் மூன்றும் அரசியல் வளர்ச்சிக்கு உரியனவாம். கசு

பொறுமைமிக்க அரசனுக்கு நீதியின் திறமையாற் பகைவ ரின்மை படை, பொரு ளாகிய இம் மூன்றும் வளர்ச்சி யெய்துவன வாம். ஆதலின், அவன் தன் அறிவின் வன்மைமிகுதிக்குத் தக்கவாறு அவற்றின்பொருட்டு முயலுதல் வேண்டும். கஎ

கஉ. சுரதன் - அழகிய தேரை யுடையவன்; இவன் சூரிய வமிசத்து அரசருள் ஒருவன்.

கச-கரு. கருவூலமும் படையும் ஒன்றுக்கொன்று துணையாகு மாதலின் இவ்வாறு கூறினர். படைகளைக் காத்தலாற் பொருள் அரசியல்களின் ஆக்கமும் பகைவரின் அழிவும் உண்டாம் எனவே இம்மை யின்பமும், குடிகளைக் காத்த லான் அறமுண்டாமாதலின் அதனோடு மறுமை யின்பமும் உண்டா மென்பது கருத்து.

கசு. ஒருவன் பொருள்படைத்தல், வேள்வி முதலிய நற் கருமங்களி னிமித்தமா மென்பது கருத்து. வேள்வி - ஐம் பெருவேள்வி முதலியன. இவற்றை வடநூலார் பஞ்ச மகாயாகம் என்ப. அவை: பிரமயாகம், தேவயாகம், மானுடயாகம், பிதிர்யாகம், பூதயாகம் என்பனவாம். அவற்றுள், பிரமயாகம்- வேதமோதல். தேவயாகம் - ஓமம் வளர்த்தல். மானுடயாகம் - விருந்தோம்பல். பிதிர்யாகம் - நீர்க்கடனாற்றல். பூதயாகம் - பலி யீதல்.

பூஞ்செடிகளை நன்கு வளர்த்து அவற்றினின்றுங் கிடைக்கும் மலர்களைப் பறித்து மாலை கட்டுவோனை யொப்பத் தன் குடிகளை யோம்பி அவரிடத்தினின்றுங் கிடைக்கும் இறைப்பொருளாலும், பகைவரை வணக்கி அவர் தருந் திறைப்பொருளாலும் தன் கருவூலத்தை நிறைக்கும் வேந்தன் தலையாய அரசனுவான். வாணிகத்தொழிலாற் றன் கருவூலத்தை நிறைவிப்பவன் இடையாய அரசனுவான். பிறர்க்கு வினைசெய்தலாலும், தண்டத்தாலும், புண்ணியதலம் திருக்கோயிற் காணிக்கைகளாலும் கிடைக்கும் பொருளாற் கருவூலத்தை நிறைவிப்பவன் கடையாய அரசனுவான். ௧௮-௧௯

அரசன் சுருங்கிய பொருளுடையாரும் நடுத்தரமான பொருளுடையாருமாகிய குடிகளை வேதன முதலியன கொடுத்து எப்பொழுதுங் காத்தல் வேண்டும். பெரும்பொருள் படைத்த தலையாய குடிகளைத் தலைமை அதிகாரிகளைப் போலப் பிரதிநிதிகளாக்கிக் காத்தல் வேண்டும். ௨0

சிறந்த பொருள்மிக்க செல்வர்கள் அரசர்க்குக் குறைந்தவருமாகார்; அரசரினு மிக்காருமாகார். (அரசரோ டொப்பாவரென்றபடி.) ௨௧

குடும்பக் காப்பின்பொருட்டுப் பன்னீராண்டுச் செலவிற்கு வேண்டிய அளவு நிறைத்துவைக்கப்பட்ட பொருள் கடையாயதாகும். பதினறு யாண்டுச்செலவிற்கு வேண்டிய அளவு நிறைத்துவைக்கப்பட்ட பொருள் இடையாயதாகும். முப்பது யாண்டுச் செலவிற்கு வேண்டிய அளவு நிறைத்துவைக்கப்பட்ட பொருள் தலையாயதாக எண்ணப்படும். அரசன் தனக்கு இடுக்கண் நேர்ந்தவிடத்து முற்கூறிய பொருளாளர்பால் அவர் தகுதிக்கேற்பத் தன் பொருளை வைத்துக் காத்தல் வேண்டும். ௨௨-௨௩

வணிகர்கள் ஓரோ வமயம் ஊதியங் கருதாமல் பண்டங்களின் மூலவிலை யளவிற் கொள்ளல் விற்றலைச் செய்வர். ஓரோ வமயம் விலையுயர்ந்திருக்குங்காற் பண்டங்களை விற்றலும், விலை குறைந்திருக்குங்காற் பண்டங்களைக் கொள்ளுதலுஞ் செய்வர். ௨௪

வாணிகத்தின்பொருட்டு வணிகர்களாற் றொகுத்துவைக்கப்படும் பண்டங்களை அரசன் ஒருபொழுதும் பொருள் கொடுத்தன்

---

௨௨-௨௩. முற்கூறிய பொருளாளர் ௨௧ - ஆம் சுலோகத்திற் கூறப்பட்டவர்.

றிக் கொள்ளலாகாது; பொருளின்றி வலிந்து கவர்ந்துகொள்ளுவா னாயின், அவன் குடிகளாகிய அவ்வணிகர்களின் மனக் கலக்கம் அவ் வரசனைக் குலத்தோடு அழித்துவிடும். உரு

உ. தானியங்களைத் தொகுத்து வைக்கு முறை.

அரசன் தன் நலத்தின்பொருட்டும், தன் நாட்டைக் காத் தற்பொருட்டும் மூன்று யாண்டுவரை செலவிடுதற்குப் போதிய அளவு தானியங்களை உரிய காலங்களிற் சேர்த்துத் தொகுத்துவைத் தல் வேண்டும்; செல்வமிக்கார் அம் மூன்று யாண்டினும் மிக்க காலத் திற்கு வேண்டிய அளவு தானியங்களைச் சேர்த்துவைத்தலும் நன் றென்ப. உசு

பருமை, ஒளி, உலர்ச்சி, மணம், நிறம், சுவை, நெடுநாட் கெடா திருத்தல் ஆகிய இவற்றை யுடைய உயர்ந்த சாதிப் புதிய தானியங் கள் மிக்க விலையுடையன வெனினும், அவற்றை நன்கு ஆராய்ந்து பார்த்து மிகுதியாக வாங்கி வைத்துக் காத்தல் வேண்டும். இக் குணங்க ளில்லாத தானியங்கள் குறைந்த விலைக்குக் கிடைப்பன வெனினும் அவற்றைக் கொள்ளலாகாது. உஎ

நஞ்சு, நெருப்பு, பனி, கீட மாகிய இவற்றாற் பற்றப்பட்ட தானி யங்களை வாங்கிவைத்தலாகாது. உள்ளீடற்ற தானியங்களைச் சேர்த்து வைக்காது செலவு செய்துவிடல் வேண்டும். உஅ

அரசன் செலவிடப்படும் தானியத்தின் அளவைப் பார்த்து அவ் வளவின் ஒத்த அளவு புதிய தானியங்களை ஆண்டுதோறும் நன்கு முயன்று வாங்கிச் சேர்த்துவைத்தல் வேண்டும். உகூ

தானியம், சுரங்கத்தினின்றும் எடுக்கப்படும் பொன் முதலியன, புல் விறகு முதலியன, எந்திரம் விடுபடை விடாப்படை நெருப்புத் துகள் பாண்ட முதலியன, ஆடை யாகிய இவற்றுள் கருவியாக உபயோகப்படுவனவற்றையும், காரியமாக உபயோகப்படுவனவற்

---

கூ0-கூக. ஓஷதி என்று மூலத்திலுள்ளது. ஓஷதி - ஒரு முறை காய்த்து அழியும் செடி முதலியன; அதன்கண் விளையும் தானியங்களுக் காம் என மொழிபெயர்க்கப்பட்டது. அது நோய் தணிக்கும் மருந்துக்குமாம். கருவியாக உபயோகப்படுவன—எந்திரம் படைக்கல முதலியன, காரியமாக உபயோகப் படுவன—தானியம் ஆடை முதலியன.

றையும் எப்பொழுதும் தொகுத்துவைத்தல் வேண்டும். அங்ஙனம் தொகுத்துவைத்தல் காரிய சித்தியை யளிப்பதாகும். ௩0-௩௧

ஈட்டப்பட்ட பொருள் முதலியவற்றை முயன்று நன்கு காத்தல் வேண்டும். பொருளை யீட்டுங்கால் உண்டாந் துன்பம் பெரிதாம்; அதனைக் காக்குங்கால் உண்டாந் துன்பம் அவ் வீட்டற் றுன்பத்தினும் நான்கு மடங்கு மிக்கதாகும். பொருள் காக்கப்படாது ஒரு கணப் பொழுதேனும் புறக்கணிக்கப்படுமாயின், அது விரைந்து அழிவெய்துவதாகும். ௩௨-௩௩

ஈட்டப்பட்ட பொருளின் இழப்பால் ஈட்டினவற்கு எத்துணைத் துன்ப முண்டாமோ அத்துணைத் துன்பம் அவன் மனைவி மக்கட்கும் உண்டாகாது. அங்ஙனமாயின் மற்றையோர்க்கு அதனுல் எங்ஙனம் துன்ப முண்டாம். ௩௪

ஒருவன் தன் காரியத்திற் சோம்பலுடையனாக இருக்குங்கால் அவனைச் சார்ந்த மற்றையோர் எங்ஙனம் சோம்பலின்றி இருப்பர்? (அவரும் சோம்பலுடைய ராவரென்றபடி.) எவன் தன் காரியத்திற் சோம்பலின்றி விழிப்புடையனாக விருக்கின்றானோ, அவனைப் பற்றி நிற்கும் துணைவரும் அவனை யொப்பக் காரியத்திற் கண்ணுடையராகவே இருப்பர். ௩௫

எவன் பொருளை யீட்டுமுறை தெரிந்தும், அங்ஙனம் ஈட்டப்பட்ட பொருளை நன்கு போற்றுமுறை தெரியாதிருக்கின்றானோ, அவனுடைய பொருளீட்டும் உழைப்புப் பயனின்றிக் கழிதலால் அவனினுஞ் சிறந்த முழுமகன் பிற னொருவனும் இலன். ௩௬

ஓரே அதிகாரத்தில் இருவரை அதிகாரிகளாக நியமிப்பவனும், உயிரோடிருக்கும் இரண்டு மனைவிமாரை யுடையவனும், யாவர்மாட்டும் நம்பிக்கை வைத்தொழுகுவோனும், மிக்க பொருட் பற்றுடையோனும், மடியாளனும், பெண்வழிச் சார்ந்தோனும், கள்வர் பிறர் மனை நயப்போர் ஆததாயிகள் என்னும் இப் பெருந்தீவினையாளரைக் குறித்துச் சான்று வினவுவோனும் ஆகிய இவரெல்லோரும் அறிவிலராவர். ௩எ-௩அ

---

௩௪. பொருளை ஈட்டினவற்கே அதன் இழப்பால் பெருந்துன்பமுண்டாமென்று கூறிய இதனுல் அப்பொருளை ஈட்டினவனே நன்கு காக்கவேண்டுமென்று வற்புறுத்தியவாறாம்.

௩௬. முழுமகன் - அறிவிலான்.

பொருளைப் போற்றுங்கால் உலோபியைப்போல் இருந்து போற்றல் வேண்டும்; அதனைப் பிறர்க்குக் கொடுக்குங்கால் பற்றற்றவனைப்போல் இருந்து கொடுத்தல் வேண்டும். ஈரிடத்தும் இங்ஙனமன்றி மாறுபட்டு ஒழுகுவானாயின், அவன் பொருட்கேடெய்துதலோடு அறிவின்மைக்கும் ஆளாவான். ௩௯

## ௩. நவ மணிகளின் ஆராய்ச்சி.

அரசன் பண்டங்களின் இயல்பைத் தானே உண்மையாக ஆராய்ந்தறிவதில் எப்பொழுதும் முயற்சியுடையனாக இருத்தல் வேண்டும். இரத்தின முதலியவைகளை அவ் வாராய்ச்சியாளரோடு கூடித் தானே நன்கு ஆராய்ந்து பார்த்து வாங்கிப் போற்றல் வேண்டும். ௪0

வயிரம், முத்து, பவழம், கோமேதகம், இந்திரநீலம், வைடூரியம், புட்பராகம், மரகதம், மாணிக்கம் ஆகிய **இவ் வொன்பதனையும் சிறந்த இரத்தினங்களென்று** அறிவுடையோர் கூறுவர். ௪௧

இந்திரகோபத்தைப் போற் செந்நிற வொளியினையுடைய **மாணிக்கம் கதிரவற்கு** மகிழ்ச்சி தருவதாகும். செம்மை பொன்மை வெண்மை கருமை யாகிய இந்நிற வொளிகளையுடைய **முத்துக்கள் திங்களஞ் செல்வற்கு** மகிழ்ச்சி தருவனவாம். ௪௨

பொன்மையும் செம்மையுங் கலந்த ஒளியோடு கூடிய சிறந்த **பவழம் செவ்வாய்க்கு** மகிழ்ச்சி தருவதாகும். மயில், காடை இவற்றின் இறகு போன்ற பசுமை நிற வொளியினையுடைய **மரகதம் புதனுக்கு** மகிழ்ச்சி தருவதாகும். ௪௩

பொன்னைப் போல் ஒளிசெய்கின்ற மஞ்சள் நிறத்தினை யுடைய **புட்பராகம் வியாழனுக்கு** மகிழ்ச்சி தருவதாகும். விண்மீனைப் போல் மிகவும் சிறந்த வெண்ணிற ஒளியினையுடைய **வயிரம் வெள்ளிக்கு** மகிழ்ச்சி தருவதாகும். ௪௪

நெருங்கிய சூற்கொண்ட மேகத்தைப் போன்ற கரிய ஒளியினையுடைய **இந்திரநீலம் சனிக்கு** மகிழ்ச்சி தருவதாகும். சிறிது பொன்மையுஞ் செம்மையுங் கலந்த ஒளியினை யுடைய **கோமேதகம் இராகு**

௪௨. இந்திரகோபம் - கார்காலத் துண்டாகுஞ் செந்நிறப் பூச்சி. இதனைத் தம்பலப் பூச்சி யென்ப.

௪௪. வெள்ளி - சுக்கிரன்.

வுக்கு மகிழ்ச்சி தருவதாகும். பூனையின் கண்ணைப்போன்ற நிறத்தினையும் அசைகின்ற நூல் போன்ற ஒளியினையுமுடைய வைடூரியம் கேதுவுக்கு மகிழ்ச்சி தருவதாகும். ௬௫-௬௬

இந் நவமணிகளுள் வயிரமே எல்லாவற்றினுஞ் சிறந்ததாகும். கோமேதகமும் பவழமும் எல்லாவற்றினும் தாழ்ந்தனவாகும். மரகதமும், மாணிக்கமும், முத்தும் தலையாய மணிகளாம். இந்திரநீலமும், புட்பராகமும், வைடூரியமும் இடையாய மணிகளாகும். ௬௭

பாம்பின்பாலுள்ள மணி மிக்க பேரொளியுள்ளது; எல்லாமணிகளினுஞ் சிறந்தது, அது கிடைத்தற் கரியதாகும். ௬௮

உள் வெடிப்பில்லாததும், நல்ல நிறமுடையதும், கீற்று புள்ளி இவை இல்லாததும், அழகிய கோணங்களையுடையதும், உயர்ந்த ஒளியுடையதும் ஆகிய மணியினையே சிறந்ததென்று இரத்தின இயல்பு ஆராயும் அறிஞர் பாராட்டுவர். ௬௯

அம் மணிகள் சருக்கராபம், சிபிடம், தளாபம், வருத்துலம் என நான்கு வகைப்படும். அம் மணிகளினின்றுந் தோன்றும் நிற வொளிகள் வெண்மையும், செம்மையும், பொன்மையும், கருமையுமாம். ௭0

உரிய நிறத்தினையும், உரிய ஒளியினையு முடையதாய்க் குற்றமற்ற அரதனம், தன்னை அணிவோர்க்குச் செல்வம், வன்மை, புகழ், வாழ்நாள் ஆகிய இவற்றை வளர்ப்பதாகும். இங்ஙன மல்லாத இரத்தினம் முற்கூறிய செல்வ முதலியவற்றை அழித்துவிடுவதாகும். ௭௧

ஒளியால் நிறமும் நிறத்தால் ஒளியும் விளங்குவனவாம். ௭௨

---

௭0. இச்சுலோகத்தின் பிற்பாதியில் பொதுவாக மணிகளின் நிற வொளிகள் கூறப்பட்டமையால், முற்பாதியிலுள்ள சருக்கராப முதலிய நான்கும் அம் மணிகளின் வடிவங்களைக் குறிப்பனவாகக் கொள்ளல் வேண்டும். இவற்றுள், சருக்கராபம் என்பது சுக்கான்கல்லை உபமானமாகவுடையது என்று பொருள்படும். ஆதலின், அது பருமையுஞ் சிறுமையுங் கலந்த நேரிதல்லாத வடிவத்தை யுடையதாகும். சிபிடம் என்பது அவலை யுணர்த்தும். ஆதலின் அஃது அவலை யொப்பத் தகட்டு வடிவினை யுடையதாகும். தளாபம் என்பதில் தளம் நீண்ட பொருளை யுணர்த்துமாதலின், அதனை உபமானமாக உடையது தளாபமாகும். ஆகவே அது நீட்சியான வடிவத்தை யுடையதாகும். வருத்துலம் என்பது உருண்டை வடிவத்தை யுணர்த்தும். இவற்றுள் முன்னதனை நோக்கப் பின்னது சிறந்ததாக முறையே மதிக்கப்படுமென்று ௭௭-ஆம் சுலோகத்திற் கூறுதலும் இவ் வடிவங்களின் இழிவு சிறப்புக்களை நோக்கியா மென்பது புலப்படும்.

செந்தாமரை மலரைப் போன்ற ஒளியினையுடைய பதுமராகம் மாணிக்கத்தின் வகைகளுள் ஒன்றாகும். புதல்வர்ப் பேற்றை விரும்பும் பெண்மக்கள் ஒருபொழுதும் வயிரமணியை யணிதலாகாது. ருஙு

முத்தும் பவழமும் அணியப்படுமாயின், அவற்றின் ஒளி, உருவம், நிறம் முதலியன நாட் செல்லச் செல்லக் குறைந்து விடுவனவாம். ருஙு இ

குற்றமற்ற அரதனம் எடைமிகுதி, ஒளி, நிறம், அகற்சி, தோன்றுமிடம், உருவம் ஆகிய இவற்றால் மிக்க விலையுள்ளதாகும். முத்துப் பவழங்களல்லாத மற்றை அரதனங்கள் இரும்பினுலும் கல்லினுலும் பெரும்பாலுங் கீற வியலாதனவா மென்று இரத்தின ஆராய்ச்சி யறிவுடையோர் கூறுவர். ருச-ருரு

## ச. அரதனங்களின் விலை யளவு.

எடை குறைந்த பெரிய இரத்தினம் மிகுந்த விலையுடையதாகும். எடை மிக்க சிறிய அரதனம் நல்ல குணமுடையதெனினும் குறைந்த விலையுடையதாகும். ருசா

சருக்கராபமணி கடையாய விலையினையும், சிபிடமணி இடையாய விலையினையும், தளாபமணி தலையாய விலையினையும் உடையனவாக மதிக்கப்படும். வருத்துல வடிவினதாகிய மணி, கொள்வோன் விற்போனுகிய இருவரது விருப்பின்வண்ணம் விலை மதிக்கப்படுவதாகும். ருஎ

முத்துப் பவழங்க ளல்லாத மற்றை அரதனங்கள் கால நீட்சியால் முதுமையினை யெய்தா. அரசன் நெறி பிழைத்தொழுகுதலால், அரதனங்களின் விலை அளவிற் குறைந்தும் அளவின் மிக்கும் ஏற்படும். ருஅ

மீன், பாம்பு, சங்கு, பன்றி, மூங்கில், மேகம், சிப்பி ஆகிய இவற்றினின்றும் முத்துக்கள் உண்டாவனவாம். இவற்றுட் சிப்பியினின்றும் உண்டாகும் முத்துக்களே மிகுதியாகும். ருசு

சிப்பியினின் றெடுக்கப்படும் முத்துக்கள் கருமை, வெண்மை, பொன்மைகலந்த செம்மை ஆகிய இந்நிறங்களையும், இரண்டு நான்கு

---

சுo. கஞ்சுகம் - சட்டை. சட்டை யிட்டது போல ஒன்றன்மே லொன்றாகச் சூழ்ந்திருப்பது.

ஏழு கஞ்சுகங்களாதல், மூன்று ஐந்து ஏழு கஞ்சுகங்களாதல் கூட்டப்படுதலையும் உடையனவாம். அவற்றுள், முன்னுள்ளதனை நோக்கப் பின்னுள்ளது ஒன்றுக்கொன்று சிறப்புடையதாகும். சுo

கருமை, வெண்மை, பொன்மைகலந்த செம்மை ஆகிய இந்நிறங்களையுடைய அச்சிப்பி முத்துக்கள், காலநீட்சி பற்றி ஒளி உருவ முதலியவற்றின் தேய்வுகளை முறையே எய்துவனவாம். அம் முத்திறத்து முத்துக்களையும் முறையே இளம் பருவத்தது, நடுப்பருவத்தது, முதிர் பருவத்தது என அறிவுடையோர் கூறுவர். சுக

அச் சிப்பிமுத்தே துளையிடுதற் குரியதாகும். மற்றவை அங்ஙனம் ஆகா. சிங்கள தீபத்தில் வாழும் மனிதர், அவ் வுண்மையான சிப்பிமுத்துக்களை யொப்பச் செயற்கை முத்துக்களைச் செய்வர். சுஉ

அவற்றுள், ஐய மொழிந்து உண்மையானது இன்னதென்று தெளிதற்பொருட்டு அம் முத்தை நன்கு சோதித்தல் வேண்டும். உப்பும் எண்ணெயுங் கலந்த வெந்நீரில் அதனை ஓரிரவு முழுதும் வைத்துப் பின்னர் எடுத்து, நெற்களோடு சேர்த்துத் தேய்த்தல் வேண்டும். அங்ஙனம் தேய்த்துப் பார்க்குங்கால், அது நிறவேற்றுமை யெய்தாது சிறந்த ஒளியொடு பொருந்தி யிருக்குமாயின், அதனை இயற்கையான சிப்பிமுத்தென்றும், ஒளி சிறிது குறைந்து காணப் படுமாயின், அதனைச் செயற்கை முத்தென்றும் அறிதல் வேண்டும். சுரு-சுச

கோமேதக மல்லாத மற்றை அரதனங்கள் துலையால் நிறுத்து மதிக்கப்படும் விலையுடையனவாகும். சுரு

நிறுத்தலளவையுள் குமை இருபதுகொண்ட எடை ஓர் இரத்தியாகும்; அவ் எடை முத்து அல்லாத மற்றை அரதனங்களுக்கு உரியதாகும். குன்றி நான்கு கொண்ட எடை மூன்றுஇரத்திகளாகும்;

---

சுக. முறையே எய்துதல் அம் மூன்றுட் கரியது முன்னரும்; வெளியது அதன் பின்னரும், பின்னது அதன் பின்னருமாக ஒளி உருத் தேய்வெய்தல்.

சுரு-சுஎ. குமை-க்ஷமா. இரத்தி - ரக்தி. குன்றி - கிருஷ்ணலகம். இடங்கம் - டங்கம்.

குமை உo — இரத்தி-க
இரத்தி ங — குன்றி-ச
இரத்தி உச—இடங்கம்-க
இடங்கம் ச—தோலா-க

அவ் எடை முத்துக் குரியதாகும். அவ் இரத்திகள் இருபத்து நான்கு கொண்ட எடை இடங்கம் என்று கூறப்படும்; இவ் எடை பவழ மல்லாத மற்றை அரதனங்களுக்காம். இடங்கம் நான்குகொண்ட எடை ஒரு தோலா வாகும்; இவ் எடை எப்பொழுதும் பொன்னுக் கும் பவழத்திற்கும் உரியதாகும். சாசா-சாஎ

ஓர் இரத்தி யளவு எடையுள்ள நன்கு அகன்ற தளாபம் என் னும் ஒரு வயிரமணியின் விலை ஐந்து பொன்களாகும். சா அ

தளாப வயிரமணி இரத்தியாலும் அகற்சியாலும் சிறந்திருப் பின் அதற்கு விலை முன்னையினும் ஐந்து மடங்கு அதிகமாகும். இரத்தியும், அகற்சியுமாகிய இவை எவ்வள வெவ்வளவு குறைவாக வுள்ளனவோ, அவ்வள வவ்வளவிற்குத் தக விலையுங் குறைவாக மதிக் கப்படும். சாசா

அரதனங்களின் நிறுத்தலளவையில் எட்டு இரத்தி கொண்டது ஒரு மாட மாகும். பத்து மாடங்கள் கொண்டது ஒரு பொன்னாகும் எண்பது கருட அளவுள்ள வெள்ளி ஐந்து பொன்களின் விலை யாகும். எO

---

இவ் அளவின்படி இடங்கம் க-க்கு இக்காலத்து வழங்கும் வராகனெடை ஒன்று கும். அங்ஙனமாயின் ஒரு தோலா நான்கு வராகனெடை யாகும்; அஃது ஒன் றேகால் ரூபாய் எடையாகும். நிறுத்தலளவையுட் குமை மிகக் குறைந்த அளவா தலின், அது முத்துப் பவழங்க ளல்லாத மற்றை அரதனங்களுக்காம் எனவே, முத்திற்கு இரத்தியளவும் குன்றியளவு முரிய வென்பது போதரும்.

சா அ. எண்பது இரத்தி கொண்டது ஒரு பொன் ஆகும் என்று எO-ஆம் சுலோகத்திற் கூறுவர். ஆதலின் வயிரமணியின் நிறை ஒன்றுக்குப் பொன் நானூறு மடங்கு விலை யென்பதும், அஃது ஓரிரத்தி யளவுள்ள ஒரு மணிக் கென்பதும் உணர்க.

சாசா. ஒரு வயிரமணி தளம், அகற்சி, எடை என்னும் இவ்வெல்லாவற்று னும் மிகச் சிறந்ததாக இருப்பின் அஃது இரத்தி ஒன்றுக்கு ஐந்து முதல் இரு பத்தைந்து பொன்கள் வரை விலை மதிக்கப்படுவதாகு மென்பதாம். இது விலை யின் மேலெல்லையாகும்.

எO. இரண்டாம் அத்தியாயம், கூஅரு-ஆம் சுலோகத்தில் குன்றி பத்துக் கொண்டது மாடம் எனவும், மாடம் பத்துக்கொண்டது கருட மெனவும் கூறப் பட்டன. குன்றிபத்துக்கு இரத்தி எஇ-ஆகும். இங்கு எட்டென்று கூறப்பட்டு ளது. ஐந்து பொன்களின் விலை அO-கருடவெள்ளி யாகுங்கால் ஒரு பொன்னு க்கு கசா-கருடம்வெள்ளி விலையாகும். அங்ஙன மாகுங்கால், இக்காலத்து நாணய முறைப்படி ஒருவராகனெடை தங்கத்தின் விலை ஐந்து ரூபாயாகவும்,ஒருபவுன் விலை பதினொரு ரூபாயாகவும் அறியப்படும்.

வயிரமணி மிக்க பருமையுடையதாக இருப்பின் அதற்கு விலை வருக்க இரத்தியைக் கணக்கிட்டு அறிந்துகொள்ளல் வேண்டும். சிபிட வயிரமணியின் விலை உயர்ந்தமணியின் விலையில் மூன்றிலொரு கூறு குறைந்ததாக மதிக்கப்படும். எக

சருக்கராப வயிரமணியின் விலை உயர்ந்த மணியினது விலையின் அரைக்கூறுகும். ஓர் இரத்திக்கு இரண்டு விகிதங் கொண்ட வயிர மணியின் விலை முற்கூறியவற்றின் பாதியளவாக எண்ணப்படும். எஉ

ஓர் இரத்தி நிறைக்கு வயிரமணி பலவாக இருப்பின் காற்கூறு விலையாகும். அங்ஙனமே இடையாய மணி கடையாய மணிகளுக்கு மாம். எஉஇ

வயிரமணிகள் (எடைமிக்கனவாகவிருப்பின்) அவற்றின் வருக்க இரத்திகளைப் பதினாறு கூறுபடுத்து ஒன்பது கூறுகளைத் தனியே பிரித்து வைத்து, எஞ்சிய ஏழு கூறுகளோடு ஐந்து கூறு சேர்த்து

எக. வருக்கமாவது, ஒத்த எண்களின் பெருக்கத்திற் கண்ட தொகை யாகும். அவை ச-க்கு-ச = கசு. ரு-க்கு-ரு = உரு. என இவ்வாறு பெருக்குதலாற் கிடைக்கும் எண்களாகும். பின் வருஞ் சுலோகத்தில் ஓர் இரத்திக்கு இரண்டு கொண்ட வயிரமணிக்கு விலை குறைவாகக் கூறுதலால் இங்குக் கூறிய விலை தனி மணிக் கென்றுணர்க. உயர்ந்தமணியின் விலையை முக்கூறுபடுத்து ஒரு கூறு தள்ளி இரு கூறு இதன் விலையாகு மென்பதாம்.

எஉ. அரைக் கூறுதல் ஓர் இரத்தி யளவுள்ள ஒரு மணிக் கென்பதும், பாதியளவாதல் ஒருமணி ஓர் இரத்தியாகுங்கால் அதற்குள்ள விலையிற் பாதிய ளவு விலை இரண்டு மணி கொண்ட ஓர் இரத்திக்கு என்பதும் உணர்க. இவ் வாறே தலை இடை கடையாய மணிகளின் விலையளவையுங் கணக்கிட்டுக் கொள்ளல் வேண்டும்.

எஉஇ. இரண்டின் மேற் பலமணிகள் கொண்ட ஓர் இரத்திக்கு விலை ஓர் இரத்தி யளவுள்ள ஒரு மணியின் விலையிற் காற் கூறுகு மென்பதும், இடையாய கடையாய் மணிகளும் ஓர் இரத்திக்குப் பலவாக இருப்பின், அவ் வவற்றின் தனிமணியின் விலையிற் காற் காற் கூறுகு மென்பதும் உணர்க.

எங-எசஇ. ஈண்டு "வயிர மணிகள்" எனப் பன்மையாகக் கூறியது- தளாபம், சிபிடம், சருக்கராபம் என்னும் அம் மணிகளின் வகைகளை நோக்கி என்க. ஆதலின், விலையின் துணிபு தனிமணிக் கென்பது போதரும். ஈண்டுக் கூறிய கணிதப்படி உதாரணமாக எட்டு இரத்தி எடையுள்ள ஒரு வயிர மணியின் விலை வருமாறு:—அ-க்கு-அ = சுச-வருக்க இரத்திகளாகும். இவ் சுச- ஐ பதினாறு கூறுபடுத்துங்கால் கூறு ஒன்றுக்கு ச - ஆக கூ - கூறுகளுக்கு ௩௬ ஆகும். எஞ்சிய எ - கூறுகளோடு ரு-கூறு சேர்த்துக் கூடிய ௰உ-கூறுகளுக்கும்

அப் பன்னிரண்டு கூறுகளையும் முப்பதால் வகுத்து அவ் வகுப்பினின் றுங் கிடைக்கும் தான எண்ணையும், மீண்டும் அப்பன்னிரண்டு கூறு களைப் பதினாறு கூறுபடுத்து ஒரு கூறெடுத்து அதனையும், முன் பிரித்து வைத்த ஒன்பது கூறுகளோடு சேர்த்துக் கூடிய இரத்திக ளுக்கு அம் மணிகள் குணம் மிக்கனவாயின் தலையாய விலையையும், குணங் குறைந்தனவாயின் அரைக்கூறு விலையையும் ஏற்படுத்தல் வேண்டும். ௭௩-௭௪ இ

முத்துக்களுக்கு, தலை இடை கடைத்தரங்களை யுணர்ந்து அவற் றிற்குத் தக்கவாறு விலை ஏற்படுத்தல் வேண்டும். ௭௫

ஒரு முத்தின் வருக்க இரத்தி ஆயிரத்திற்கு மேற்படுமாயின் நூற்றுக்குப் பதினெட்டேமுக்கால் விகிதங் கழித்து எஞ்சிய இரத் திகளுக்கு விலை ஏற்படுத்தல் வேண்டும். ௭௬

உரியதொகை ௪௮ - ஆகும். அவ் ௪௮-ஐ ௩௰-ஆல் வகுக்க வகுப்புத் தான எண் ஒன்றரையே யிரண்டுமா ஆகும்; மீண்டும் அவ் ௪௮-ஐ பதினாறு கூறுபடுத்து ஒரு கூறெடுக்க ௩-ஆகும். இவ்விரண்டு தொகைகளையும்முன்பிரித்துத் தனிப் படுத்திய ௯ - கூறுகளுக்குரிய ௩௬ - ஒடு சேர்க்க நாற்பதரையே யிரண்டுமா ஆகும். ஆகவே ஓர் இரத்திக்கு ௬௮-ஆம் சுலோகத்தின்படி விலை ஐந்து பொன் னாக நாற்பதரையே யிரண்டுமாவுக்கு விலை இருநூற்று மூன்று பொன்களாகும். இவ்விலை தளாபத்திற்காகும். சிபிடம்,சருக்கராபங்களுக்கு ௭௧,௭௨-ஆம் சுலோ கங்களிற் கூறியபடி முறையே இவ்விலையில் மூன்றில் இரண்டுகூறும் அரைக் கூறுமாகக் கொள்ளல்வேண்டும். இம் முத்திற மணிகளும் குணங் குறைந்தன வாக இருப்பின் அவ்வவற்றிற்குக் குறிப்பிட்ட விலைகளில் அரைக்கூறுவரை தகுதி நோக்கிக் குறைத்துக்கொள்ளல் வேண்டும். பின் வரும் ௭௭-ஆம் சுலோ கத்தில் நூற்றுக்கு'மேற்பட்ட வருக்க இரத்திகளுக்கு ௧௦௦-க்கு ௨௦ - விகிதங் கழித்து எஞ்சியவற்றிற்கு விலை ஏற்படுத்தவேண்டு மென்றுகூறுதலால் ஈண்டுக் கூறியது நூற்றுக்குட்பட்ட வருக்க இரத்திகளுக்கென்று கொள்ளல் வேண்டும்.

௭௬. முதனூலிற் கழிக்கப்படும் எண் "கலாத்ரிசதகம்" என்று கூறப்பட்டுளது. திரி சதகம் - முந்நூறு. கலை - பதினாறில் ஒரு கூறு. ஆகவே அம் முந்நூற்றின் பதினாறில் ஒரு கூறு பதினெட்டே முக்காலாதல் காண்க. வருக்கம் இன்னதென்பதை ௭௧-ஆம் சுலோகக் குறிப்பிற் காண்க. ஒரு முத் தின் இரத்தியை வருக்கமாகப் பெருக்கிப் பார்க்குங்கால் அப் பெருக்க எண் ஆயிரத்திற்கு மேற்படுமாயின், நூற்றுக்குப் பதினெட்டேமுக்கால் விகிதங் கழித்து, எஞ்சிய வருக்க இரத்திகளுக்கு விலை ஏற்படுத்தல் வேண்டுமென்பது கருத்து. ஒரு முத்து ௪௦-இரத்தி கொண்டதாக இருப்பின் வருக்க இரத்தி ௪௦-க்கு௪௦ = ௧௬௦௦-ஆகும். நூற்றுக்குப் பதினெட்டேமுக்கால் விகிதமாக

ஒரு முத்தின் வருக்க இரத்தி நூற்றுக்கு மேற்படுமாயின் நூற்றுக்கு இருபது விகிதங் கழித்து எஞ்சிய இரத்திகளுக்கு விலை யேற்படுத்தல் வேண்டும். ௭௬இ

நன்கு அகன்ற தளாபம் என்னும் ஒரு வயிரமணியின் வருக்க இரத்தி நூற்றிற்கு மேற்படுமாயின், நூற்றிற்கு இருபது விகிதங் கழித்து எஞ்சியவற்றிற்கு விலையேற்படுத்தல் வேண்டும். அங்ஙனமே அகன்ற சிபிட வடிவினதாகிய ஒரு வயிரமணிக்கும் வருக்க இரத்தி நூற்றுக்கு மேற்படுமாயின், நூற்றுக்கு இருபது விகிதங் கழித்து எஞ்சியவற்றிற்கு விலையேற்படுத்தல் வேண்டும். ௭௭

---

௩௦௦ கழிக்க எஞ்சிய வருக்க இரத்தி ௧௩௦௦-ஆகும். இதற்கு விலை ஏற்படுத்தலாவது, அ௫-ஆம் சுலோகத்திற் கூறியபடி ஓர் இரத்திக்கு விலை ஒரு பொன்னுகப் பொன் ௧௩௦௦-ஆகு மென்று அறிதல். ஆகவே ஒரு முத்து ஓர் இரத்தி எடை யுள்ளதாக இருப்பின் விலை ஒரு பொன்னுகு மெனவும், நாற்பது இரத்தி எடை யுள்ளதாக இருப்பின் விலை நாற்பது பொன்னுகு மென்று கொள்ளாமல் வருக்க இரத்தி விலைப்படி ௧௩௦௦-பொன்னுகு மெனவுங் கொள்ளல் வேண்டும். வருக்க இரத்தி கூறு மிடங்களி லெல்லாம் ஒரு மணிக்கெனக் கொள்ளல் வேண்டும். தனி முத்தின் எடை அதிக மாக வாக விலையும் அதிகமாகு மென்பது கருதி இங்ஙனம் வருக்க இரத்தியளவு கூறப்பட்டது.

௭௬இ. ஒருமுத்து இருபது இரத்தி எடையுள்ளதாக இருப்பின் வருக்க இரத்தி ௨௦-க்கு ௨௦ = ௪௦௦-ஆகும் ௧௦௦-க்கு ௨௦-விகிதமாக அ௦-கழிக்க எஞ்சியவை ௩௨௦-ஆகும். இதற்கு விலை முற்சுலோகக் குறிப்பிற் காட்டியபடி ௩௨௦-பொன்களாகும்.

௭௭. சிறந்த வயிரமணி ஒன்று இருபது இரத்தி எடையுள்ளதாக இருப்பின், வருக்க இரத்தி ௨௦-க்கு-௨௦-௪௦௦-ஆகும். அவற்றில் ௧௦௦-க்கு-௨௦-விகிதமாக அ௦-கழிக்க எஞ்சியவை ௩௨௦-இரத்திகளாகும். ஆகவே ௬அ-ஆம் சுலோகத்திற் கூறியபடி ஓர் இரத்திக்கு ஐந்து பொன் விலையாக வைத்து ௩௨௦-இரத்திகளுக்கு ௧௬௦௦-பொன் விலையெனக் கொள்ளல் வேண்டும். இதனால் ஓர் இரத்தி எடையுள்ள சிறந்த வயிரமணி ஒன்று ஐந்து பொன் விலையாகுமாயின் ௨௦-இரத்தி எடையுள்ள அத்தகைய மணியின் விலை ௨௦-க்கு-௫-௧௦௦-பொன்னென்று கொள்ளாமல் வருக்க இரத்தி விலைப்படி ௧௬௦௦-பொன்னுகுமென்று கொள்ளல் வேண்டு மென்பது கூறியவாறும். இங்ஙனமே சிபிடமணிக்கும், சருக்கராபமணிக்கும் அவ்வவற்றிற்குக் கூறிய வருக்க இரத்திகளின் கழிவுகளை யறிந்து கழித்து, எஞ்சியவற்றிற்கு அவ்வவற்றிற்குக் கூறிய விலையளவுகளின்படி கணக்கிட்டு அறிந்து கொள்க. ஈண்டும் முற்கூறியவாறே வயிரமணியின் எடை அதிகமாகவாக விலையும் அதிகமாகு மென்பது கருதி, இங்ஙனம் வருக்க இரத்தியளவு கூறப்பட்டதாக அறிதல் வேண்டும். வருக்க இரத்தி யளவு வயிரத்திற்கும் முத்திற்குங் கூறப்பட்டது. மற்றை அரதனங்களுக்கு வருக்க அளவு இந்நூலிற் கூறப்பட்டிலது.

சருக்கராபம் என்னும் ஒரு வயிரமணியின் வருக்க இரத்தி நூற்றுக்கு மேற்படுமாயின், நூற்றுக்கு ஐம்பது விகிதமாதல், நாற்பது விகிதமாதல் கழித்து, எஞ்சியவற்றிற்கு விலையேற்படுத்தல் வேண்டும். எஅ

எப்பொழுதும் கரும்புள்ளி செம்புள்ளிகளையுடைய அரதனங்களை அணிந்துகொள்ளலாகாது. எகூ

ஓர் இரத்தி நிறையுள்ள மரகதம், மாணிக்கம் ஆகிய இவை சிறந்தனவாக இருப்பின், அவற்றின் விலை தனித்தனி ஒரு பொன்னாகும். ஒன்றுக்குமேல் இரத்தி எவ்வளவுள்ளனவோ அவ்வளவிற்குத் தக்கவாறு விலையும் மிகுதியாகும். அ0

ஓர் இரத்தி நிறையுள்ள புட்பராகம், நீலம், அசைகின்ற மூன்று இழைகளையுடைய வைடூரியம் ஆகிய இவற்றின் சிறந்த விலை தனித்தனி அரைப்பொன்னாகும். அக

ஒரு தோலா நிறையுள்ள பவழத்தின் விலை அரைப்பொன்னாகும். கோமேதகம் நிறுத்தலளவைக்குத் தகுதியுடைத்தன்றாதலின் மிகச் சிறிய விலையுடையதாகும். அஉ

வயிரமல்லாத மற்றை அரதனங்கள் மிகச் சிறியனவாக இருப்பின் அவற்றின் விலை எண்ணலளவையாலாகும். மிக்க அழகு வாய்ந்தனவும், சிறந்த குணங்களால் விளங்குவனவும், கிடைத்தற்கரியனவுமாகிய அரதனங்களின் விலை அளவையைப் பற்றியதன்று; விற்போர் வாங்குவோர்களின் விருப்பத்தைப் பற்றியதாகும். அங

தனி முத்தின் விலையாவது, அம் முத்தின் வருக்க இரத்தியைப் பதின்மூன்றே முக்காலாற் பெருக்கி இருபத்துநான்கில் வகுக்க அவ்

அச. உதாரணமாக எட்டு இரத்தி நிறையுள்ள ஒரு முத்தின் விலை வருமாறு:—வருக்க இரத்தி அ-க்கு-அ = கூச-ஆகும். அவ்-கூச-ஐ பதின்மூன்றேமுக்காலாற் பெருக்க அஅ0 - ஆகும். அவ் வெண்ணை உச - இல் வகுக்கக் கிடைக்கும் வகுப்புத்தான எண்சிறிது கூடிய கூகூஇ-ஆகும். ஆகவே சிறந்தகுணமுள்ள ஒருமுத்து அ-இரத்தி நிறையுள்ளதாக இருப்பின், அதன் விலை பின்வருஞ் சுலோகத்திற் கூறியபடி இரத்தி ஒன்றுக்கு ஒரு பொன்னாக வருக்க இரத்தியில் வகுப்புத்தான எண் கூகூஇ-க்குப் பொன் கூகூஇ-ஆகும். ஒருமுத்து ஓர்இரத்தி எடையுள்ளதாயின் ஒருபொன் விலையாகும். எட்டு இரத்தி எடையுள்ளதாயின் எட்டுப் பொன்னென்று கொள்ளாமல் இச் சுலோகப்படி கூகூஇ - பொன்னாகுமென்று கொள்ளல் வேண்டும். முத்தின் விலையைப் பற்றி எகூ-ஆம் சுலோகத்

வருப்பால் எய்தப்படும் எண் எவ்வளவோ அவ்வளவு பொன்னு குர். அச

தலையாயமுத்து ஓர் இரத்தி எடைக்கு ஒருபொன் விலையாகும். இடையாய கடையாய முத்துக்களின் விலை அவ்வவற்றின் குணங்களுக்குத் தக்கவாறாகும். அரு

முத்துக்கள் செம்மை, பொன்மை, வெண்மை நிறங்களையுடையனவாய் வருத்தலமாக விருப்பின் அவை தலையாகவும், தளாயம் இடையாகவும், சிபிடமும் சருக்கராபமும் கடையாகவும் மதிக்கப் படுவனவாம். அசா

---

திற் கூறியது வருக்க இரத்தி ஆயிரத்துக்கு மேற்பட்டதற்கெனவும், அதற்கு அடுத்துக் கூறியது வருக்க இரத்தி நூற்றுக்குமேல் ஆயிரத்துக் குட்பட்டதற்கெனவும், ஈண்டுக் கூறியது வருக்க இரத்தி நூற்றுக்குட்பட்டதற் கெனவும் பகுத்துணர்ந்துகொள்ளல் வேண்டும்.

அக. இதுகாறுங் கூறப்பட்ட நவமணிகளின் இயல்பு விலை முதலியவற்றின் சுருக்கம் வருமாறு:—

க. வயிரமணி எல்லா அரதனங்களினுஞ் சிறந்தது.

மற்றைமணிகளுள்,

| தலை. | இடை. | கடை. |
|---|---|---|
| உ. முத்து | ரு. நீலம் | அ. கோமேதகம் |
| ங. மரகதம் | சு. புட்பராகம் | கூ. பவழம் |
| ச. மாணிக்கம் | எ. வைடூரியம் | |

**இவற்றின் எடையும் விலையும்.**

| நவமணி. | எடை. | விலை. |
|---|---|---|
| க. வயிரம் | க-இரத்தி | ரு-பொன் |
| உ. முத்து | ,, | க-பொன் |
| ங. மரகதம் | ,, | ,, |
| ச. மாணிக்கம் | ,, | ,, |
| ரு. நீலம் | ,, | இ-பொன் |
| சு. புட்பராகம் | ,, | ,, |
| எ. வைடூரியம் | ,, | ,, |
| அ. பவழம் | க-தோலா | இ-பொன் |
| கூ. கோமேதகம் | எடையில்லை | குறைந்தவிலை. |

க - முதல் எ-வரையுள்ள மணிகளின் விலை ஓரிரத்தி எடையுள்ள ஒரு மணிக்காகும். ஓரிரத்திக்கு மேற்பட்ட எடையுள்ளனவும், குறைந்த எடையுள்ளனவுமாகிய மணிகளின் விலைகளை ஆங்காங்குணர்க. எ௦ - ஆம் சுலோகப்படி ஒரு பொன் இக்காலத்து வழக்கப்படி மூன்றேகாலேயரைக்கால் வராகனெடை (கஇ-பவுன்) ஆகும்.

## ரு. பொன் முதலிய உலோகங்களின் விலை.

அரதனங்களில் இயற்கையாகவே குற்றங்கள் உள்ளன. உலோகங்களிற் செயற்கைக் குற்றங்கள் இருக்கும். ஆதலின் அறிவுடையான் அவ் வுலோகங்களை நன்கு சோதித்து ஆராய்ந்து அவற்றிற்கு விலை ஏற்படுத்தல் வேண்டும். அஎ

பொன், வெள்ளி, செம்பு, வெள்ளீயம், காரீயம், நாகம், இரும்பு, ஆகிய இவ்வேழும் சுரங்கங்களினின்றும் எடுக்கப்படும் இயற்கை உலோகங்களாகும். மற்றவை இவற்றின் கலப்பானுண்டாகிய செயற்கை உலோகங்களாம். அஅ

இவற்றுட் பின்னதனை நோக்க முன்னது சிறந்ததாக முறையே அறிதல் வேண்டும். பொன் இவ்வெல்லாவற்றினும் மிகச்சிறந்ததாகும். வெள்ளீயம், செம்பு ஆகிய இவற்றின் கலப்பானுண்டாவது வெண்கலமாகும். செம்பு, நாகம் ஆகிய இவற்றின் கலப்பானுண்டாவது பித்தளையாகும். அசு

மற்றை உலோகங்களோடு நிறையளவில் ஒத்திருக்கும் பொன் உருவத்தால் அவற்றினுஞ் சிறியதாக இருக்கும். பொன்னோடு ஒத்த நிறையுள்ள மற்றை உலோகங்கள் உருவத்தாற் பொன்னினும் பருமையுடையனவாகும். கூ0

ஒத்த சாதி உலோகங்களுள் ஒரு நிறையுள்ள இரண்டு துண்டுகளை ஒரே துவாரத்திற் சிறிய கம்பியாக இழுப்பின், குற்றமற்ற உலோகத்தின் கம்பி முன்னை நிறையளவோடு ஒத்திருக்கும். கூக

கூக. பொன் வெள்ளி முதலியவற்றுட் குற்றமுடையது இது, குற்றமில்லாதது இது என்று அறிதற்கு உபாயங் கூறியவாறு. சம நிறையாகவுள்ள ஒரு சாதி உலோகத் துண்டுகள் இரண்டைத் தனித்தனி சிறு கம்பிகளாக ஒரே துவாரத்தில் இழுத்துப் பின்னர் நிறுத்துப் பார்க்குங்கால், குற்றமில்லாதது முன்னை நிறையோடு ஒத்தும், குற்ற முடையது முன்னை நிறையிற் குறைந்துங் காணப்படு மென்பது கருத்து. உலோகங்களுட் கலப்புடையது இது, கலப்பில்லாதது இது என்று ஆராய்தற்கு, அவ்விரண்டு தர உலோகங்களையும் ஒரே துவாரத்திற் கம்பிகளாக இழுத்து, அக்கம்பிகளை ஒத்த நீளத்தில் துண்டித்து நிறுத்தல் வேண்டும்; அங்ஙனம் நிறுத்துப் பார்க்குங்காற் கலப்புடையது எடையிற் குறைந்தும், கலப்பில்லாதது எடையிற் கூடியும் இருக்கும் என்று கூறுதலும் ஒன்று.

எந்திரம், விடுபடை, விடாப்படையாகிய இவ்வடிவங்களையுடைய இரும்பு மிகப் பெருவிலை யுடையதாகும். ஒரு மடங்கு பொன்னுக்குப் பதினறு மடங்கு வெள்ளி விலையாகும். கூஉ

ஒரு மடங்கு நிறையுள்ள வெள்ளிக்கு எண்பது மடங்கு நிறையுள்ள செம்பு பெரும்பாலும் விலையாக மதிக்கப்படும். ஒரு மடங்கு நிறையுள்ள செம்பிற்கு ஒன்றரை மடங்கு நிறையுள்ள வெள்ளீயம் விலையாகும். அங்ஙனமே, ஒருமடங்கு நிறையுள்ள செம்பிற்கு இரண்டுமடங்கு நிறையுள்ள காரீயமும், மூன்றுமடங்கு நிறையுள்ள நாகமும், ஆறுமடங்கு நிறையுள்ள இரும்பும் விலையாகும். முற்காலத்தில் ஏற்படுத்தப்பட்ட விலையளவின்படி இவ்விலைகள் தனித்தனி இங்குக் கூறப்பட்டன. கூங-கூச

### சா. பசு முதலியவற்றின் விலை யளவு.

அழகிய கொம்புகளையுடையதும், நல்ல நிறம் வாய்ந்ததும், எளிதிற் பால் கறக்கற்பாலதும், மிகுதியான பாலையுடையதும், அழகிய இளங்கன்றையுடையதும், உடல் சிறிதாயினும் பெரிதாயினும் இளம் பருவமுடையதும் ஆகிய பசு மிகுதியான விலையுடையதாகும். கூரு

பொன்மை நிறம் வாய்ந்த இளங்கன்றையும் நல்ல பாலையுமுடைய பசுவின் விலை ஒரு பலம் வெள்ளியாகும். வெள்ளாட்டின் விலை அப் பசுவின் விலையிற் பாதியாகிய அரைப்பல வெள்ளியாகும். செம்மறியாட்டின் விலை அவ் வெள்ளாட்டின் விலையிற் பாதியாகிய காற்பல வெள்ளியாகும். கூசா

உடல்வன்மை மிக்கதும், போர்க்குணம் வாய்ந்ததுமாகிய செம்மறியாட்டுக் கடாவின் விலை ஒரு பலம் வெள்ளியாகும். பசுக்களின்

கூஉ. எ0 - ஆம் சுலோகத்தில் ௫- பொன்னுக்கு அ0-கருட அளவு வெள்ளி விலையாகு மென்று கூறப்பட்டுளது. ஒரு கருட நிறையும், ஒரு பொன்னின் அளவும் சிறிது ஏறக்குறைய ஒத்த அளவின வாதலின் ௫ - க்கு அ0-ஐ வகுக்க ஒன்றுக்குப் பதினறுதல் காண்க.

கூங-கூச. ஈண்டு வெள்ளிக்குக் கூறப்பட்ட செம்பின் விலையளவு முதலியன இக் கால நாணயமுறைக்கும் விலைக்கும் பொருத்தமுடையனவாகத் தோன்றவில்லை. அக்காலத்தின் விலைநிலைமை இவ்வாறு போலும்.

கூசா. ஒரு பலமாவது நான்கு கருடமாதல், அன்றி நான்கு தோலாவாதல் கொண்ட எடையாகும். இவ் அளவு இக்காலவழக்கிற்குச் சிறிது மாறுபட்டுளது.

உயர்ந்த விலை எட்டு அல்லது பத்துப் பலம் வெள்ளியாகும். ௯௭

செம்மறியாட்டிற்கும் வெள்ளாட்டிற்கும் உயர்ந்த விலை ஒரு பலம் வெள்ளியாகும். எருமைக்குப் பசுவின் விலையோடு ஒத்த அளவினதாதல், அன்றி ஒன்றரை மடங்காதல், உயர்ந்த விலையாகும். ௯௮

அழகிய கொம்புகளையும், நல்ல நிறத்தையும், உடல்வன்மையினையும், சுமக்குமாற்றலையும், விரைந்து செல்லுதலையும், எட்டுத் தால அளவு உயரத்தினையு முடைய எருதின் விலை அறுபது பலம் வெள்ளியாகும். ௯௯

எருமைக்கடாவின் உயர்ந்த விலை ஏழு அல்லது எட்டுப் பலம் வெள்ளியாகும். யானை, குதிரை இவற்றின் உயர்ந்த விலை இரண்டாயிரம், மூவாயிரம், அல்லது நாலாயிரம் பலம் வெள்ளியாகும். ௧௦௦

ஒட்டகத்தின் உயர்ந்த விலை எருமைக்கடாவின் விலையோடு ஒத்ததாகக் கூறப்படும். ௧௦௧

ஒரு நாளில் நூறு யோசனை தூரம் செல்லும் ஆற்றல் வாய்ந்த குதிரை தலையாயதாகும். அதன் உயர்ந்த விலை ஐந்நூறு பொன்களாம். ௧௦௨

ஒரு நாளில் முப்பது யோசனை தூரம் செல்லும் வன்மை வாய்ந்த ஒட்டகம் சிறந்ததாகும். அதன்விலை நூறுபலம் வெள்ளியாகும். ௧௦௩

---

௯௯. தாலம் - பிடி மூன்று கொண்டதாகும். இதனை இவ்வத்தியாயம் ௪-ஆம் பிரகரணம் ௮௨ - ஆம் சுலோகத்திற் காண்க.

௧௦௦. பின்னுள்ள ௧௦௨ - ௧௦௪ - ஆம் சுலோகங்களில் முறையே சிறந்த குதிரைக்கும், சிறந்த யானைக்குங் கூறிய விலையளவை நோக்க இங்குக் கூறிய யானை குதிரைகளின் விலைகளுள் இரண்டாயிரம் பலம் வெள்ளியே பொருத்தமாகத் தோன்றுகின்றது. அதன்மேல் மூவாயிரம் நாலாயிரம் பலங் கூறியது மிகச் சிறந்த யானை குதிரைகளுக்கு விலையளவின் முடிந்த வெல்லையை வரையறுத்தற்பொருட்டாம். இரண்டாயிரம் பலம் வெள்ளி எண்ணுயிரங் கருடங்களாகும், கருடம் ஒன்றுக்கு இக்கால நாணய முறைப்படி ரூபாய் ஒன்றாகும்.

௧௦௨. பொன் ஒன்றுக்குக் கருடம் பதினாறு மென்று ௭௦ - ஆம் சுலோகத்திற் கூறப்பட்டது. ஆதலின் ௫௦௦ - பொன்களுக்கு ௮௦௦௦ - கருட அளவு வெள்ளியாகும்.

வன்மையாலும், உயரத்தாலும், போர்ச்செயலாலும், மதச்செருக்காலும், தனக்கு நிகரில்லாத சிறந்த யானையின் விலை இரண்டாயிரம் நிட்கங்களாகும். ௧0௪

யானையின் விலையளவில் ஐந்து இரத்தி யளவு கொண்டது மாடம் எனவும், அம்மாடம் நான்கு கொண்ட அளவுள்ள பொன் நிட்க மெனவுங் கூறப்படும். ௧0௫

இந்நிலவுலகத்தில் ஒப்பற்ற பொருள்களெல்லாம் மிகச் சிறந்தனவாகும். ஆதலின், காலம் இடங்களை நோக்கி அவற்றிற்கு ஒத்தவாறு அச்சிறந்த பொருள்களுக்கு விலையேற்படுத்தல் வேண்டும். ௧0௬

குணமில்லாதனவும் காரியத்திற்கு உபயோகப்படாதனவு மாகிய பொருள்களுக்கு விலையில்லை. அறிவுடையார் எல்லாப் பொருள்களுக்கும் விலை யேற்படுத்துங்கால், உலகியலை யுணர்ந்து அதற்கு ஒத்தவாறு அப் பொருட்குழு வனைத்தையும், தலை இடை கடைத்தரங்களாக எப்பொழுதும் பகுத்துணர்ந்து செய்தல் வேண்டும். ௧0௭

## ௭. இறைப்பொருள் கொள்ளு முறை.

பண்டங்களை விற்போர் கொள்ளுவோராகிய இவர்களிடத்தினின்றும் அரசனுக்குக் கிடைக்கும் இறைப்பொருள் சுங்க மென்று கூறப்படும். அச் சுங்கங் கொள்ளுதற்குரிய விடங்கள், அதற்கென்று வரையறுக்கப்பட்ட எல்லைகளும், கடைத்தெருக்களுமாம். ௧0௮

அரசன், எல்லாப் பண்டங்கட்கும் ஒருமுறை முயன்று சுங்கங் கொள்ளக்கடவன். அவன் ஒருபொழுதும் தன்னாட்டில் வஞ்சமேற்கொண்டு அடிக்கடி சுங்கங் கொள்ளுதலாகாது. ௧0௯

---

௧0௪. யானையின் விலையளவில் இருபது இரத்தியளவு எடை கொண்டது ஒரு நிட்கமாகுமென்று அடுத்த சுலோகத்திற் கூறுவராதலின், இரண்டாயிரம் நிட்கங்களுக்கு நாற்பதினாயிரம் இரத்திகளாகும். ௮0 - இரத்தி கொண்டது ஒரு பொன்னாகு மென்று ௭0-ஆம்சுலோகத்திற் கூறினமையின், நாற்பதினாயிரம் இரத்திகளுக்கு ஐந்நூறு பொன்களாகும். ஆகவே, ௫00-பொன்களுக்கு ௮000 - கருட அளவுள்ள வெள்ளி விலையாத லறிக.

௧0௫. இங்குக் கூறப்பட்ட நிட்கம்ஒன்றுக்குப் பொன் வராகனெடை ௬-ல் ௫-பங்கு (சற்றேறக்குறைய முக்காலே வீசங் கால்வீசம்) ஆகும்.

௧0௮. சுங்கம், சுற்கம், உல்குபொருள் என்பன ஒரு பொருட் சொற்கள். "சுங்கம் - கலத்தினுங் காலினும் வரும் பண்டங்கட் கிறையாயது" என்பர் பரிமேலழகர். (திருக்குறள். ௭௬-ஆம். அதி, ௬-வது செய்யுளுரை.) கலம் - கப்பல். கால் - வண்டி, ஆட்சுமை. இறை - வரி.

அரசன், பண்டங்களை விற்போர் அல்லது கொள்ளுவோரிடத்தினின்றும், விலையளவிற்கு மாறுபா டுண்டாகாவண்ணம், ஊதியத்தில் முப்பத்திரண்டி லொரு கூறுதல், இருபதி லொரு கூறுதல், பதினாறி லொரு கூறுதல் இறை கொள்ளுதல் வேண்டும். கக0

பண்டங்களை விற்போன் முதலுக்குக் குறையவாதல், ஒத்தஅளவாகுதல் விற்பானாயின், அவனிடத்தினின்றும் அரசன் சுங்கங்கொள்ளுதலாகாது. அவனிடத்தினின்றும் விலைக்கு வாங்குவோன்பால், ஊதியத்தை அளவிட்டுக் கண்டு அதற்குத் தக்கவாறு எப்பொழுதும் சுங்கங் கொள்ளுதல் வேண்டும். கக௧

எப்பொழுதும் இறைப்பொருளை விரும்புகின்ற அரசன் முதலில் மிகுபயன், நடுத்தரப்பயன், குறைந்தபயன்களை விளைவிக்கும் நிலங்களை அளவையான் அளவிட்டறிந்து, பின்னர் அவற்றின் நிலைமைக்குத் தக்கவாறு இறையளவைத் திட்டஞ் செய்தல் வேண்டும். ககஉ

உழவுத்தொழில் புரிவோர்க்குக் குறை நேராமலிருக்குமாறு அவர்பானின்றும், அரசன் மாலைகட்டுவோனை யொப்ப இறைப்பொருள் கொள்ளல் வேண்டும்; கரி செய்து விற்பவனை யொப்ப இறை கோடலாகாது. ககங

மிகுதி நடுத்தரம் சுருக்கமாய பயன்களை விளைவிக்கும் இயல்புகளால் நிலங்களின் ஏற்றத் தாழ்வுகளை ஆராய்ந்துணர்ந்து, அவற்றிற்குத் தக்கவாறு செலவிட்டு உழுதொழில் புரிவோர்க்கு, அரசற்கு இறுக்கும் இறை முதலிய செலவுகளின் இருமடங்கு வருவாய் கிடைக்குமாயின், அப் பயிர்வினை சிறந்ததாகும். அதனிற் குறையுமாயின், அவர்க்கு அது துன்பந்தருவதாகும். ககச

---

கக0. இவ் விறை விகற்பங்கள் பொருள்நிலை, காலநிலை, ஊதியநிலைகளைப் பற்றினவாகும்.

ககங. பூந்தோட்டத்துள்ள மரம் செடி கொடிகளுக்குக் கேடு விளைக்காது, அவற்றினின்றும் உண்டாம் மலர்களை யெடுத்து மாலை கட்டிப் பயன் பெறுபவனை யொப்ப, அரசன் குடிகளுக்குக் கேடு விளைவிக்காது அவர்பானின்றும் இறைகோடல் வேண்டுமென்பதும், மரங்களால் விளையும் பயனை நோக்காது அம் மரங்களையே சுட்டுக் கரியாக்கி அதனாற் பயன் கொள்ளுபவனை யொப்ப, அரசன் குடிகளால் வரும்இறைப்பொருளை நோக்காது அக் குடிகளையே கெடுத்துப் பயன்பெற நினைத்தலாகா தென்பதும் கூறியவாறும்.

அரசன் எப்பொழுதும் தடாகம், வாவி, கிணறு ஆகிய இவற்றின் நீர் பாய்ந்து விளையும் நில வருவாயில் மூன்றிலொரு கூறும், மழை நீரால் விளையும் நிலத்தின் வருவாயில் நான்கிலொரு கூறும், ஆற்று நீர் பாய்ந்து விளையும் நிலவருவாயிற் பாதியும், களர் நிலத்தின் வருவாயிலும், கல் முதலியன நிறைந்த நிலத்தின் வருவாயிலும் ஆறிலொரு கூறும் இறையாகக் கொள்ளுதல் வேண்டும். கக௫-ககசு

உழவுத்தொழில் செய்வோருள், எவன் நூறு கருட அளவுள்ள வெண்பொற்காசுகளை அரசற்கு இறையாகக் கொடுக்கின்றானோ, அவனுக்கு அரசன் இருபதிலொரு கூறு தள்ளிவிடல் வேண்டும். ககஎ

நிலவறையில் எடுக்கப்படும் அரதனம் உலோகம் முதலியவற்றினின்றும் செலவு போக எஞ்சிய வருவாயிற் பொன்னிற் பாதியும், வெள்ளியில் மூன்றிலொரு கூறும், செம்பில் நான்கிலொரு கூறும், இரும்பு வெள்ளீயம் காரீயமாகிய இவற்றில் ஆறிலொரு கூறும், அரதனங்களிற் பாதியும் உப்பிற் பாதியும் அரசன் இறையாகக் கொள்ளக்கடவன். ககஅ இ

அரசன் உழவர் முதலிய வினைஞரிடத்தினின்றும் இறைகொள்ளுங்கால், அவர் தம் ஊதிய மிகுதி நோக்கி அதற்குத் தக அவ் விறைப்பொருளை மூன்று முறையாகவாதல், ஐந்து முறையாகவாதல், ஏழு முறையாகவாதல், பத்துமுறையாக வாதல், கொள்ளக்கடவன். ககசு

அரசன், புல் விறகு முதலியன கொண்டு விற்போனிடத்தினின்றும் இருபதிலொரு கூறும், வெள்ளாடு, செம்மறியாடு, பசு எருமை, குதிரை ஆகிய இவற்றின் பெருக்கத்தினின்றும் எட்டிலொரு கூறும், எருமை, வெள்ளாடு, செம்மறியாடு பசு ஆகிய இவற்றின் பால்வருவாயினின்றும் பதினாறிலொரு கூறும் கொள்ளக் கடவன். கஉ0

காருகத்தொழில் சிற்பத்தொழில் செய்வோரிடத்தினின்றும் பதினைந்து நாட்களுக் கொருமுறை ஒரு நாள் வேலையைக் கூலியின்

---

ககஎ. நூற்றுக்கு இருபதிலொரு கூறு ஐந்தாகும். இங்ஙனமன்றி நூற்றுக்கு இருபது கூறு தள்ளிவிடவேண்டுமென்றுங் கூறுப.

ககஅ இ. நிலவறை - சுரங்கம்.

கஉ0. பாலினின்றும் இறைகோடல் விலைப்பொருட்டுக்கொண்டுவிற்போனிடத்தென்க. ஒருவன் தன் குடும்பத்தின்பொருட்டுக் கொள்ளும் பாலினின்றும் இறைகொள்ளலாகாதென்பதை கஉஎ-ஆம் சுலோகத்திற் காண்க.

கஉக-கஉஉ. காருகத்தொழில் - பருத்தி நூல் அமைத்து ஆடையாக்கலும் சுமத்தலும், அகழ்தலுமாம். (சிலப் ரு-கஎ.உரை) சிற்பம்-தச்சுக் கொற்றொழில் ஓவியத் தொழில் முதலியன.

றிச் செய்வித்துக்கொள்ளல் வேண்டும். அதுவே அவர்பாற் கொள்ளும் இறையாகும். அரசியல் வளர்ச்சி குறித்துத் தடாகம் வாவி செயற்கையாறு ஆகிய இவற்றையும், இன்னும் இவை போன்ற பல காரியங்களையும் செய்வாராயின் அவரிடத்தினின்றும், புதிய நிலங்களைத் திருத்தஞ் செய்து உழுவோரிடத்தினின்றும், அவர்கள் அக்காரியங்களினிமித்தம் செலவிட்ட பொருட்கு இருமடங்கு வருவாய் பெறுங்காறும் அரசன் இறைப்பொருள்கொள்ளலாகாது. கஉக-கஉஉ

நிலவருவாயின் கூறு, வேதனம், சுங்கம், வட்டி, கைக்கூலி, அரசிறையாகிய இவ்வனைத்தையும் அவ்வப்பொழுதே வாங்குதல் வேண்டும். காலந் தாழ்த்தலாகாது. கஉ௩

அரசன் உழவுத்தொழில் புரிவோர்க்குத் தனித்தனியே தன் கையெழுத்து முத்திரை யிடப்பட்ட பாக பத்திரங் கொடுத்தல் வேண்டும். அன்றி, ஒரு கிராமப் பகுதியில் தனக்குக் கிடைக்க வேண்டிய இறைக்கூற்றை இவ்வளவென்று துணிந்து, அதனைக் கொள்ளும் உரிமையை ஒரு பெருஞ்செல்வன்பாற் கொடுத்து, அவனிடத்தினின்றும் முதலில் அவ் விறைப்பொருட்கு ஒத்த பிணையையாதல், அதற்கு ஒத்த பொருளையாதல் பெற்றுக்கொள்ளல் வேண்டும். அதன்பின், அவ் விறைப்பொருளைத் திங்கட் கொருமுறையாதல், இரண்டு திங்கட் கொருமுறை யாதல் ஈவுமுறையாகப்* பெற்றுக் கொள்ளல் வேண்டும். கஉச-கஉரு

அரசன் ஒரு கிராமத்தினின்றும் தனக்குக் கிடைக்கும் இறையில் பதினாறி லொரு கூறுதல், பன்னிரண்டி லொரு கூறுதல், பத்தி லொருகூறுதல், எட்டிலொருகூறுதல், ஆறிலொரு கூறுதல் கொடுத்து அக் கிராமத்திற்குத் தலைமை அதிகாரிகள் முதலியோரை நியமித்தல் வேண்டும். கஉசா

குடிகள் தம் குடும்பத்தின்பொருட்டுக் கொள்ளும் பசு முதலியவற்றின் பாலினின்றும் அரசன் இறை கொள்ளலாகாது. ஆடை

கஉ௩. காலந்தாழ்க்காமல் வாங்கவேண்டுமென இங்குக் கூறியவற்றுள் நிலவருவாயின் கூறு சுங்கம் அரசிறை என்னுமிவை அரசனுக்கும், வேதனம் கைக்கூலி வட்டி என்னுமிவை மற்றையோர்க்குங் கொள்க. கைக்கூலி வாங்கலாகாதென்று பலவிடத்துங் கூறியிருக்கின்றார்; அதனால் விளையும் பாவப்பயனை நோக்காது வாங்கத் துணிவார்க்குக் கூறிய நீதி.

கஉச. பாகபத்திரம் ஈண்டு இறையளவைக் குறிப்பிடுவதாகும்.

தானியங்களைத் தம் உபயோகத்தின்பொருட்டு விலை கொடுத்து வாங்குவோரிடத்திலும் இறைகோடலாகாது. கஉஎ

அரசன் வட்டித்தொழில் செய்வோரிடத்தினின்றும் வட்டி வூதியத்தில் முப்பத்திரண்டில் ஒரு கூறு இறை கொள்ளக்கடவன். உழவு நிலத்திற் கொப்ப இல்லம் தோட்டம் முதலியவற்றிற்கு ஆதாரமாகிய நிலத்தினின்றும் இறை கொள்ளுதல் வேண்டும். கஉஅ

அவ்வுழவு நிலத்திற் கொப்பவே வாணிகம் புரிவோரிடத்தினின்றும் அவர்தம் வாணிகச்சாலையுள்ள நிலத்திற்குஞ் சுங்கங் கொள்ளல் வேண்டும். வழிச்செல்வோரிடத்தினின்றும் அவ் வழியைத் திருத்தஞ் செய்து காத்தற்பொருட்டுச் சுங்கம் வாங்குதல்வேண்டும். கஉகூ

அரசன் குடிகள் எல்லோரிடத்தினின்றும் தனக்குக் கிடைக்க வேண்டிய இறைக்கூற்றைப் பெற்று நுகர்ந்துகொண்டு, அக் குடிகளின் பாதுகாப்பில் தொண்டனைப்போல் இருத்தல் வேண்டும். இங்ஙனம் கருவூலப் பிரகரணம் சுருக்கமாகக் கூறப்பட்டது. கங0

சுக்கிரநீதி நான்காம் அத்தியாயத்தில்,

"**கோச** நிரூபணம்" என்னும்

**இரண்டாம் பிரகரணம் முற்றிற்று.**



## மூன்றாம்பிரகரணம்.

(வித்தியா கலா நிரூபணம்.)

### க. சாதி ஆராய்ச்சி.

இனி, மிச்சிர மென்னும் இந் நான்காம் அத்தியாயத்தில் நாட்டைப் பற்றிய மூன்றும் பிரகரணத்தைச் சுருக்கிக் கூறுவேன். மரம் மலை முதலிய நிலையியற் பொருள்களும், மக்கள் பசு முதலிய இயங்கியற் பொருள்களும் இங்கு நாடு என்னுஞ் சொல்லாற் கூறப்படும். க

கஉஅ. உழவுநிலத்தினின்றுங் கொள்ளும் இறை யளவுகளை ககரு - ககசு - ஆம் சுலோகங்களிற் காண்க.

க, நிலையியல் - தாவரம். இயங்கியல் - சங்கமம்.

ஓரரசனுக்கு எத்துணை நிலவெல்லை அவன் ஆட்சிவயப்பட்டிருக்கின்றதோ அத்துணை நிலப்பரப்பு அவ்வரசனுக்குரிய நாடாகும். உ

பெரும்பொருள் படைத்தல் மற்றை எல்லாச் சிறப்புக்களினும் நூறுமடங்கு மிக்கதாகும். அதனினும் மிகச் சிறந்தது இறைமைத் தன்மையாகும். இவ் விரண்டும் குறுகிய தவத்தின் பயனாகா. (மிகப் பெரிய தவங்களின் பயனாகும்.) ௩

அவ் விறைமைத்தன்மை யுடையானே இந் நிலவுலகத்தில் தேவனாக விளங்குவான். அத் தன்மை யில்லாத பிறர் அங்ஙனங் கருதப் படுவாரல்லர். ௪

உலகத்து மக்கள், எவ்வரசனைப் பற்றி நிற்கின்றனரோ அவ்வரசனை யொப்பவே தாமும் ஒழுகுவர். ஆதலின், அந்நாட்டினராற் செய்யப்படும் நல்வினைப்பயனையும் தீவினைப்பயனையும் அவ் வரசன் நன்கு நுகர்பவனாவான். ௫

எவ் வரசனது நாட்டில் மக்கள் தத்தங் கடமைகளிற் பற்றுடையராக ஒழுகுகின்றனரோ அவ் வரசனே அறத்தையும் நீதியையும் உடையனாவான். நெடுங்காலம் நிலைபெறும் புகழையும் எய்துவான். ௬

இந் நிலவுலகத்தில் எவனுடைய புகழ் எத்துணைக் காலம் நிலைபெற்று விளங்குமோ அத்துணைக் காலம் அவன் விண்ணுலகத்தில் இன்பம் நுகர்ந்துகொண்டிருப்பான். ௭

ஒருவனுக்குப் பழியே நரகமாகும். அப்பழியை யன்றி மறுமையுலகத்தில் நரக மென்ப தொன்றில்லை. இம்மையில் மனிதவுடலல்லாத மற்றை உடல்களெல்லாம் நரகங்களேயாம். ௮

மனக்கவலை, உடற்பிணி யாகிய இவ் விரண்டனையும் பெருந் தீவினைப் பயனாக அறிதல் வேண்டும். ஆதலின், 'அரசன் தான் அறத்தில் நிலையுடையனா யிருந்து குடிகளையும் அறத்தில் நிலைப்படுத்தல் வேண்டும். அங்ஙனஞ் செய்தலாற் குடிகள் அறநெறி நின்று உலகத்திற்கு எடுத்துக்காட்டாக விளங்கும் அவ்வரசனைப் பின்பற்றுவர். ௯

அரசன், தன் நாட்டின் நலங் குறித்து என்றும் நிலையாகவுள்ள தேயதருமம், சாதிதருமம், குலதரும மாகிய இவற்றையும், முனிவரராற் கூறப்பட்ட பழைய புதிய அறங்களையும், முயற்சியுடையனாய் நன்கு ஆராய்ந்தறிந்து காக்கக்கடவன். அவன் இங்ஙனம் அவ் வறங்

களைக் காத்து நிலைப்படுத்தலால் திருவையும் புகழையுஞ் சிறப்புற எய்துவான். க0-கக

முற்காலத்திற் பிரமனால் தொழில்களைப் பற்றிச் சாதிகள் அந்தணர் முதலிய நான்காக வேறுபடுக்கப்பட்டன. கலப்பில்லாத அச்சாதிகளாலும், அநுலோமர், பிரதிலோமர் முதலிய கலப்புச் சாதிகளாலும் சாதிகள் அளவில்லாதனவாகும். அவை இத்துணைய வென்று வரையறுத்துக் கூறப்படுவன வல்ல. கஉ

பிறப்பினால் மக்களுக்குச் சாதிவேறுபாட்டைக் கருதினவர்களே அவர்தம் பெயர்வேறுபாட்டையும் தொழில்வேறுபாட்டையும் அறிந்தோராவர். சாதியின் வகைகளைச் சுருக்கிக் கூறுங்கால் அவை கருப்பையிற்றோன்றுவன, முட்டையிற்றோன்றுவன, வியர்வையிற்றோன்றுவன, வித்திற்றோன்றுவன என நான்குவகைப்படும். கங இ

பிறப்பினால் உயர்ந்தானொருவன் இழிந்தவர்களின் கூட்டுறவால் இழிந்தவருணத்தவனாவான். பிறப்பினால் இழிந்தானொருவன் சேர்க்கையால் உயர்ந்த வருணத்தவனாகமாட்டான். மக்களுக்கு உயர்ந்த தன்மையும் இழிந்த தன்மையும் காலநிலைக் கேற்றவாறு அவர்தம் செய்தொழில் வேற்றுமையாலும் குணங்களாலும் உண்டாவனவாம். வித்தைகள், கலைகள் ஆகிய இவற்றைப் பற்றிநிற்போர்க்கு அவற்றின் பெயராலும் சாதி கூறப்படும். கச-கரு

க0-கக. சாதி அந்தணர் முதலிய வருணங்களையும், குலம் ஒவ்வொரு வருணத்துள்ளும் உள்ள குடியையும் உணர்த்துவனவாம்.

கங இ. வேறுபாடு கருதினவர் மனு முதலிய பெரியோராவர். பெயர் வேறுபாடும் தொழில்வேறுபாடும் மக்கட்சாதியினர்க் கன்றி மற்றைப் புள் விலங்கு முதலியவற்றிற்கு இல்லை யென்பது கருத்து. கருப் பையிற் றோன்றுவன முதலியவற்றை முறையே சராயுசம், அண்டசம், சுவேதசம், உற்பிச்சம் என்ப வடநூலார்.

கச- கரு. உயர்ந்த வருணத்திற் பிறந்தானொருவன் ஒழுக்கக்கேடுடையனாயின் இழிந்த வருணத்தவனாவா னென்பதும், இழிந்த வருணத்திற் பிறந்தானொருவன் நல்லொழுக்க முடையனாயின் அவ் வருணத்திலேயே உயர்ந்த குலனுடையனாத லன்றி உயர்ந்த வருணத்தவனாகா னென்பதும் கருத்து. இக்கருத்துக்களை "ஒழுக்க முடைமை குடிமை யிழுக்கம், இழிந்த பிறப்பாய் விடும்" என்னுந் திருக்குறளாலும் அதற்குப் பரிமேலழகர் கூறிய விசேட உரையாலு முணர்க. வருணம் - அந்தணர் முதலிய சாதி. குலம் - ஒவ்வொரு சாதியினு முள்ள உயர்குடி.

## ௨. அந்தணர் முதலியோரின் தொழில்கள்.

அந்தணர், அரசர், வணிகராகிய இருபிறப்பாளர் மூவர்க்கும் பொதுவாகிய தொழில்கள்—**வேள்விசெய்தல், வேதமோதல், ஈதல்** ஆகிய இம் மூன்றுமாம். அந்தணர்க்கு மாத்திரம் சிறப்பாக வுள்ள தொழில்கள்—**ஏற்றல், ஓதுவித்தல், வேட்பித்தல்** ஆகிய இம் மூன்றுமாம். ௧௬

அரசர்க்குமாத்திரம் சிறப்பாகவுள்ள தொழில்கள்—**நல்லோரைக் காத்தல், தீயோரை யொறுத்தல், தமக்குரிய இறைக்கூறு கோள்ளல்** ஆகிய இம் மூன்றுமாம். வணிகர்க்கு மாத்திரம் சிறப்பாக வுள்ள தொழில்கள்—**உழவு, பசுக்காத்தல், வாணிகம்புரிதல்** ஆகிய இம் மூன்றுமாம். ௧௭

சூத்திரர் முதலியோர்க்குரிய தொழில்கள்—**ஈதல், பணிசெய்தல், சிறுதொழில் புரிதல்** முதலியனவாம். ௧௮

அந்தணர் முதலிய எல்லோர்க்கும் தத்தங் குடும்பத்தைத் தாங்குதற்பொருட்டுப் பல்வகைத் தொழில்வேறுபாட்டால் ஏற்படுஞ் சீவனோபாயம் பழிக்கப்படுவதன்று. அந்தணர் முதலியோர்க்கு உழவுத்தொழில் உழவுக் கருவியாகிய கலப்பையின் வேறுபாடுபற்றி மனு முதலியோராற் கூறப்பட்டுளது. ௧௯

அந்தணர்க்குப் பதினாறு எருதுகளையுடைய ஏரும், அரசர்க்குப் பன்னிரண்டெருதுகளையுடைய ஏரும், வணிகர்க்கு எட்டு எருதுகளையுடைய ஏரும், சூத்திரர்களுக்கு நான்கு எருதுகளையுடையஏரும், அவரிற்றாழ்ந்த பிறர்க்கு இரண்டு எருதுகளையுடைய ஏரும் உரியனவாம். அவை நிலங்களின்மென்மைநோக்கிக்கொள்ளப்படுவனவாம். ௨௦

ஐய மேற்றுண்டு வாழ்தல் அந்தணர்க்கன்றிப் பிறர்க்கு மிகவும் இழிவு தருவதாகும். ௨௧

இருபிறப்பாளர் மூவரும் பல வகையாக விதிக்கப்பட்ட சிறந்த தவங்களையும், விரதங்களையு முடையராய், உபநிடதங்களோடு கூடிய எல்லா வேதங்களையும் அறியக்கடவர். ௨௨

---

௨௦. இதன்கட் கூறிய ஏரளவு நிலங்களின் மென்மை நோக்கிக் கொள்ளப்படு மென்றமையால், நிலங்கள் வன்மையாக விருப்பின் கூறிய அளவின் மேற்பட்டு மிருக்கலா மென்பது கருத்து.

௨௧. ஐயம் - பிச்சை.

எவன் கல்விப்பயிற்சியுங் கலையறிவு முடையவனோ அவனே எல்லோர்க்கும் ஆசிரியனாவான். அங்ஙனம் பயின்றறியாதவன் சாதியான் மாத்திரம் ஆசிரியனாந் தகுதியுடையவனாகான். ௨௩

## ௩. வேத முதலியவற்றின் வகைகள்.

வித்தைகளும் கலைகளும் எல்லையில்லாதனவாம். அவை இத்துணைய வென்று அளவிட்டுரைக்கற்பாலன வல்ல. அவற்றுள், வித்தைகள் முப்பத்திரண்டும், கலைகள் அறுபத்து நான்கும் சிறந்தனவாக எண்ணப்படும். ௨௪

எக் காரியம் சொல்லளவான் முற்றும் நன்கு நிறைவேற்றத் தக்கதோ அது வித்தை என்னும் பெயராற் கூறப்படும். எக் காரியம் பேசும் ஆற்றலில்லாத ஊமனாலுஞ் செய்தற்குத் தக்கதாக வுள்ளதோ அது கலை என்னும் பெயராற் கூறப்படும். ௨௫

வித்தை கலை ஆகிய இவற்றின் பொதுவிலக்கணங்கள் சுருக்கமாகக் கூறப்பட்டன. இனிச் சிறப்பிலக்கணங்கள் தனித்தனியே கூறப்படும். இவற்றின் பெயர்கள் தனித்தனியாக வுள்ளன. ௨௬

இருக்கு, யசுசு, சாமம், அதருவம் என வேதங்கள் நான்காம். அவற்றிற்கு முறையே ஆயுர்வேதம், தநுர்வேதம், காந்தருவவேதம், தந்திரங்கள் என்னும் நான்கும் உபவேதங்களாகக் கூறப்பட்டுள்ளன. ௨௭

சிக்கை, வியாகரணம், கற்பம், நிருத்தம், சோதிடம், சந்தசு என்னும் இவை ஆறும் வேதங்களின் அங்கங்களாகக் கூறப்பட்டன. ௨௮

மீமாஞ்சை, தருக்கம், சாங்கியம், வேதாந்தம், யோகம், இதிகாசங்கள், புராணங்கள், அறநூல்கள், நாத்திகம், அருத்தநூல், காமநூல்,

---

௨௫. சொற்களால் வியவகரிக்கத் தக்கது வித்தை என்றமையால் வேதம் முதலியன அதன்[illegible] படும். ஊமனாலுஞ் செயற்பாலது கலை என்றமையால் நாட்டியம் முதலியன அதன்பாற் படும். இதனால் வித்தைக்கும் கலைக்கும் உரிய இலக்கணங்கள் கூறப்பட்டன.

௨௭. மூலத்தில் அதருவவேதத்தின் உபவேதம் தந்திரம் என்று கூறப்பட்டுள்ளது. பிற நூல்களிலெல்லாம் இஃது அருத்தவேத மென்று காணப்படுகின்றது.

௨௯-௩௦. சிற்பம் கலைகளுள்ளுங் கூறப்படும். அது செயற்படுங்காற் கலையாகும். அதன்முறை நூல்வாயிலாகக் கற்கப்படுங்கால் வித்தையின்பாற் படும்.

சிற்பம், அலங்காரம், காப்பியங்கள், தேயமொழி, அமயச்சொல், யவனமதம், ஒப்புரவறங்கள் ஆகிய இப் பதினெட்டும், முற் கூறிய வேதோபவேதங்கள் எட்டும், வேதாங்கங்கள் ஆறும், ஆக இம் முப்பத்திரண்டும் வித்தைக ளென்னும் பெயராற் கூறப்படுவனவாம். ௨௯-௩0

## ௪. முப்பத்திரண்டு வித்தைகளின் இலக்கணங்கள்.

இருக்கு முதலியவற்றிலுள்ள மந்திரங்களுக்கும் பிராம்மணங்களுக்கும் வேதம் என்னும் பெயர் கூறப்பட்டுளது. ௩௧

தேவர்களுக்கு உவகை தரத்தக்க செபம், ஓமம், அருச்சனை ஆகிய இவை வேதத்தின் எப் பாகங்களின் உச்சரிப்பாற் செய்யப்படுகின்றனவோ அப் பாகங்கள் மந்திரம் என்று கூறப்படும். அம் மந்திரங்களின் உட்கருத்துக்களையும், அவற்றை உபயோகப்படுத்தும் முறைகளையும் எடுத்துரைக்கும் பாகங்கள் பிராம்மணம் என்று கூறப்படும். ௩௨

காற்கூறாகிய பாதங்களாகவும் அரைக்கூறாகவும் படிக்கப்படும் இருக்கு வடிவமாகிய மந்திரங்களையும், ஓமத்தை நிறைவேற்றுதற்குரிய மந்திரங்களையும், அழகிய கதைகளையும் உடையது யாது. அஃது இருக்குவேதமென்று கூறப்படும். ௩௩

எதன்கண் ஒன்றோடொன்று இணைத்துப் படிக்கப்படும் மந்திரங்கள் உள்ளனவோ; விருத்த கீதங்கள் இல்லையோ; அத்துவரியு என்னும் வேள்வி வினைஞனுக்குரிய கன்மங்கள் கூறப்பட்டுள்ளனவோ;

யவனமதம் - யவனதேயத்தார து மதநூல். ஒப்புரவு - நூல்களானன்றி உலக நடை யறிந்து செய்தல். அது தேயங்கடோறும் வெவ்வேறு வகைப்பட்டு நிகழ்வதாம்.

௩௧. வேதங்களெல்லாம் மந்திரம் பிராம்மணம் என்னும் இரண்டு பிரிவினுள் அடங்கும் என்பது கருத்து.

௩௨. விதி, அருத்தவாதம், அநுவாதம் ஆகிய இம் மூன்றும் பிராம்மணம் என்று கூறப்படும். இப் பிராம்மணம் இதிகாசம், புராணம், வித்தை, உபநிடதங்கள், சுலோகங்கள், சூத்திரங்கள், வியாக்கியானங்கள், அநு வியாக்கியானங்கள் என எட்டுவகைப்படும்.

௩௩. இருக்குவேதத்தி லுள்ள பாடல்கள் காற்கூறாகவும், அரைக்கூறாகவும், முற்றுமாகவும் படிக்கப்படுதல் அத்தியயனக் கிரமத்தில் ஆன்றோரான் மேற்கொள்ளப்பட்டுள்ளது.

மந்திர பிராம்மணங்கள் மும்முறை படிக்கப்பட்டுள்ளனவோ அது **யசுர்வேத** மென்று கூறப்படும். ௩௪

வேள்வியிற் கூறப்படும் சத்திர வாக்கியங்களுக்கு உற்கீதம் விதிக்கப்பட்டிருப்பது சாம**வேத** மென்று கூறப்படும். ௩௫

உபாசிக்கப்படும் தேவர்களின் உபாசனை முறையைப் புலப்படுத்தும் வேதம் **அதருவாங்கிரசு** என்னும் பெயரை யுடையதாகும். இங்ஙனம் நான்கு வேதங்களின் இலக்கணங்கள் சுருக்கிக் கூறப்பட்டன. ௩௬

ஒருவன் எதனை யறிந்து ஒழுகுதலால் வாழ்நாள் மிகப் பெறுகின்றானோ; எதன் அறிவால் நோயின் நிலையும் அது தணிக்கும் மருந்தின் நிலையும் நன்குணர்ந்து, அவ் வுணர்ச்சி காரணமாக வாழ்நாளின் அளவை அறிகின்றானோ; அஃது இருக்குவேதத்தின் உபவேதமாகிய **ஆயுர்வேத** மென்னும் பெயரினை யுடையதாகும். ௩௭

எதன் அறிவாற் போர்ச்செயலிலும், அம்பு வாள் முதலிய படைக்கலப் பயிற்சியிலும், நால்வகைப் படைகளின் அணிவகுப்பிலும் திறமை யுண்டாகுமோ அது யசுர்வேதத்தின் உபவேதமாகிய **தநுர்வேத** மென்று கூறப்படும். ௩௮

உதாத்த முதலிய வேறுபாடுகளை யுடையனவும், கண்டத்தினின்றுங் கருவியினின்றுந் தோன்றுவனவும், தாளங்களை யுடையனவும் ஆகிய எழுவகைச் சுரங்களோடு கூடிய இசையினது சிறப்பறிவு எதனால் உண்டாகின்றதோ அது சாமவேதத்தின் உபவேதமாகிய **காந்தருவவேத** மாகும். ௩௯

உபாசித்தற்குரிய பலவகை மந்திரங்களின் உபசங்காரத்தோடுங் கூடிய அறுவகைப் பிரயோகங்களும், அவற்றின் தரும நியமங்களோடும், சிறந்த வேறுபாடுகளோடும் எதன்கட் கூறப்பட்டுள்ளனவோ அதுவே அதருவ வேதத்தின் உபவேதமாகிய **தந்திர** மென்று கூறப்படும். ௪0

௩௪. இணைத்துப் படிக்கப்படுதலைச் சங்கிதை என்று கூறுப.

௩௫. சத்திரம் - சஸ்திரம். சத்திர வாக்கியங்கள் - சுரங்களின்றித் தண்டாகாரமாகவுள்ள வாக்கியங்கள். உற்கீதம் - சாமவேதத்திற் பாடப்படும் இசை.

௪0. அறுவகைப் பிரயோகங்களாவன:—சாந்தி, வசீகரணம், தம்பனம், வித்துவேடணம், உச்சாடனம், மாரணம் என்பனவாம்.

உதாத்த முதலிய சுரங்களாலும், கால அளவையாலும், கண்டம், நா முதலிய இடங்களாலும், அங்காத்தல் முதலிய முயற்சிகளாலும், உச்சரிப்பு முதலியவற்றாலும் எழுத்துக்களின் பாடமுறையைப் பயிற்றுவது **சிக்ஷை** என்று கூறப்படும். ௪௧

பிராம்மண பாகங்களால் விநியோகங் கூறப்படாமல் எஞ்சிய வேத மந்திரங்களுக்கு வேள்விவினையிற் பிரயோக முறைகளைக் கூறுவது **சிரௌத கற்பமாகும்.** வேள்விவினை யல்லாத மற்றைக் கன்மங்களில் அவ் வேத மந்திரங்களுக்குப் பிரயோகமுறைகளைக் கூறுவது **சுமார்த்த கற்பமாகும்.** ௪௨

பிரத்தியயங்கள், தாதுக்கள், சந்திகள், சமாசங்கள், இலிங்கங்களாகிய இவற்றாற் சொற்களைத் தூய்மைப்படுத்துக் கூறுவது **வியாகரணமாகும்.** ௪௩

பிரகிருதி பிரத்தியய முதலியவற்றாற் பதங்களைத் தெளிவுறுத்திக் கூறுவதும், சொற்றொடர்களின் பொருள்களை ஒன்றுபடுத்திச் சுருக்கிக் கூறுவதும் **நிருத்தம்** என்று கூறப்படும். அது வேதங்களின் சொற்பொருள்களை நன்கு விளக்கிக் கூறுதலால் வேதபுருடனது **செவியுறுப்பாகும்.** ௪௪

---

௪௧. அங்காத்தல் - வாயைத்திறத்தல். உதாத்தம், அநுதாத்தம், சுவரிதம் என்னும் இவற்றை முறையே எடுத்தல், படுத்தல், நலிதல் என்று தமிழியனூல் கூறும்.

௪௨. வேதங்களிற் கூறப்பட்ட மந்திரங்களின் விநியோகமுறைகள் பெரும் பாலும் வேதப்பிராம்மணங்களாலேயே கூறப்பட்டன. அங்ஙனங் கூறப்படாமல் எஞ்சிய மந்திரங்களுள் வேள்விவினைக் குரியவற்றைக் கூறுவது சிரௌத கற்பமெனவும், வேள்வியல்லாத மற்றைக் கன்மங்களுக் குரியவற்றைக் கூறுவது சுமார்த்த கற்பமெனவு முணர்க.

௪௩. பிரத்தியயம்-வேற்றுமையுருபு வினையுருபு சாரியை முதலியன. தாது-பெயர் வினைகளின் முதனிலை. சந்தி-உயிர் மெய்முதலியவற்றின் புணர்ச்சி. சமாசம் - வேற்றுமைத்தொகை முதலிய தொகைநிலைகள். இலிங்கம் - ஆண் பெண் நபுஞ்சகங்களாம்.

௪௪. பிரகிருதி - பகுதி; முதனிலை. வேதபுருடனுக்கு சந்தசு பாதங்களும், கற்பம் கைகளும், நிருத்தம் காதுகளும், சிக்ஷை நாசியும், சோதிடம் கண்களும், வியாகரணம் முகமு மாம் என்று கூறுப. இதனை, "கற்பங் கைசந் தங்கா லெண்கண், தெற்ற நிருத்தஞ் செவிசிக் கைமூக், குற்ற வியாகர ணமுகம் பெற்றுச், சார்பிற் றோன்று மாரண வேதம்" என்பதனானுமுணர்க. (மணிமேகலை ௨௭. ௧௦௦-௧௦௩.)

எதன்கண் நாள் கோள்களின் கதிகளாலும், சங்கிதைகளாலும், ஓரைகளாலும், கணிதங்களாலும் தனித்தனியே காலஅளவு உணர்த்தப்பட்டுள்ளதோ அது **சோதிடமாகும்.** சரு

மகண முதலிய எண்வகைக் கணங்கள், குரு, இலகு ஆகிய இவ் அளவுகளால் எதன்கட் பாட்டிலக்கணம் கூறப்பட்டுள்ளதோ அது **வேதபுருடனின் பாத** வடிவமாகிய **சந்தசு** ஆகும். சசு

கன்மங்களின் விதிவேறுபாட்டால் *வேத வாக்கியங்களுக்கு எதன்கட் பொருட்டுணிவு செய்யப்பட்டுள்ளதோ, அது **மீமாஞ்சை** யென்று கூறப்படும். காட்சி முதலிய அளவைகளால் உண்மை இன்மைப் பதார்த்தங்களை யாராய்ந்து தெளிவுறுத்தும் நியாயமும், அங்ஙனமே தெளிவுறுத்தும் கணாதன் முதலியோர் மதமும் **தருக்கம்** என்று கூறப்படும். சஎ-சஅ

புருட தத்துவம் ஒன்றும், மூலப் பகுதி முதலிய தத்துவங்கள் எட்டும், மனம்முதலிய விகாரத்தத்துவங்கள் பதினாறும் ஆகிய தத்து

---

சரு. சோதிடநூல் சங்கிதைக் கந்தம் (ஸம்ஹிதாஸ்கந்த), ஓரைக்கந்தம் (ஹோராஸ்கந்த), கணிதக்கந்தம் (கணிதஸ்கந்த) என மூன்று வகைப்படும். சங்கிதைக் கந்தத்தில் உலகத்து மக்களுடையவும், விலங்கு மழை முதலிய எல்லாப் பொருள்களுடையவுமாகிய ஆக்கக் கேடுகளும், ஓரைக் கந்தத்தில் சாதகம் பிரசினம் முகூர்த்தங்களும், கணிதக் கந்தத்தில் கோளம் கணிதங்களும் கூறப்பட்டுள்ளன. சங்கிதையும் ஓரையும் பலன் கூறு மியல்பால் ஒக்குமாயினும் சங்கிதை தொகுதியாகவும், ஓரை பகுதியாகவும் பலன்களைக் கூறுமென்பதுபற்றி வேறுபடுக்கப்பட்டன. நாள் - நக்ஷத்திரம். கோள் - கிரகம்.

சசு. கணங்கள் ம, ய, ர, ஸ, த, ஜ, ப, ந என எண்வகைப்படும். குரு இரண்டு மாத்திரையுடையது. நெடிலும், இணையெழுத்தின் முன்னுள்ள குறிலும், அநுசுவாரத்தையும் விசர்க்கத்தையும் இறுதியிலுடைய எழுத்துக்களும் குரு என்று கூறப்படும். இலகு - ஒருமாத்திரையுடையது; குறில். வடமொழிச் செய்யுட்கள் எழுத்துக்களைப் பற்றினவும், மாத்திரைகளைப் பற்றினவும் என இருவகைப்படும். மகணமுதலியவற்றால் எழுத்தளவும், குரு இலகுக்களால் மாத்திரையளவும் எண்ணப்படும்.

சஎ-சஅ. நியாயத்திற்குக் கௌதமமுனிவரும், வைசேடிகத்திற்குக் கணாதமுனிவரும் ஆசிரியராவர்.

சகூ. மூலப்பகுதி முதலிய தத்துவங்கள் எட்டாவன:—மூலப்பகுதியும், அதன்கட் டோன்றிய மானும், அதன்கட் டோன்றிய அகங்காரமும், அதன்கட் டோன்றிய தன்மாத்திரைகள் ஐந்துமாம். மனம் முதலிய தத்துவங்கள் பதினாறுவன:—மனமும், ஞானேந்திரியங்களைந்தும், கன்மேந்திரியங்களைந்தும், பூதங்களைந்துமாம். மான் - மஹாந்; அது மகத்தத்துவம். அதனைச் சாங்கியநூலார் புத்தி

வங்கள் இருபத்தைந்தும் பிறவும் எண்ணப்பட்டுக் கூடியிருப்பது **சாங்கியம்** என்று கூறப்படும். ௪௯

ஏகமாகவும், அத்துவிதீயமாகவும் பிரமப் பொருள் ஒன்றுள்ளது; அஃது ஈண்டுப் பலவாக இல்லை; அதனை யல்லாத பிறவெல்லாம் அறியாமையால் உண்மையைப் போல் விளங்கும் பொய்ப் பொருள்களாம் என்பது வேதாந்திகளின் மதம். அதுவே **வேதாந்த** மென்று கூறப்படும். ௫௦

தியான சமாதிகளாலே பிராணவாயுவை யடக்கலும், அதனாற் சித்த விருத்தியைப் பொறி வழியே புலன்களிற் செல்லவொட்டாது தடுத்தலும் எதன்கண் விளக்கப்பட்டுள்ளனவோ அது **யோகநூ**லென்றறியற்பாலது. ௫௧

ஓரரசனது ஒழுகலாறு முதலியவற்றைத் தலைக்கீடாகக் கொண்டு அதனாற் பண்டை நிகழ்ச்சிகளை எடுத்துக்கூறுவது **இதிகாசமாகும்.** அதுவே **புராவிருத்த** மென்றுங் கூறப்படும். ௫௨

உலகத்தோற்றம், ஒடுக்கம், முனிவர் அரசர் மரபு, அவர்தம் சரிதம், மனுவந்தரங்கள் ஆகிய இவற்றை விளக்குவது **புராண**மென்று கூறப்படும். ௫௩

வேதங்களுக்கு மாறுபாடில்லாத வருணாச்சிரம தருமங்களை நினைப்பூட்டுவதும், பொருணூற் பகுதிகளைக் கூறுவதும் **அறநூ**லென்று கூறப்படும். ௫௪

உலகத்துப் பொருள்களின் தோற்றக் கேடுகள் இயற்கையாக நிகழ்வன வெனவும், அவற்றிற்கு ஒரு கருத்தா வேண்டாமையின் கடவுள் இல்லை யெனவும், அக் கடவுள் முதலிய பொருள்களைப் பற்றிக் கூறும் வேதங்கள் பிரமாணமாகா வெனவும் துணிந்து, யுத்தி வன்மையைக் கடைப்பிடித்து நிகழ்வது **நாத்திகமாகும்.** ௫௫

வேதம் அறநூல்களுக்கு முரணாமல் அரசனது செங்கோன் முறை முதலியவற்றை வரையறுத்துக் கூறுவதும், பொருளீட்டுதற்

---

என்பர். தன்மாத்திரைகளைந்தாவன:—சுவையும், ஒளியும், ஊறும், ஓசையும், நாற்றமு மாம். மற்றவை வெளிப்படை. இன்னும் இவற்றின் இயல்புகளை, "சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின், வகைதெரிவான் கட்டே யுலகு." என்னும் திருக்குறட்குப் பரிமேலழகர் எழுதிய வுரையானு முணர்க.

௫௦. அத்துவிதீயம் - இரண்டற்றது.

௫௨. தலைக்கீடு - வியாஜம். புராவிருத்தம் - பண்டை நிகழ்ச்சி.

௫௪. அறநூல் - ஸ்மிருதி.

குரிய சிறந்த உபாயங்களை விளக்கிக்காட்டுவதும் பொருணூலென்று கூறப்படும். ருசு

முயற்சாதி முதலிய சாதிவேறுபாட்டாலும், குணஞ்செயல்களைப் பற்றிய அநுகூலன் முதலிய பெயர்வேறுபாட்டாலும் தலைவரின் இலக்கணங்களையும்; பதுமினி முதலிய சாதிவேறுபாட்டாலும், குணஞ்செயல்களைப் பற்றிய சுவீயை முதலிய பெயர்வேறுபாட்டாலும் தலைவியர் இலக்கணங்களையும்; அவ் விரு திறத்தாரின் காதற்குறிப்பு முதலியவற்றின் இலக்கணங்களையும் விளக்கிக் கூறுவது இன்பநூலாகும். ருஎ

தேவாலயங்கள், அரண்மனைகள், பிரதிமைகள், ஆடற் பூஞ்சோலைகள், இல்லங்கள், வாவிகள் ஆகிய இவை முதலியவற்றை நன்கு இயற்றும் முறைகள் எதன்கண் விளக்கிக் கூறப்பட்டுள்ளனவோ அதுவே சிற்பநூலாகுமென்று பெரியோர் கூறுப. ருஅ

ஒப்புக் குறைவு மிகுதிகளாலும், பொதுத்தன்மை முதலிய வேறுபாடுகளாலும், பொருள்களின் ஒன்றுக்கொன்றுள்ள குணங்களைப் பற்றிய அணிகள் எதன்கண் வருணித்துக் கூறப்பட்டுள்ளனவோ அஃது அணிநூலாகும். ருகூ

ஒன்பான் சுவைகளையும், உவமை முதலிய அணிகளையும் உடையவாய்க் குற்றமற்று விளங்குஞ் சொற்பொருள்களே காப்பிய மென்று கூறப்படும். அது செய்யுணடை, உரைநடை முதலிய வேறுபாடுகளை யுடையதாய், இவ் வுலகத்தி லில்லாத வியப்பு மிக்க இன்பத்தின் காரணமாகும். சு0

---

ருஎ. தலைவர், சாதிவகையால் முயல், மான், குதிரை, யானை யாகிய இந் நான்கு திறத்தின ராவ ரெனவும், குணஞ்செயல்களால் அநுகூலன், தட்சிணன், திருட்டன், சடன் என நான்குவகைப்படுவரெனவும்; தலைவியர், சாதிவகையால் பதுமினி, சங்கினி, சித்திரிணி, அத்தினி என நான்கு வகைப்படுவரெனவும், குணஞ்செயல்களால் சுவகீயை, பரகீயை, சாமானியை யென மூன்று வகைப்படுவ ரெனவும் அறிக. இவற்றின் விரிவுகளும், தலைவர் தலைவியரின் காதற்குறிப்பு நிகழும் முறைகளும், பிறவும் காமநூல்களில் விளக்கிக் கூறப்பட்டுள்ளன.

ருகூ. ஒப்புக் குறைவு மிகுதிகள் உருவக முதலிய அணிகளிலும், பொதுத்தன்மை முதலியன உவமை முதலிய அணிகளிலும் காணப்படும், எல்லா அணிகளும் உவமையை மூலமாக வுடையன வாகும்.

சு0. ஒன்பான் சுவைகளாவன:—காமம், நகை, கருணை, வீரம், உருத்திரம், அச்சம், இழிப்பு, வியப்பு, சாந்த மென்பனவாம்.

நிகண்டுகளுடையவும், மற்றை நூல்களுடையவுமாகிய சங்கேதங்களாலன்றி உலகத்து மக்கள் வழக்கின் சங்கேத ஆற்றலாற் பொருளை எளிதிலுணர்த்துவதும், உலகியற் காரியங்களுக்குத் துணைசெய்வதுமாகிய சொற்றிரள் தேயமொழியாகும். ௬௧இ

அவ்வக் காலத்திற் கேற்பக் கூறப்படுஞ் சொல் அமயச்சொல்லாகும். ௬௨

எப்பொழுதுங் காணப்படாத கடவுள் இவ் வுலகிற்குக் காரணமாக உண்டு எனவும், தருமாதருமங்கள் வேதம் அறநூல்களின் பிரமாணமில்லாமலே உள்ளன எனவும் கூறுவது யவனமத நூலாகும். அவ் யவன மதத்தில் வேத முதலியவற்றிற்கு முரணாக வுள்ள தருமங்களுங் காணப்படும். ௬௩

ஒவ்வொரு தேயத்திலும் ஒவ்வொரு குலத்திலுமுள்ள மக்களால், எப்பொழுதும் வேதமூலமாக வுள்ளனவும் அஃதில்லாதனவுமாக மேற்கொள்ளப்பட்ட ஒழுக்கங்கள் யாவை அவை ஒப்புரவறுங்களாம். ௬௪

இதுகாறும், வித்தைகளின் இலக்கணங்கள் தனித்தனி நன்கு விளக்கிக் கூறப்பட்டன. கலைகளுக்குத் தனியே பெயரும் இலக்கணங்களும் ஈண்டில்லை. தனித்தனியே பல்வேறு வகைப்பட்ட தொழில்களாற் கலையின் வேறுபாடுகள் உண்டாயின. எவ்வெக் கலைகளை யார்

௬௧இ. சங்கேதமாவது - இச்சொல்லால் இப்பொருள் உணரற்பாலது என்றுதல், இச் சொல் இப்பொருளை யுணர்த்துக என்றுதல் இங்ஙனம் சொற்கண் உள்ள பொருளை அறிவிக்கும் ஓர் ஆற்றலாகும். இதனைச் சமயவாற்றல் எனவுங் கூறப. சொற்கள் இயற்சொல், திரிசொல் முதலியவாகப் பலதிறப்படும். அவற்றுள், திரிசொற்கள் நிகண்டுகளாலும் மற்றை நூல்களாலும் அரிதுணர் பொருளனவாய் உணரப்படுவனவாம். ஆதலின், அந்நூல்களா னன்றி உலகவழக்கிற் பொருளுணர்த்தும் இயற்சொற்களின் கூட்டமே ஈண்டுத் தேயமொழி யென்று கூறப்பட்டதாகும். உலகியற் காரியங்களுக்கு இயற்சொற்கள் துணையாதலையும், திரிசொற்கள் அங்ஙன மாகாமையையும் அநுபவத்திற் காண்க.

௬௨. அமய மறிந்து கூறப்படுஞ் சொல் அரிதாதலின் அதுவும் வித்தைகளுள் ஒன்றாயிற்று.

௬௪. ஒப்புரவு-உலகநடை. இதனைப் பரிமேலழகர் "உலகநடைவேதநடை போல அறநூல்களுட் கூறப்படுவதன்றித் தாமே அறிந்து செய்யுந் தன்மைத்து" என்பர். (திருக்குறள் - ௨௨ - ஆம் அதி, அவதாரிகை.)

யார் மேற்கொண்டு ஒழுகுகின்றனரோ அவ்வக் கலைகளின் பெயரால் அவரவர் சாதி கூறப்படும். சுரு-சுசு

## ரு. அறுபத்துநான்கு கலைகள்.

உள்ளக் குறிப்புக்களையும், அவற்றை வெளிப்படுத்தற்குரிய கண் முதலிய உறுப்புத் தொழில்களையு முடைய ஆடல் (க) ஒரு கலையாக எண்ணப்படும். (இது நாட்டியமாகும்.) பலவகை இசைக் கருவிகளைச் செய்வதிலும் அவற்றை வாசித்தலிலு முள்ள அறிவு (உ) ஒருகலையாகும். சுஎ

ஆடவர் மகளிராகிய இருதிறத்தினர்க்கும் ஆடை அணிகலன்களால் அழகு மிக ஒப்பனை செய்தல் (ங) ஒரு கலையாகும். பலவகை உருவங்களைத் தோற்றுவிக்கும் செயற்கண் உள்ள அறிவு (ச) ஒரு கலையாகும். சுஅ

அமளி யமைத்தல், கம்பலம் விரித்தல், மலர் முதலியன கட்டுதல் ஆகிய இவை (ரு) ஒரு கலையாகும். சூது முதலிய பலவகை விளையாட்டுக்களால் உலகத்தை மகிழ்வித்தல் (சு) ஒரு கலையாகும். சுசு

பலவகை இருக்கைகளாலும், புணர்ச்சிகளாலும், சுரதத்தை யறிதல் (எ) ஒரு கலையாகும். இவ் வெழுவகைக் கலைகளும் காந்தருவவேதத்தில் நன்கு கூறப்பட்டனவாம். எ0

மலர்களிலுள்ள தேன்களாலும் குடிநீர் முதலியவற்றையும், கள் முதலியவற்றையும் உண்டாக்கல்(அ)ஒரு கலையாகும். உடலில் தைத்த அம்பு முதலியவற்றை வருத்தமுறாது மெல்ல வெளிப்படுத்துதலிலும், நரம்புக் கொப்புளங்களை அறுத்து ஆற்றுதலிலும் உள்ள அறிவு (கூ) ஒரு கலையாகும். எக

பெருங்காய முதலிய மணப் பொருள்கள், உப்பு முதலியசுவைப் பொருள்கள் ஆகிய இவற்றின் சேர்க்கையால் சோறு கறி முதலியன வாக்கல் (க0) ஒரு கலையாகும். மர முதலியவற்றிற் பழ முதலியன

---

சுஅ. ஒப்பனை செய்தல் - அலங்கரித்தல். உருவங்களைத் தோற்றுவித்தல் - வேடங் காட்டி நடிப்பித்தல்; இந்திரசால முதலியனவுமாம்.

சுசு. அமளி-படுக்கை.

எ0. சுரதம்-ஆடவரும் மகளிரும் கூடிப் புரியும் இன்ப விளையாடல்.

உண்டாகச் செய்தலும் அவற்றைக் காத்தன் முதலிய செயல்களும் (௧௧) ஒரு கலையாகும். ௭௨

மலைக் கற்களையும் பொன் முதலிய உலோகங்களையும் பிளத்தலும், அவற்றை நீறுக்கலும் (௧௨) ஒரு கலையாகும். கருப்பஞ் சாற்றினாற் பாகு, வெல்லம், சருக்கரை முதலியன செய்யுமறிவு (௧௩) ஒரு கலையாகும். ௭௩

பொன் முதலிய உலோகங்களையும் மூலிகைகளையும் ஒன்றோடொன்று சேர்க்குமறிவு (௧௪) ஒரு கலையாகும். கலப்பாக வுள்ள பொன், வெள்ளி முதலிய உலோகங்களைத் தனித்தனியே பிரித்தெடுக்கும் செயல் (௧௫) ஒரு கலையாகும். ௭௪

உலோக முதலியவற்றின் கலப்பைப் புதிய முறையில் ஆராய்ந்தறிதல் (௧௬) ஒரு கலையாகும். உப்பு முதலியவற்றை ஆக்கலும், அவற்றைப் பிற பொருள்களினின்றும் வெளிப்படுத்தலும் (௧௭) ஒரு கலையாகும். இப் பத்துக் கலைகளும் ஆயுர்வேதத்தின்பாற் படுவனவாம். ௭௫

அடி முதலியவற்றின் வைப்புமுறைகளை மேற்கொண்டு வாள் முதலிய படைகளாற் குறி வைத் தெறிதல் (௧௮) ஒரு கலையாகும். உறுப்புச் சந்திகளிற் றாக்குதல், பிடித்திழுத்தன் முதலிய செயல் வேறுபாடுகளாற் செய்யப்படும் மற்போர் (௧௯) ஒரு கலையாகும். ௭௬

மற்போர் செய்யும் வீரர்களின் கைப்போர், வாள் முதலிய படைகளின்றி விரன் மடக்கிய கைகளாற் செயற்பாலதாம். அம்மற்போரில் இறந்த வீரனுக்கு இம்மையிற் புகழும் மறுமையில் இன்பமும் உண்டாகா. ௭௭

பகைவனுடைய ஆற்றலும் செருக்கும் அழியுங்காறுஞ் செய்யப்படும் மற்போர் ஒருவனுக்கு மிக்க புகழை விளைப்பதாகும். அம் மற்போரை உயிர்க்கு அழிவுண்டாம்வண்ணஞ் செய்தலாகாது. ௭௮

ஒருவன் தன்செயல் எதிர்ச்செயல்களாலும், மிக்க அச்சத்தை விளைவிக்கும் பல் வகைக் கைவினைகளாலும், பகைவனை வீழ்த்தி மேலேறுதலாலும், விரன் மடக்கிக் குத்துதலாலும், பகைவன் சோர்ந்திருக்குங்கால் அவனைப் பிசைதலாலும் செய்யும் மற்போர் நிபீடனம்

௭௨. பழ முதலியன உண்டாக்கலை இவ்வத்தியாயம் ௪-ஆம் பிரகரணம் ௫௧, ௫௨, ௫௩ - ஆம் சுலோகங்களிற் காண்க.

என்றறியற்பாலது. அந் நிபீடனத்தினின்றும் விடுதிபெறுதல் பிரதிக் கிரியை என்று கூறப்படும்.
எகூ

ஓரிடத்தைக் குறிவைத்து எந்திரம் அம்பு முதலியவற்றை அங்குச் செலுத்தல் (௩0) ஒருகலையாகும். போர்ப்பறை முதலியவற்றின் குறிப்புக்களாற் படைக்ளின் அணிவகுப்பு முதலியன செய்தல் (௩க) ஒரு கலையாகும்.
அ0

யானை, குதிரை, தேர் இவற்றின் கதி விசேடங்களாற் போரிற் கலத்தல் (௩உ) ஒரு கலையாகும். இவ் வைந்து கலைகளும் **தநுர்வேதத்தின் கண் உள்ளனவாம்.**
அக

பலவகை இருக்கைகளாலும் முத்திரைகளாலும் தெய்வங்களை மகிழ்வித்தல் (௩௩) ஒருகலையாகும். தேர் செலுத்துந் திறமையும் யானை குதிரைகளுக்கு நடை கற்பிக்குந் தொழிலும் (௩ச) ஒருகலையாகும்.
அஉ

மண், மரம், கல், பொன் வெள்ளி முதலிய உலோகங்க ளாகிய இந் நால்வகைப் பொருள்களாலும் தனித்தனியே பாண்டம் முதலியன அழகுறச் செய்தல் (௩ரு, ௩சா, ௩எ, ௩அ) நான்கு கலைகளாகும். ஓவியம் முதலியன வரைதல் (௩கூ) ஒருகலையாகும்.
அ௩

வாருணி வாவி மேன்மாளிகை யமைத்தலும், நிலத்தை மேடு பள்ளமின்றிச் சமனுக்கலும் (ச0) ஒரு கலையாகும். நாழிகைவட்டின் முதலிய பலவகை எந்திரங்களையும், வாச்சியக்கருவிகளையும் செய்தல் (சக) ஒரு கலையாகும்.
அச

மிகுதி குறைவு சமனுகிய அளவுகளாற் சேர்க்கப்பட்ட பல் வகை வண்ணப் பொருள்களால் ஆடை முதலியவற்றிற்கு நிறந் தீற்றல் (சஉ) ஒரு கலையாகும். நீர் நெருப்புக் காற்றுக்களின் சேர்க்கை

---

அஉ. இருக்கைகளாலும் முத்திரைகளாலும் மகிழ்வித்தலாவது:—தெய்வத் திருவுருவங்களை நிற்றல் இருத்தன் முதலிய நிலைகளில் வைத்து அலங்கரித்துக் கைமுத்திரைகாட்டி உவகை யுறுத்தல். இக்கலை தந்திரமென்னும் உபவேதத்தின் பாற் படுமென்று உய்த்துணரற்பாற்று. இதன்பின்னுள்ள உச - ஆம் கலைமுதற் கூறப்படும் மற்றைக் கலைகளெல்லாம் உபவேதங்களைச் சாராமல் பொதுவாக மக்களுக் குரியனவாம்.

அச. சஎ-ஆம் சுலோகத்திற் கூறிய இசைக்கருவிகள் நாட்டியத்திற் குரியனவாகும். ஈண்டுக் கூறிய வாச்சியக் கருவிகள் அவையல்லாத பிறவாம். நாழிகை வட்டில் - கடிகாயந்திரம்.

யாலும், அவற்றைத் தடைப்படுத்திச் செலுத்தலாலும் செய்யப்படும் எந்திரத்தொழில் (௩௩) ஒரு கலையாகும். அரு

தோணி தேர் முதலியன செய்யும் அறிவு (௩௪) ஒரு கலை யாகும். நூல்நூற்றல், கயிறுமுறுக்கல் முதலியன செய்யும் அறிவு (௩௫) ஒரு கலையாகும். அசு

பலவகை நூல்களின் இயைபால் ஆடை நெய்தல் (௩௬) ஒரு கலையாகும். அரதனங்களைச் சாணை தீர்தல், துவாரமிடல் முதலியன செய்தற்கண் உள்ள அறிவின் ஏற்றத்தாழ்வு (௩௭) ஒரு கலை யாகும். அஎ

பொன் முதலிய உலோகங்களின் உண்மைநிலையை ஆராய்ந்தறிதல் (௩௮) ஒரு கலையாகும். செயற்கைப்பொன், செயற்கை அரதனங் களைச் செய்யும் அறிவு (௩௯) ஒரு கலை யாகும். அஅ

பொன் முதலியவற்றால் அணிகலன்கள் செய்தல் (௪0) ஒரு கலையாகும். உருக்கிய பொன் முதலியவற்றால் மற்றை உலோகப் பொருள்களுக்குப் பூச்சிடல் (௪௧) ஒரு கலையாகும். தோல்களுக்கு மென்மை முதலிய பதனிடல் (௪௨) ஒரு கலையாகும். அகூ

பசு முதலியவற்றின் உடல்களினின்றும் தோலுரித்தெடுத்தல் (௪௩) ஒரு கலையாகும். பசு முதலியவற்றினின்றும் பால்கறத்தன் முதல் நெய்யுருக்குதல்வரை யுள்ள செயல்களின் அறிவு (௪௪) ஒரு கலையாகும். கூ0

குப்பாயம் முதலியன தைத்தற்கண் உள்ள அறிவு (௪௫) ஒரு கலையாகும். நீரிற் கை முதலியவற்றால் நீந்திக் கடத்தல் (௪௬) ஒரு கலையாகும். கூக

இல்லத்தின்கண் உள்ள பாண்டம் முதலியவற்றைத் தூய்மை யுற விளக்கும் அறிவு (௪௭) ஒரு கலையாகும். ஆடைகளை யொலித்தல் (௪௮) ஒரு கலையாகும். மயிர் களைதல் (௪௯) ஒரு கலையாகும். கூ௨

எள் இறைச்சி இவற்றினின்றும் நெய் வெளிப்படுத்தல் (௫0) ஒரு கலையாகும். கலப்பை முதலியவற்றான் உழுதல் (௫௧) ஒரு கலை யாகும். மரம் முதலியவற்றில் ஏறுதல் (௫௨) ஒரு கலையாகும். கூ௩

---

அரு. இத்தொழில் இக் காலத்தில் நீராவியால் புகைவண்டி முதலிய வற்றைச் செலுத்தும் வினையை நினைவுறுத்துவதாகும்.

கூ௨. ஒலித்தல் - அழுக் ககற்றல்.

ஒருவற்கு மன முவக்கப் பணிவிடை செய்தற்கண் உள்ள அறிவு (௫௩) ஒரு கலையாகும். மூங்கில், புல் முதலியவற்றாற் பெட்டி முதலியன செய்தற்கண் உள்ள அறிவு (௫௪) ஒரு கலையாகும். ௯௪

காசபாத்திரம் முதலியன செய்தற்கண் உள்ள அறிவு (௫௫) ஒரு கலையாகும். நீர்கொணர்தல் நீர் தெளித்தல் முதலியன (௫௬) ஒரு கலையாகும். ௯௫

இரும்பினால் அம்பு வாள் முதலிய ஆயுதங்கள் செய்யும் அறிவு (௫௭) ஒரு கலையாகும். யானை, குதிரை, எருது, ஒட்டகம் ஆகிய இவற்றின் பிடர்க்கண் இடும் தவிசு முதலியன அமைக்கும் அறிவு (௫௮) ஒரு கலையாகும். ௯௬

குழந்தைகளை வளர்த்தலும் தாங்குதலும் குழந்தைகளோடு விளையாடுதலும் (௫௯) ஒரு கலையாகும். ஒருவன் குற்றஞ் செய்யின் அவனை அதற்குத் தக ஒறுத்தல் (௬0) ஒரு கலையாகும் ௯௭

பல தேயங்களிலும் வழங்கும் எழுத்துக்களை நன்கு எழுதப் பழகும் அறிவு(௬௧)ஒரு கலையாகும். வெற்றிலை பாக்கு முதலியவற்றைச் சித்தப்படுத்தல் பேணுதல் முதலியன (௬௨) ஒரு கலையாகும். ௯௮

இக் கலைகளைக் கொள்ளுதற்கண் விரைவுத்தன்மையும் கொடுத்தற்கண் தாழ்த்தற்றன்மையும் ஆகிய இரு குணங்களையும் மேற்கொள்ளல் வேண்டும். இவ் விரு குணங்களும் (௬௩-௬௪) இருகலைகளாகக் கூறப்படும். ௯௯

இங்ஙனம் அறுபத்து நான்கு கலைகளும் சுருக்கமாகக் காட்டப்பட்டன. இக் கலைகளுள் எதனை யெதனை எவனெவன் திறமையோடு மேற்கொண்டுள்ளானோ அதனையதனை அவனவன் செவ்விதிற் செய்யுந் திறனுடையனாதல் வேண்டும். ௧00

சுக்கிரநீதி நான்காம் அத்தியாயத்தில்,

நாட்டைப்பற்றிய முதலாவதாகிய

**"வித்தியா கலா நிரூபணம்"** என்னும்

**மூன்றாம் பிரகரணம் முற்றிற்று.**



---

௧௫. காசபாத்திரம் - கண்ணாடி செய்யும் ஒளிமிக்க ஒருவகை மண்ணாற் செய்யப்படுவது. இது பீங்கான் பாத்திரமென்றுங் கூறப்படும்.

## நான்காம் பிரகரணம்.

### (உலக தருமே நிரூபணம்.)

---

### க. நால்வகை ஆச்சிரமங்கள்.

அந்தணர்க்கு முறையே பிரமசரியம், காருகத்தம், வானப்பிரத்தம், சந்நியாசம் என்னும் இந்நால்வகை நிலைகளும் எப்பொழுதும் உரியனவாம். மற்றை அரசர், வணிகர், வேளாளர் ஆகிய மூவர்க்கும் இறுதியதாகிய சந்நியாச மல்லாத மற்றைய மூவகை நிலைகளும் தனித்தனி உரியனவாம். க

கல்விப் பயிற்சி செய்தற்பொருட்டு ஓது நிலையும், பிற நிலைகளையுடையார் எல்லாரையுங் காத்தற்பொருட்டு இன்னிலையும், பொறிகளை யடக்கி யாளுதற்பொருட்டுக் காடுறைநிலையும், வீட்டின்பந் துய்த்தற்பொருட்டுத் துறவுநிலையும் மேற்கொள்ளற்பாலனவாம். உ

அந்தணர் முதலிய வருண ஒழுக்கங்களையும், பிரமசரிய முதலிய ஆச்சிரம ஒழுக்கங்களையும் பிழைத்தொழுகுவாரை அரசன் தண்டிக்கக்கடவன். ந

அரசன், தத்தங் குல தருமங்களிற் பிறழ்ந்தொழுகுங் குடிகளைப் புறக்கணித்தும், அவரைத் தண்டோபாயத்தால் ஒறுத்தல் செய்யாமலும் இருப்பின், உயர்குலங்கள் இழிகுலத் தன்மையையும், இழிகுலங்கள் உயர்குலத் தன்மையையும் எய்துவனவாம். (எல்லோரும் தத்தம் விருப்பின்வண்ணம் ஒழுகுவர் என்றபடி.) ச

### உ. மகளிர் ஒழுக்கமுறை.

பெண்களும், சூத்திரர்களும் தம் தலைவர் பணியின்றிச் செபம், தவம், புண்ணிய தல யாத்திரை, துறவு பூணல், மந்திர சாதனம்,

---

உ. ஓதுநிலை - பிரமசரியம். இன்னிலை - இல் நிலை; காருகத்தம். காடுறை நிலை - வானப்பிரத்தம். துறவு நிலை- சந்நியாசம். இவற்றைத் தமிழ் நூலார் இல்லறம் துறவறம் என்னும் இரண்டனுள் அடக்குவர். காருகத்தத்திற்கு முன்னர்க் கல்வியின்பொருட்டு மேற்கொள்ளப் படுதலின் பிரமசரியம் இல்லறத்துள்ளும், போகமிழித்தபின்றிப் பணிவிடைப்பொருட்டு மனைவியோ டேனுறைதலின் வானப்பிரத்தம் துறவறத்துள்ளும் அடக்கும்.

ந. பிழைத்தொழுகுதல் - தவறி நடத்தல்.

கடவுட்பூசை யாகிய இவற்றைச் செய்தலாகாது. பெண்களுக்கு அவரவர் தலைவர் பணியன்றி அறம் பொருள் இன்பங்களைப் பயக்கும் துணையாவது வேறொன்று மின்று. ரு

பெண்மகள் தன் தலைவன் துயில் நீத்தெழுதற்கு முன்னரே அமளியினின் றெழுந்து, உடலைத் தூய்மை செய்து கொண்டு, படுக்கையைப் பிறிதோரிடத்தில் எடுத்து வைத்துப் பின்னர் அலகிடலாலும் மெழுக்கிடலாலும் இல்லத்தைத் தூய்மை செய்து, வேள்வி முதலியவற்றிற் குரிய பாத்திரங்களை நெருப்பையும் புல்லையு முடையதும் வீட்டை யடுத்துள்ளது மாகிய நிலத்தில் வைத்து அழுக்ககற்றித் துலக்கல் வேண்டும். அப் பாத்திரங்கள் எண்ணெய் படிந்தனவாக விருப்பின், பின்னரும் அவற்றை வெந்நீராற் கழுவி உரிய இடத்தில் வைத்து ஈர முலரச் செய்து மீண்டும் அவற்றில் நீரை நிறைத்துத் தக்க இடத்தில் வைத்துக் காத்தல் வேண்டும். சு-அ

அடுக்களையி லுள்ள பாத்திரங்க ளெல்லாவற்றையும் இல்லத்தின் வெளிப்புறத்தே வைத்து, மண் முதலியவற்றால் தேய்த்து அழுக்ககற்றிக் கழுவல் வேண்டும். பின்னர் அடுப்பை மெழுகி அதன்கண் விறகிட்டுத் தீ மூட்டல் வேண்டும். சு

இங்ஙனம் முற்பகலிற் செயற்பாலனவாகிய செயல்களைச் செய்து முடித்த அப்பெண், உபயோகத்திற்குரிய பாத்திரங்களையும், இரசம், சோறு, மற்றை உணவுவகைகள் ஆகிய இவற்றிற் குரிய பொருள்களையும் மறவாமல் திட்டஞ் செய்துவைத்து மாமன் மாமி இருவரையும் வணங்கல் வேண்டும். க0

அம் மாமன் மாமியராதல், தன் தலைவனுதல், தந்தை தாயராதல், உடன்பிறந்தாராதல், அம்மான் முதலிய உறவினராதல் மனமுவந்தளிக்கும் ஆடையையும், அரதனப்பணி முதலிய அணிகலன்களையும் ஏற்று அணிந்துகொள்ளல் வேண்டும். கக

இல்லக் கிழத்தியாவாள்—மனம் மொழி செயல்களின் தூய்மையும் உடற்றூய்மையு முடையளாகவும், தலைவன் கட்டளைப்படி ஒழுகுபவளாகவும், அவனை நிழல்போல் என்றும் பிரியாதிருப்பவளாகவும், அவற்கு நலந்தரு செயல்களில் தோழிபோலவும், ஏவற் றொழில் செய்வதிற் பணிப்பெண் போலவும் இருத்தல் வேண்டும். கஉ

சு-அ. அலகிடல் - துடைப்பத்தால் இடத்தை விளக்கல்.

கக. அரதனப்பணி - இரத்தினபரணம்.

அதன்பின் அப் பெண்மகள் அடிசில் ஆக்கித் தன் தலைவற்கு அறிவித்து, வைச்சுவதேவ பலி கொடுத்து எஞ்சிய உணவை முதற் கண் உண்ணுதற்குரிய மாமன் மாமி முதலியோரையும் தன் கணவனையும் உண்பித்தல் வேண்டும். அதன்பின் அக்கணவன் உடன்பாடு பெற்று எஞ்சிய சோறு முதலியவற்றைத் தான் உண்ணல் வேண்டும். தன் குடும்பவாழ்க்கைக்குரிய வரவுசெலவுகளை யாராயு முகமாகப் பிற்பகலைக் கழித்தல் வேண்டும். ௧௩-௧௪

கற்பிற் சிறந்த அப் பெண்மகள் இங்ஙனமே நாடோறும் காலையிலும் மாலையிலும் இல்லத்தைத் தூய்மைசெய்து அடிசிலாக்கித் தன் தலைவனையும் ஏவலாளரையும் உண்பித்தல் வேண்டும். ௧௫

அதன்பின் அளவின் மிகாத உணவைத் தான் உட்கொண்டு, இல்லறமுறைக்குரிய மற்றைக் காரியங்களையுஞ் செய்துமுடித்துப் படுக்கை விரித்துத் தன் தலைவன் துயில்செய்தற்குரிய பணிகளை இயற்றல் வேண்டும். ௧௬

தலைவன் உறங்கியபின் அப் படுக்கையை யடைந்து, ஆடை நீங்கப்பெறுதல், மெய்ம் மறத்தல், அவா மிகுதி யாகிய இவை யில்லாமற் பொறிகளை யடக்கிக்கொண்டு, அத் தலைவனை நெஞ்சத்து ளிருத்தித் துயில்செய்தல் வேண்டும். ௧௭

பெண்மகள் இரைந்துபேசுதல், கடுஞ்சொற் கூறல், பலமுறை கூவியழைத்தல், இன்னாச்சொற் கூறல், எவரோடாயினும் கலகம் விளைத்தல், பயனில்சொற் கூறல் ஆகிய இவை இல்லாதவளாக இருத்தல் வேண்டும். ௧௮

கற்பிற் சிறந்த பெண் தன் தலைவனுடைய பொருட்கு அழிவு செய்யும் இயல்பினளாகவும், அறம் பொருள் ஈட்டுதற்கண் மாறுபட்டு ஒழுகுபவளாகவும் இருத்தலாகாது. இன்னும் அவள், ஆராயாது பேசுதல், இறுமாந்து பேசுதல், சினந்து கூறல், அழுக்காறுற்

௧௩ - ௧௪. வைச்சுவதேவ பலியாவது, இருபிறப்பாளரால் நாடோறும் இயற்றப்படும் ஐம் பெருவேள்விகளுள் ஒன்றாகிய தேவயாகத்தின் பாற் படும்; அக்கினி முதலியோரைக் குறித்து அவ் வக்கினியிற் செய்யப்படும் ஓம காரியமாகும்.

௧௬. இதன்கட் கூறப்பட்ட உணவு இரா வுணவாகும்.

றுப் பேசுதல், மிகவும் பழிக்கப்படுவனவாகிய குறளை கூறல், பிறரைத் துன்புறுத்தல், விடயங்களின் மிகு பற்று, அகங்காரம், செருக்கு, கடவுளும் இம்மை மறுமை முதலியனவும் இல்லை யென்னுங் கொள்கை, வலாற்காரம், களவு, இடம்பம் ஆகிய இக் குற்றங்களையும் ஒழித்தல் வேண்டும். ககூ-உ0

தனக்குரிய சிறந்த தெய்வமாகிய கணவற்கு இவ்வாறு பணி செய்து நல்லொழுக்கம் நிரம்பப்பெற்ற அப் பெண்மகள், இம்மையில் நல்ல புகழையும் மறுமையில் தன் தலைவன் இருக்கும் உலகத்தையெய்தி அவனோடு உடனுறைதலாகிய வாழ்க்கையையும் அடைவாள். உக

இதுகாறும், மகளிர்க் குரிய நித்தியகன்ம ஒழுக்கங்கள் கூறப்பட்டன. இனி, நைமித்திக கன்மங்கள் கூறப்படும். ஒரு பெண் இருதுவுடையளாகி வீட்டுக்கு விலக்கானால் முற்கூறிய எப் பணியையுஞ் செய்தலாகாது. உஉ

இருதுவான அப் பெண் ஓரே ஆடை யுடையளாய், உடல் மெலிவுற்று அச்ச மேற்கொண்டு, நீராடுதலையும் அலங்கரித்துக்கொள்ளுதலையும் ஒழித்து நாணுடையளாய், எவரானும் பார்க்கப்படாவாறு விரைந்து ஓர் அறைவீட்டினுட் புகுந்து இருத்தல் வேண்டும். உங

இன்னும் அவள் மெய்ம்மறத்தலின்றி நிலத்திற் படுத்துறங்கல் வேண்டும். இவ்வாறு மூன்று பகல்களைக் கழித்துப் பின் மூன்றுநாள் இரவின் இறுதியில் கதிரவன் உதயமாகுங்கால் உடுத்த ஆடையோடு நீராடல் வேண்டும். உச

அதன்பின் கணவன் முகத்தைத் தரிசித்து அப் புண்ணியத் தாற் றூய்மையுடையளாதல் வேண்டும். மீண்டும் நீராடுதன் முதலியவற்றால் தூய்மையுடையளாய் முன்போல வீட்டுப் பணிகளைச் செய்தல் வேண்டும். உரு

இவ்வொழுக்கங்கள் அந்தணர் முதலிய மூன்று வருணத்துப் பெண்களுக்கும் உரியனவாம். இவற்றுட் பெரும்பாலன நான்காம்

---

ககூ-உ0. அகங்காரமும் செருக்கும் ஈண்டு முறையே மாண்பு நீங்கிய மானமும் மதமுமாம்.

உங. உடல் மெலிவுறுதல் இருது காலத்தில் உண்டி சுருக்கலானும். மகளிர்க்குரிய நால்வகைக் குணங்களுள் நாணும், அச்சமும், இருதுகாலத்தில் விசேடமாக மேற்கொள்ளப்படவேண்டு மென்பது கருத்து.

வருணத்துப் பெண்கள் முதலியோராலும் மேற்கொள்ளற்பாலன வாம். அந் நான்காம் வருணத்துப் பெண்கள் முதலியோர், உழவு பண்டமாற்று முதலிய ஆண்மக்களின் தொழில்களுக்குத் துணைசெய்தற்கும் உரியராவர். ௨௬

நல்ல இசைபாடுதலாலும், இனிமைமிகப் பேசுதலாலும், அன்பு அளைஇய இன்ப விளையாடல்களாலும் தன் கணவன் தனக்கு வயமாம்வண்ணம் செய்துகொள்ளல் வேண்டும். ௨௭

கணவன் இறந்துவிடின் தானும் உடல்நீத்து அவனுடன் செல்லல் வேண்டும். இன்றேல், தலைவனை நினைவுட்கொண்டு பிரமசரிய ஒழுக்க முடையளாய்ப் பிறரில்லம் புகாது தன்னில்லத்தே யிருந்து, கைம்மை நோன்பைக் கடைப்பிடித் தொழுகல் வேண்டும். ௨௮

தன் கணவன் அயலிடஞ் சென்றிருக்குங்கால் தான் அலங்கரித்துக்கொள்ளலாகாது; கடவுள் வழிபாட்டிலும் கணவன் நலத்திலும் பற்றுடையளாக இருத்தல் வேண்டும்; மங்கலத்தின்பொருட்டுச் சில அணிகலன்களை மாத்திரம் அணிந்து கொள்ளல் வேண்டும். ௨௯

பெண்மகட்குக் கணவனை யொத்த பற்றுக்கோடும் இன்பப் பொருளும் வேறில்லை. அவள் உலகத்துள்ள எல்லாப் பொருள்களையும் பொருட்படுத்தா தொழித்துக் கணவனையே புகலிடமாக அடைதல் வேண்டும். அவனே அவளுக்கு அவ்வெல்லாப் பொருளுமாவன். ௩0

ஒரு பெண்ணுக்குரிய வாழ்க்கைப் பொருள்களில் அவள் தந்தை கொடுப்பனவும், உடன்பிறந்தார் கொடுப்பனவும், புதல்வர் கொடுப்பனவும் ஓர் அளவுட்பட்டனவாம். கணவன் கொடுப்பனவே அளவில்லாதனவாம். அங்ஙனமாயின் அக்கணவற்கு வழிபாடு செய்யாதவள் யாவள்? ௩௧

## ௩. சூத்திரர்களின் ஒழுக்க வகைகள்.

நான்காம் வருணத்தவராகிய சூத்திரர்கள் வருணத்தன்மையுடைமையால், "சுவதா, சுவாகா, வௌஷட்" என்னும் இவை

---

௨௮. இச்சுலோகக் கருத்தைப் பின் வரும் மணிமேகலைச் செய்யுட் பகுதியாலுமுணர்க:—

"காதல ரிறப்பிற் கனையெரி பொத்தி, யூதுலைக் குருகி னுயிர்த்தகத் தடங்கா, தின்னுயி ரீகுவ ரீயா ராயின், நன்னீர்ப், பொய்கையி னளியெரி புகுவர், நளியெரி புகா அ ராயி னன்பரோ, டுடனுறை வாழ்க்கைக்கு நோற்றுடம் படுவர், பத்தினிப்பெண்டிர் பரப்புநீர் ஞாலத்து" (மணிமேகலை—௨. ௪௨-௪௮.)

முதலியவற்றை இறுதியில் உடைய வேதமந்திரங்களான் அன்றி 'நம' என்பதனை இறுதியிலுடையனவும் புராண முதலியவற்றிற் கூறப்பட்டனவும் ஆகிய மந்திரங்களான்மாத்திரம் தம் வருண தருமத்திற்குரிய கன்மங்களைச் செய்யக் கடவர். ௯௨

அந்தணர் குலத்தவனால் மணஞ் செய்துகொள்ளப்பட்ட பெண்ணிடத்துப் பிறந்த புதல்வன் அவ் வந்தணனை யொப்பவும், அரசர் குலத்தவனால் மணஞ் செய்துகொள்ளப்பட்ட பெண்ணிடத்துப் பிறந்த புதல்வன் அவ் வரசனை யொப்பவும், வணிக குலத்தவனால் மணஞ் செய்து கொள்ளப்பட்ட பெண்ணிடத்துப் பிறந்த புதல்வன் அவ்வணிகனை யொப்பவும் கன்மங்களைச் செய்யக்கடவர். ௯௩

---

௯௩. உவமச்சொல்லால் இங்குக் கூறிய பெண்கள் மூவரும் அவ்வச் சாதியினர் அல்லர் என்பது போதரும். பின்வருஞ் சுலோகத்தில் அந்தணர்க்கும் அரசர்க்கும் முறையே வணிகப்பெண்ணிடத்தும் சூத்திரப் பெண்ணிடத்தும் தோன்றிய புதல்வர்கள் சூத்திரனை யொப்பக் கன்மஞ் செய்பவராவரென்று கூறப்பட்டுள்ளது. ஆதலின், ஈண்டு அந்தணனாற் கொள்ளப்பட்ட பெண் அரசர் குலத்தவள் எனவும், அரசனாற் கொள்ளப்பட்ட பெண் வணிக குலத்தவள் எனவும், வணிகனாற் கொள்ளப்பட்ட பெண் சூத்திர குலத்தவள் எனவும் பொருள்கொள்ளுதல் வேண்டும். இவ்வாறு பொருள்கோடலே பின்வருஞ் சுலோகத்தோடு மாறுபடாமலும் மனு முதலிய அறநூல்களின் கருத்தோடு ஒத்தும் பொருந்துவதாகும். அந்தணர் முதலிய நான்கு வருணத்தவரும் ஓரோவமயம் தத்தம் வருணத்திற்குக் கீழ்ப்பட்ட சாதிப் பெண்களை மணஞ் செய்துகொள்ளலா மெனினும், தமக்கு அப் பெண்களிடத்துப் பிறக்கும் புதல்வருள் தங் குல கன்மங்களுக்குத் தம்மைப்போல் உரிமையுடையார் தத்தம் வருணத்திற்கு அடுத்த கீழ்வருணத்துப் பெண்ணிடத்துப் பிறந்த புதல்வரேயாவர். இதனைப் பின்வரும் மனுஸ்மிருதிச் சுலோகங்களும் வலியுறுத்துவனவாம். அச் சுலோகங்களின் மொழிபெயர்ப்புக்கள் வருமாறு:—“அந்தணர்முதலிய இருபிறப்பாளர் மூவர்க்கும் அவரவர் வருணத்திற்கு அடுத்த வருணத்துப் பெண்களிடத்துப் பிறந்த புதல்வர்கள் தாயின்குல இழிவால் தாழ்ந்தவர்களாயினும் அவர்களைத் தந்தையோடு ஒத்தவர்களாகவே பெரியோர் கூறுவர்.” (மனு - ௧0 அத். ௬-ௗ.) “இருபிறப்பாளர் மூவர்க்கும் அவர்தம் சாதிப் பெண்களிடத்துப் பிறக்கும் புதல்வர் மூவரும், அவர்தம் சாதிக்கு அடுத்த வருணத்துப் பெண்களிடத்துப் பிறக்கும் புதல்வர் மூவரும் ஆகிய அறுவரும் அவர்தம் தந்தையரை யொப்பத் துவிச தருமமாகிய உபநயநம் முதலிய கன்மங்களுக்கு உரியராவர். பிரதிலோமராகப் பிறந்தாரெல்லோரும் சூத்திரர்களுக்குரிய கன்மங்களையே தமக்கும் உரியவாகக் கொள்பவராவர். (மனு - ௧0 - அத். ௪௧ - ௬.)

அந்தணர்க்கும் அரசர்க்கும் முறையே வணிகப்பெண்ணிடத்தும் சூத்திரப்பெண்ணிடத்தும் தோன்றிய புதல்வர்கள் சூத்திரனை யொப்பக் கன்மம் புரிபவராவர். தாழ்ந்த சாதி ஆண்மகனுக்கு உயர்ந்த சாதிப் பெண்ணிடத்துப் பிறந்த புதல்வன் சூத்திரனினும் இழிந்தவனாகக் கருதப்படுவான். அவன் சூத்திரனுக்குரிய மந்திரத்தினுங் குறைந்த நாம மந்திரத்தால் எப்பொழுதும் நற்காரியங்களைச் செய்யக் கடவன். ௩௪

## ௪. யவனர்களின் ஒழுக்க வகைகள்.

இவ் வுலகத்தின் ஒருபக்கத்திற் கலப்புச் சாதிகளோடு கூடிய அந்தணர் முதலிய நால்வகைச் சாதியினரும் இருக்கின்றனர். மற்றொரு பக்கத்தில் யவனர்கள் இருக்கின்றனர். அவ் யவனர்கள் வேத ஒழுக்கங்களோடு மாறுபட்ட ஒழுக்க முடையபராய் வடதிசை மேற்றிசைகளில் உள்ள நிலப்பரப்புக்களில் வாழ்கின்றனர். ௩௫

அவ் யவனர்க்கு அவர்தம் நலங்குறித்து அவர்தம் ஆசிரியர்களால் யவனமத நூல்கள் செய்யப்பட்டுள்ளன. அங்ஙனமே அவ்வாசிரியரால் அவர் மேற்கொள்ளுதற்பொருட்டு இம்மை மறுமைகளுக்கு மாறுபாடில்லாத நீதி நூல்களும் ஆக்கப்பட்டுள்ளன. ௩௬

## ரு. சிறப்புப் பிறப்பா லன்று ; குணத்தா லாம்.

மக்களுக்குக் குணங்களின் சிறப்பு இழிவுகள் ஒரோ வமயம் வித்தின் (தந்தையின்) தன்மையாலும், ஒரோ வமயம் நிலத்தின் (தாயின்) தன்மையாலும் உண்டாவனவாம். ஒரோ வமயம் வித்து நிலங் (தந்தை தாயர்) களின் மாட்சிமையாலும் குணங்களின் சிறப்பு உண்டாவதாகும். ௩௭

விசுவாமித்திரர், வசிட்டர், மதங்கர், நாரதர் முதலிய முனிவர்

---

௩௪. உயர்ந்த வருணத்து ஆண்மகனுக்குத் தாழ்ந்த வருணத்துப் பெண்ணிடத்துப் பிறந்தவர் அநுலோமரெனவும், தாழ்ந்த வருணத்து ஆண்மகனுக்கு உயர்ந்த வருணத்துப் பெண்ணிடத்துப் பிறந்தவர் பிரதிலோமரெனவுங் கூறுப. சூத்திரனுக்குரியமந்திரத்தினுங் குறைந்த நாம மந்திர மாவது 'நம' என்பதை இறுதியிற் பெறுமல் நாம மாத்திரையாகக் கூறப்படுவதாகும்.

௩௫. வடதிசை மேற்றிசைகளில் என்பதனை வடமேற்குத்திசை யென்றுங் கொள்ளலாம்.

எல்லோரும் தவச் சிறப்பாற் பெருமை யெய்தியோராவர். பிறப்புப் பற்றி அப்பெருமை யெய்தினா ரல்லர். ௩அ

உலகத்துள்ள சாதிகளுக்குத் தனித்தனி விதிக்கப்பட்டு அவ்வச் சாதி முன்னோரான் மேற்கொள்ளப்பட்ட தருமங்களையே அவ்வச் சாதியில் தோன்றிய மக்கள் கைப்பற்றி யொழுகல் வேண்டும். அங்ஙனமின்றித் தம் சாதி தரும நெறி கடந்தொழுகுவோர் அரசனால் தண்டிக்கற்பால ராவர். அந்தணர் முதலிய நால்வகை வருணத்தினரையும் பிரமசரிய முதலிய நால்வகை நிலையினரையும் அநுலோமர் முதலிய பல்வகைச் சாதியினரையும் வேறுபாடறிதற்குத் தனித்தனியே குறிகளால் நன்கு அடையாளமிடல் வேண்டும். ௩௯

## சு. சிற்பி முதலிய தொழிலாளரைக் காத்தல்.

அரசன் பொன் முதலிய உலோகங்களால் தொழில் செய்வோரின் எந்திரங்களை யாராய்ந்து எப்பொழுதும் அவரைக் காத்தல் வேண்டும். ௪0

காருகர், சிற்பவினைஞர் முதலிய குழுவினரைக் காரியஞ் செய்தற்கு வேண்டியவளவு நாட்டில் வைத்துக் காத்தல் வேண்டும். உழவுத்தொழிலினும் பணிசெய்வதிலும் மிகுதியாக மனிதர்களை நியமித்தல் வேண்டும். ௪௧

பொற்கொல்லர் முதலிய வினைஞர், கள்வர்களுக்குத் தந்தையராம் நிலையிலுள்ளவராவர். ஆதலின் அரசன் அன்னோரைக் கிராமத்தினின்றும் வெளிப்புறத்தே தனியிடத்தில் வைத்துக் காத்தல் வேண்டும். அங்ஙனமே கிராமத்தின் வெளிப்புறத்தே தனிமையில் கள்விற்குமிடம் இருத்தல் வேண்டும். அவ்விடத்தில் வைத்துக் கட் குடிப்போரையுங் காத்தல் வேண்டும். ௪௨

நாட்டில் உள்ள எம் மனிதனும் பகற்காலத்திற் கட் குடித்தலாகாது. ௪௩

## எ. மரங்களை யுண்டாக்கி வளர்க்கு முறை.

அரசன், கிராமங்களில் அவற்றிற்குரியனவும், வனங்களில் அவற்றிற்குரியனவும் ஆகிய மரங்களை வைத்து வளர்த்தல் வேண்டும்.

---

௩அ. விசுவாமித்திரர் முதலிய நால்வரும் முறையே அரசர் குலத்தும், கணிகையிடத்தும், தாழ்ந்த குலத்தும், பணிப்பெண்ணிடத்தும் பிறந்து தவ வன்மையால் முனிவர் பெருமக்களாகச் சிறந்து விளங்கினோராவர்.

௪௧. காருகர் - நெய்தற் றொழில் செய்வோர்.

அவற்றுள், தலையாய மரங்களுக்கு இருபது முழ அளவும், இடை யாய மரங்களுக்குப் பதினைந்து முழ அளவும், கடையாய மரங்களுக் குப் பத்து முழ அளவும், மிகச் சிறிய மரங்களுக்கு ஐந்து முழ அள வும், உள்ள நிலங்களை இடைவெளியாக விட்டு வைத்தல் வேண்டும். அம் மரங்களை வெள்ளாடு செம்மறியாடு பசு ஆகிய இவற்றின் எருக்களை யிட்டும், நீர் பாய்ச்சியும், இறைச்சிகளை யிட்டும் வளர்த்தல் வேண்டும். சச-சரு

அத்தி, அரசு, ஆல், புளிமா, (சிஞ்சம்) சந்தனம், எலுமிச்சை, வெண்கடம்பு, அசோகம், மகிழ், கூவிளம், சீந்தில், விளா, இராசா தனம், மா, புன்னை, பூவரசு, புளி, சண்பகம், கடம்பு, கோகாமிரம், சாளம், மாதுளை, கடு, பிசடம், சிஞ்சுபம், சிம்பு, இலந்தை, வேம்பு, நாரத்தை, பாலை, பேரீந்து, புன்கு, பேயத்தி, தமாலம், சிம்பலம், மலை யத்தி, வள்ளிக்கொடி, நெல்லி, கமுகு, கொம்மட்டிமாதுளை, இரச எலுமிச்சை, தெங்கு, வாழை இவை முதலிய நல்ல பழங்களையும் நறு மணங் கமழும் மலர்களையுமுடைய மரங்களைக் கிராமங்களின் அணிமையில் வைத்து வளர்த்தல் வேண்டும். சசு-சகூ

வாழும் இல்லத்தின் இடப்புறத்தில் அழகிய ஆடற் பூஞ்சோலை யமைத்தல் வேண்டும். அச் சோலைக் கண்ணுள்ள மரஞ் செடிகளுக்கு முதுவேனிற் காலத்திற் காலை மாலைகளிலும், பனிக்காலத்தில் ஒவ்வொ ரு நாள் இடைவிட்டும், இளவேனிற் காலத்திற் பகலில் ஐந்தாம் முகூர்த்தமாகிய பத்துநாழிகைக்குள்ளும் நீர்விடல் வேண்டும். மழைக் காலத்தில் ஒருபொழுதும் நீர்விடலாகாது. ருo

அ. மரங்களைப் பயன் விளைக்கச் செய்யு முறை.

அம் மரங்கள் பயன் தாராதொழியின் கொள்ளு, உழுந்து, பயறு, யவம், எள்ளு ஆகிய இத் தானியங்களுள் ஒன்றை நீர் விட்டுக் காய்ச்சி ஆறவைத்து, அந்நீர் குளிர்ந்தபின் அதனுல் அம் மரங்களை நனைத்தல் வேண்டும். அங்ஙனம் நனைத்தபின் அம்மரங்கள் மலர், பழம் முதலிய பயன்களை எப்பொழுதுந் தருவனவாம். ருக

மீன் கழுவிய நீர் விடுதலாலும் அம் மரங்கள் மலர் பழம் முத லிய பயன்களை மிகுதியாகத் தருவனவாம். ருஉ

மரங்களின் அடியில் செம்மறியாடு வெள்ளாடுகளின் எருப் பொடிகளையும், யவதானியத்தின் பொடியையும், எள்ளினையும், பசு

வின் இறைச்சியையும் ஏழிரவு இட்டு நீர் பெய்து நனைத்துவரின், அவ் வெல்லா மரங்களும் மலர்பழம் முதலிய பயன்களை மிகுதியாகத் தருவனவாம். ௫௩

## ௬. காட்டு மரங்களை யுண்டாக்கு முறை.

முண் மரங்களும், கருங்காலி முதலிய மற்றை மரங்களும் காட்டில் இருக்கத்தக்கன வென்று அறியற்பாலன. ஆதலின், அம் மரங்களை வனத்தில் உண்டாக்கி வளர்த்தல் வேண்டும். ௫௪

கருங்காலி, மலையத்தி, தேக்கு, கோங்கு, பெருவாகை, வெளவுலம், தமாலம், ஆச்சா, வெட்பாலை, வெள்வேல், மருது, புரசு, ஏழிலைப்பாலை, வன்னி, நந்தி, தேவதாரு, நரிமுருக்கு, பெருங்களா, இங்குதி, பூர்ச்சம், காஞ்சிரை, கருவேல், ஆத்தி, குமிழ், பங்கம்பாளை, தீந்துகம், பீசகாரகம், கடு, சே, சம்பாகம், எருக்கு, தாமரை, அரிமேதம், மரமஞ்சள், முள்ளிலவு, மருதோன்றி, நரவேலம், பெருமரம், இலுப்பை முதலிய மரங்களும், படர் செடிகளும், கொத்துச் செடிகளும், சிறுதூறுகளும், கொடிகளும் ஆகிய இவற்றுட் கிராமத்தில் இருத்தற் குரியவற்றைக் கிராமத்திலும், காட்டில் இருத்தற்குரியவற்றைக் காட்டிலும் வைத்து முயன்று வளர்த்தல் வேண்டும். ௫௫-௫௬

## ௧0. கிணறு வெட்டல் அணைகட்டல் முதலியன.

கிணறு, வாவி, புட்கரிணி, தடாகம் ஆகிய இவற்றை ஆழத்திலும் இருமடங்கு மும்மடங்கு மிகுதியான அகற்சி யுடையனவாகவும், எளிதாக இறங்குதற்கும் ஏறுதற்கு முரிய படிகளை யுடையனவாகவும் அமைத்தல் வேண்டும். அங்ஙனம் அமைக்கப்படுங் கிணறு முதலியன, நாட்டில் நீர்வளம் மிகுதியாக இருக்கும்வண்ணம் பலவாக விருத்தல் வேண்டும். ௬0

ஆறுகளுக்கு அழகிய பலவகை அணைகளையும், அவ்வாற்றின் குறுக்கே போக்குவர்வு செய்தற்குத் தோணி முதலிய நீர் ஊர்திகளையும் அமைத்தல் வேண்டும். ௬௧

## ௧௧. திருக்கோயில் முதலியன அமைத்தல்.

எச் சாதியினரால் எத் தெய்வம் பூசிக்கப்படுகின்றதோ அத் தெய்வத்திற்குரிய ஆலயத்தையும், அத் தெய்வ சம்பந்தமான வித்

---

௬0. இங்குக் கூறிய புட்கரிணி தடாகங்களின் அளவு முதலியவற்றை உ-ஆம் அத்தியாயம் ௧௫௧-௧௬௧-ஆம் சுலோகங்களின் குறிப்பிற் காண்க. ஈண்டு அகற்சியை ஏற்ற பெற்றி கொள்க.

தைகளுக்கு எவன் ஆசிரியனோ அவனுக்குரிய ஆலயத்தையும், அச்சாதியினர் வாழும் இல்லநிரைகளின் முன்னிடத்தில் அமைத்தல் வேண்டும். ௬௨

கிராமத்தின் நடுவிடத்திலாதல், நாற்றெருக் கூடுமிடத்திலாதல் திருமால், சிவபிரான், கணபதி, சூரியன், அம்பிகை ஆகிய இத்தெய்வங்களுக்கு முறையே திருக்கோயில்கள் அமைத்தல் வேண்டும். ௬௩

இங்ஙனம் அமைக்கப்படும் திருக்கோயில்கள் மேரு முதலிய பதினாறு வகைப்பட்ட இலக்கணங்களை யுடையனவாகவும், மிக்க எழில் வாய்ந்தனவாகவும், வட்டம் நாற்கோணம் எந்திரவடிவம் என்னும் இவற்றை யுடையனவாகவும், மண்டபங்களோடு கூடினவாகவும், திருமதில் கோபுரம் பரிவார தெய்வங்களை யுடையனவாகவும், நீட்சி அகற்சிகளினும் இருமடங்கு மும்மடங்கு மிக்க உயரம் வாய்ந்தனவாகவும், உள்ளிடத்தில் திருக்கோயிற்குத் தக்க அழகிய தெய்வத் திருவுருவங்களை யுடையனவாகவும், நீரிற் றோய்ந்த அடிப்பாகங்களை யுடையனவாகவும், சிறந்த ஓவியங்கள் வரையப்பட்டனவாகவும் இருத்தல் வேண்டும். ௬௪-௬௫

ஆயிரம் சிகரங்களையும், நூற்றிருபத்தைந்து மேனிலைக்கட்டுக்களையும், ஆயிர முழ அளவு அகலத்தையும், அவ்வளவு உயரத்தையுங் கொண்டு அழகு வாய்ந்திருப்பது **மேரு** என்னும் பெயரினை யுடையதாகும். ௬௬

மேரு வல்லாத பின்வரும் மந்தர முதலியவற்றுள், முன்னதனை நோக்கப் பின்னது எட்டிலொருகூறு குறைந்த அளவினை யுடையதாகும். ௬௭

---

௬௪-௬௫. கோபுரம் - திருக்கோயிலின் வாயிற் சிகரி.

௬௬. மேனிலைக்கட்டு என்பது திருக்கோயிலின் விமானத்தின்மேல் அடுக்கடுக்காகக் கட்டப்படும் தளங்களை யுணர்த்தும்.

௬௭. மேருவின் அளவில் எட்டிலொருகூறு மந்தரம் குறைந்ததாகும். அதன் அளவில் எட்டிலொரு கூறு இருக்கமாலி குறைந்ததாகும். இங்ஙனமே பின் வருவனவற்றிற்கும் அளவின் குறைவைக் கணக்கிட்டுக் கொள்ளல் வேண்டும். மந்தரம் அ௭௫-சிகரங்களையும், ௧௧௦-மேனிலைக்கட்டுக்களையும், அ௭௫-முழ அளவு உயர அகலங்களையும் உடையதாகும். இருக்கமாலி ௭௬௬-சிகரங்களையும், ௯௬-மேனிலைக்கட்டுக் களையும், ௭௬௬-முழ அளவு அகல உயரங்களையும் உடையதாகும். பிறவும் அன்ன.

அப் பதினாறும் முறையே மேரு, மந்தரம், இருக்கமாலி, தியுமணி, சந்திரசேகரம், மாலியவான், பாரியாத்திரம், இரத்தினசிரசு, தாதுமான், பதுமகோசம், புட்பகாசம், சீகாம், சுவத்திகம், மகாபதுமம், பதுமகூடம், விசயம் என்னும் பெயர்களை யுடையனவாம். சு௮-சுக

அம் மேரு முதலியவற்றிலுள்ள மண்டபங்கள் அவ்வவற்றிற்கு ஒப்ப அவ்வவற்றின் அளவில் நான்கிலொரு கூறு குறைந்தனவாக முற்பக்கத்தில் அமைக்கப்படல் வேண்டும். அம் மண்டபங்களில் தாம் வழிபடுந் தெய்வத் திருவுருவங்களை மந்திர தியானங்களால் பிரதிட்டை செய்தல் வேண்டும். எ௦

கஉ. தெய்வத் திருவுருவங்கள் இயற்று முறை.

வழிபடுவோர்க்குத் தியானயோகஞ் சித்தித்தற்பொருட்டுத் தெய்வத் திருவுருவ இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன. ஆதலின் அத் திருவுருவங்களை இயற்றும் சிற்பிகள் அத் திருவுருவ இலக்கணங்களை (ஆகமங்களிற் கூறியவாறு) தியானிப்பதில் மிகவும் பற்றுடையராக இருத்தல் வேண்டும். அத்தியான நெறியான் அன்றிக் காட்சி முதலிய வேறெவ்வழியானும் அத் திருவுருவ இலக்கணங்களமையா. எக

அத் திருவுருவம், மணலாற் செய்யப்படுவதும், மாவினாற் செய்யப்படுவதும், ஓவியமாக எழுதப்படுவதும், சுதை முதலியவற்றால் தீற்றப்படுவதும், மண்ணாற் செய்யப்படுவதும், மரத்தாற் செய்யப்படுவதும், கல்லினா லாக்கப்படுவதும், பொன் முதலிய தாதுக்களாற் செய்யப்படுவதும் எனப் பலதிறப்படும். இவற்றுள், முறையே முன்னதனை நோக்கப் பின்னது வன்மை மிக்கதாக அறியற்பாலது. எஉ

ஆகமங்களிற் கூறியவண்ணம் அவயவ இலக்கணங்கள் குறைவின்றி யமைந்த திருவுருவம் சிறந்த அழகுடையதாய் வழிபடுவார்க்குப் புண்ணியத்தைப் பயப்பதாகும். அத் திருவுருவம் அவ் விலக்கணங்களிற் குறைப்பாடு உடையதாயின், அது வழிபடுவாரின் வாழ்நாள், பொருளாகிய இவற்றைக் குறைத்து என்றும் துன்பத்தை மிகுவிப்பதாகும். எ௩

நலமிக்க தெய்வத் திருவுருவங்கள் வழிபடும் மக்கட்குத் துறக்க வின்பந்தருவனவாம். நலமில்லாத அவ்வுருவங்கள் அத் துறக்க வின்பம் பயப்பனவல்லவாம். எச

அத் தெய்வத் திருவுருவங்கள் (ஆகமத்திற்கூறிய) அளவில் மிகினும் குறையினும் நலமுடையன வல்லவாம். எரு

தெய்வத் திருவுருவம் மாறுபட்ட இலக்கணம் வாய்ந்ததெனி னும் அது மக்கட்கு நலம்பயப்பதாகும். மனித உருவம் மாறுபடாத இலக்கணமுடையதெனினும் அது நலம் பயவாததாம். (ஆதலின் மனிதவடிவம் பிரதிட்டைசெய்துபோற்றற்குரியதன்றென்பதாம்.) ௭௬

தெய்வத்திருவுருவம் **சாத்துவிகம், இராசதம், தாமதம்** எனமூன்று வகைப்படும். திருமால் முதலியோரின் திருவுருவங்களுள், யாது எவ் விடத்திற்குரியதோ அதனை அவ்விடத்தில் வைத்து வழிபடல்வேண் டும். ௭௭

எத் திருவுருவம் யோகமுத்திரையையும், இயற்கைச் சாந்தநிலை யையும், அன்பர்க்கு வேண்டுவனவும் அச்சமின்மையும் அளிக்குங் கைகளையும், தேவேந்திரன் முதலியோராற் செய்யப்படும் வாழ்த்து வணக்கங்களையு முடையதாய் விளங்குகின்றதோ அதுவே **சாத்து விகத் திருவுருவம்** என்று கூறப்படும். ௭௮

எத் திருவுருவம் நின்றநிலையினையாதல், ஊர்தியில் ஏறியிருக்கும் நிலையினையாதல் உடையதாய்ப் பல்வகை அணிகலன்களால் அலங்க ரிக்கப்பட்டு, அம்பு வாள் முதலிய படைகளைத் தாங்கி, அச்சமின்மை யும் வேண்டுவனவற்றையும் தருங் கைகளையுடையதாய் விளங்குகின் றதோ அதுவே **இராசதத் திருவுருவம்** என்று கூறப்படும். ௭௯

எத் திருவுருவம் அம்பு வாள் முதலிய படைகளால் அசுரர்க ளைக் கொல்வதாகவும், எப்பொழுதும் அச்சுறுத்தும் வடிவினையுடை யதாகவும், போர்த்தொழிலின் மகிழ்ச்சி மிக்கதாகவும் விளங்குகின்ற தோ அதுவே **தாமதத் திருவுருவம்** என்று கூறப்படும். ௮0

இதுகாறும் திருமால் முதலியோரின் தியான உருவம் முதலி யன சுருக்கிக் கூறப்பட்டன. இனி, தெய்வத் திருவுருவங்களுடைய வும் அவற்றின் அங்கங்களுடையவு மாகிய அளவைகள் நன்கு விரித் துக் கூறப்படும். ௮௧

தத்தம் கைப்பிடியின் நான்கிலொருகூறு **அங்குலம்** என்று கூறப் படும். அவ் வங்குலம் பன்னிரண்டு கொண்டது **தாலம்** என்னும் நீட் டலளவையாகும். ௮௨

ஏழு தால அளவு உயரமுள்ள உருவம் **வாமனம்** எனவும், எட் டுத்தால அளவு உயரமுள்ள உருவம் **மாநுடம்** எனவும், ஒன்பதுதால

---

௮௨. தாலம் என்பது நீட்டப்பட்ட அங்குட்டம் என்னும் பெருவிரற்கும் நடுவிரற்கும் இடைப்பட்ட அளவாகும். இது சாண் என்று கூறப்படும்.

அளவு உயரமுள்ள உருவம் தெய்விகம் எனவும், பத்துத்தால அளவு உயரமுள்ள உருவம் இராக்கத மெனவுங் கூறப்படும். அங

தேய வேறுபாட்டால் திருவுருவங்களுக்கு உயர அளவு ஏழு தால முதலாக வுள்ளனவாம். பெண் உருவங்களுக்கு எப்பொழுதும் ஏழு தால அளவே உயரமாகும். திருமாலின் வாமனவதாரத் திருவுருவத்திற்கும் ஏழுதால அளவே உயரமாகும். அச

நரன், நாராயணன், இராமன், நரசிங்கம் ஆகிய இவர்களின் திருவுருவங்கள் பத்துத்தால அளவு உயரமுடையனவாக இருத்தல் வேண்டும். அங்ஙனமே வாணாசுரன், மகாபலி, இந்திரன், பரசுராமன், அருச்சுனன் ஆகிய இவர்களின் உருவங்களும் பத்துத் தால அளவு உயரமுள்ளனவாக இருத்தல் வேண்டும். அரு

அச்சமிக்க சண்டிகாதேவி, வைரவன், வேதாளம், நரசிங்கம், வராகம், அயக்கிரீவன் முதலியோரின் திருவுருவங்கள் பன்னிரண்டு தால் அளவு உயரமுள்ளனவாக இருத்தல் வேண்டும். அசுரர்களின் உருவங்களும், பேய்உருவங்களும், எப்பொழுதும் பதினாறுதால அளவு உயரமுடையனவாக இருத்தல் வேண்டும். அசு

இரணியகசிபு, விருத்திரன், இரணியாக்கன், இராவணன், கும்பகன்னன், நமுசி, நிசும்பன், சும்பன், மகிடாசுரன், இரத்தபீசகன் ஆகிய இவ்வசுரர் முதலியோரின் உருவங்கள் பதினாறு தால அளவு உயரமுடையனவாக இருத்தல் வேண்டும். அஎ

பாலப பருவத்தின் உருவங்கள் ஐந்து தால அளவு உயரமுடையனவாகவும், குமாரப்பருவத்தின் உருவங்கள் ஆறு தால அளவு உயரமுடையனவாகவும் இருத்தல் வேண்டும். அஅ

திருவுருவங்களின் உயர அளவுகள் கிருதயுகத்தில் பத்துத்தாலமாகவும், திரேதாயுகத்தில் ஒன்பது தாலமாகவும், துவாபரயுகத்தில் எட்டுத் தாலமாகவும், கலியுகத்தில் ஏழு தாலமாகவுங் கூறப்பட்டுள்ளன. அகூ

ஒன்பது தால அளவு உயரமுள்ள திருவுருவத்திற்கு முகம் ஒரு தால அளவு உயரமுடையதாகவும், அம் முகத்தின்கண் ணுள்ள

அசு. நரசிங்க வுருவத்துக்கு முற்சுலோகத்திற் பத்துத் தால அளவுயரமும், இதன்கண் பன்னிரண்டு தால அளவுயரமும் கூறப்பட்டமையால் இரண்டு அளவும் பொருந்து மென்பது போதரும்.

நெற்றி நான்கங்குல உயரமுடையதாகவும், அதன்கீழ் உள்ள மூக்கும் நான்கங்குல உயரமுடையதாகவும் இருத்தல் வேண்டும். கூ௦

மூக்கின்கீழ் அநுவரையுள்ள அளவு நான்கு அங்குலமாகவும், கழுத்தின் உயரம் நான்கு அங்குலமாகவும், மார்பின் உயர அளவு ஒரு தாலமாகவும் இருத்தல் வேண்டும். கூக

மார்பின்கீழ் ஒருதால அளவு இடம் விட்டுக் கொப்பூழ் விளங்கும்படி செய்தல் வேண்டும். அக்கொப்பூழின்கீழ் ஒருதால அளவு இடம் விட்டு உருவத்திற்கு ஒத்தவாறு ஆண்குறி யமைத்தல் வேண்டும். கூஉ

தொடைகள் இரண்டு தால அளவு உயரமுடையன வாகவும், முழந்தாட் பூட்டுக்கள் நான்கங்குல உயரமுடையனவாகவும், கணைக்கால்கள் இரண்டு தால அளவு உயரமுடையனவாகவும், அவற்றின் பொருத்துக்களின் கீழுள்ள பரடுகள் நான்கங்குல உயரமுடையனவாகவும் இருத்தல் வேண்டும். கூங

இவ்வாறு அறிவுடையோரால் ஒன்பது தால அளவு உயரமுள்ள உருவம் இயற்று முறை நினைக்கப்பட்டது. கூச

எல்லா அளவுத் திருவுருவங்களுக்கும் சிகை தொடங்கி முடிவரையுள்ள அளவு மூன்றங்குலமாக அறிதல் வேண்டும். இங்ஙனம்

கக. அநு - மூக்கின் கீழிடந் தொடங்கி வாயின் அடிப்பாகம் வரையுள்ள பாகம்.

க௦ - கச. உருவம் இயற்று முறை:—

| உறுப்பு | அங் | உயர அளவு. தாலம் | அங்குலம் |
|---|---|---|---|
| முகம் | நெற்றி ௪, மூக்கு ௪, அநு ௪ | க | |
| கழுத்து | | 0 | ௪ |
| மார்பு | | க | 0 |
| வயிறு | | க | 0 |
| அடிவயிறு | | க | 0 |
| தொடை | | உ | 0 |
| முழந்தாட்பூட்டு | | 0 | ௪ |
| கணைக்கால் | | உ | 0 |
| பரடு | | 0 | ௪ |
| ஆக உயர அளவு | | கூ | 0 |

ஒன்பது தால அளவு உயரமுள்ள திருவுருவத்திற்குக் கூறிய முறைப் படி ஏழு எட்டு பத்துத் தால உயரவளவில் அமைக்கப்படுந் திருவுருவங்கட்குங் கணக்கிட்டுப் பகுத்துணர்ந்துகொள்ளல் வேண்டும். ௬௫

கைகள் விரல் நுனிவரை தனித்தனி நான்கு தால அளவு நீளமுடையனவாக இருத்தல் வேண்டும். கழுத்திலிருந்து முழங்கைவரையுள்ள அளவு இருபது அங்குலங்களாக இருத்தல் சிறந்ததாகும். ௬௬

கக்கத்தின் கீழ் முழங்கைவரையுள்ள அளவு பதின்மூன்றங்குலங்களாகவும், முழங்கையினின்று நடுவிரல் நுனிவரையுள்ள கையின் அளவு இருபத்தெட்டங்குலங்களாகவும் இருத்தல் வேண்டும். ௬௭

உள்ளங்கையின் நீள அளவு ஏழு அங்குலங்களாகவும், நடுவிரலின் நீள அளவு ஐந்தங்குலங்களாகவும் இருத்தல் வேண்டும். பெருவிரல் மூன்றரை அங்குல நீளத்தையும், இரண்டு கணுக்களையுமுடையதாய்ச் சுட்டுவிரலின் அடிக்கணுவைப் பொருந்தியிருத்தல்வேண்டும். பெருவிரல் அல்லாத மற்றை விரல்களெல்லாம் தனித்தனி மும்மூன்று கணுக்களை யுடையனவாக இருத்தல் வேண்டும். அநாமிகை விரலின் நீளம் நடுவிரல் நீளத்தில் அரை அங்குலங் குறைந்ததாகவும், சுட்டுவிரலின் நீளம் நடுவிரல் நீளத்தில் ஓர் அங்குலங் குறைந்ததாகவும், கடைவிரலின் நீளம் அநாமிகை விரல் நீளத்தில் ஓர் அங்குலங் குறைந்ததாகவும் இருத்தல் வேண்டும். ௬௮-௬௯

அடிகள் தனித்தனி பதினான்கங்குல நீளமுடையனவாகவும், காற்பெருவிரல் இரண்டு அல்லது இரண்டரை அங்குல நீளமுடையதாகவும், அப் பெருவிரற்கு அடுத்த விரலும் அப் பெருவிரலையொப்ப இரண்டு அல்லது இரண்டரை அங்குல நீளமுடையதாகவும், மற்றை விரல்களெல்லாம் தனித்தனி ஒன்றரை அங்குல நீளமுடையனவாகவும் இருத்தல் வேண்டும். ௧00

கை கால்கள் நரம்பு தோன்றப்பெறுமலும் பொருத்துக்கள் வெளிப்படையாக இல்லாமலும் இருத்தல் வேண்டும். ௧0௧

---

௬௬. இதுமுதல் ௧௨௬ - ஆம் சுலோகம்வரை கூறப்படும் உறுப்புக்களின் அளவெல்லாம் முற்கூறிய ஒன்பது தால அளவு உயரமுள்ள திருவுருவத்திற்கென்றே அறிதல் வேண்டும்.

௬௮ - ௬௯. அநாமிகை - கடைவிரற்கு அடுத்தவிரல். இதனைப் பவித்திரவிரல் என்றுங் கூறுப.

திருவுருவங்களின் இயல்புணர்ந்தோர் எப்பொழுதும் அவ்வுருவங்களின் உறுப்புக்களை எங்ஙனம் இருக்கவேண்டுமென்று கூறியிருக்கின்றனரோ அங்ஙனமே அவ் வுறுப்புக்கள், அவ்வவற்றிற்குக் கூறிய அளவினின்றுங் கூடுதல் குறைதல் இல்லாமல் ஒத்தனவாகவும் அழகு மிக்கனவாகவும் இருத்தல் வேண்டும். கo௨

அத் திருவுருவங்களின் உறுப்புக்களெல்லாம் மிகப் பெரியனவாகவும், மிகச் சிறியனவாகவும் இல்லாமலிருப்பின் எல்லோருடைய மனத்தையும் இன்புறுத்துவனவாம். கo௩

செய்யப்படுந் திருவுருவங்கள் நூறாயிரத்துள் ஒன்றே எல்லா உறுப்புக்களாலும் எல்லோருடைய மனத்தையும் இன்புறுத்துவதாக அமையும். ஆயினும், ஆகமத்திற் கூறிய அளவின்படி அமைக்கப்பட்ட திருவுருவங்களெல்லாம் அழகுடையனவேயாம். அங்ஙனம் அமைக்கப்படாத உருவங்கள் அழகில்லாதனவாகும். கo௪

ஆகம அளவின்படி அமைக்கப்படாத உருவம் அறிவுடையார்க்கு இன்பந் தருவதன்றாம். எத் திருவுருவத்தில் எவர்மனம் பதிகின்றதோ அவர்க்கு அஃது இன்பந்தருவதாகுமென்பது சிலர்கொள்கை. கo௫இ

நெற்றியின் குறுக்களவும் புருவங்களிரண்டின் நீளமும் எட்டங்குலங்களாக இருத்தல் வேண்டும். கo௬

அப் புருவங்களின் இரேகைகள் நடுவில் அரையங்குல அளவு அகற்சியையும், வில்லைப்போன்ற வளைவினையும் உடையனவாய் நீண்டிருத்தல் வேண்டும். கண்கள் தனித்தனி மூன்றங்குல நீட்சியும் இரண்டங்குல அகற்சியு முடையவாய் அழகுற இருத்தல் வேண்டும். கo௭

அக் கண்களின் உள்ளே விளங்கும் கருமணிகள் அக் கண் அளவின் மூன்றிலொரு கூறு அளவுடையனவாக இருத்தல் வேண்டும். இரண்டு புருவங்களின் நடுவிடம் இரண்டங்குல அளவினையுடையதாகவும், மூக்கின் அடி ஓர்அங்குல அளவினை யுடையதாகவும் இருத்தல் வேண்டும். கo௮

மூக்கு நுனியின் அகலம் ஓர் அங்குல அளவினை யுடையதாகவும், அதன் துவாரங்கள் இரண்டங்குல அளவினை யுடையனவாகவும் இருத்தல் வேண்டும். மூக்கு, கிளிமூக்கைப் போலவும் குமிழ்மல

ரைப் போலவும் வடிவால் இரண்டு வகைப்படும். இவை அழகுடை யனவாம். ௧0௯

மூக்கின் அடிப்பக்கத்து இருபுறமும் மொச்சைப் பயற்றைப் (நிட்பாவம்) போலச் சிறந்த அழகுள்ளனவாகச் செய்தல் வேண் டும். ௧௧0

செவிகள் புருவங்களை யொப்ப நான்கங்குல நீளமுடையனவாய் இருத்தல் வேண்டும். அச் செவிகளின் அகலம் மூன்றங்குலமாகவும் அவற்றின் பருமை அரையங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧௧௧

மூக்குத் துவாரங்களின் நடுவணுள்ள தண்டு அரையங்குலப் பருமையும், ஒன்றரை யங்குல உயரமு முடையதாய் வழுவழுப்பாக இருத்தல் வேண்டும். ௧௧௨

கழுத்தின் அடிப்பாகத்தினின்று தோள்வரை யுள்ள அளவு எட்டங்குலமாகவும், மார்பின் அகல அளவு இரண்டு தாலமாகவும், தனங்களின் நடுவிடத்தின் அளவு ஒரு தாலமாகவுங் கூறப்பட்டுள் ளன. ௧௧௩

இரு செவிகளுக்கும் நடுவணுள்ள பாகத்தின் அளவு பதினறங் குலங்களாகவும், செவிக்கும் வாயின் அடிப்பாகத்து நுனிக்கும் இடை யிலுள்ள பாகம் எட்டங்குல அளவாகவும் இருத்தல் வேண்டும். ௧௧௪

மூக்குக்கும் செவிக்கும் இடைப்பட்ட பாகங்கள் தனித்தனி எட்டங்குல அளவினவாகவும், செவிக்கும் விழிக்கும் இடைப்பட்ட பாகங்கள் தனித்தனி நான்கங்குல அளவினவாகவும், வாயின் குறுக் களவு நான்கங்குல அளவினதாகவும், அதரங்கள் தனித்தனி அரை யங்குலக் கனம் உள்ளனவாகவும் இருத்தல் வேண்டும். ௧௧௫

தலையின் சுற்றளவு முப்பத்திரண்டங்குலமாகவும், அதன் அகல அளவு பத்தங்குலமாகவும், அதன் நீள அளவு பன்னிரண்டங்குலமாக வும் இருத்தல் வேண்டும். ௧௧௬

கழுத்தின் அடிப்பாகத்தின் சுற்றளவு இருபத்திரண்டங்குல மாகவும், மார்பின் நடுப்பாகத்தின் சுற்றளவு ஐம்பத்துநான்கங்குல மாகவும் இருத்தல் வேண்டும். ௧௧௭

---

௧0௯. மூக்குத் துவாரங்கள் இரண்டங்குலம் என்றமையால் தனித்தனி ஒவ்வோரங்குலமென் றறிதல் வேண்டும்.

மார்பின் சுற்றளவு நாற்பத்தேழங்குலமாகவும், தனத்திலிருந்து விலாப்பக்கம் முடிய உள்ள கனம் பன்னிரண்டங்குல அளவாகவும் இருத்தல் வேண்டும். ௧௧௮

கடிதடத்தின் சுற்றளவு நாற்பத்துநான் கங்குலமாகவும், அதன் உயரம் நான்கங்குலமாகவும், அதன் அகலம் ஆறங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧௧௯

பெண் தெய்வத் திருவுருவங்களுக்குப் பிறபக்கத்து நிதம்பம் உயர்ச்சியினும் அகற்சியினும் முற்கூறிய அளவின் ஒவ்வோரங்குலம் அதிகமாக இருத்தல் வேண்டும். நடுச்சந்திக்கு மேற்பட்ட கையின் அடிப்பாகமும் நுனிப்பாகமும் முறையே பதினெட்டங்குலச் சுற்றளவும் பதினாறங்குலச் சுற்றளவுமாக இருத்தல் வேண்டும். ௧௨௦

நடுச் சந்தியின் கீழ்ப்பட்ட கையின் அடிப்பாகமும் நுனிப்பாகமும் முறையே பதினான்கங்குலச் சுற்றளவாகவும் பத்தங்குலச் சுற்றளவாகவும், பாதம் கரதலம் இவற்றின் அகலம் ஐவைந்தங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧௨௧

தொடையின் அடிப்பக்கத்துச் சுற்றளவு முப்பத்திரண்டங்குலமாகவும், அதன் நுனிப்பக்கத்துச் சுற்றளவு பத்தொன்பதங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧௨௨

முழந்தாளின் அடிப்பாகமும் நுனிப்பாகமும் முறையே பதினாறங்குலச் சுற்றளவாகவும் பன்னிரண்டங்குலச் சுற்றளவாகவும் இருத்தல் வேண்டும். கைந் நடுவிரலின் அடிப்பக்கத்துச் சுற்றளவு நான்கங்குலமாகும். ௧௨௩

சுட்டுவிரலின் அடிப்பாகமும் கடைவிரற்கு அயல் விரலி (அநாமிகையி)ன் அடிப்பாகமும் மூன்றரை யங்குலச் சுற்றளவினவாகும். கடைவிரலின் அடிப்பக்கத்துச் சுற்றளவு மூன்றங்குலமாகும். ௧௨௪

இவ் விரல்களின் நுனிப்பக்கத்துச் சுற்றளவுகள் இவற்றின் அடிப்பக்கத்துச் சுற்றளவுகளின் நான்கிலொரு கூறு குறைந்த அளவினையுடையனவாகும். கைப்பெருவிரல் (அங்குட்டம்) நான்கங்குலச் சுற்றளவினதாகவும், காற் பெருவிரல் ஐந்தங்குலச் சுற்றளவினதாகவும் இருத்தல் வேண்டும். ௧௨௫

---

௧௧௮. மார்பின் நடுப்பாகத்துச் சுற்றளவு முற்சுலோகத்திற் கூறப்பட்டமையால் இங்கு மீண்டும் மார்பின் சுற்றளவு என்றது மார்பின் கீழ்ப்பாகத்தைக் குறிப்பிடுவதாகும்.

கால் விரல்களின் சுற்றளவு மூன்றங்குலமாகவும், தனங்களின் வட்டமும் உந்திச்சுழியும் முறையே ஒன்றரை யங்குலமாகவும் ஓரங் குலமாகவும் இருத்தல் வேண்டும். கஉசு

படிவங்களின் எல்லா அவயவங்களையும் அழகு விளங்கும்படி செம்மையுற இயற்றல் வேண்டும். அப் படிவங்கள் மேனோக்கிய கண் களை யுடையனவாகவும், கீழ்நோக்கிய கண்களை யுடையனவாகவும், மூடிய கண்களை யுடையனவாகவும் இருக்கும்படி செய்தல் கூடாது. அச்சம் விளைவிக்கத்தக்க பார்வையினையுடைய வடிவத்தை அருள் விளைவிக்கும் பார்வையுடையதாகச் செய்தலாகாது. கஉஎ

அப் படிவங்களின் உயர அளவில் மூன்றிலொரு கூறுதல் பாதி யளவாதல் இருக்கும்படி பீடம் அமைத்தல் வேண்டும். கஉஅ

திருக் கோயிலின் வாயில் அக்கோயிலின் உள்ளிருக்குந் திருவுரு வத்தின் அளவின் இருமடங்காதல், மும்மடங்காதல், நான்கு மடங் காதல் மிக்கிருத்தல் வேண்டும். திருக்கோயிற்றளம் ஒன்று முதல் நான்குமுழம் வரை நிலத்தினின்றும் உயர்ந்திருத்தல்வேண்டும். கஉகூ

திருக்கோயிற் சுவர் அதன் தளத்தினின்றும் பத்துமுழ அளவு உயர முடையதாக இருத்தல் வேண்டும். அத் திருக்கோயிலின் மே னிலவெல்லை அத் திருக்கோயில் வாயில் அளவினும் இருமடங்கு உயர்ந்திருத்தல் வேண்டும். சிகரம் அவ்வுயரத்தோடு ஒத்த அளவின தாதல் இரு மடங்கு மும் மடங்கு மிக்க அளவின தாதல் இருத்தல் வேண்டும். க௩0

திருக்கோயிலமைப்போர் அஃது ஒன்றுமுதல் நூற்றிருபத் தைந்துவரை மேனிலைக்கட்டுக்க ளுடையதாக இருக்கும்படி தம் ஆற்றற்கு இயைந்தவாறு செய்தல் வேண்டும். அங்ஙனம் அமைக்கப் படும் திருக்கோயில் எட்டுக் கோணங்களை யுடையதாகவேனும், தாம ரைப்பூவை யொத்த வடிவினை யுடையதாகவேனும், நாற்புறத்தும் மண்டபங்களை யுடையதாகவேனும், சுற்றிலும் ஒன்றுக்கொன்று எதிர்முகமாக வுள்ள பலவகை அறை வீடுகளை யுடையதாகவேனும் இருக்கும்படி செய்தல் வேண்டும். க௩க

---

க௩0. மேல்நிலவெல்லை - மேற்றளம். சிகரம் - அத்தளத்தினின்றும் எழுக்கும் முடி. திருக்கோயிலின், முகத்துவாரத்தில் எடுப்பது கோபுரம் எனவும், உட்பக்கங்களில் எடுப்பது சிகரம் எனவும் கூறப்படும்.

க௩க. மேனிலைக் கட்டுக்களை ௬௬ - ஆம் சுலோகக் குறிப்பிற் காண்க.

ஆயிரம் தூண்களோடு கூடிய திருக்கோயில் தலையாய தெனவும், அவற்றிற் சில குறைந்த தூண்களையுடைய திருக்கோயில் இடையாய தெனவும், அவற்றினுஞ் சில குறைந்த தூண்களையுடைய திருக்கோயில் கடையாய தெனவுங் கூறப்படும். ௧௩௨

பிராசாதத்திலும் மண்டபத்திலும் சிகரம் எடுக்கப்படுமாயின், அவ் விடங்களில் தூண்களை நிறுத்தலாகாது. சுவர்களையே அழகும் வலிமையும் பொருந்த எடுத்தல் வேண்டும். ௧௩௩

பிராசாதத்தின் உள்ளிடப்பரப்பு, அதன்கண்ணுள்ள திருவுருவத்தின் அளவில் அறுமடங்காதல் எண்மடங்காதல் மிக்கிருத்தல் வேண்டும். அவ்வுள்ளிடத்தின் முற்புறம் மிகவும் அதிகமாக இருத்தல் வேண்டும். ௧௩௪

தெய்வ வூர்தி அத் தெய்வத் திருவுருவத்தின் அளவோடு ஒத்த அளவினதாதல், ஒன்றரை அல்லது இரண்டுமடங்கு மிக்க அளவினதாக விருத்தல்வேண்டும். ஒருதெய்வத்திற்கு உருவம் எங்கு விதந்து கூறப்படவில்லையோ அங்கு அத்தெய்வத்திற்கு நான்கு கைகள் உள்ளனவாக அறிதல் வேண்டும். ௧௩௫

எங்கு ஒரு தெய்வத்திற்கு ஆயுதங் கூறப்படவில்லையோ அங்கு அத் தெய்வத்தின் கீழ்க்கைகளில் முறையே அபய வரதங்களின் குறிகள் இருப்பனவாக அறிதல் வேண்டும். அத் தெய்வத்தின் மேற்கைகளில் சங்கு, சக்கரம், அங்குசம், பாசம், துடி, சூலம், கமலம், கலசம், சுருவம், மோதகம், மாதுளம்பழம், யாழ், மாலை, புத்தகம் ஆகிய இவற்றுள் உரியவற்றை யமைத்தல் வேண்டும். ௧௩௬-௧௩௭

---

௧௩௩. பிராசாதம் - தெய்வத்திருவுருவம் இருக்கும் இடம். மண்டபங்கள் அதன் பக்கத்துள்ளனவாகும்.

௧௩௫. ஒருதெய்வத்திற்குப் பெயர் மாத்திரங் கூறப்பட்டு வடிவிலக்கணங் கூறப்படாமலிருப்பின், அங்கு அத் தெய்வத்தின் வடிவிலக்கணம் முன்னர்க் கூறியாங்கு இருத்தல் வேண்டுமென்பதும், சிறப்பாக அறிய வேண்டுவன நான்கு கைகள் என்பதும் போதரும்.

௧௩௬-௧௩௭. எல்லாத் தெய்வங்களுக்கும் கீழ்க்கைகளில் அபய வரதங்கள் இருக்கவேண்டுமெனவும், மேற்கைகளில் அவ்வத் தெய்வங்களுக்குரிய சிறப்புப் பொருள்கள் இருக்கவேண்டுமெனவும் உணர்க. சுருவம் - வேள்விக்குரிய கருவிகளில் ஒன்று.

எத் திருவுருவத்தில் முகங்கள் பலவாக வுள்ளனவோ அவ் வுருவின்கண் அம் முகங்களை நிரையாக அமைத்தல் வேண்டும். அங்ஙனம் அமைக்குங்கால் அம் முகங்கள் தனித்தனியே கழுத்துக்களையும், முடிகளையும், விளக்கமான கண்களையும், செவிகளையும் உடையனவாயிருத்தல் வேண்டும். கஙஅ

எத் திருவுருவத்திற் கைகள் பலவாக வுள்ளனவோ அவ் வுருவில் அக் கைகள் பலவாதல் பற்றித் தோள்களையும் பலவாக அமைத்தலாகாது. கஙகூ

அங்ஙனம் மிகுதியாகவுள்ள கைகளின் முழங்கைக்கு மேலுள்ள அடிப்பாகங்கள் சிறியனவாகவும், தகட்டு வடிவினவாகவும், வலியனவாகவும், பக்கமூலங்களை யொப்ப இருத்தல் வேண்டும். க௪0

பிரமனுக்கு நான்கு திசையினும் முகங்கள் இருக்கும்படி செய்தல் வேண்டும். க௪க

அயக்கிரீவர், வராகர், கணேசர் ஆகிய இவர்தம் திருவுருவங்களில் முகங்களல்லாத மற்றை யுறுப்புக்களும், நரசிங்கத்தின் திருவுருவத்தில் முகமும் நகங்களு மல்லாத மற்றையுறுப்புக்களும் மனிதவடிவினவாகச் செய்தல் வேண்டும். க௪உ

ஒருவன் தனக்குரிய வழிபடு கடவுளின் திருவுருவத்தை அதன் பீடத்தில் நிற்றல், இருத்தல், உரிய ஊர்தியில் ஏறியிருத்தல் ஆகிய இந்நிலைகளுள் ஒன்றனை யுடையதாகவும், முகத்தில் மயிரும் இமை மூடுதலும் இல்லாததாகவும், என்றும் பதினாறு யாண்டுப் பருவத் தோற்ற முடையதாகவும், அழகிய ஆடை யணிகலன்களால் நிறைந்ததாகவும், விளங்குகின்ற பலவகை வண்ணச் செயல்களை யுடையதாகவும், ஆடைகளாற் பாதம்வரை மறைக்கப்பட்டதாகவும், சிறந்த பிற ஒப்பனைப் பொருள்களால் அலங்கரிக்கப்பட்டதாகவும், முன்னர்க் கூறிய இலக்கணங்கள் நிரம்பப் பெற்றதாகவும் அமைத்துவைத்தல் வேண்டும். க௪ங-க௪௪

தெய்வத் திருவுருவங்களினுறுப்புக்கள் இங்குக் கூறிய அளவிற் குறைந்தனவாகவேனும் மிக்கனவாகவேனும் ஒருபொழுதும் இருத்தலாகாது. அளவிற்குறைந்த உறுப்புக்களையுடைய திருவுருவம் அதனைப் பிரதிட்டை செய்யும் தலைவற்கும், அளவின் மிக்க உறுப்புக்

---

க௪உ. அயக்கிரீவர்க்குக் குதிரைமுகமும், வராகர்க்குப் பன்றிமுகமும், நரசிங்கத்துக்குச் சிங்கமுகமும், கணேசர்க்கு யானைமுகமும் உள்ளனவாம்.

களையுடைய திருவுருவம் அதனைச் செய்த சிற்பிக்கும் கேடு விளை விப்பனவாம். கசரு

அத் தெய்வப்படிவம் முற்கூறிய அளவின் மெலிந்திருக்கு மாயின் வறுமைத்துன்பத்தையும், அளவிற் பருத்திருக்குமாயின் நோய்த்துன்பத்தையும் என்றுந் தருவதாகும். உறுப்புக்களின் சந்தி களும், என்புகளும், நரம்புகளும் வெளிப்படத் தோன்றாமல் மறைந் திருக்குமாயின், அவ் வுருவம் எப்பொழுதும் மிக்க நலத்தைத் தருவ தாகும். கசசு

நான்கு கைகளிலும் முறையே வரதம், அபயம், தாமரை, சங்கு ஆகிய இந் நான்கனையுமுடைய திருமாலின் திருவுருவம் சாத்துவிகமா கும். நான்கு கைகளிலும் முறையே மான், வாச்சியம், அபயம், வரதம் ஆகிய இந்நான்கனையுமுடைய சிவபிரானது திருவுருவம் சாத்து விகமாகும். கசஎ

நான்கு கைகளிலும் வரதம், அபயம், தாமரை, மோதகம் ஆகிய இந் நான்கனையுமுடைய கணபதியின் திருவுருவம் சாத்துவிகமாகும். நான்கு கைகளிலும் தாமரை, மாலை, அபயம், வரதம் ஆகிய இந் நான் கனையுமுடைய கதிரவனது திருவுருவம் சாத்துவிகமாகும். கசஅ

நான்கு கைகளிலும் முறையே யாழ், பழம், அபயம், வரதம் ஆகிய இந் நான்கனையுமுடைய திருமகளின் திருவுருவம் சாத்துவிக மாகும். கசகூ

உபாதி வேறுபாட்டாலும், தத்தம் சையோக விபாகங்களாலும் எழுத்துக்களின் சேர்க்கைநிலை தனிநிலைகளை யறியுமாறு போலத் திரு மால் முதலிய தெய்வத் திருவுருவங்களைச் சத்துவ முதலிய குண வேறுபாடுகளாலும் சங்கு, சக்கரம், கதை, பதுமம் முதலிய ஆயுதங் களாலும் தனித்தனி அவ்வாறுவகைப்படுமென்று அறிதல் வேண் டும். கருO–கருக

---

கசஎ. இங்குச் "சோமன்" என்று மூலத்தில் உள்ளது. அஃது உமை யோடு கூடினவன் என்னும் பொருளதாகலின் சிவபிரானை யுணர்த்தும். இதற்கு உரை வரைந்தார் ஒருவர் சோமன் என்பதற்குச் சந்திரன் என்று பொருள் கொண்டார். இப் பிரகரணத்தின் கூகூ,கருஎ-ஆம் சுலோகங்களில் விதந்து கூறுங்கால் சந்திர வுருவம் கூறப்படாமையாலும் சிவபிரான் திருவுருவங்கூறப் பட்டமையாலும் அவ்வுரை பொருந்தாமை யுணர்க. வாச்சியம்-தடி.

கருO-கருக. உபாதி - நிமித்தம். இதனால் எழுத்துக்களின் குறுமை நெடு மை அளபெடைகள் உணரப்படும். சையோகம் - சேர்க்கை. விபாகம் - பிரிவு.

ஓவியத் தெழுதப்பட்டனவும், சுதை முதலியவற்றால் தீற்றப் பட்டனவும், மணியினாலும் மண்ணினாலும் மாவினாலும் ஆக்கப்பட்ட னவும் ஆகிய இப் படிவங்களுக்கு இங்குக்கூறிய இலக்கணங்கள் அமைந்திலவாயினும், அதுபற்றி யாருங் குற்றங் கூறலாகாது. (இப் படிவங்கள் அமைப்போர் மனத்திற்கு இயைந்தவாறு அழகு பொருந் தச் செய்யத்தக்கனவாம் என்பது கருத்து.) கருஉ

வாணலிங்கத்திலும், இயற்கையாகத் தானே தோன்றிய திருவு ருவத்திலும், சந்திரகாந்தக் கல்லினாலும் இரத்தினங்களாலும் ஆக்கப் பட்ட திருவுருவங்களிலும், கண்டக நதியில் தோன்றிய திருவுருவங் களிலும் இங்குக் கூறிய இலக்கண அளவையின் மிகுதி குறைவால் ஏற்படுங் குற்றங்கள் எவ் வாற்றானுங் கருதற்பாலனவல்ல. கல்லினா லும், பொன் முதலிய உலோகங்களினாலும் ஆக்கப்படும் படிவங்களி லேயே அளவையின் மிகுதி குறைவால் ஏற்படுங் குற்றங்கள் ஆராய் தற்பாலனவாம். கருந

சிற்பி, கிருதயுகம் முதலிய நான்கு யுகங்களிலும் முறையே வெண்ணிறக்கல், பொன்னிறக்கல், சிறிது செந்நிறமுள்ள கல், கரு நிறக்கல் ஆகிய இவற்றால் தெய்வப் படிவங்களைச் செய்யக்கடவன். இவற்றை யன்றி மனத்திற்கியைந்தவாறு மரம் முதலிய பிறபொருள் களாலும் அப் படிவங்களை ஆக்கலாம் என்பதும் நூல்களிற் கூறப்பட் டுள்ளது. கருச

முற் கூறிய இலக்கணங்களோடு கூடிய இத்தெய்வப் படிவங்க ளுள், வெண்ணிறப் படிவம் சாத்துவிகமெனவும், பொன்னிறப் படிவ மும் செந்நிறப் படிவமும் இராசதமெனவும், கருநிறப் படிவம் தாமத மெனவுங் கொள்ளப்படும். கருரு

கிருதயுகம் முதலிய நான்கு யுகங்களிலும் முறையே பொன் னினாலும், வெள்ளியினாலும், செம்பினாலும், பித்தளையினாலும் திரு வுருவங்கள் ஆக்கற்பாலனவாம். கருசு

---

ஒருயிரெழுத்து உபாதிவேறுபாட்டால் மூவகைப்பட்டு அம் மூன்றும் மெய் யெழுத்தோடு கூடியும் தனித்தும் இயங்குதலால் இருதிறத்தனவாய் அறுவகைப் படும். அங்ஙனமே ஒரு தெய்வத்தின் திருவுருவம் சத்துவம் முதலிய குண வேறுபாட்டால் மூவகைப்பட்டு, அம் மூன்றும் ஆயுதங்களோடு கூடியிருத்தல் ஆயுதங்க ளில்லாதிருத்தல் ஆகிய இரு திறத்தனவாய் அறுவகைப்படுதல் காண்க.

* [illegible]. கண்டகநதியில் தோன்றுவன - சாலக்கிராமம் முதலியன.

சிவ சம்பந்தமான திருவுருவங்களை வெண்ணிற முடையனவாகவும், திருமால் சம்பந்தமான திருவுருவங்களைக் கருநிறமுடையனவாகவும், சூரியன், சத்தி, கணேசர் ஆகிய இவர்தம் திருவுருவங்களைச் செந்நிறமுடையனவாகவும் அமைத்தல் வேண்டும். இவ்வெல்லாத் திருவுருவங்களையும் கூறிய இலக்கணம் வழுவாது இரும்பு ஈயங்களாலும் ஆக்கலா மென்பதும் அறிவுடையோர் கொள்கை. ௧௫௭

தெய்வத் திருவுருவங்கள் சில நாட் பூசித்தற்குரியனவாயினும், என்றும் நிலைப்படுத்துப் பூசித்தற்குரியனவாயினும், முற் கூறிய இலக்கணங்கள் அமைந்தனவா யிருக்கும்படி திருக்கோயில் முதலியவற்றில் தாபித்தல் வேண்டும். அவ் விலக்கணங்களிற் குறைபாடுறின் எல்லா நலங்களையும் அழித்துவிடு மாதலின், அவ் விலக்கணக் குறைவுள்ள படிவங்களைத் தாபித்தலாகாது. ௧௫௮

தெய்வப் படிவங்களுக்கு இலக்கணம் வகுத்தது ஆண்டா னடிமைத்திறங் குறித்தேயாம். ௧௫௯

எப்பொழுதும் மனத்தைத் தெய்வத்தின்பாற் செலுத்தி அன்பு பூண்டொழுகும் பூசகனது தவ வன்மையால் தெய்வப் படிவங்களிலுள்ள குற்றங்களெல்லாம் விரைந்து நீங்குவனவாம். ௧௬0

## ௧௩. தெய்வ ஊர்திகள் இயற்று முறை.

தெய்வத் திருவுருவத்தின் முற்பக்கத்துள்ள மண்டபத்தில் அவ்வத் தெய்வத்திற்குரிய ஊர்தியை அமைத்தல் வேண்டும். அவ்வூர்தி வகைகளுள் கருட ஊர்தி இரண்டு கைகளையும், அழகிய மூக்குக் கண்கள் இறகுகளையும், மனித உடலினையும், மூக்குள்ள முகத்தினையும், கிரீடத்தையும், கவசம் தோள்வளைகளையும், கூப்பிய கைகளையும், வணங்கிய தலையினையும், ஆண்டான் திருவடித்தாமரைகளிற் செலுத்திய கண்களையு முடையதாக இருத்தல் வேண்டும். ௧௬௧-௧௬௨

புட்களும், சிங்கம் இடபம் முதலியவைகளும் தெய்வங்களுக்கு ஊர்திகளாந் தன்மையை யெய்துங்கால், அவை தம் உருவத்தோடியைந்த பிற உருவுங்களையும் விரும்பியவாறு எய்துவனவாம். அவற்

---

௧௫௯. வழிபடுவோன் வழிபடப்படும் தெய்வத் திருவுருவத்தை ஆண்டானுடையதெனவும், தான் அடியான் எனவும் உணர்ந்து, அன்பு பூண்டொழுகுதற்கே அத் திருவுருவங்கட்கு இலக்கணம் வகுக்கப்பட்டன என்பதாம்.

௧௬0. தெய்வப் படிவங்களில் இலக்கணக் குறை நேர்ந்திருக்குமாயின், அதனால் வருங் கேடுகளைப் பூசகன் தன் தவ வன்மையால் ஒழித்துவிடுவான் என்பது கருத்து.

றை அறிவுடையார் அவற்றின் பெயர்க்கு இயைந்த வடிவினையும், அழகினையும், சிறந்த அலங்காரத்தையு முடையனவாய்த் தியானநிலையில் தெய்வத் திருக்கோயின் முன்மண்டபத்தில் எப்பொழுதும் இருக்கும்வண்ணம் செய்தல் வேண்டும். கசு௩-கசு௪

பூனையை யொத்த வடிவினையும், பொன்மை நிறத்தினையும், கரிய புள்ளிகளையும், பெரிய உடலினையு முடையதாய்ப் பிடர்க்கண் மயிர் இல்லாதது புலி என்று கூறப்படும். சிறிய இடையினையும், பெரிய வடிவினையும், அகன்ற புருவங்களையும், அகன்ற கதுப்புக்களையும், அகன்று நீண்ட கண்களையும், பால உருவினையும், பிடரிமயிரினையும், சிறிது வெளுப்பான நிறத்தினையும், மிக்க வன்மையினையும், அழகினையு முடையதாய்க் கரியபுள்ளிகள் இல்லாதது சிங்கமாகும். கசு௫-கசு௬

புலி சிங்கம் இவ்விரண்டற்கும் வேறுபாடு பிடரி மயிரினாலும், கரிய புள்ளிகளாலும் அறியப்படும். உருவத்தால் வேறுபாடின்று.கசு௭

## க௪. கணபதியின் திருவுரு வமைக்கு முறை.

யானைமுகத்தினையும், மனிதவுடலினையும், தொங்குகின்ற செவிகளையும், பருத்த வயிற்றினையும், அகன்று குறுகி நெருங்கிப் பருத்த தோள் கால் கைகளையும், பருத்த துதிக்கையினையும், முறிந்த இடப்பக்கத் தந்தத்தினையும், தனக்குரிய விருப்பமிக்க ஊர்தியையும், இடப்பக்கத்தே சிறிது வளைந்த துதிக்கை நுனியினையும், வெளிப்படாது மறைந்த அவயவசந்தி எலும்பு நரம்புகளையும் உடையதாகவும், அளவை இலக்கணம் அமைந்ததாகவும், எப்பொழுதும் தனக்கு முன் பூசிக்கப்படுவது ஒன்றின்றித் தானே எல்லாவற்றிற்கு முன்னர்ப் பூசிக்கப்படுவதாகவும், கணபதியின் திருவுருவத்தை அமைத்தல் வேண்டும். கசு௮-கசு௯

துதிக்கை நாலரைத் தால அளவு நீளமுடையதாகவும், தலை பத்து அங்குல அளவு உயரமுடையதாகவும், புருவங்கள் தனித்தனி நான்கங்குல அளவு நீளமுடையனவாகவும் இருத்தல் வேண்டும். க௭0

மேலுதட் டுருவமாக வுள்ள துதிக்கையின் கூறு மூக்காகவும், அத்துதிக்கையின் எஞ்சிய பாகம் புட்கரத்தோடு கூடியதாகவும்,

---

க௬அ - கசுக. அகன்று குறுகி நெருங்கிப் பருத்தலைக் கால் கைகளுக்கும் கொள்க.

செவிகளின் நீளம் பத்தங்குலமாகவும், அவற்றின் அகற்சி எட்டங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧௭௧

இரண்டு செவிகளுக்கும் நடுவணுள்ள இடம் பதினொன்கங்குலமாகவும், அக் கணபதி உருவத்தினது தலையின் சுற்றளவு முப்பத்தாறங்குலமாகவும் அறிதல் வேண்டும். ௧௭௨

கண்களின் மேற்பக்கத்துச் சுற்றளவு முப்பத்தாறங்குலமாகவும், கண்களின் கீழ்ப்பக்கத்துச் சுற்றளவும் துதிக்கையின் அடிப்பாகத்துச் சுற்றளவும் தனித்தனி இருபத்தாறங்குலமாகவும், மற்றைக் கைகளின் நுனிப்பாகத்துச் சுற்றளவும், புட்கரத்தின் சுற்றளவும் தனித்தனி பத்தங்குலமாகவும், கழுத்தின் உயரம் மூன்றங்குலமாகவும், கழுத்தின் சுற்றளவு முப்பதங்குலமாகவும்இருத்தல் வேண்டும். ௧௭௩-௧௭௪

வயிற்றின் சுற்றளவு நான்கு தாலமாகவும், வயிற்றின் உயரம் ஆறங்குலம் அல்லது எட்டங்குலமாகவும் சிற்பிகளாற் செய்யப்படல் வேண்டும். ௧௭௫

தந்தத்தின் நீளமும் அதன் அடிப்பாகத்தின் சுற்றளவும் அவ்வாறங்குலமாகவும், கீழுதடு ஆறங்குலமாகவும், புட்கரம் தாமரை மலரோடு கூடினதாகவும் இருத்தல் வேண்டும். ௧௭௬

தொடைகளின் அடிப்பாகத்துச் சுற்றளவு முப்பத்தாறங்குலமாகவும், அதன் நுனிப்பாகத்தின் சுற்றளவு இருபத்து மூன்றங்குலமாகவும், முழங்காலின் அடிப்பாகத்துச் சுற்றளவு இருபது அங்குலமாகவும், கைகளின் அடிப்பாகத்துச் சுற்றளவு அவற்றின் நுனிப்பாகத்துச் சுற்றளவினும் ஓரங்குலம் ஈரங்குலம் மிகுதியாகவும் இருத்தல் வேண்டும். ௧௭௭-௧௭௮

செவிக்கும் விழிக்கும் நடுவிடம் நான்கங்குலமாகவும், இரண்டு கண்களின் அடி நடு நுனிகளின் நடுவிடம், முறையே ஆறு, ஏழு, பத்து அங்குலங்களாகவும் இருத்தல் வேண்டும். இவ்வாறு கணபதியின் திருவுருவத்தின் இலக்கணங்கள் அறிவுடையோராற் சிறப்பித்துக் கூறப்பட்டன. ௧௭௯

---

௧௭௬. புட்கரம் - துதிக்கையின் நுனி.

௧௭௯. இரண்டு கண்களின் அடிப்பாகங்களும் மூக்கை யடுத்துள்ளனவாம். நுனிப்பாகங்கள் செவியை யடுத்துள்ளனவாம்.

கரு. சத்தியுருவம் பாலதெய்வப்படிவங்கள் அமைக்கு முறை.

பெண் தெய்வத் திருவுருவத்திற்குத் தனங்களின் உயரமும் அகலமும் ஐவைந்தங்குலமாக எண்ணப்படும். கஅ0

பெண்தெய்வப் படிவத்தின் இடையினது சுற்றளவு முப்பத்தெட்டங்குலமாகவும், அப் படிவத்தின் எல்லா உறுப்புக்களும் உள்பட உயர அளவு ஏழு தாலங்களாகவும் இருத்தல் வேண்டும். கஅக

ஏழு தால அளவில் அமைந்த அப் பெண்தெய்வப் படிவத்திற்கு முகம் பன்னிரண்டங்குலமாகும். பால தெய்வம் முதலிய தெய்வப்படிவங்களின் உயரத்தைத் தனித்தனியே பகுத்தறிதல் வேண்டும். கஅஉ

பால தெய்வப்படிவத்தின் கழுத்துக் குறுகியும், அதன் தலை பருத்தும் இருத்தல் வேண்டும்; என்னை? அப் பாலப்பருவத்தின் பின் கழுத்தின் கீழ்ப்பாகம் எத்துணைப் பருமை யெய்துமோ அத்துணைப் பருமையைத் தலை யெய்தாதாகலின். கஅங

பால தெய்வப் படிவத்தின் கழுத்தின் கீழ் அளவு அதன் முகத்தின் உயர அளவினும் நாலரைமடங்கு மிகுதியாக இருத்தல் வேண்டும். அந் நாலரைமடங்கு மிகுதியில் இருமடங்கு ஆண்குறிவரையிலும் எஞ்சிய அளவு தொடையின் கீழ்ப்பாகமாகவும் இருக்கும்படி செய்தல் வேண்டும். கஅச

அப் பால தெய்வப் படிவத்தின் கைகள் முகத்தின் உயர அளவில் இருமடங்காதல், இரண்டேகால்மடங்காதல் மிகுதியாக இருத்தல் வேண்டும். அப்படிவத்தின் பருமைக்கு அளவு நியமம் இன்று. அழகுறச் செய்தல் வேண்டும். கஅரு

பாலப் பருவம் ஐந்துயாண்டுகளின் பின்னர் மிகவும் வளர்ச்சியெய்துவதாகும். பெண் பதினாறு யாண்டுகளிலும், ஆடவன் இருபது யாண்டுகளிலும் எல்லா உறுப்புக்களும் நிரம்பப்பெற்றவராவர். கஅசு

கசு. ஏழு தால முதலிய அளவில் தெய்வப்படிவங்கள் அமைக்குமுறை.

தெய்வப்படிவங்கட்குப் பாலப்பருவங் கடந்து யௌவன பருவம் நேர்ந்துழி ஏழுதாலம் முதலிய அளவில் உருவம் அமைத்தல்

---

கஅஉ. கஅச-ஆம் சுலோக முதலியவற்றில் பால தெய்வப் படிவங்களின் அளவு, முகத்தைப் பற்றி மற்றை உறுப்புக்களுக்குக் கூறுகின்றமையால், ஈண்டுப் பொதுவாகத் தனித்தனியே பகுத்தறிதல் வேண்டும் என்று கூறப்பட்டது.

தக்கதாகும். சில படிவங்கள் பாலப்பருவத்திலும், சில படிவங்கள் யௌவனபருவத்திலும், சில படிவங்கள் முதுமைப்பருவத்திலும் அழகுடையனவாக விளங்கும். ௧அ௭

ஏழுதால அளவு உயரமுள்ள படிவத்திற்கு முகத்தின் கீழுள்ள கழுத்து மூன்றங்குலமாகவும், மார்பு வயிறு நாபியின் கீழ்ப்பக்கத்து அடிவயிறு ஆகிய இவை தனித்தனி ஒன்பதங்குலமாகவும், தொடை பதினெட்டங்குலமாகவும், முழங்காற்சந்தி மூன்றங்குலமாகவும், கணைக்கால் பதினெட்டங்குலமாகவும், பரட்டின் கீழ்ப்பாகம் மூன்றங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧அஅ-௧அ௯

எட்டுத்தால அளவு உயரமுள்ள படிவத்திற்குக் கழுத்து நான்கங்குலமாகவும், மார்பு வயிறு நாபியின் கீழ்ப்பக்கத்துள்ள அடிவயிறு இவை தனித்தனி பத்தங்குலமாகவும், தொடை இருபத்தோரங்குலமாகவும், முழங்காற்பூட்டு நான்கங்குலமாகவும், கணைக்கால் இருபத்தோரங்குலமாகவும், பரட்டின் கீழ்ப்பாகம் நான்கங்குலமாகவுமிருக்க வேண்டுமென்று இவ்வாறு அளவை கூறப்பட்டுளது. ௧௯0-௧௯௨

பத்துத்தால அளவு உயரமுள்ள படிவத்திற்கு முகம் மார்பு வயிறு நாபியின் கீழ்ப்பக்கத்து அடிவயிறு ஆகிய இவை தனித்தனி பதின்மூன்றங்குலமாகவும், பரட்டின் கீழ்ப்பாகம் கழுத்து முழங்காற்பூட்டு இவை தனித்தனி ஐந்தங்குலமாகவும், தொடையும் கணைக்காலும் தனித்தனி இருபத்தாறங்குலமாகவும், தலை மணி ஓரங்குலமாகவும், கைகள் தனித்தனி ஐம்பது அங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௧௯௩-௧௯௫

பத்துத்தால அளவிற் குறைந்த படிவங்களுக்கு, குறைந்த தாலம் ஒன்றுக்குக் கைகளைத் தனித்தனி இரண்டிரண்டு அங்குல விகிதங் குறைத்து அமைத்தல் வேண்டும். எல்லா அளவினும் அழகு விளங்கும்வண்ணம் திறனுறச் செய்தல் வேண்டும். ௧௯௬

ஒன்பதுதால அளவுள்ள படிவத்தை அதற்குச் சொல்லிய அளவினின்றும் கூடுதல் குறைதலாகச் செய்தலாகாது. ௧௯௭

---

௧௯௬. பத்துத்தால அளவு உயரமுள்ள படிவத்திற்குக் கைகள் ஐம்பது அங்குலமாயின், ஒன்பதுதாலத்திற்குக் கை நாற்பத்தெட்டங்குலமாகவும், எட்டுத்தாலத்திற்குக் கை நாற்பத்தாறங்குலமாகவும்,ஏழுதாலத்திற்குக்கை நாற்பத்து நான்கங்குலமாகவும் இவ்வாறு கணக்கிட்டுக்கொள்ளல் வேண்டும். ஏழுதாலம் எட்டுத்தாலம் அளவுள்ள படிவங்களுக்குக் கையளவு முன்னர்க் கூறப்படாமையால் ஈண்டிவ்வாறு கூறப்பட்டது.

௧௯௭. ஒன்பதுதால அளவு உயரமுள்ள படிவத்தின் உறுப்புக்களெல்லா

பத்துத்தால அளவு உயரமுள்ள படிவத்திற்குப் பாதங்கள் தனித்தனி பதினைந்தங்குலம் இருத்தல் வேண்டும். பத்துத்தால அளவிற் குறைந்த படிவங்களுக்குக் குறைந்த தாலம் ஒன்றுக்கு ஒவ்வோரங்குல விகிதம் பாத அளவு குறைந்திருத்தல் வேண்டும். பத்துத்தால அளவின் மிகுதியான அளவுள்ள படிவங்களுக்கு மிகுதியான தாலம் ஒன்றுக்கு ஒவ்வோரங்குல விகிதம் பாத அளவு கூடியிருத்தல் வேண்டும். சிற்பஞானத்திற் சிறந்த புலவன் இப் படிவங்களை முகம் தொடங்கி அழகுற இயற்றல் வேண்டும். கசுஅ

நீண்ட தொடைகளையும், நீண்ட கணைக்கால்களையும், விகார உருவத்தையும், சினக்குறிப்பையும், அச்சத்தை விளைவிக்கும் தோற்றத்தையுமுடையது அசுரப் படிவமாகும். இவ் வசுரப் படிவத்திற்குக் கூறிய உருவம் தோற்றம் முதலிய எல்லாம் பைசாசப் படிவத்திற்கும் இராக்கதப் படிவத்திற்கும் பொருந்துவனவாம். அன்றி இவற்றை மெலிந்த வடிவினையுடையனவாகவும் செய்யலாம். கசுகூ

எல்லா அளவிலும் அமைக்கப்படும் படிவங்கள் எல்லாவற்றிற்கும் கையின் நடுவிரல் ஐந்தங்குலத்திற்குக் குறையாமலும் ஆறங்குலத்திற்கு மேற்படாமலும் இருக்கவேண்டுமென்று சிற்ப ஞானிகள் கூறுவர். உ00

சிற்பஞானி எப்பொழுதும் பாலப் பருவத்திற் கியைந்ததும் யௌவன பருவத்திற் கியைந்ததும் ஆகிய படிவங்களையே இயற்றல் வேண்டும். கிழப் பருவத்திற் கியைந்த படிவத்தை ஒருபொழுதுஞ் செய்தலாகாது. உ0க

அரசன் தன் நாட்டில் எப்பொழுதும் இத்தகைய தெய்வத் திருவுருவங்களைப் பிரதிட்டை செய்வித்தல் வேண்டும். அத் தெய்வங்களுக்கு யாண்டுதோறும் நைமித்திகமாகிய திருவிழாக்களைச் சிறப்புறச் செய்தல் வேண்டும். உ0உ

அரசன் முற்கூறிய அளவிலக்கணங்களின் வேறுபட்டனவும், உறுப்பு முறிந்தனவுமாகிய படிவங்களைத் திருக்கோயில்களில் வைத்துப் போற்றலாகாது. நாள்மிகுதியாற் சிதைந்த ஆலயங்களையும் தெய்வப்படிவங்களையும் முயன்று புதுப்பித்தல் வேண்டும். உ0ங

---

வற்றிக்கும் அளவு மேற் கூறப்பட்டமையால் இங்கு அவ் வளவினின்றும் கூடுதல் குறைதல் லாகாதென்று வற்புறுத்தப்பட்டது.

அரசன் எப்பொழுதும் தன் மனம் இன்புறுதற்பொருட்டுத் தெய்வங்களை முன்னிட்டு நாட்டியம் முதலியவற்றை நடாத்திக்கண்டு களித்தலாகாது. ௨௫௪

குடிகளால் தெய்வங்களுக்குச் செய்யப்படும் திருவிழாக்களையும் அரசன் பாதுகாத்து ஆதரித்தல் வேண்டும். குடிகள் இன்புறக் கண்டு தான் இன்புறுதலும், அவர் துன்புறக்கண்டு தான் துன்புறுதலும் அரசனுக் குரியனவாம். ௨௫௫

சுக்கிரநீதி நான்காம் அத்தியாயத்தில்,
நாட்டைப்பற்றிய நடுவணதாகிய
“ உலகதருமநிரூபணம் ” என்னும்
நான்காம் பிரகரணம் முற்றிற்று.



## ஐந்தாம்பிரகரணம்.
### (இராச தருமம்.)

#### க. அரசன் நீதி யியல்பு அறிதல்.

அரசன், குடிகளின் வழக்குக்களை யாராய்ந்து, அறிந்து தீயோரை ஒறுத்தல் வேண்டும். தன் கீழ் அடங்கி வாழும் குடிகள் எப்பொழுதும் தன் ஆணைவழி ஒழுகுதற் குரியராவர். க

தீயோராவார்—அரசன் விருப்பத்திற்குக் கேடு விளைப்போரும், பகைவரும், பாவ காரியங்களைச் செய்யும்படி உபதேசிப்போருமாவர். குடிகளைக் காத்தல் என்பது நியாய நெறி பிறழாது அவர் விரும்பியவற்றைச் செய்தலாகும். ௨

பகைவரை அழித்தல் என்பது வெறுப்பன செய்தலினின்றும் அவரை ஒழிவுறச் செய்தலாகும். தீயோரை ஒறுத்தலென்பது தீயன செய்தலினின்றும் அவரை ஒழிவுறச் செய்தலாகும். ௩

அரசன், எதனால் நன்றுதீதுகளை ஆராய்ந்தறிந்து தன் குடிகளை அறத்தில் நிலைப்படுத்துதலையும், பிற காரியங்களை நன்கு நிறைவேற்றிக்கொள்ளுதலையும் செய்கின்றானோ அதுவே வியவகாரம் என்று கூறப்படும். ௪

௪. வியவகாரம் என்டு அரசியல்நீதியாகும். ஒரு பொருளைத் தனித்தனியே எனதெனதென்றிருப்பார் அதுகாரணமாகத் தம்முள் மாறுபட்டு அப்பொருள்

அரசன் விருப்பு வெறுப்புக்கள் இல்லாதவனாய், நீதிபதிகள் அமாத்தியர் அந்தணர் புரோகிதர் ஆகிய இவர்களோடு கூடியிருந்து நன்கு விழிப்புமிக்க மனத்தினையுடையனாய் அறநூல்களைத் தழுவி முறைப்படி வழக்குக்களை ஆராய்ந்தறிதல் வேண்டும். ரு

அறிவிற் சிறந்த அரசன், வழக்காளிகளின் காரியங்களைத் தான் தனியனாய்த் தனியிடத்திருந்து ஒருபொழுதும் ஆராய்தலும் கேட்டலுங் கூடவாம். நீதி மன்றத் துள்ளாரும், அங்ஙனமே தனித்திருந்து வழக்குக்களை யாராய்தலுங் கேட்டலும் ஆகாவாம். சு

நியாயம் வழங்குவார் ஒருதலைச்சார்பை மேற்கோடற்குரிய காரணங்களாவன:— நட்பு, பொருணசை, அச்சம், பகைமை, வழக்காளிகளைத் தனியிடத்திருந்து கேட்டல் ஆகிய இவ்வைந்துமாம். எ

எவ் வரசன், தான்மாத்திரம் இன்புற்றிருந்து தன் குடிகளுக்குச் செயற்பாலனவற்றைச் செய்யா தொழிகின்றானோ அவ் வரசன் உறுதியாகக் கொடிய நரகத் துன்பத்தை அநுபவிப்பவனாவான். இதன்கட் சிறிதும் ஐயமின்று. அ

எவ் வரசன், மயக்க உணர்வினாற் காரியங்களை அறநெறி பிறழ்ந்தனவாகச் செய்கின்றானோ அத் தீய அரசனைப் பகைவர் விரைந்து தம் வயப்படுத்திக்கொள்வர். கூ

அரசன், நீதிபதி முதலியவரோடு கூடியிராமல் தான் தனியனாயிருந்து வழக்காளிகளின் சொற்களைக் கேட்டு ஆராய்வானாயின், அஃது அவற்கு மறுமை இன்பத்தையும் பயவாது; பகைவருடைய படைகளால் அச்சத்தை விளைவித்து அவன் வாழ்நாளையுங் கெடுப்பதாகும்; அன்றிக் குடிகளுக்குங் கேடு விளைவிப்பதாகும். ௧௦

ஆதலின், அரசன் அறநூல் முறையை மேற்கொண்டு அவ் வழியே எல்லாக் காரியங்களையும் ஆராய்தல் வேண்டும். ௧௧

அரசன், தான் செய்யவேண்டிய காரிய முடிவுகளைத் தானே செய்தற்கு இயலாதவனாக இருப்பின், அப்பொழுது அவற்றைச் செய்தற்பொருட்டு ஓர் அந்தணனை நியமித்தல் வேண்டும். அவ் வந்த

---

மேற் செல்லுவதாகிய வழக்கு இப் பிரகரணத்தின் கூஅ-ஆம் சுலோகத்திற் கூறப்படும்.

௧௨-௧௩. செய்யவேண்டிய காரிய முடிவுகள்:—வழக்காளிகள் கூறுஞ் சொற்களைக் கேட்டு ஆராய்ந்து உண்மை கண்டு தீர்மானித்தல் முதலியன, அர

ணன் பொறியடக்கம், உயர்குடிப்பிறப்பு, நடுவுநிலைமை, சாந்தகுணம், ஆசையின்மை, மறுமை குறித்துத் தீவினைக்கு அஞ்சுதல், அறநிலை, முயற்சி, சினமின்மை ஆகிய இக்குணஞ் செயல்களையுடையனாய் வேதங்களின் கரைகண்டவனாக இருத்தல் வேண்டும். கஉ-கா

வழக்காராயுங் காரியங்களைத் திறம்படப்புரியும் அறிவுடை அந்தணன் இல்லையாயின், அப்பொழுது அச் செயற்கண் அறநூலறிவிற் சிறந்தவனாகிய அரசர் குலத்தவனையாதல், வணிக குலத்தவனையாதல் நியமனஞ் செய்யலாம். சூத்திரனை நியமனஞ் செய்யாமல் முயன்று விலக்கல் வேண்டும். கச

அரசன் எவ் வருணத்திற் றோன்றினனோ அவ்வருணத்துள்ளாரை எப்பொழுதும் நியாயவிசார காரியத்தில் நியமித்தல் வேண்டும். அவ் வருணத்திலேயே பெரும்பாலும் நற்குணம் நிறைந்தோர் உண்டாயிருப்பர். கரு

வழக்கியல்பு அறிதல், பேரறிவுடைமை, நற்குணம், நற்செயல், நல்லொழுக்கம், பகைவரையும் நண்பரையும் ஒப்ப மதித்தல், அறவுணர்ச்சி, வாய்மைகூறல், மடியின்மை, காம வெகுளி உலோபங்களைக் கடத்தல், இன்சொற் கூறல் ஆகிய இக்குணஞ் செயல்களை யுடையார் எச் சாதியினராயினும் அவர்களை அரசன் நியாயமன்றத்தவராக நியமித்தல் வேண்டும். கசு-கஎ

உழவர், காருகர், சிற்பவினைஞர், வட்டித்தொழில் புரிவார், இழிந்த சாதிக் குழுவினர், நாட்டியம் புரிவார், இலிங்கிகள், கள்வர் ஆகிய இவர்கள் தம் குழுவினர்க்குரிய தருமமுறைப்படி தம் காரியங்களைத் தாமே தீர்மானித்துக்கொள்ளல் வேண்டும். அவ்வுழவர் முதலியோர்க்குரிய காரியங்களை ஆராய்ந்து தீர்மானித்தல் பிறர்க்கு அரிதாதலின், அரசன் அத்தரும இயல்புகளை நன்கு உணர்ந்த அக்குழுவினராலேயே அதனைச் செய்வித்தல் வேண்டும். கஅ-கக

---

சன் நீதிபதி முதலியவரோடு கூடியிருந்து தீர்மானித்தல் வேண்டும். எக்காரியத்தை முன்னிட்டேனும் அவற்கு அக்காரியங்களை ஆராயக் கூடவில்லையாயின், அப்பொழுது தனக்குப் பிரதிநிதியாக ஓர் அந்தணனை நியமிக்கவேண்டுமென்பது கருத்து.

கஅ-கக. இலிங்கி-தவவேடமுடையான். உழவர் முதலாக இங்குக் கூறப்பட்டார் தம் விவகாரங்களைத் தம் குழுவினருள் அறிவுடைய சிலரைக் கொண்டு முடிவுசெய்துகொள்ளல் வேண்டுமென்பதும், அவர்தம் வழக்க ஒழுக்கங்களையுணர்ந்து காரிய நிருபணஞ் செய்யத்தக்க திறமை யுடையாரை அக்குழுவினின்

தனக்கு நலத்தை விரும்பும் வேந்தன், பிரமசரியம் முதலிய ஆச்சிரம ஒழுக்கங்களை யுடையாரும், காரியநிமித்தம் தம்முள் வழக்கிடுவாருமாகிய இருபிறப்பாளர் மூவர்க்கு முரிய தருமத்தில் மாறுபடக் கூறலாகாது. ௨0

தவஞ்செய்வார், மாயை யோகங்களை அறிந்தார் ஆகிய இவர் தம் காரியங்களை, வேதங்களை யறிந்த பெரியோர்களைக் கொண்டே செய்வித்தல் வேண்டும். இவர்தம் வெகுளி கணமேயுங் காத்த லரிதாதலின் அரசன் தானே செய்தலாகாது. உக

சிறந்த அறிவுச்செல்வம் நிரம்பப்பெற்ற அரசன், உயர்ந்த குடிப்பிறப்பையும், சிறந்த ஒழுக்கங்களையு முடைய குருக்கள், ஞானசிரியர், தவஞ் செய்வார் ஆகிய இவர்களுக்குத் தான் ஒன்றைக் கட்டளையிடலாகாது. உஉ

காட்டில் வாழ்வார் அவர் இனத்தவரோடும், கூடி வாணிகம் புரிவார் அக் கூட்டத்தவரோடும், போர்வீரர் அவரினத்தவரோடும், கிராமத்தில் வாழ்வார் அவர்க்கு இருபுறத்தும் இருப்பவரோடுங் கூடித் தத்தங் காரிய நிருணயங்களைச் செய்துகொள்ளல் வேண்டும். உ௩

யாவர் எக்காரியத்தில் எதன்பொருட்டு அரசனால் நியமிக்கப் பட்டுள்ளாரோ அவரே அக் காரியத்திலுள்ள குணங் குற்றங்களை ஆராய்ச்சிசெய்வோராவர். உச

யாவர் ஏறுபோல வழக்காகிய சுமையைச் சுமத்தற்கு வலியுடையாரோ அத்தகைய அறநிலை யுடையோரை அரசன் நன்றாக ஆராய்ந்தெடுத்து நீதிமன்றக் குழுவினராக நியமித்தல் வேண்டும். உரு

## உ. நியாய மன்றம் அமைக்கு முறை.

உலகியல், வேதம், அறநூல் ஆகிய இவற்றிற் சிறந்த அறிவுவாய்ந்த அந்தணர் எழுவராதல், ஐவராதல், மூவராதல் எம் மன்றத்தில்

றும் தெரிந்தெடுத்து அரசன் நியமனஞ் செய்தல் வேண்டு மென்பதுங் கூறப்பட்டன.

உக. மாயை - மாயாப்பிரயோகம்; அபிசாரவேள்வி முதலியன.

உஉ. ஒன்றைச் செய்யும்படி அவரை ஆணையிட்டேவுதலாகாது என்பது கருத்து.

உ௩. இதனாற் பல்வேறு வகுப்பினரும் தத்தம் வழக்குக்களைத் தத்தம் வகுப்பினரைக் கொண்டே தீர்மானித்துக்கொள்ளல் வேண்டும் என்பது போதரும். அவ் வகுப்பினரால் தீர்மானிக்கப்படாத காரியங்கள் பின்னர் அரசனால் நியமிக்கப்பட்ட நீதிபதி முதலியோரால் தீர்மானிக்கப்படும் என்பதும் உய்த்துணரும்பாற்றும்.

இருக்கின்றனரோ அம் மன்றம் வேள்விச்சாலையை யொப்ப மிக்க தூய்மை வாய்ந்ததாகும். உசு

அம் மன்றத்தில், சிறந்த அறிவுவாய்ந்த வணிகர்களை வழக்குக் கேட்போராக நியமித்தல் வேண்டும். உஎ

அறநூலுணர்ந்து அந்நூல் நெறி ஒழுகும் ஒருவன் கூறுவன தெய்விகச்சொல் ஆதலால், அவன் அரசனால் நியமிக்கப்பட்டவனா யினும் நியமிக்கப்படாதவனாயினும் வழக்கின் சம்பந்தமாக நியாயங் கூறுதற்குத் தகுதியுடைய னாவான். உஅ

நியாயமன்றத்திற்கு ஒருவன் சென்றால் உண்மையையே சொல் லுதல் வேண்டும். இன்றேல் அங்குச் செல்லலாகாது. அங்குச் சென் றும் உண்மை யுணர்ந்துஞ் சொல்லாமலிருத்தலையும், மாறுபடக் கூறு தலையு முடைய மனிதன் தீவினையாளனாவான். உகூ

அரசனால் திறனுடையார் என்று அறியப்பட்ட குலம், சிரேணி, கணம் முதலிய நியாயத் தீர்ப்புக் குழுவினர் தத்தம் குழுவுட்பட்ட மனிதர்களின் கொலைகளவு முதலியனவல்லாத காரியங்களை ஆராய்ந்து தீர்மானஞ் செய்தற்குரியராவர். ௩0

முதல் விசாரகராகிய குலக் குழுவினரால் விசாரித்துத் தீர்க்க முடியாத வழக்குக்கள் சிரேணிகளாலும், சிரேணிகளால் விசாரித் துத் தீர்க்கமுடியாத வழக்குக்கள் கணங்களாலும், கணங்களால் விசாரித்துத் தீர்க்கமுடியாத வழக்குக்கள் அரசனால் நியமிக்கப் பட்ட நீதிபதி முதலியோராலும் விசாரித்துத் தீர்க்கப்படுவன வாம். ௩க

குலம் முதலிய குழுவினரினும் நியாய மன்றத்தவர் உயர்ந்தவ ராவர். நியாய மன்றத்தவரினும் நீதிபதிகள் உயர்ந்தோராவர். தன்

உஎ. பொன் முதலியவற்றை நிறுத்து ஆராய்தல் போல வழக்குரைப் போரின் காரியங்களையும் நிறுத்துணர்ந்து ஆராய்வராதலின் வணிகரைக் கேட் போராக நியமிக்கவேண்டு மென்றார்.

உஅ-உகூ. இவ்விரண்டு சுலோகங்களாலுங் கூறப்பட்டோர் நியாயமன்றஞ் சென்று அங்கு நிகழுங் காரியங்களை யாராய்ந்துணர்ந்து உண்மைகூறும் பொது மக்களாவார். இவ்வழக்கம் பண்டைக் காலத் துள்ளது போலும்.

௩0-௩க. ஈண்டுக் கூறிய குலம், சிரேணி, கணங்கள் முறையே ஒன்றற் கொன்று உயர்ந்த கூட்டங்களாகும். இக் கூட்டத்தினர் ஓரளவு வரையறுக்கப் பட்ட சனங்களின் வழக்குக்களைக் கேட்டறிந்து தீர்க்கும் பஞ்சாயத்தாராவர்.

கீழ் வாழுங் குடிகளை அறநெறிக்கட் செலுத்தி மறநெறி விலக்கி யாளும் அரசன், தலை யிடை கடையாய வழக்குக்களெல்லாவற்றை யும் ஆராய்ந்து முறை செய்தலான் நீதிபதி முதலிய எல்லோரினும் உயர்ந்தவனுவான். மன்னவன் அறிவு மற்றையோர் அறிவினும் மேன் மேற் சிறந்து விளங்கும் இயல்புடையதாகும். ௩௨-௩௩

ஒரு நூலை மாத்திரங் கற்றுணர்ந்த மனிதன் வழக்குக்களைத் தீர் மானிக்க அறியான். ஆதலின், பல நூல்களையுங் கற்றுணர்ந்த உத்த மனையே வழக்காராயுஞ் செயலில் அரசன் நியமித்தல் வேண்டும். ௩௪

கடவுட் டத்துவங்களை யுணர்ந்தா னொருவன் தான் தனியனு யிருந்து எதனைக் கூறுகின்றானே அதுவே அறமாகும். ௩௫

அரசன் சிறந்த நியாயமன்றத்தவரோடு தனித்தனி கூடியிருந்து வழக்குக்களின் சிறுமை பெருமைக் கேற்ப ஒரு முறையாதல், இரு முறையாதல், மும் முறையாதல், நான்கு முறையாதல் அவ்வழக்குக் களை யாராய்ந்து தீர்மானித்தல் வேண்டும். ௩௬

எந்த நீதிபதி வாதி பிரதிவாதிகளையும், நியாயமன்றத்தவரையும், எழுத்தாளரையும், காண்போரையும் அறவுரைகளா லின்புறுத்து கின்றானே அவன் அந்த நீதிமன்றத்தைத் தீங்கினின்றும் விலக்குபவ னுவான். ௩௭

௩. நியாய மன்றத்தின் பத்து அங்கங்கள்.

அரசன், நீதிபதி, நீதிமன்றத்தவர், அறநூல், கணக்காளர், எழுத்தாளர், பொன், நெருப்பு, நீர், ஏவலாளர் ஆகிய இப் பத்தும் காரிய சாதனத்துக் குரிய அங்கங்களாம். ௩௮

தூய அறிவினையுடைய வேந்தன், எம்மன்றத்தில் இங்குக் கூறிய பத்து உறுப்புக்களையுந் துணையாகப் பற்றிநின்று நியாயங்களைக் காண்கின்றானே அம் மன்றம் வேள்விச்சாலையை ஒக்கும். ௩௯

இப் பத்து உறுப்புக்களுக்கும் தனித்தனியே கன்மங்கள் உள் ளன. நீதிபதி வழக்கின் இயல்பைக் கூறுபவனுவான். அரசன் ஆணை வழி யொழுகக் கட்டளை யிடுபவனுவான். நீதிமன்றத்தார் வழக்குக் களை ஆராய்பவராவர். ௪0

௩௩. பத்து உறுப்புக்களில் அரசனும் ஒருறுப்பாகுமாதலின் அரசன் ஈண்டு அங்கமாகவும் அங்கியாகவும் உள்ளான் என்பது அறியற்பாலது.

அறநூல்களை வழக்குக்களைத் தீர்மானிக்கும் முறையையும், மந்திரமோதுதலையும், தானத்தையும், பொறி முதலியன அடக்குதலையுங் கூறுவனவாம். ௪௧

சூளுறவு செய்தற்பொருட்டுப் பொன்னும் நெருப்பும், நீர் வேட்கை தணித்தற்பொருட்டும் கலக்கந் தெளிவித்தற்பொருட்டும் நீரும் இருத்தல் வேண்டும். கணக்கன் பொருளைப் பற்றிய வரவுசெலவுகளையும், எழுத்தாளன் நியாயமன்றத்தில் நிகழ்வனவற்றையும் எழுதல் வேண்டும். ௪௨

சொற்பொருள்களின் உண்மையுணர்ச்சி, கணக்காராயுந் திறமை, தூய்மை, பல்வகையெழுத்துக்களின் வேறுபாட்டையுணரும் அறிவு ஆகிய இவற்றையுடையாரைக் கணக்காளராகவும், எழுத்தாளராகவும் அரசன் நியமித்தல் வேண்டும். ௪௩

எவ்விடத்தில் அறநூல்களைப் பின்பற்றிப் பொருணூல்களின் ஆராய்ச்சி நன்கு நடைபெறுகின்றதோ அவ்விடமே அறநிலையமாகிய நீதிமன்றமாகும். ௪௪

வழக்குக்களை யாராய்ந்து உண்மை காண்டலில் விருப்பமிக்க அரசன், பணிவுடையனுய்ச் சூழ்ச்சித்திறன் வாய்ந்த அந்தணர்களோடும், மந்திரிகளோடும் நீதிமன்றத்துட் புகுதல் வேண்டும். ௪௫

அரசன், அறம் வழங்குதற்குரிய அரசிருக்கையில் இருந்து காரியங்களை யாராய்தற்குத் தொடங்குதல் வேண்டும். வாதி பிரதிவாதிகள்பால் நடுநிலையுடையனுய் அவ்விரு வழக்காளிகளையும் வினவுதல் வேண்டும். ௪௬

அரசன், நாடோறும் உலகியல் நீதிநூலாகிய ஏதுக்களால் சாதிதருமம், தேயதருமம், சிரேணிதருமம், குலதருமமாகிய இவற்றை நன்கு ஆராய்ந்துணர்ந்து தன் அரசியற் றருமத்தைப் பேணல் வேண்டும். ௪௭

தேயதருமம், சாதிதருமம், குலதருமமாகிய இவை பண்டுதொட்டு எவ்வாறு நடைபெற்று வருகின்றனவோ அவ்வாறே அவற்றைப் பாதுகாத்தல் வேண்டும். இன்றேல் குடிகள் மிகவும் கலக்கம் எய்துவர். ௪௮

௪௭. சிரேணி, குலம் என்பவற்றை ௩௦-௩௧ சுலோகங்களிற் காண்க.

௪௮. பண்டுக் குலம்—குடித் தலைமை.

தென்னாட்டில் வாழும் அந்தணர் மாமன்மகளை மணஞ்செய்து கொள்கின்றனர். நடுநாட்டில் வாழும் காருகரும் சிற்பிகளும் பசுவின் இறைச்சியை உண்ணுகின்றனர். வட நாட்டில் வாழும் எல்லாமனிதரும் மீன் இறைச்சியை உண்ணுகின்றனர். ஆங்குள்ள பெண்கள் வியபிசாரத்திற் பற்றுடையராகவும், கட்குடிப்போராகவும், வீட்டுக்கு விலக்காகும் (இருது) நாட்களிலும் ஆண்பாலராற் றீண்டப்படுபவராகவும் இருக்கின்றனர். கசமென்னுந் தேயத்திற் பிறந்தோர் உடன்பிறந்தான் இறந்துவிடின் அவன் மனைவியை மணஞ் செய்துகொள்கின்றனர். இங்ஙனஞ் செய்தலால் அவர்க்குக் கழுவாயாதல் தண்டமாதல் கிடையா. சசு-௫௧

எவர்க்கு எவை பரம்பரைத் தருமங்களாக அவர்தம் முன்னோர்களான் மேற்கொள்ளப்பட்டு வருகின்றனவோ அவர்க்கு அவை குற்றமுடையனவல்ல. அவற்றைப் பிறர் செய்தல் குற்றமாம். ௫உ

கலியுகத்திற் செல்வமிக்கார் பெரும்பாலும் எப்பொழுதும் பிறர் மனைவியர்பாலும் பிறர் பொருட்கண்ணும் பேரவாவுடையராகவும், கட்குடித்தலில் பற்றுடையராகவும், சிறிது அறிவு படைத்த அளவிற் செருக்குடையராகவும், வாமதந்திரங்களிற் கூறப்பட்ட கன்மங்களிற் பற்றுடையராகவும், வேதங்களிற் பற்றில்லாதவராகவும் இருப்பார்கள். அவர்களை அரசன் பெருந்தண்டத்தால் ஒறுத்தடக்கல் வேண்டும். ௫௩-௫௪

## ச. வழக் காராயு முறைகள்.

அரசன், நண்பகலில் நியாய விசாரணையையும் முற்பகலில் அறநூல்களின் ஆராய்ச்சியையும் செய்தல் வேண்டும். மனிதக்கொலை, களவு, பெருங்கொள்ளை, கேடு விளைக்கும் பிற செயல்கள் ஆகிய இவை நேர்ந்துழிக் காலை, நண்பகல், மாலை, இரவு என்னுங் காலநியமங் கருதாமல் அப்பொழுதே அக் காரிய விசாரணையை நடத்தல் வேண்டும். ௫௫-௫௬

வழக்குரைப்பான், மந்திரிகளோடு அறவிருக்கையி லிருக்கின்ற அரசனைக் கண்டு நீதிமன்றத்துட் செல்லல் வேண்டும். சென்று அற

---

சசு-௫௧. இம் மூன்று சுலோகங்களாலும் நான்முறைக்கு மாறுபட்ட தேயதருமம் முதலியன கூறப்பட்டன. இவற்றில் அரசன் தலையிடலாகாதென்பது கருத்து. கசம் என்னும் நாடு இமயமலையின் பக்கத்தே உள்ளது. அதன்கண் வாழ்வார் சிறிது சிறிதாக ஒழுக்கங் குன்றப்பெற்று இழிந்த நிலையினை யெய்திய அரசகுலத்தவராவர்.

நெறி வழுவாது தான் தெரிவிக்கற்பாலனவற்றை உண்மையாக நினைவுகூர்ந்து, விழிப்புடையனாய் நன்கு எழுதிக் கைகூப்பித் தொழுது கொண்டு, உடல்வணக்க முடையனாய்த் தன் வழக்குக்களைத் தெரிவித்துக்கொள்ளல் வேண்டும். ருள-ருஅ

இங்ஙனம் வழக்குரைப்போனை அரசன் அந்தணர்களோடு உடனிருந்து அவன் தகுதிக் கேற்றவாறு பெருமைப்படுத்தி முதலில் இன்சொற்களால் தேற்றிப் பின்னர்த் தன் கடமையைத் தொடங்கல் வேண்டும். ருசு

அரசன் தன் முன்னிலையில் வணங்கி நிற்கின்ற வழக்குரைப் போனை நோக்கி அவ் வமயத்திற் பின்வருமாறு வினவுதல் வேண்டும். "ஏ! மானவ! காரியம் யாது? நினக்கு வந்த துன்பம் என்னை? எவ் விடத்தில் எப்பொழுது எக் காரணத்தால் எத் தீயோனாற் றுன்புறுத் தப்பட்டனை? அஞ்சுதல் வேண்டா; கூறுவாயாக" என்றிவ்வாறு வினவி அவன் கூறும் உண்மையான சொற்களை நன்கு கேட்டல் வேண்டும். சுO-சுக

அவ் வழக்குரைப்போன் கூறுஞ் சொற்களை எழுத்தாளன் அவ் வமயம் பிரசித்தமாக உள்ள எழுத்துக்களாலும் மொழிகளாலும் எழுதிக்கொள்ளல் வேண்டும். சுஉ

எழுத்தாளன், வாதி பிரதிவாதிகளுடைய சொற்களை உள்ள வாறு எழுதாமல் வேறுபட எழுதுவானாயின் அவனை அரசன் தாழ்த் தலின்றி விரைந்து கள்வனை யொப்பக் கருதித் தண்டித்தல் வேண் டும். சுங

நீதிமன்றத்தார் அங்ஙனம் பிறழ எழுதிய எழுத்துக்களை ஒரு பொழுதும் ஏற்றுக்கொள்ளலாகாது. இன்னும் அவர் வழக்குரைப் போரிடத்தினின்றும் வலிந்து பற்றி எழுதி வாங்கலு மாகாது. அங் ஙனம் வாங்குவாராயின் அவரையும் அரசன் கள்வரை யொப்பத் தண் டித்தல் வேண்டும். சுச

அரசன் இல்லாதபொழுது நீதிமன்றத் தெய்தி வழக்குரைப் போரை நீதிபதி முற்கூறியவாறு வினுதல் வேண்டும். சுரு

நீதிபதிக்குப் 'பிராட்விவாகன்' என்பது பெயர். வழக்குரைப் போரை வினவுதல்பற்றி 'பிராட்' எனவும், வழக்குக்களை விரித்து விளக்கி ஒழுங்குபடக் கூறுதலானுதல், அரசன் இல்லாதபொழுது நீதிமன்றத்தவரோடு கூடி நியாய அநியாயங்களை விசாரித்து உணர்த

லாகுதல், விசேடமாக எடுத்துரைத்தலாகுதல் பற்றி விவாக எனவுங் கொண்டு அச் சொற்குப் பொருளுணரப்படும். ௬௬

நியாயமன்றத்தின்கண் இருந்து பிறர்க்கு நலஞ்செய்தல், தகுதியுடைமை, நன்மக்கட்டன்மை யாகிய இவற்றை யுடைய நீதிமன்றத்தாரும் விவாதகாரியங்களை ஆராய்பவராவர். ௬எ

ஒருவனைப் பிறன் ஒருவன் அறநூற்கும் ஆன்றோர் ராசாரத்திற்கும் மாறுபட்ட நெறியால் துன்புறுத்துவானாயின், அங்ஙனந் துன்புறுத்தப்பட்டோன் அரசன்பால் முறையிட்டுத் தெரிவித்துக்கொள்வது யாது—அதுவே வழக்கு (வியவகாரம்) என்று கூறப்படும். ௬அ

அரசனாதல், அவனைச் சார்ந்த அதிகாரிகளாதல் தாமே விவாதச் செயல்களை உண்டுபண்ணுதலாகாது. அரசன் காமம், வெகுளி, பொருணசை என்னு மிவை காரணமாக யாரையுந் துன்புறுத்தலாகாது. வாதி பிரதிவாதிகளால் தெரிவித்துக்கொள்ளப்படாத வழக்குக்களை அரசன் தன் மதியால் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொள்ளலாகாது. ௬௯

அரசன், சலங்களையும், அபராதங்களையும், அரசியல் சம்பந்தமான விவாதங்களையும் அறிவிப்போரின்றித் தானே விசாரணைக்கு எடுத்துக்கொள்ளல் வேண்டும். அன்றி இவற்றைத் தோபகர் முகமாகவும் சூசகர் முகமாகவும் உண்மையாகக் கேட்டும் ஆராய்ந்து கொள்ளலாம். எ0

எவன், அறநூல்வழி ஒழுகுகின்றவனாய் அரசனால் ஏவப்படாமலே சலம் முதலியவைகளை அரசற்கு முதலில் தெரிவிக்கின்றானோ அவன் தோபகன் என்று கூறப்படுவான். எக

௬௬. வ்யாவிவாக: என்னும் வடசொல் பண்புத்தொகை யாகும்; முதற்கண் உள்ள வ்யாட என்பது வ்யாஹ்ரு என்னும் முதனிலையடியாகவும், பின்னுள்ள "விவாக" என்பது "வி" என்னும் உபசர்க்கத்தோடு கூடிய விவ என்னும் முதனிலையடியாகவும் பிறந்தனவாம். இச் சொற்களின் பொருள்களை இச் சுலோகத்தில் விளக்கப்பட்டன.

எ0. தோபகன், சூசகன் ஆகிய இவரைப் பற்றிப் பின்வருஞ் சுலோகங்களிற் காண்க. சலங்கள் ஐம்பது வகைப்படும். அவற்றைப் பின்வரும் எ௩-முதல் அஉ - வரையுள்ள சுலோகங்களிற் காண்க. அபராதம் பத்துவகைப்படும். அவற்றை அ௩-அ௪ - ஆம் சுலோகங்களிற் காண்க. விவாதங்கள் உஉ - வகைப்படும். அவற்றை அ௫-முதல் அஅ-வரையுள்ள சுலோகங்களிற் காண்க.

எக. நாட்டின்கண் நிகழும் சலம் முதலிய தீங்குகளை அரசற் குணர்த்தும் அறவொழுக்க முடையோன் தோபகனுவான்.

எவன், பிறர் குற்றங்களைக கண்டு கூறுதற்பொருட்டு அரச ளுல் நியமிக்கப்பட்டவனும் அங்ஙனமே அக் குற்றங்களை யறிந்து அர சற்கு அறிவிக்கின்ருனே அவன் சூசகன் என்று கூறப்படுவான். எ௨

ரு. சலங்கள்.

(க) தெருவழிக்குக் கேடு விளைத்தல், (௨) பிறரைப் பழித் துரைத்தல், (௩) மதிற்சுவ ரேறிக்கடத்தல், (௪-ரு) தண்ணீர்ப் பந்தல் இல்லம் இவற்றை யழித்தல், (சு) மண் முதலியவற்ருல் அகழியைத் தூர்த்தல், (எ) அரசனது தவறுதலை வெளிப்படுத்தல்,(அ-கூ-க0-கக) ஒருவன் அநுமதியின்றி அவனுடைய இல்லம் உவளகம் பொருட் சாலை அடிசிற்சாலை ஆகிய இவற்றுட் புகுதல், (க௨) ஒருவன் உண் ணுங்கால் பார்த்தல், (க௩-க௪-கரு-கசு) இடம் நோக்காது விரும்பிய வாறு மலம் மூத்திரங்களைக் கழித்தல், எச்சிலுமிழ்தல், அபானவாயு விடுதல், (கஎ) அரசன் முன்னிலையில் வீராசன மிட்டிருத்தல், (கஅ) அரசன் எதிர்முகத்தைத் தடைப்படுத்தல், (ககூ) அரசற்குரிய வேடத்திலுஞ் சிறந்த வேடந் தரித்தல், (௨0) ஒருவன் இல்லத்துள் தடுக்கப்பட்டும் மீறிப் புகுதல், (௨க-௨௨) பிறர் இல்லத்தின்கட் கள்ள வழியாற் புகுதல், அசமயத்திற் புகுதல், (௨௩-௨௪-௨ரு) பிறர் படுக் கை இருக்கை பாதுகைகளில் அவர் அநுமதியின்றிப் படுத்தல் இருத் தல் பாதங்களாற்றீண்டல், (௨சு) அரசன் படுக்கையிற் சயனித்துக் கொண்டிருக்குங்கால் அருகில் நிற்றல், (௨எ) தன் அரசனுடைய பகைவர்க்குப் பணிசெய்தல், (௨அ) பிறனுற் றரப்படாத இருக் கையைத் தானே பற்றிக்கொண்டு அதன்கண் இருத்தல், (௨கூ- ௩0-௩க) பிறர் ஆடைகளையும், அணிகலன்களையும், பொன்களையும் அவரவர் அநுமதியின்றி உபயோகித்தல், (௩௨) ஒருவன் கையி லுள்ள தாம்பூலத்தைத் தானே வலிந்து பற்றிக்கொண்டு உப யோகித்தல், (௩௩) 'பேசுக' எனப் பிறர் வேண்டாதிருக்குங்கால் மிகுதியாகப் பேசுதல், (௩௪) தன் அரசனைப் பழித்துரைத்தல், (௩ரு) அரசற் கெதிரில் ஒற்றை ஆடை உடுத்துச் செல்லல், (௩சு) எண் ணெய் பூசிய உடலுடையனுய்ச் செல்லல், (௩எ) தலைமயிரை விரித் துக்கொண்டு செல்லல், (௩அ) உடல் முழுதையும் மறைத்துச் செல் லல், (௩கூ) சித்திரம் வரைந்த உடலொடு சேறல், (௪0) பூமாலை யணிந்

---

(எ௩-அ௨.) "அரசற் கெதிரில்" என்பதனை "எண்ணெய் பூசிய உடலு டையனுய்ச் செல்லல்" முதல் "தலையை ஆடைமுதலியவற்ருல் மறைத்துச் சேறல்" இறுதியாகவுள்ள எல்லாவற்றிலுங் கூட்டிக் கொள்க.

து செல்லல், (சக) உடுத்த ஆடை அலையச் சேறல், (சஉ) தலையை ஆடை முதலியவற்றால் மறைத்துச் சேறல், (சங) பிறர்பாற் குற்றங் காண விரும்புதல், (சச) சூது கள் காமம் முதலிய விதனங்களில் விருப் பம், (சரு) அரசற் கெதிரில் ஆடையின்றிச் செல்லல், (சசு-சஎ-சஅ) அரசனுடைய மூக்கையும் செவிகளையும் கண்களையும் உற்று நோக் கல், (சகூ) பற் குடைதல், (ருO) செவி மூக்குக்களைக் குடைதல் ஆகிய இவ் வைம்பதும் சலங்கள் என்று கூறப்படும். எங-அஉ

சு. விவாதத் தானங்கள்.

(க) அரசனுடைய ஆணையைக் கடத்தல், (உ) பெண் கொலை, (ங) வருணக் கலப்பு, (ச) பிறர் மனை நயத்தல், (ரு) களவு, (சு) ஒரு பெண் தன் தலைவனை யின்றிக் கருப்பமுடையளாதல், (எ) கடுஞ்சொல், (அ) சொல்லத்தகாதனவற்றைச் சொல்லுதல் முதலியன, (கூ) பிறரைக் கடு மையாக அடித்தொறுத்தல், (கO) கருச்சிதைத்தல் ஆகிய இப்பத்தும் அபராதங்கள் என்று கூறப்படும். அங-அச

(க) பிறர்க்கு வெறுப்பு விளைவித்தல், (உ) பயிரை யழித்தல், (ங) இல்லம் முதலியவற்றில் நெருப்பிடல், (ச) அரசற்குத் தீங்கிழைத் தல், (ரு) அரச முத்திரையை அழித்தல், (சு) அரசனது மறைவுச் சூழ்ச்சியை வெளிப்படுத்தல், (எ) சிறைப்பட்டிருப்போரை விலங்கு முறித்து வெளிப்படுத்தல், (அ) உரியவன் இல்லாத பொருளை விற் றல், அதனைத் தானஞ் செய்தல், அதனைக் கூறிட்டுக் கொள்ளல், அத னைத் தண்டத்திற் குட்படுத்தல், (கூ) அரசன் ஆணைமேற்கொண்டு பறை சாற்றுதலை மறைத்தல், (கO) உரியோனில்லாத பொருளை அழித் தல், (கக) அரசற்குக் கிடைக்கவேண்டிய இறைப்பொருளைக் கெடுத் தல், (கஉ) பிறர் உறுப்புக்களை வெட்டிக் குறைத்தல் என்னும் இப் பன்னிரண்டும், முற்கூறிய அபராதம் பத்தும் ஆகிய இருபத்திரண் டும் அரசனால் அறியப்படும் விவாதத்தானங்கள் என்று அறிவுடை யார் கூறுவர். அரு-அஅ

நீதிமன்றத்தில் வழக்குரைக்கும் வாதி கொடுந்தன்மை, கடுஞ் சொல், அஞ்சத்தக்க வேடம், செருக்கு, மிகு சினம், நீதிபதியோடு ஒத்த இருக்கையில் இருத்தல், மிக்க இறுமாப்பு ஆகிய இவற்றை யுடையனாயிருப்பின் தண்டிக்கப்படுபவனாவான். அகூ

---

அரு-அஅ. உரியவனில்லாத பொருளை விற்றல் முதலிய நான்கும் ஒரு பொருள் பற்றின வாதலின் ஒன்றன்பாற் படும்.

வாதியால் அரசற்குத் தெரிவித்துக்கொள்ளப்படுவது ஆவேதனம் என்னும் பெயரையுடையதாகும். நீதிபதிமுதலியோரிடத்துத் தெரிவித்துக்கொள்ளப்படுவது, எல்லாவற்றையும் விளக்கமாகத் தெரிவிக்கும் "மொழி" யாகும்; அதுவே பூருவபக்கமென்றுங் கூறப்படும். வாதியால் வேண்டிக்கொள்ளப்பட்ட நீதிமன்றத்தார் அப் பூருவ பக்கத்தை உண்மையாக ஆராய்ந்து அதன் சான்றுகளிற் குறையுள்ளதாயின் நிறைவித்தலும், மிகையாக விருக்குமாயின் விலக்குதலுஞ் செய்தல் வேண்டும். அரசன் சான்றுகூறுவாரை வாதியாற் குறிப்பிடச் செய்து பின் தனது சிறந்த முத்திரையால் அடையாளமிடல் வேண்டும். கூ0-கூஉ

வாதியால் அங்ஙனங் கொணரப்பட்ட பூருவபக்கத்தை விருப்பம், அச்சம், பொருணசை காரணமாக ஆராய்ந்து பாராமல் எவ்வதிகாரிகள் தீர்ப்புச் செய்துவிடுகின்றார்களோ அத்தகைய நீதிமன்றத்தார் முதலியோரைத் தண்டித்து அவர் செய்த தவறுதலை நினைவுறுத்தற்பொருட்டு அவ் வதிகாரத்தினின்றும் அவரை ஒழித்துவிடல் வேண்டும். கூங

அரசன் தன்பால் வரும் வழக்குக்களுள் எடுத்துக்கொள்ளத் தக்கது இன்னது, தகாதது இன்ன தென்பதை நன்கு ஆராய்ந்து தக்கதாயின் முடிவுசெய்தற்கு எடுத்துக்கொள்ளல் வேண்டும். பூருவ பக்கத்தை ஏற்றுக்கொண்ட பின்னர் வாதியைத் தன் ஆணையால் தடைப்படுத்தல் வேண்டும். கூச

## எ. அரசனது ஆணை மேற்கொண்டு தடுத்தல்.

வழக்குத் தொடங்கும் வாதி நியாயமென்று கூறத்தக்க நெறியில் நில்லாதவனும், சொற்பிறழ்ச்சி யுடையவனுமாகிய பிரதிவாதியை அரசன் வரவழைத்துக், காணும்வரை அரசனது ஆணை மேற்

கூ0-கூஉ. மொழி - இதனைப் பாஷை யென்ப முதனூலார். முதலில் அரசனிடத்துத் தெரிவித்துக்கொள்ளும் ஆவேதனத்தைப் பற்றி விரித்து விளக்கிக் கூறுவது பாஷை அல்லது பூருவபக்கம் என்று கூறப்படு மென்பதாம்.

கூச. வாதியைத் தடைப்படுத்தலாவது—அவனாற் கொண்டுவரப்பட்ட வழக்கு ஆராய்ந்து தீர்க்கப்படுங்காறும் அவனைத் தன் ஆணைக்குட்படுத்தல். அஃது அவன் வழக்குப் பொய்ம்மை யுடைத்தாயின் அவனை யொறுத்தல் குறித்தாம். பின் வருஞ் சுலோக முதலியவற்றிற் பிரதிவாதியைத் தடைப்படுத்தல் கூறப்படும். வாதிபிரதிவாதிகளிருவரும் இங்ஙனம் தடைப்படுத்தப் படுதலைப் பின்வரும் சுஉஅ-ஆம் சுலோகத்தானு முணர்க.

கொண்டும் சூளுறவு கூறியும் தடுத்தல் வேண்டும். அங்ஙனந் தடுக்குங்கால் உண்மை யுரைத்தல், மடியின்மை, குறிப்பறிதலாகிய இவற்றை யுடையராய் வன்மைமிக்க அம்பு, வாள் முதலிய படைகளை அழகுறத் தாங்கி நிற்கும் சிறந்த மனிதரைத் துணைக்கொண்டு செய்தல் வேண்டும். கூடு-கூசு

அரசனது ஆணை மேற்கொண்டு தடுத்தல் காலம், இடம், தொழில், வேற்றிடம் பெயர்தல் ஆகிய இந் நான்கையும் பற்றி நிகழ்வதால் அது நான்கு வகைப்படும். இங்ஙனந் தடைப்படுத்தப்பட்ட மனிதன் அத் தடையை மீறலாகாது. கூஎ

ஒருவன் பிறனொருவனை அரசனது ஆணைமேற்கொண்டு இந்திரியத்தடையாலும், கடுஞ்சொற்களாலும், வரம்பிகந்த ஆணைகளாலும் தகுதியின்றித் தடைப்படுத்துவானாயின், அவன் அரசனால் தண்டிக்கப் படுபவனாவான். இத் தகுதியில்லாத தடைகளை யொழித்து முறைப்படி தடுப்பவன் அங்ஙனந் தண்டிக்கப்படுவானல்லன். கூஅ

தடைப்படுத்தற்குரிய காலத்தில் தடைப்படுத்தப்பட்ட ஒருவன் அத்தடையை மீறுவானாயின் அவன் தண்டத்திற்குரியனாவான். தடைசெய்வோன் உரியதல்லாக் காலத்தில் அங்ஙனந் தடை செய்வானாயின் அவனும் தண்டம் எய்துவான். கூகூ

## அ. நீதிமன்றத்திற்கு அழைக்கப்படுபவரும் அழைக்கப்படாதவரும்.

ஒருவன், எவனைப்பற்றி உண்மை கண்டாதல், ஐயத்தானாதல் அபியோகம் செய்துள்ளானோ அக்குற்றவாளியை அரசன் தன் முத்திரையிட்ட பத்திரத்தானாதல், சேவகர்களானாதல் நீதிமன்றத்திற்கு அழைப்பித்தல் வேண்டும். ௧00

---

கூஎ. ஒருவன் மற்றொருவற்கு முறை தவறித் தீங்கு செய்வானாயின் செய்யப்பட்டோன் செய்தவனை அரசனது ஆணைமேற்கொண்டு தடை செய்தலை "ஆசேதம்" என்று முதனூல் கூறும். அங்ஙனந் தடுக்குங்கால், கால அளவு குறித்தும், இடம் வரையறுத்தும், தொழில் மறுத்தும், வேற்றிடம் பெயர்தலை யொழித்தும் தடுக்கலாம் என்பது கருத்து.

கூஅ. இந்திரியத் தடையாவது - மலம் மூத்திரம் முதலியவற்றை யொழித்தல் கூடாதென்று தடைப்படுத்தல்.

௧00. அபியோகம் - ஒருவன் தனக்குப் பிறன் செய்த தீங்கை அரசற்குத் தெரிவித்தல். உண்மை ஐயங்களைப் பின்வருஞ் சுலோகத்திற் காண்க.

றியவர்களின் கூட்டுறவாலும், முன்னைச் செயல்களின் அநுபவத்தாலும் ஒருவன்மாட்டு ஐயத்தையும், களவு முதலியவற்றாற் கவர்ந்த பொருளைக் காட்சியளவையிற் காண்டலால் உண்மையையும் அறிவுடையார் உணர்வர். ௧0௧

நோயாளர், பாலர், வயோதிகர், நிலைகெட்டிருப்போர், கடக்க முடியாத பல்வகைச்செயல்களில் ஈடுபட்டிருப்போர், குற்றம் இழைத்ததாகக் கூறப்படுங்காலத்தில் குறித்த இடத்தில் இல்லாதிருப்போர், காமம் முதலியவற்றில் ஈடுபட்டிருப்போர், அரசியற் காரியங்களையும் திருவிழாக் காரியங்களையும் மேற்கொண்டிருப்போர், கட்குடித்துக் களித்திருப்போர், பித்தர், அறிவு மழுக்கமுடையோர், நோய்கோட்பட்ட பணியாளர் ஆகிய இவர்களை அரசன் நீதிமன்றத்திற்கு அழைத்தலாகாது. ௧0௨

உற்றாரையில்லா யுவதி, உயர்ந்த குடிக்கட் பிறந்தவள், பிரசவித்திருப்பவள், எல்லா வருணத்துமுள்ள கற்பிற் சிறந்தார், மணஞ்செய்யப்படாத கன்னி, கணவன் இன்னானென்றறியப்படாதவள் ஆகிய இப்பெண்களையும் நீதிமன்றத்திற்கு அழைத்தலாகாது. ௧0௩

விவாக முயற்சியை மேற்கொண்டிருப்பவன், நோய்கோட்பட்டவன், வேள்வி வினையில் முயன்றுகொண்டிருப்பவன், கட் காம முதலிய விதனங்களில் ஈடுபட்டிருப்பவன், பிறனொருவனுடன் வழக்குத் தொடரப்பட்டிருப்பவன், அரசியற் காரியத்தில் முயற்சி மேற்கொண்டிருப்பவன் ஆகிய இவர்களை அவ்வக் காலங்களிலும், பசு மேய்த்துக் கொண்டிருக்குங்கால் இடையர்களையும், பயிர்த்தொழில் செய்து கொண்டிருக்குங்கால் உழவர்களையும், சிற்பத்தொழில் செய்துகொண்டிருக்குங்கால் சிற்பிகளையும், போர் செய்துகொண்டிருக்குங்கால் போர் வீரர்களையும், பதினாறு யாண்டுகட்குட்பட்ட இளைஞர்களையும், தூதரையும், தானஞ் செய்துகொண்டிருக்குங்கால் அது செய்வோரையும், விரதமேற்கொண்டிருப்போரையும், நிலை பிறழ்ந்திருப்போரையும் யாருந் தடைப்படுத்தலாகாது; அரசன் இவர்களை நீதிமன்றத்திற் கழைத்தலுங் கூடாது. ௧0௪-௧0௬

---

௧0௨. இங்குக் கூறப்பட்டோரை இன்றியமையாத காரியம் நேர்ந்தவழி அழைக்கலாமென்று பின்னர்க் கூறுவராதலின், ஈண்டுக் கூறியதைப் பொது விதியாகக் கொள்க. காமத்தில் ஈடுபட்டிருப்போரை அக் காம இன்பநுகர்ச்சிக் காலத்தில் அழைத்தலாகாதென்பது கருத்து.

௧0௪-௧0௬. இங்குத் தடைப்படுத்தலாகாதென்பது விதியாகவும், நீதிமன்றத்திற் கழைத்தலாகாதென்பது அநுவாதமாகவும் பகுத்துணர்தல் வேண்டும்.

ஆற்றைக் கடக்குங்காலும், புகுதற்கரிய காட்டிலும், தீங்கு மிக்க இடத்திலும், எரிகொள்ளி வீழ்தல் முதலிய பொல்லாத நிமித்தங்கள் நிகழுங் காலத்திலும் ஒருவன் மற்றொருவனால் தடுக்கப்படுவானாயின் அப் பிறன் தடைக்குட்படாமல் மீறலாம். அதனால் அவன் குற்றவாளியாகான். ௧௦௭

அரசன் காலம் இடங்களையும், காரியங்களின் பெருமை சிறுமைகளையும் நோக்கி, முற்கூறிய நோயாளர் முதலியவர்களையும் சிவிகை முதலியவைகளில் ஏற்றி மெல்ல மெல்லக் கொண்டுவரச் செய்யலாம். ௧௦௮

எவன் தன்னைக் குறித்து வழக்குத் தொடரப்பட்டிருத்தலையறிந்து காட்டிற் சென்று துறவறநிலை முதலியவற்றை மேற்கொண்டுள்ளானோ அவனையும் இன்றியமையாப் பெருங்காரியங்களின் நிமித்தம் அரசன் சினவாது அழைப்பித்தல் வேண்டும். ௧௦௯

ஒருவன் வாதியாயினும் பிரதிவாதியாயினும் தான் வழக்கியல் அறியாதவனாகவும், பிறகாரியங்களில் தலைப்பட்டவனாகவும் இருப்பின் அப்பொழுது அவ்வழக்கியலுணர்ந்த மற்றொருவனைத் தனக்குப் பிரதிநிதியாக நியமனஞ் செய்யலாம். ௧௧௦

வழக்குநடத்தும் திறனில்லாதவர், அறிவிலார், பித்தர், வயோதிகர், பெண்கள், பாலர், நோயாளர் ஆகிய இவர்களுக்கு இவர்தம் சுற்றத்தாருள் ஒருவனாதல், இவரால் நியமிக்கப்பட்ட மற்றொருவனாதல் பிரதிநிதியாக நின்று இவர்தம் வழக்கு எதிர்வழக்குக்களைப் பற்றிப் பேசலாம். ௧௧௧

ஒருவனுக்காக அவன் தந்தை, தாய், நட்டோன், உறவினன், உடன்பிறந்தான், சம்பந்தி ஆகிய இவருள் யாரேனும் வழக்குக் கொணர்வரேல் அரசன் அவ்வழக்கை ஏற்று விசாரணை நடத்தல் வேண்டும். ௧௧௨

ஒருவன் மற்றொருவனால் ஏவப்பட்டு யாதாயினும் ஒரு காரியத்தைச் செய்வானாயின், அக்காரியம் ஏவுதற்கருத்தாவாற் செய்யப்

---

௧௦௮. நீதிமன்றத்திற்கு அழைக்கத்தகாதவர்களையும் இன்றியமையாச் சமயத்தில் அழைக்க வேண்டுமென்பது இதனாற் கூறப்பட்டது.

௧௧௦. சுற்றத்தாருள் ஒருவனாதல், வேதனம்பெற்று வழக்குநடத்தும் வழக்கறிஞனாதல் பிரதிநிதியாவார். இதனைப் பின் வருஞ் சுலோகங்களாலும் விளக்கமாகக் காணலாம்.

பட்டதாக அறிதல் வேண்டும். அது விலக்கத் தகாததாகக் கருதப்படு வதாகும். கக௩.

ஒருவன் தனக்குப் பிரதிநிதியாக நியமிக்கப்பட்டவற்கு வழக்கிற்குரிய பொருளளவிற் பதினறில் ஒரு கூறுதல், இருபதிலொரு கூறுதல், அதனிற் பாதியாதல், அப்பாதியிற் பாதியாதல், அதனிற் பாதியாதல் வேதனமாகக் கொடுத்தல் வேண்டும். ககச

பிரதிநிதியாகவுள்ளவன், பல சனங்களால் நியமிக்கப்பட்டுக் காரியஞ் செய்பவனுயிருப்பினும், அவன் நியமனத்திற்குரிய வழக்குப் பொருள் மிக அதிகமாக இருப்பினும் அவற்குக் கொடுக்கப்படும் வேதனம் அதற்குத் தகக் குறைவாகவே இருத்தல் வேண்டும். அங்ஙனம் வேதனங் கொடுத்தற்கு ஆற்றலில்லாதவன் அப்பிரதிநிதிக்கு உணவு முதலியவற்றிற்கு வேண்டிய அளவாதல் கொடுத்தல் வேண்டும். ககரு

வழக்கியல்பு உணர்ந்தோன், அறநெறி யொழுகுபவனுயின் அவன் பிரதிநிதியாக நியமித்தற்குரியனுவான். அவன் அவ்வொழுக்கமிலனுயின் அங்ஙனம் நியமித்தற்குரியனுகான். மேற்கூறிய அளவின் மேம்பட்ட வேதனம் பெறும் பிரதிநிதியை அரசன் தண்டிக்கக் கடவன். ககசா

எப்பொழுதும் அரசன், தன் கருத்தின்வண்ணம் பிரதிநிதியை நியமித்தலாகாது. (வழக்குரைப்போரே நியமித்தல் வேண்டும்.) நியமனம் பெற்ற பிரதிநிதி, பொருளுசையால் அந் நியமன காரியத்திற்கு மாறுபடச் செய்வானுயின் தண்டத்திற்குரியனுவான். ககஎ

ஒருவற்குத் தந்தையாகவும், உடன்பிறந்தானுகவும், புதல்வனுகவும், அவனுல் நியமிக்கப்பட்ட பிரதிநிதியாகவும் இல்லாத பிறனொருவன், அவன்பொருட்டு வழக்கு நடத்துபவனுகமுன் வந்து அவ்வழக்

---

ககச.. இருபதிலொரு கூறுக்குப்பின், பாதியளவாகக் கூறப்பட்ட மூன்றும் முறையே நாற்பதிலொருகூறு எண்பதிலொருகூறு, நூற்றறுபதிலொரு கூறுகக் கணக்கிட்டுக்கொள்ளல் வேண்டும். இவ்வளவுகள் வழக்குக்களின் பெருமை சிறுமை நோக்கிக் கொள்ளப்படுவனவாம்.

ககரு. ஒருவன் பெரும் பொருள் வழக்கிற்கும், பலராலும் நியமிக்கப்பட்டும், முற்கூறிய அளவுப்படி வேதனம் பெறுவானுயின், அதனுற் பல சனங்களுக்கும் பொருட்குறைவு ஏற்படும். இது கருதியே அவற்கு மிகக் குறைவான வேதனம் கொடுக்கவேண்டுமென்று கூறப்பட்டது.

கில் மாறுபடக் கூறுவானாயின், அவன் அரசனால் தண்டிக்கப்படுபவ னாவான். ௧௧௮

அரசற்குரிய பணிப்பெண்கள், தாம் விரும்பியவாறு ஒழுகும் பெண்கள், பொருட்பெண்டிர், இழிகுலத்துப் பெண்கள், பெரும் பாவங்களைச் செய்து அதனால் விலக்குண்ட பெண்கள் ஆகிய இவர் கள் நீதிமன்றத்திற்கு அழைக்கத்தக்கவராவர். ௧௧௯

வழக்கைத் தொடங்கியபின்னர் வாதிபிரதிவாதிகளாகிய இருவ ரும் இறந்துவிடுவாராயின், அவ் வழக்கியல்பு உணர்ந்த அவர்தம் மக் கள் அதனைத் தொடர்ந்து நடத்தலாம். அவ்விருவர்க்கும் புதல்வர் இல ரேல் அவ்வழக்கை ஒழித்துவிடல் வேண்டும். ௧௨0

மனிதக் கொலை, களவு, பிறன் இல்லாளை வலிந்து பற்றல், உண் ணத் தகாதவற்றை உண்டல், மணஞ் செய்யப்படாத கன்னியைக் கவர்ந்து புணர்தல், கடுஞ்சொற் கூறி வைதல், கடுமையாக அடித்தல், வஞ்சித்தல், அரசற்குத் தீங்கிழைத்தல், பெருங்கொள்ளை முதலியன வாகிய இந் நிகழ்ச்சி பற்றிய வழக்குக்களில் இவற்றைச் செய்தாஒெ ருவன் தனக்குப் பிரதிநிதியாக மற்றொருவனை நியமித்துக் கொடுத்த லாகாது. தானே நீதிமன்றஞ் சென்று வழக்கு நடத்தல் வேண் டும். ௧௨௧-௧௨௨

வழக்குத் தொடரப்பட்டா னொருவன், அவ்வழக்கில் அரசனால் அழைக்கப்பட்டும் தன் சுற்றத்தார் துணைவலியாற் செருக்குற்று நீதி மன்றத்திற்கு வாராதிருப்பின், அவனை அரசன் அவ்வழக்கிற் கூறப் பட்ட குற்றத்தின் பெருமை சிறுமைக் கேற்பத் தண்டித்தல் வேண் டும். ௧௨௩

## ௬. பிணை வாங்கு முறை.

துன்புறுத்தப்பட்ட வாதியையும், தூதனால் அழைக்கப்பட்டு வந்த பிரதிவாதியையும் கண்டபின் அவ்விருவர்க்கும் தகுதியான பிணையாட்களைப் பற்றி அரசன் சிந்தித்தல் வேண்டும். ௧௨௪

பல சனங்களாலும் நம்பப்படுதல், திறமை, ஒருவர்க்கும் ஆட்ப டாமை, சிறந்தபுகழ், பெரும்பொருள், சொல்வழி நிற்கும் ஆற்றல் ஆகிய இவற்றையுடைய தக்கானொருவன், நீதிபதி முதலியோரை

---

௧௨௩. ஒருவன் அரசனால் அழைக்கப்பட்டும் நீதிமன்றத்திற்கு வாராதிருப் பின் அவனைப் பற்றிக் கொணரப்பட்ட குற்றத்திற்குத் தக்க தண்டத்தை விசா ரணையின்றிச் செய்யவேண்டு மென்பது கருத்து.

நோக்கி, வாதியை யாதல் பிரதிவாதியையாதல் குறித்து," இவனாற் கொடுக்கப்படாத பொருளை யான் கொடுத்துவிடுவேன்; இவனை வேண்டுங்கால் நுங்கள்பக்கல் கொணர்ந்து காட்டுவேன் ; இவனை ஈட்டுப் பொருள் கொடுக்கும்படிசெய்வேன்; இவனைப் பற்றி நீங்கள் ஒரு பொழுதும் சிறிதும் அஞ்சவேண்டுவதின்று ; நுங்களால் ஆணையிடப்பட்டும் இவனாற் செய்யப்படாத காரியத்தை யான் செய்வேன் ; இவன் வாழ்க்கைப்பொருள் நிரம்பப் பெற்றவனாதலாலும், சோம்பலில்லாதவனாதலாலும் பொய் கூறத் துணியமாட்டான்" என்றிவ்வாறு கூறுவானாயின், அவனை அவ்வழக்குநிகழ்ச்சியில் வாதிக்காதல், பிரதிவாதிக்காதல் பிணையாளனாக ஏற்றுக்கொள்ளலாம். ௧௨௫-௧௨௭

வழக்கிற்குரிய சாதனங்களை யுடையவர்களும், தம்பொருளானாதல் பிறருதவியானாதல் இவ்விரண்டு மின்றி அரசன் தரும் வேதனத்தானாதல் தம்மையும் இரு முதுகுரவர் முதலியோரையும் பாதுகாப்போருமாகிய வாதிபிரதிவாதிகளைத் தடைப்படுத்திப் பின்னர் அவர் தம் சாதனங்கள் பொய்யாங்கொலோ என்னும் ஐயத்தால் உண்மையைக் காண விரும்பும் அரசன், வழக்காராயத் தொடங்கல் வேண்டும். ௧௨௮

## ௧0. பக்க நிரூபண முதலியன.

முதலில் தெரிவிக்கப்படும் மேற்கோட்குற்றமில்லாததும், தக்க சாதனங்களோடு கூடியதும், உலகியற்கு ஒத்ததும், ஐயமின்றித் துணியப்பட்டதும் ஆகிய முறையீடு, பக்கமாகு மென்பர் அவ்வியல்பு உணர்ந்தோர். ௧௨௯

உரிய பொருளை யொழித்து வேற்றுப்பொருளை யறிவித்தல், கருதிய பொருள் இல்லாதிருத்தல், அளவை நீதிநூல்களுக்கு ஒவ்வாமை, எழுதவேண்டிய அளவிற் குறைத்தெழுதல், அவ் வளவின் மிக்கெழுதல், யாதாயினும் ஒன்று தவறிப்போதல் ஆகிய இவைகளை மேற்கோண்மொழிக் குற்றங்களாகக் கூறப்படுவனவாம். ௧௩0

நிகழ்ச்சியின்மை(அப்பிரசித்தம்), தனக்குக் கேடின்மை(நிராபாதம்), பொருளின்மை (நிரர்த்தம்), பயனின்மை (நிட்பிரயோசனம்),

---

௧௨௯. முறையீடு - பிறரால் நலியப்பட்டானொருவன் அதனை அரசற்குணர்த்தி நீதி செலுத்தும்வண்ணம் வேண்டிக்கோடல்.

௧௩0. மேற்கோண்மொழிக் குற்றங்களைப் பாஷாதோஷம் என்று முதனூல் கூறும்.

இயலாமை (அசாத்தியம்), முரண் (விருத்தம்) ஆகிய இவை பக்கப் போலிகளாகும். இவற்றை அரசன் ஏற்றுக்கொள்ளலாகாது. கநக

உலகத்துள்ள எவராலும் கேட்கப்படாததும், காணப்படாத தும் நிகழ்ச்சி யின்மை (அப்பிரசித்தம்) என்னும் பக்கப்போலிக ளாகும். அவற்றிற்கு உதாரணம் முறையே "யான் ஊமனுல் வையப் பட்டேன்" என்பதும் "மலடி மகனுல் அடிக்கப்பட்டேன்" என்பது மாம். கநஉ

பிரதிவாதியைப்பற்றி "அவன் தன் இல்லத்திற் படிக்கின்றுன்; இனிய குரலுடன் பாடுகின்றுன்; இன்புற்று வாழ்கின்றுன்; என் இல் லத்திற்கு அணிமையில் தெருப்பக்கம் நோக்கித் தன் இல்லத்திற்கு வாயில் அமைக்கின்றுன்" என்று இன்னோரன்ன நிகழ்ச்சிகளை வாதி தன் பக்கத்திற் குறிப்பிடின் அவை தனக்குக் கேடின்மை (நிராபாதம்) என்னும் பக்கப்போலிகளாகும். அவை பயனின்மை (நிட் பிரயோ சனம்) என்னும் பக்கப் போலிகளு மாகும். கநந

"என்னுல் மணஞ் செய்துகொடுக்கப்பட்ட என் மகள்பால் இம் மருகன் இடைவிடாது கூடி இன்புறுகின்றுன்; அங்ஙனம் இன்புற் றும் கருத்தரித்திலள்; இவள் எக்காரணத்தால் மலடியாயினள்" என் றிங்ஙனங் கூறுதல் இயலாமை (அசாத்தியம்) என்னும் பக்கப்போலி யாகும். "உயிர் நீங்கிய இவன் பேசுகின்றுனில்லை; அஃது எக்கார ணத்தால் ?" என்றிங்ஙனங் கூறுதல் முரண் (விருத்தம்) என்னும் பக் கப்போலியாகும். கநச

"இவ் வுலகத்துள்ளார் என் துன்பங் கண்டு வருந்துதலும், என் இன்பங் கண்டு மகிழ்தலும் செய்கின்றுரில்லை" என்றிங்ஙனம் கூறு தல் பொருளின்மை (நிரர்த்தம்) என்னும் பக்கப்போலியாகும். இது பயனின்மை என்னும் பக்கப்போலியுமாம். கநரு

ஒரு காரியத்தை நீதிமன்றங் கொணர்ந்து கேட்கச்செய்து பின் விட்டொழிப்பவனும், மாறுபடக் கூறுவோனும், எதிரிபக்கத் தைக் கடைப்பிடித்து அதனுற் பிறழ்ச்சி யடைந்தோனுமாகிய வாதி கள் தண்டத்திற்குரியராவர். கநசு

மேற்கோளாகக் கொண்டுவரப்பட்ட பூருவபக்கம் எடுத்துக் கொள்ளத் தக்கதா தகாததா என்று ஆராய்ந்து, எடுத்துக்கொள் ளத் தக்கதாகத் துணியப்பட்டபின், அதற்குரிய சாதனங்களால் அத

*கஙக. பக்கப்போலியைப் பக்ஷாபாஸம் என்று முதனூல் கூறும்.

ளை வாதி நிலைப்படுத்தல் வேண்டும். அதன்பின் பிரதிவாதியை உத்தரம் எழுதும்படி செய்தல் வேண்டும். ௧௩௭

அவ் வழக்கில் முதலில் வாதியின்பாலும், அதன்பின் பிரதிவாதியின்பாலும் கேட்கவேண்டியவற்றைக் கேட்டல் வேண்டும். அங்ஙனம் அவ் விருவரையுங் கேட்டபின் நீதிபதி அவ்வழக்கைப் பற்றி நீதிமன்றத்தார் முதலியோர்களின் கருத்துக்களைத் தெரிவிக்கும்படி செய்தல் வேண்டும். ௧௩௮

பிரதிவாதியால் வாதியின் முன்னிலையில் வாதி கொணர்ந்த பூருவ பக்கத்திற்கு உத்தரம் எழுதப்படல் வேண்டும். அவ் வுத்தரம் அப் பூருவபக்கத்தை மறுப்பதாகவும், உறுதியுள்ளதாகவும், ஐயமில்லாததாகவும், தெளிவுடையதாகவும், எளிதிற் பொருளுணரத்தக்கதாகவும் இருத்தல் வேண்டும். இங்ஙனம் எழுதப்படும் உத்தரமே குற்றமற்றதாகும். ௧௩௯

ஐயத்திற் கிடமானதும், நிகழும் விவாதத்தினின்றும் வேறுபட்டதும், மிகச் சுருக்கமானதும், மிக விரிவானதும், பூருவபக்கத்தின் ஏகதேசத்தைப் பற்றியதும் ஆகிய உத்தரங்கள் தக்க உத்தரமாகா. ௧௪0

அழைக்கப்பட்ட வாதியாதல், பிரதிவாதியாதல் தொடங்கிய வழக்கைப் பற்றி ஒன்றுஞ் சொல்லவில்லையாயின் தோல்வியுற்றவராய்த் தண்டத்திற் குரியராவர். ௧௪௧

பூருவபக்கம் உண்மையாயிருக்குங்கால் அதற்குப் பிரதிவாதி உத்தரங் கொடுக்கவில்லையாயின், அவனைச் சாம தான முதலிய உபாயங்களால் வழக்கிற் குறிப்பிட்ட பொருளைக் கொடுக்கும்படி செய்தல் வேண்டும். ௧௪௨

வாதியாதல், பிரதிவாதியாதல் அறியாமையாலுங் கபடத்தாலும் தம் பூருவபக்க உத்தரங்களிற் சொல்லாதொழிந்த செய்திகளை அவ் விருவரிடத்தும் வினவப்படுங் கேள்விகளால் அறிந்துகொள்ளல் வேண்டும். ௧௪௩

## ௧௧. எதிர்மொழியின் (உத்தரத்தின்) வகைகள்.

உண்மை, பொய்ம்மை, பிரத்தியவற்கந்தனம், பூருவநியாயம் என எதிர்மொழி நான்கு வகைப்படும். ௧௪௪

---

௧௩௭. பூருவபக்கமாவது: வாதி அரசன்பால் முதலில் தெரிவித்த வழக்குரையாகிய ஆவேதனத்தைப் பற்றிப் பின் நீதிமன்றத்திற் கூறும் விளக்கவுரையாகும். இதனை ௬௧-ஆம் சுலோகத்திற் காண்க. உத்தரம் - பிரதிவாதி அவ் வழக்குரையை மறுத்துரைத்தல்.

வாதியாற் கூறப்பட்ட உண்மை மொழிகளைப் பிரதிவாதி உடன் படுவானாயின், அஃது உண்மை உத்தர மென்றறியப்படும். அதனைப் பிரதிபத்தி என்றுங் கூறுவர். கசடு

பிரதிவாதி,வாதியாற் கூறப்படும் பூருவபக்க மொழிகளைக் கேட்டு அவற்றைச் சொல்லாலும் பொருளாலும் தடுத்துரைப்பானாயின், அது பொய்ம்மை யுத்தரமென்றறியப்படும். கசசு

"இது முற்றும் பொய்" எனவும், "இதனை யான் அறிவேனல்லேன்" எனவும், "காரியம் நிகழ்ந்ததாகக் குறிப்பிட்ட காலத்தில் யான் அந்நிகழ்ச்சி இடத்தில் இருந்ததில்லை" எனவும், "அக்காலத்தில் யான் பிறந்ததே இல்லை" எனவும் பிரதிவாதி கூறும் முறை பற்றிப் பொய்மை யுத்தரம் நான்கு வகைப்படும். கசஎ

வாதியா லெழுதப்பட்ட பூருவபக்கப் பொருள்களைப் பிரதிவாதி முற்றும் அங்கீகரித்து அங்ஙனம் நேர்ந்ததற்குரிய காரணத்தைக் கூறுதல் பிரத்தியவற்கந்தனம் என்னும் உத்தரமாகும். கசஅ

"இவ்விடயமாக இவனோடு எனக்கு முன்னரே வழக்கு நேர்ந்ததுண்டு; அப்பொழுது இவன் தோல்வி யெய்தினான்" என்று பிரதிவாதி கூறுவானாயின், அது பூருவ நியாய மென்னும் உத்தரமாகும். கசகூ

"இவன்முன்னர் என்னால் தோல்வியுற்றானென்பதை வெற்றிப் பத்திரத்தாலும், நீதிமன்றத்தாராலும், சான்று கூறியவராலும் யான் உறுதிப்படுத்துவேன்"என்றிங்ஙனம் பிரதிவாதி கூறுமுகத்தால் பூருவ நியாய மென்னும் உத்தரம் மூன்றுவகைப்படுவதாகும். கடு௦

வாதி பிரதிவாதிகளுடைய பூருவபக்கமொழியையும், உத்தரத்தையும் ஒருவர்க்கொருவர் முன்னிலையில் வாங்கவேண்டும். அங்ஙனம் வாங்காத நீதிமன்றத்தார், கள்வரை யொப்பத் தண்டம் எய்துதற்குரியராவர். கடுக

---

கசஅ. இவ்வுத்தரம்,வாதியின் வழக்கிற் கூறப்பட்ட பொருள்களைப் பிரதிவாதி உடன்பட்டு, வேறுவிதமாக அங்ஙனம் நேர்ந்ததற்குரிய காரணங்களைத் தெரிவித்து, வழக்கை விலக்கிவிடல் வேண்டுமென்று கூறுவதாகும்.

கசகூ. இப்பூர்வ நியாயோத்தரம் முன்னொரு நீதிபதியால் தீர்ப்புச் செய்யப்பட்டு அதன்மேல் மற்றொரு நீதிபதியினிடத்துக் கொணரப்பட்ட வழக்கைப் பற்றியதாகும்.

கடுக. இதனால், வாதி தனக்குள்ள குறையைத் தனியே அரசனிடம் வந்து தெரிவித்துக்கொள்வது ஆவேதனம் என்பதும், பின் நீதிமன்றத்தில்

பூருவபக்கபத்திரமும், உத்தரபத்திரமும் நன்கு ஆராயப்பட்டுக் குற்றமில்லாதனவா யிருப்பின், அதன்மேல் வாதி பிரதிவாதிகளுடைய பத்திரம், சான்று, ஆட்சி முதலிய சாதனங்களே தீர்ப்புக்குக் காரணங்களாகும். கருஉ

ஒரு வழக்கிற்குப் பூருவபக்கம் முதற்பாத மாகவும், உத்தரம் இரண்டாம் பாத மாகவும், சான்று முதலிய சாதனங்கள் மூன்றாம் பாதமாகவும், தீர்ப்புச்செய்தல் நான்காம் பாதமாகவும் உள்ளன. கருரு

பூருவபக்கம் காரிய மெனவும், சான்று முதலிய சாதனங்கள் கிரியை எனவும் கூறப்படுவனவாம். ஆதலால் வாதி, வழக்கின் மூன்றாம் பாதமாகிய கிரியையினால் தன் பக்கத்தை உண்மைப் படுத்தல் வேண்டும். கருச

உண்மையுத்தர மில்லாத வழக்குக்க ளெல்லாம் நான்கு பாதங்களை யுடையனவாகும். கருரு

நீதிபதி முதலியோர் தம்பால் வரும் வழக்குக்களை வந்த முறைப்படி யாதல், காரியத்தின் பெருமை நோக்கி யாதல், எவர்க்குத் துன்பம் மிகுதிபாக வுள்ளன? எக்காரியம் மிக அதிகமாக வுள்ளன? என்றிவ்வாறு பகுத்துணர்ந்தாதல், அந்தணர் முதலிய வருண முறை பற்றியாதல் முறைப்படுத்து முதற்கட் டொடங்கி விசாரித்தல் வேண்டும். கரு௬-கரு௭

நீதிமன்றத்தினர், பிரதிவாதியினிடத்தினின்றும் உத்தரம் பெற்றபின், வாதி பிரதிவாதிகளாகிய இருவருள் ஒருவற்குச் சான்று முத

பிரதிவாதிமுன்னிலையில் அவ் ஆவேதனத்தைப் பற்றி விளக்கிக் கூறுவது பூருவபக்கம் என்பதும் போதரும். வாதி தன்பூருவபக்கத்தை நீதிமன்றத்தில் பிரதிவாதிமுன்னிலையிலும், பிரதிவாதி தன் உத்தரத்தை நீதிமன்றத்தில் வாதி முன்னிலையிலும் தெரிவிக்கவேண்டு மென்பதாம்.

கருஉ. இருவருடைய பத்திரங்களும் குற்றமற்றனவாக ஏற்றுக்கொள்ளப்பட்டபின், அவர்தம் சான்று முதலிய சாதனங்களின் வன்மை மென்மை நோக்கி நீதிபதி தீர்ப்புச் செய்தல் வேண்டுமென்பது கருத்து.

கருரு. பிரதிவாதி வாதியின் வழக்கை உண்மை யென்றுடன்பட்டு அவன் வேண்டுகோளை நிறைவேற்றிவிடின், அவ்வழக்கில் மூன்றாம் பாதமாகிய கிரியையும், நான்காம் பாதமாகிய தீர்ப்பும் பயனிலவாதலின் உண்மை உத்தரமுள்ள அவ்வழக்கில் எஞ்சிய இரண்டு பாதங்களே உள்ளனவென் றறியப்படும்.

லிய சாதனங்களைப் பற்றிச் சிந்தித்தற்பொருட்டு அவகாசங் கொடுத்தல் வேண்டும். கருஅ

தன் பக்கத்தைச் சாதித்தற் பொருட்டு அவகாசம் பெற்றவன் பத்திரம் முதலிய சாதனங்களால் தான்மேற் கொண்ட எல்லாக்காரியங்களையும் உண்மையாக உறுதிப்படுத்தல் வேண்டும். கருசு

ஒரே வழக்கில் சான்று முதலிய சாதனங் காட்டும் பொறுப்பு வாதி பிரதிவாதிகளாகிய இருவர்க்கும் இன்று; இவ் விருவருள் ஒருவனே காட்டற்பாலன். கசுo

சான்று முதலிய சாதனங் காட்டும் பொறுப்பு, பொய்ம்மையுத்தரங் கொடுக்கப்பட்ட வழக்கில் வாதியின்பாலும், பிரத்தியவற்கந்தனுத்தரங் கொடுக்கப்பட்ட வழக்கிலும் பூருவ நியாயோத்தரங் கொடுக்கப்பட்ட வழக்கிலும் பிரதிவாதியின்பாலும் உள்ளதாகும். கசுக

வாதியாற் கொண்டுவரப்பட்ட பூருவபக்கமும் சில காரணங்களால் ஒரோவமயம் உத்தரபக்கத்தன்மையை யெய்துவதாகும். கசுஉ

## கஉ. சாதனங்களின் இயல்பு.

பிரதிவாதி எதிர்மொழி கொடுத்தபின், வாதி, தான் மேற்கொண்ட பூருவபக்கப் பொருட் குரிய சாதனங்களை எழுதுவித்தல் வேண்டும். அச்சாதனம் மானுடம் தெய்விகம் என இருவகைப்படும். கசுங

அநுபவம், இலிகிதம், சான்று என மானுட சாதனம் மூன்று வகைப்படும். துலாக்கோன் முதலியன தெய்விக சாதனமாகும்.

---

கருஅ. இன்ன இன்ன வழக்கில் இன்னர் இன்னர் சான்று முதலிய சாதனங்காட்டல் வேண்டுமென்று பின் கசுக - ஆம் சுலோகத்திற் கூறுவாராதலின், அப்பொறுப்புடையாரைக் குறித்து ஈண்டுப் பொதுவாகக் கூறப்பட்டது.

கசுo. இச்சுலோகத்திற்கு இவ்வாறன்றி, "ஒரேவழக்கில் வாதிபிரதிவாதிகள் இருவரும் காட்டும் சான்று முதலிய சாதனங்களெல்லாம் உண்மையாக மாட்டா; இவ்விருவருள் ஒருவர் காட்டும் சாதனங்களே உண்மையாகும்" என்றிக் காலவியல்புக் கேற்றவாறு உண்மை என்னுஞ் சொல்லை வருவித்துப் பொருள் கூறுதலும் பொருந்தும்.

கசுக. இம் மூவகை உத்தரங்களும் இன்னவென்பதை இப்பிரகரணத்தில் கசஅ-முதல் கசகூ-வரையுள்ள சுலோகங்களிற் காண்க.

கசுஉ. இதனால் வாதியின் வழக்குத் தன் பூருவபக்கத்தை யொழித்து எதிர்ப்பக்கத்தை வலியுறுத்தல் கூறப்பட்டது.

அது,நிகழ்ந்த உண்மை மாநுட சாதனத்தால் அறியப்படாதிருக்குங் கால், அதனை யறிதற்பொருட்டு மேற்கொள்ளற்பாலதாகும். ௧௬௪

மாநுடசாதனமும், தெய்விக சாதனமும் தனித்தனியே தத்துவ மெனவும், சலமெனவும் இருவகைப்படும். உண்மைப் பொருளை நிகழ்ந்தவாறு தெரிவிப்பது தத்துவ சாதனமாகும். அவற்றைக் கபட முதலியவற்றால் தெரிவிப்பது சல சாதனமாகும். ௧௬ரு

அரசன் பொருந்துமாற்றாலும், வழியளவையாலும், சாம முத லிய உபாயங்களாலும் சலம் இன்னவென் றுணர்ந்து, அவற்றை யொழித்து, உண்மைச் சாதனங்களால் வழக்குக்களை என்றும் ஆராய் தல் வேண்டும். ௧௬௬

அரசன் வழக்கிற்குரிய சாதனங்களைக் காண்டலிற் காலந்தாழ்த் தலாகாது. அங்ஙனங் காலந்தாழ்த்தலால் அறக்கேடாகிய பெருங் குற்றம் விளையும். ௧௬எ

அரசன் வாதி பிரதிவாதிகளின் முன்னிலையில் சான்று முதலிய சாதனங்களை யறிதல் வேண்டும். அவர்கள் கண்முன் இல்லாமல் அச்சாதனங்களை ஏற்றுக்கொள்ள லாகாது. ௧௬அ

வாதி பிரதிவாதிகளுடைய சாதனங்களிலுள்ள குற்றங்களை விசாரகாலத்தில் முறையே பிரதிவாதியும் வாதியும் நீதிநூன் முறை யைத் தழுவி எடுத்துரைத்தல் வேண்டும். அக் குற்றங்கள் அவர்க ளால் வெளிப்பட்டிலவாயின், அக் காலத்தில் நீதிமன்றத்தார் நீதி நூல்களைக் கொண்டு அவற்றை வெளிப்படுத்தல் வேண்டும். ௧௬௯

நீதிநூன்முறையைத் தழுவாமல் சாதனங்களை நிந்திக்கும் வாதி தான் மேற்கொண்ட வழக்கைத் தவறவிட்டுத் தண்டத்திற்கும் உரிய னாவான். ஆதலின் தன் சாதனங்களை நன்றாகஆராய்ந்து காரிய நிருண யத்தில் உபயோகப்படுத்தல் வேண்டும். ௧எ0

---

௧௬ரு. தத்துவசாதனம் - உண்மைச்சாதனம். சலசாதனம் - வஞ்சக சாதனம்.

௧௬௬. பொருந்துமாறு - யுக்தி. வழியளவை - அநுமானம்.

௧௬அ. இப்பொருள் பற்றிய இப்பிரகாணத்தின் ௧ரு௪ - ஆம் சுலோ கம் நீதிமன்றத்தாரைப் பற்றியும், இஃதரசனைப் பற்றியும் கூறப்பட்டனவாத லின் இவ்விரண்டற்கும் வேறுபாடுண்மை யுணர்க.

௧௬௯. வாதியின் சாதனக்குற்றங்களைப் பிரதிவாதியும், பிரதிவாதியின் சாதனக்குற்றங்களை வாதியும் எடுத்துரைத்தல் வேண்டு மென்பது கருத்து.

௧எ0. சாதனங்கள், ஈண்டு வாதியின் வழக்குரையை மறுத்துப் பிரதி வாதி தெரிவிக்கும் உத்தரத்தைப் பற்றியனவாகும்.

வாதியாதல், பிரதிவாதியாதல் கபட சாதனங்களை உபயோகப் படுத்துவராயின், அவ்வழக்குக்களின் பெருமைசிறுமைக் கேற்ற வாறு தண்டம் எய்துவர். பொய்ச்சான்று கூறுவோரும், மாறு பட்டுச் சான்றுரைப்போரும் அத் தண்டத்தினும் இருமடங்கு தண்டம் எய்துவர். கஎக

## கரு. இலிகித வகைகள்.

இனி உள்ளவாறு எழுதப்படும் இலிகிதங்களை முறையே கூறு வேன். பிரமனால் முன்னிகழ்ந்தவற்றை நினைவுகூர்தற்பொருட்டு இலிகிதம் நிருமிக்கப்பட்டது. கஎஉ

பத்திரம், இராசகீயம் இலௌகிகம் என இரண்டுவகைப்படும். அவ்விரண்டும் தனித்தனியே தன்கையா லெழுதப்படுவன, பிறர் கையா லெழுதப்படுவன என இவ்விரண்டு வகைப்படும். இன்னும் அவை சான்றுடையன, சான்றில்லாதன என இவ்விரண்டு வகைப் படுவனவாம். இவ்விருதிறத்துப் பத்திரங்களும் அவ்வத் தேயநிலைக் கேற்ப எழுதி முடிக்கப்படுவனவாம். கஎங

பாகம், தானம், விலைகொண்டு விற்றல், விலை கொடுத்துக் கொள்ளல், பெறுதல் (ஆதானம்), தொழில் நடத்தல் (சம்வித்தானம்), கடன் ஆகிய இக்காரணங்களால் இலௌகிக பத்திரம் பின்னரும் எழு வகைப்படும். கட்டளையிடுதல், அறிவித்தல், தீர்மானித்தல் என்னும் இக்காரணங்களால் இராசகீய பத்திரம் பின்னரும் மூன்றுவகைப் படும். கஎச

சான்றுடையதும், தாயத்தாரால் அங்கீகரிக்கப்பட்டதும், நன்றாக எழுதப்பட்டதும் ஆகிய பாகபத்திரம் பயன்படுவதாகும். அங்ஙனமல்லாத பத்திரம் தந்தையாற் செய்யப்பட்டதாயினும் ஏற்றுக் கொள்ளத்தக்கதன்றாம். கஎரு

நில முதலிய தாவரப்பொருள்களின் தானம், விற்றல், கொள்ளல் என்னும் இவைபற்றிய பத்திரங்கள் தாயத்தாரால் அங்கீகரிக்

---

கஎங. இதனால் இங்குக் கூறிய பத்திரங்கள் எட்டு வகைப்படும். அவை வருமாறு:— (க) தன்கையா லெழுதப்பட்டுச் சான்றுடன் கூடியது, (உ) தன் கையாலெழுதப்பட்டுச் சான்றில்லாதது, (ங) பிறன்கையா லெழுதப்பட்டுச் சான்றுடன் கூடியது, (ச) பிறன்கையா லெழுதப்பட்டுச் சான்றில்லாதது ஆகிய இந் நான்கினையும் இராசகீயம் இலௌகிகம் என்னும் இரண்டனோடும் உறழ எட்டாதல் காண்க.

கப்பட்டனவாகவும், கிராமத்தலைவனாற் சான்றுக் கைச்சாத் திடப் பட்டனவாகவும் இருப்பின் பயன்படுவனவாம். கஎசு

அரசன்கையா லெழுதப்பட்டதும், அவன் முத்திரையா லடையாள மிடப்பட்டதும், அவன் அநுமதி பெற்று மந்திரி முதலிய பிரகிருதிகளால் முத்திரை யிடப்பட்டது மாகிய இம் மூன்றும் இராசகிய பத்திரங்களாம். கஎஎ

பூருவபக்க பத்திர முதலியவற்றில் முறையே விளக்கி எழுத வேண்டியவை:—யுகம், ஆண்டு, திங்கள், பக்கம், திதி, வேளை, நாடு, தலைநகர், நகரம், சாதி, உருவம், வயது, விடயம், சான்று முதலிய பிரமாணம், பொருள், அதனளவை, தன்பெயர், அரசன்பெயர், இருப்பிடம், எதிர்ப்பக்கத்துப்பெயர், எல்லோர்க்கு முன்னோர்களின் பெயர்கள், நேர்ந்த துன்பம், அதனை யடைந்தவன், அதனைக் கொடுத்தவன், அதனைப் பொறுத்திருந்ததற் குரிய அடையாளங்கள் ஆகிய இவையும் மற்றை இன்றியமையாச் செய்திகளுமாம். கஎஅ-கஅ0

எப் பத்திரத்தில், மேற்கூறியவெல்லாம் எழுதப்படவில்லையோ அது குறைவுடையதாய்ப் பிரமாண மில்லாததாகும். எப் பத்திரம் முறைதவறின தாகவும், மாறுபட்ட பொருளுடையதாகவும், பலவகைப் பொருள் தருவதாகவும், பொருளில்லாததாகவும், நீண்டகாலத்திற்கு முன் எழுதப்பட்டதாகவும் உள்ளதோ அப் பத்திரம் பிரமாணசாதன மாகாது. அங்ஙனமே அறிவில்லாதவனாலும், பெண்களாலும் எழுதப்பட்டனவும், வலிந்து பற்றி எழுதப்பட்டனவுமாகிய பத்திரங்களும் பிரமாண சாதனமாகா. கஅக-கஅஉ

ஒருவழக்கில் உண்மைப் பத்திரங்களாலும், உண்மைச் சான்றுகளாலும், உண்மை ஆட்சிகளாலும், தெய்விக சாதனங்களாலும் தன் பக்கத்தை உண்மைப்படுத்தும் மனிதன் இம்மையிலும் மறுமையிலும் இன்பத்தை நுகர்பவனாவான். கஅந

கச. சான்று கூறுவோர் இயல்பு.

உரியவரினின்றும் வேறானவராய்க் காரியநிகழ்ச்சியை யறிந்தவர் சான்றுகூறுவோராவர். அவர் நிகழ்ந்தது கண்டோன், நிகழ்ந்தது

---

கஎஅ. நாடு, தலைநகர், நகரம் இம் மூன்றற்கும் முறையே உதாரணம் வருமாறு:— பாண்டிநாடு, மதுரை, ஒருவன் வசிக்கும் ஊர்.

கஅச. கிருதன் - நிகழாத தொன்றைக் கூறும்படி கற்பிக்கப்பட்டவன், அகிருதன் - அங்ஙனங் கற்பிக்கப்படாதவன்.

கேட்டோன் எனவும், கிருதன் அகிருதன் எனவும் பலவகைப்படு வர். கஅச

எவன் முன்னரே வாதி பிரதிவாதிகளின் முன்னிலையில் ஒன் றைக் கண்டும் கேட்டும் அநுபவித்தவண்ணம் மாறுபடாமற் கூறுகின் றானோ அவன் சான்று கூறுவோனுவான். கஅரு

எவனுடைய புத்தி, நினைவு, செவி இவைகள் நாள் பலவாகியும் கேடெய்தாமல் இருக்கின்றனவோ அவனே எப்பொழுதும் சான்று கூறுந் தன்மைக்குத் தகுதியுடையனுவான். கஅசு

எவன் உலகியல் அநுபவமுதிர்ச்சியையும், உண்மை கூறுதலையு முடையானோ அவனுஞ் சான்றுகூறுந் தன்மைக்குத் தகுதியுடைய னுவான். உபயவாதிகளாலும் அங்கீகரிக்கப்பட்ட ஒருவன் அறநெறி யுணர்ந்தவனுயிருப்பின் அவனுஞ் சான்று கூறுதற்குத் தகுதியுடை யனுவான். கஅஎ

இல்லறநிலையி லொழுகுவார், பிறர்வயப்படாதார், புலமைமிக் கார், தம் நாட்டில் வாழ்வார், யௌவனபருவ முடையார் ஆகிய இவர் எல்லோரும் சாதி குலங்களுக் கேற்றவாறு எல்லா விடயத்திலும் சான்றுகூறத்தக்கவராவர். பெண்கள்பொருட்டுப் பெண்கள் சான்று கூறுதற்குத் தகுதியுடையராவர். கஅஅ-கஅகூ

கொள்ளை, களவு, வலிந்துபற்றல், கடுஞ்சொற் கூறி வைதல், கடுமையாக அடித்தல் ஆகிய இவ்வெல்லாக் காரியநிகழ்ச்சிகளிலும் சான்று கூறுவாரைச் சோதித்து வினவலாகாது. ககூ0

சான்று கூற நேருங்கால் அறிவின்மையாற் பாலரும், பொய் கூறும் இயற்கையாற் பெண்களும், தீவினைப் பயிற்சியால் வஞ்சகரும், அன்புரிமையால் உறவினரும், பகை களையவேண்டு மென்னும் கருத் தாற் பகைவரும், அகங்காரத்தால் இழிந்த சாதியினரும், பொருளா சையாற் றீயோரும், தம் சீவனத்தொழில் வீருவாய் சுருங்கிவிடு மென்னும் அச்சத்தாற் பணியாளரும் மாறுபடக் கூறுவராதலின், இவர்கள் சான்று கூறுதற்குத் தகுதி இல்லாதவராவர். பொருட் சம் பந்தமுடையாரும், உடன் படித்தல் முதலிய கல்விச் சம்பந்தமுடை யாரும், பெண்மக்களின் சம்பந்த முடையாரும் சான்று கூறுவோ ராகார். ககூக-ககூ௨

சிரேணி, வருக்கம் என்னும் குழுவினருள் ஒருவன் அவரோடு பகை கொள்ளுவானாயின், அவரெல்லோரும் அவற்குப் பகைவராவரா தலின், அவர் சான்று கூறுதற்குத் தகுதியுடையராகார். ௧௬௩

வாதி பிரதிவாதிகளின் முன்னிலையில் வைத்துச் சான்று கூறு வோரை விசாரித்தற்கண்ணும், வழக்கு நிகழ்ச்சியைத் தீர்மானித்தற் கண்ணும் அரசன் காலந்தாழ்த்தலாகாது. அவ் வாதி பிரதிவாதிக ளின் கண்ணெதிரிலேயே சாட்சி விசாரணை நடத்தல் வேண்டும். எவ் வாற்றானும் அவர் பார்வையிலன்றி நடத்தலாகாது. எவன் அரசனாற் கட்டளையிடப்பட்டும் சான்றுகூறுதலை உடன்படுகின்றானில்லையோ அவன் தண்டம் எய்துவான். ௧௬௪-௧௬௫

நீதிபதியின் முன்னிலையில் வாதிபிரதிவாதிகளாற் சான்று கூறு தற்பொருட்டுக் காட்டப்படாதவனும், அரசனா லழைக்கப்படாதவ னும், கட்டளை பெறாதவனுமாகிய இவ்விழிதக்கோர் நீதிமன்றத்தில் தாமே வந்து உண்மை கூறினும் பொய்கூறினும் தண்டம் எய்துதற் குரியராவர். ௧௬௬

சான்று கூறுவார் மொழிகள் ஒருமைப்பாடின்றி ஐயத்திற் கிட னாகுங்கால் பலர் கூறும் ஒன்றுபட்ட மொழிகளையும், சான்றுரைப் பார் இருதிறத்தும் ஒத்த அளவினராகுங்கால் அவருட் குணமுடை யார் மொழிகளையும், அவர் எல்லோருங் குணமுடையராயிருப்பின் அவருள் அதிக குணம் வாய்ந்தார் மொழிகளையும் எப்பொழுதும் ஏற்றுக்கொள்ளல் வேண்டும். ௧௬௭

ஒரு நிகழ்ச்சியைக் கண்டு அல்லது கேட்டிருக்கு மொருவன், சான்று கூறுதற்கண் நியமிக்கப்பட்டில னெனினும், அவனை அது பற்றிக் கேட்பின் அவன் கண்டதை அல்லது கேட்டதனை அவ் வாறே எடுத்துரைத்தல் வேண்டும். ௧௬௮

வெவ்வேறு காலங்களிற் சான்றுகூறுவோரால் அறியப்பட்ட நிகழ்ச்சிகளின் கூறுகளைப்பற்றி ஆராயுங்கால், அச் சான்றுவார் ஒவ் வொருவரையும் தனித்தனியே விசாரித்தல் வேண்டும். இவ்விடயத் தில் இவ் விதி தொன்றுதொட்டு வழங்கி வருவதாகும். ௧௬௯

---

௧௬௩. சிரேணி வருக்கங்களைப் பற்றி ௲ ௦-௬௧-ஆம் சுலோகங்களிற்காண்க.

௧௬௭. சான்றுரைப்பார் ஒருகாரியத்தில் இருதிறப்பட்டுக் கூறுவாராயின் ஏற்றுக்கோடற் குரிய உபாயங் கூறியவாறு.

## கரு. சான்று கொள்ளு முறை.

சான்றுகூறுவார் இயற்கையாகக் கூறும் சொற்களையே ஏற்றுக் கொள்ளல் வேண்டும். ஒருபொழுதும் வலிந்து கூறும்படிச் செய்தலாகாது. அவர் சான்று கூறுங்கால் மீண்டும் மீண்டும் அவரைப் பல வாறு வினுதலாகாது. உ00

சான்று கூறுவோரை யழைத்து அவரைச் சூளுறவால் மிகவும் அடக்குவித்து வினுதல் வேண்டும். இன்னும் புராணங்களிற் கூறப் பட்ட உண்மை மொழிதலின் பெருமையையும், அறத்தின் மாட்சி யையும் எடுத்துரைத்தலானும், பொய் கூறுதலால் உண்டாகும் மிக்க குற்றங்களை எடுத்து மொழிதலானும் அவரை மிகவும் மெல்ல மெல்ல அச்சுறுத்தல் வேண்டும். உ0க

சான்றுகூறுவோனை நோக்கி "எவ்விடத்தில், எக்காலத்தில், எக் காரணத்தால், எங்ஙனம், யாது நின்னாற் காணப்பட்டது? யாது கேட்கப்பட்டது? யாது எழுதப்பட்டது? யாது எழுதுவிக்கப்பட் டது? அவ் வெல்லாவற்றையும் நிகழ்ந்தவாறே உண்மையாகக்கூறுக" என்றிவ்வாறு வினுதல் வேண்டும். உ0உ

"சான்றுரைப்போன் உண்மை கூறுவானுயின், இம்மையிற் சிறந்த புகழையும், மறுமையுலகத்திற் சிறந்த இன்பங்களையும் அடை வான். இவ் வுண்மைமொழி பிரமனுல் மிகவும் பாராட்டப்பட்டுள் ளது." உ0ங

"சான்றுரைப்போன், வாய்மையினுலேயே தூய்மையுடையனு வான். அவற்கு அவ் வாய்மையினுலேயே அறமும் மிகுவதாகும். ஆத லால் எல்லா வருணத்தின்கண்ணு முள்ள சான்ருவா ரெல்லாரும் வாய்மையையே மொழியக்கடவர்." உ0ச

"சீவான்மாவின் கன்மங்களுக்கு அதன் உள்ளிருக்கும் இறை வனே சான்ருவான். அச் சீவான்மாவிற்குப் புகலிடமும் அவ் விறை வனே. ஆதலின் மனிதர்பொருட்டு உத்தமமான சான்றுரைக்குந் தன்மையை எய்திய நீ பொய்க்கரி கூறி அதனுல் நின்னை அவமானத் திற் குட்படுத்தலாகாது." உ0ரு

"தீங்கு புரிவானெருவன் தன் செயலை யாருங்காணமாட்டார் என்று எண்ணுகின்ருன். அவன் உள்ளிருக்கும் இறைவனும் மற்

உ0உ. இச்சுலோக முதல் உ0அ - ஆம் சுலோகம் வரை கூறப்பட்டவை யெல்லாம் நீதிமன்றத்தார் சான்றுரைப்போனை நோக்கி அவன் உண்மை கூறு தற்பொருட்டுக் கூறும் நீதிமொழிகளாம்.

றைத் தேவர்களும் அவன் செயல் முழுதையும் நன்றாகப் பார்க்கின்றனர்." ௨0௬

"பல பிறப்புக்களிற் சிறிது சிறிதாக நீ ஈட்டிய புண்ணியமெல்லாம் பொய்ச்சான்று கூறி எவனைத் தோல்வியுறச் செய்கின்றாயோ அவனைச் சார்ந்துவிடும் என்பதையும், நின் 'பொய்ச்சான்றாற் றோல்வியுற்றான் பல பிறப்புக்களில் செய்த பாவம் எல்லாம் நின்னைச்சார்ந்துவிடும் என்பதையும் அறிவாயாக" என்றிங்ஙனம் சான்று கூறுவோனை நீதிமன்றத்திற் பலர் முன்னிலையில் வைத்துக் கூற வேண்டும். ௨0எ-௨0அ

அரசன் வாதிபிரதிவாதிகளின் காரிய நிகழ்ச்சிகளுக்கு உபயோகமான தெய்விக இராசகிய நிமித்தங்களைப் பகுத்துணர்ந்து, சான்று முதலிய சாதனங்களை ஒழுங்குபடுத்தித் தன்பாற் காட்டுதற் பொருட்டு, அவர்க்கு அவகாசங் கொடுத்தல் வேண்டும். ௨0௯

அரசன், வழக்குரைப்போர்பாற் பத்திர சாதன மில்லையாயின், அவர்தம் சான்றுகளாலும், அநுபவங்களாலும் வழக்கை விசாரித்தல் வேண்டும். அப் பத்திரங்களோடு சான்றுகளும் இல்லையாயின், அவர்தம் தடையில்லாத அநுபவ உண்மையால் ஆராய்தல் வேண்டும். ௨௧0

அத் தடையில்லாத அனுபவமும் இல்லையாயின் சான்றுகளாலும் பத்திரங்களாலும் ஆராய்தல் வேண்டும். அநுபவம், இலிகிதம், சான்று ஆகிய இம் மூன்றனுள் ஒன்றினால் ஆராய்தலும் பொருந்தும். ௨௧௧

அரசன் வழக்காராயுங்கால் வழக்குரைக்கும் மக்கள்நிலை, அவர் தேயநிலை, அவர் அறநிலை ஆகிய இவற்றைச் சிந்தித்தலாகாது. ௨௧௨

திறமைமிக்க தீயவர் எப்பொழுதும் பொய்ப் பத்திரங்களை இயற்றுவர். ஆதலின், பத்திரவலி ஒன்றை மாத்திரம் நம்பி ஒருபக்கம் துணிதல் தக்கதன்று. ௨௧௩

நட்பும், பொருணசையும், அச்சமும், சினமும், வஞ்சகமும் ஆகிய இக் காரணங்களாற் சான்றுரைப்போர்பால் ஐயம் நிகழுமாத

---

௨௧௨. வழக்காராயுங்கால் வழக்குரைப்போரின் உயர்வு தாழ்வுகளையும், அவர் பிறந்த தேயத்தின் சிறப்பு இழிவுகளையும், அவர் தருமத்தின் பெருமை சிறுமைகளையும் நோக்காது, அக் காரியத்தின் இயல்பையே கருதிநிலையோடு ஆராய வேண்டுமென்பது கருத்து.

வின்; சான்று கூறுவோரை மாத்திரம் நம்பி எப்பொழுதுங் காரியங்களை முடிவு செய்தலாகாது. உகச

அநுபவங்களில், தலைவனையுடைய பொருளையாதல, தலைவனையில்லாத பொருளை யாதல் ஒருவன் வன்மையாலும் செருக்கினாலும் அநுபவிக்கக்கூடும் என்னும் ஐயம் நிகழுமாதலின், அநுபவம் ஒன்றை மாத்திரம் நம்பிக் காரியங்களை முடிவு செய்தலாகாது. உகரு

ஐயப்படுதற்குரிய வழக்குக்களில் ஐயமுறுதலும், அல்லாத வழக்குக்களில் அங்ஙனம் ஐயமுறாமையும் வேண்டும். ஐயப்படுதற்குரியவல்லா வழக்குக்களில் ஐயமுறும் நீதிமன்றத்தாரை அரசன் கள்வரை யொப்பக் கருதித் தண்டித்தல் வேண்டும். உகசு

ஐயமுறுதற்குரியவல்லா வழக்குக்களில் ஐயமுறின், அதனால் அநவத்தை யென்னுங் குற்றமுண்டாம்; உலகமும் வேறுபாடெய்தும்; அறமும் நீதியும் குறைந்துவிடும். உகஎ

தானம் கிரயம் முதலிய வரவோடு கூடியதும், பல்லாண்டுகள் ஆனதும், பிறரால் தடைப்படுத்தப்படாததும், இடையீடில்லாததும், எதிரியின் முன்னிலையில் வைத்து அநுபவிக்கப்பட்டதும் ஆகிய ஒரு பொருளின் அநுபவம் பிரமாணமாகும். உகஅ

எவன், ஒரு பொருளின் அநுபவ மாத்திரம் தனக்குண்டென்று கூறி, அதன் வரலாற்றை ஒருபொழுதும் தெரிவிக்கின்றானில்லையோ அவன் வஞ்சகமான அநுபவத்தைக் கடைப்பிடித்திருத்தலால் கள்வனென் றறியப்படுவான். உககூ

ஒரு பொருள் வந்தநெறியை யுடையதாயிருப்பினும், அது சிறிதேனும் பெற்றவனால் அநுபவிக்கப்படாமலிருப்பின் வலியிழந்ததாகும். உஉ0

## கசு. நெடுங்கால அநுபவப் பொருள்களின் நிலைமை.

ஒரு பொருளுடையான், தன் பொருளைத் தன் முன்னிலையில் வைத்துப் பிறனொருவன் பத்தாண்டுகள்வரை அநுபவிக்கத் தான் அதனைப் பார்த்துக்கொண்டிருப்பானாயின், அவன் அப்பொருட்குரியவனாகான். (இழந்தவன் என்பதாம்.) உஉக

---

உகஎ. அநவத்தை - எல்லையில்லாதது.

உகஅ. அடைமொழி யனைத்தும் அநுபவத்தைப் பற்றி நிற்பனவாம்.

உககூ-உஉ0. இவ்விரண்டு சுலோகங்களாலும் ஒருவற்கு ஒருபொருள் வந்தவழியும் அநுபவமும் இருந்தாலன்றிப் பிரமாணமாகாதென்பது போதரும்.

உஉக. இங்குத் தன் பொருளென்றது நில மல்லாத பிற பொருள்களை, பின்வருஞ்சுலோகத்தில் நிலத்திற்கு இருபதுயாண்டு அநுபவங் கூறப்பட்டிருத்தலின்,

அரசியல் நடைபெறுங்கால் இவ்வுலகத்தில் ஒருவனுடைய நிலம் பிறனொருவனால் இருபது ஆண்டுகள்வரை அநுபவிக்கப்பட்டிருப்பின், அந் நிலத்திற்குரியான் வலியுடையனாயினும் அவற்கு அந் நிலம் உரியதாகாது. (இருபது ஆண்டுகள்வரை அநுபவித்தவற்கே உரியதாம் என்பதாம்.) உ௨௨

ஒருவன், தனக்குக் கிரயம் தானம் முதலிய நெறிகளால் வாராத பிறன் பொருளைக் கவர்ந்து நூறாண்டுகள்வரை அநுபவித்துளானாயினும், அது வெளிப்படுங்கால் அப் பாவியைக் கள்வனையொப்ப அரசன் தண்டிக்கக் கடவன். உ௨௩

ஒருவற்கு ஒரு பொருள் கிரயம் தானம் முதலிய நெறிகளால் வந்ததில்லை யெனினும், அஃது அவனால் ஒழிவின்றி இடையூறில்லாமல் அறுபதாண்டுகள்வரை அநுபவிக்கப்பட்டிருப்பின், அப்பொருள் பிறர் எவராலும் பெறத்தக்கதன்றாம். உ௨௪

பந்தகப்பொருளும், எல்லைநிலமும், இளைஞர்பொருளும், அடைக்கலமாக வைக்கப்பட்ட நிலையியல் இயங்கியற் பொருள்களும், அரசிறைப் பொருளும், அந்தணர்பொருளு மாகிய இவ் வெல்லாம் பிறர் அநுபவத்தால் உரியவரிடத்தினின்றும் விலகினவாகா. உ௨௫

ஒரு பொருளைப் பிறன் அநுபவத்திற்காக முன்னமே நிச்சயிக்கப்பட்ட காலங் கடந்துவிட, அதனைப் பொருட்படுத்தாமல் வாளாவிருக்கும் அப் பொருட்குரியவன் பின்னர் அப் பொருட் பயனை அடையான். உ௨௬

## ௧௭. தெய்விக சாதன வகைகள்.

இங்ஙனம் அநுபவத்தின் இயல்பெல்லாம், சுருக்கிக் கூறப்பட்டன. இனித் தெய்விக சாதனங் கூறப்படும். கடன் கொடுத்தவன்

---

உ௨௪. இதன் முற்சுலோகத்திற் கூறப்பட்ட அநுபவம் இடையூறும் ஒழிவுமுடையதெனவும், இதன்கட் கூறப்பட்ட அநுபவம் அவையில்லாததெனவும் பகுத்துணர்ந்து முரணுமை கொள்க. அன்றியும் முன்னது உரியாரிருப்ப வன்மையாற் கவர்ந்து கொண்டு அநுபவிக்கப்பட்டதெனவும், பின்னது உரியாரில்லாததாக மற்றொருவனால் தடையின்றி அநுபவிக்கப்பட்டதெனவும் கோடலும் பொருந்தும்.

உ௨௫. இளைஞர்-பொருளைப் பாதுகாத்தற்குரிய ஆண்டு நிரம்பப் பெறாதவர். இயங்கியல் - சங்கமம். நிலையியல் - தாவரம்.

உ௨௬. குறிப்பிட்ட காலங் கடந்துவிடின் அப் பொருளை இழந்துவிடுவான் என்பது கருத்து.

விழிப்பின்மை காரணமாக முற் கூறப்பட்ட பத்திரம், சான்று, அநுபவம் என்னும் மூவகைச் சாதனங்களையும் இழந்திருக்கும் வழக்கிலும், பிரதிவாதி நிகழ்ச்சிகளை வஞ்சிக்கும் வழக்கிலும், பின்வரும் மூவகைப்பட்ட உபாயங்களையும் மேற்கொள்ளல் வேண்டும். உஉஅ

அவ்வுபாயங்களாவன:— சோதனுப் பிரதிகாலமும், உத்தி லேசமும், சபதமுமாம். இம் மூன்றினாலும் முறையே உண்மையைத் துணிதல் வேண்டும் உஉகூ

நான்முறைகளுக்கும், ஆன்றோர் ஆசாரங்களுக்கும் மாறுபடாமல் இயைக்கப்பட்டுச் சிறந்த தருக்கத்தோடுங் கூடியது உத்தியாகும். அதுவே தன் காரியசித்திக்கு உபயோகமாகும். இங்ஙனமல்லாதது உபயோகமாகாது. உ௩0

தானம், சாமம், பேதம், பொருணசைகாட்டல், துணிந்த பொருளினின்றும் மனத்தை வேறுபடுத்தல் ஆகிய இவ் வைந்தும் காரியங்களை ஊகித்துணர்தற்குரிய ஏதுக்களாம். உ௩க

ஒருவன் மீண்டும் மீண்டும் மும்முறை நான்குமுறை ஐந்துமுறை தடைப்படுத்தி வினவப்பட்டும், அத் தடை வினக்களுக்கு எதிர்த்து விடை தாரானாயின் பின்னர் அவனை வாதிவிருப்பின்படி பொருள் கொடுக்கச் செய்தல் வேண்டும். உ௩உ

இங்குக் கூறிய உத்தி வகைகள் பயன்படா தொழியுமாயின், சூளுறன் முதலிய தெய்விக சாதனங்களால் பிரதிவாதியை உண்மை கூறும்படி கட்டளையிடல் வேண்டும். உ௩௩

---

உஉகூ. உத்திலேசத்தை அடுத்து வருஞ் சூத்திரத்திற் காண்க. இலிகிதம் முதலிய சாதனங்களில்லாத வழக்கில் இம் மூன்று உபாயங்களாலும் உண்மை ஆராய்தல் வேண்டுமென்பது கருத்து. இவற்றுள், சோதனுப் பிரதிகாலமாவது:— விசாரணைநிமித்தம் காலத்தை மாற்றி யமைத்தல். அன்றி, உண்மை யறிதற்பொருட்டு ஒரே விடயத்தை மீண்டும் மீண்டும் பன்முறை கூறும்படி ஒருவனை வினவுதலுமாம். உத்திலேசமாவது:—சாம தான முதலிய உபாயங்களால் அறநெறி பிறழாது ஒருவனை உண்மை கூறச்செய்தல். சபதமாவது:—தெய்வத்தை முன்னிட்டுச் சூளுறச் செய்தல். பின்வரும் உ௩0-உ௩க ஆம் சுலோகங்களில் உத்தியினிலக்கணமும் வகைகளும், உ௩உ- ஆம் சுலோகத்திற் சோதனுப் பிரதிகாலமும் கூறப்பட்டுள்ளன. சபதம் உசஅ - ஆம் சுலோகத்திற் காண்க.

உ௩உ. ஒரு நிகழ்ச்சியைப் பற்றி மீண்டும் மீண்டும் பலமுறை கேட்கப் படின் தடைவினக்களுக்கு எதிர்த்து விடை தாராதவன் தோல்வியுற்றவனாவான் என்பது கருத்து

உண்மை யறியமுடியாத காரியத்தில் வாதிபிரதிவாதிகள் இருவரும் தத்தம் தூய்மையைப் புலப்படுத்துதற்பொருட்டு மகான்களாகிய தேவர்களால் உபயோகப்படுத்தப்பட்டபடியால் அவை தெய்விக சாதன மென்று கூறப்படும். உ௱௪

உண்டி முதலிய சிறு செயலிலும் தம் தூய்மையை வெளிப்படுத்துதற்பொருட்டு வசிட்டர் முதலிய முனிவர் எழுவராலும் இத் தெய்விக சாதனங்கள் மேற்கொள்ளப்பட்டன. உ௱௫

எவன், தன் பெருமையாலும், அறிவின் செருக்காலும் வசிட்டர் முதலிய முனிவரரால் எப்பொழுதும் மேற்கொள்ளப்பட்ட தெய்விக சாதனத்தைச் செய்கின்றானில்லையோ அம் மனிதன் அறக்கள்வனுவான். உ௱௬

தெய்விக சாதனத்தைச் செய்ய நேர்ந்திருக்குங்கால் எவ் வந்தணன் அறிவின்மை காரணமாக அதனைச் செய்கின்றானில்லையோ, அவனுடைய அறம் பொருள்களைத் தேவர் கவர்ந்துகொள்வர். இதன்கண் ஐயமின்று! உ௱௭

எவன், தன் தூய்மையை விரும்பிச் சோம்பலின்றித் தெய்விக சாதனத்தை மேற்கொள்ளுகின்றானே அவன் சிறந்த தூய்மையுடையனும் இம்மையிற் புகழையும் மறுமையில் துறக்கவின்பத்தையும் அடைவான். அங்ஙனம் அச் சாதனத்தை மேற்கொள்ளானாயின் அவ்விருமைப் பயனையும் எய்தான். உ௱௮

நெருப்பும், நஞ்சும், துலையும், நீரும், அறம் பாவங்களும், அரிசியும், குளுறவுகளும் ஆகிய இவை முனிவரரால் தெய்விக சாதன நிருணயத்தில் எடுத்துக் காட்டப்பட்டுள்ளன. உ௱௯

முறையே பின்னதனை நோக்க முன்னது சிறந்ததாகவுள்ள இத் தெய்விக சாதனங்களை, உலகம் நம்புதற்பொருட்டுக் காரியங்களின் நிலைமையை நோக்கி நியமனஞ் செய்தல் வேண்டும். ஆனால் இங்குக் கூறப்பட்ட தெய்விகங்களெல்லாம் சிறந்தன வென்றே எண்ணப்படும். உ௪௦

பழுக்கக் காய்ச்சிய இருப்புக் கோளத்தைக் கையில் தாங்கி ஒன்பதடி நடத்தல் வேண்டும். இன்றேல் எரிகின்ற தழலில் ஏழடி தூரம் கால்களால் நடத்தல் வேண்டும், அன்றி இரும்பினால் உழுந்தளவின

---

உ௱௯. இங்குக் கூறிய நெருப்பு முதலியவற்றைக் கொண்டு ஆராயு முறைகளை உ௪௧ - ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க.

வாகச் செய்து கொதிக்கின்ற எண்ணெயில் இடப்பட்ட உருண்டைகளைக் கையினால் அள்ளி வெளிப்படுத்தல் வேண்டும். இன்றேல், பழுக்கக் காய்ச்சிய இருப்புத் தகட்டை நாவினால் நன்றாக நக்கல் வேண்டும். (இவை நெருப்பினால் ஆராயப்படுவனவாம்.) உ௪௧-உ௪௨

நஞ்சை உண்ணல் வேண்டும். கைகளாற் கரும்பாம்பைப் புற்றினின்றும் வெளியே இழுத்தல் வேண்டும். (இவை நஞ்சால் ஆராயப்படுவன.) உ௪௩

ஒருவன் முதலில் தன்னை ஒரு துலையில் நிறுத்தளந்து, அவ்வளவை ஒரு தட்டிலிட்டுப் பின் மற்றொரு தட்டில் தான் ஏறி நின்று, முன்னையளவையிற் குறைதல்கூடுதல்களை யொழித்துச் சமனாதல் வேண்டும். (இது துலையாலாராயப் படுவது.) உ௪௪

ஒருவன் தான் வழிபடும் தெய்வத்திற்குச் செய்த திருமஞ்சன நீரை முதலிற் பருகல் வேண்டும். அதன்பின் அவனை ஓரளவு துணிவு செய்யப்பட்ட காலம் வரை நீரில் மூழ்கி இருக்கும்படி செய்தல் வேண்டும். (இது நீரினா லாராயப் படுவது.) உ௪௫

தரும வுருவத்தையும் அதரும வுருவத்தையும் கண்ணாற் பாராமல் தொடல் வேண்டும். (இஃது அறம் பாவங்களா லாராயப்படுவது.) உ௪௬

---

உ௪௪. இதனால் ஒருவனை இரண்டு முறை நிறுத்துப் பார்க்கவேண்டுமென்பதும், இரண்டாமுறை நிறுக்குங்கால் முதலில் நிறுத்த அளவிற் குறைந்தாதல் மிக்காதல் காணப்படுவேனாயின் அவன் குற்றவாளி யென்று அறியவேண்டுமென்பதும் கூறப்பட்டன.

உ௪௬. வெள்ளியினால் தருமவுருவத்தையும், இரும்பினாலாதல் காரீயத்தாலாதல் அதருமவுருவத்தையும் அமைத்தல் வேண்டும். அன்றிப் பூர்ச்ச இலையிலாதல் துணியிலாதல் தருமவுருவத்தை வெண்ணிறமாகவும், அதருமவுருவத்தைக் கருநிறமாகவும் எழுதலாம். பின் அவ் வுருவங்களுக்குப் பஞ்சகவ்வியம் தெளித்துச் சந்தனமிட்டு வெண்மலரால் தருமவுருவத்தையும்,கருமலரால்அதருமவுருவத்தையும் பூசித்தல் வேண்டும். பின்னர் மண்ணுருண்டைகளிலாதல்,சாணியுண்டைகளிலாதல் அவ் விரண்டு உருவங்களையும் தனித்தனி வைத்து அவ் வுண்டைகளைப் புதிய மட்பாண்டத்தில் யாரும் காணாவாறு வைத்தல் வேண்டும். அம் மட்பாண்டத்தைக் கடவுளர் அல்லது அந்தணர் முன்னிலையில் தூய்மை செய்யப்பட்ட இடத்தில் வைத்து அறக்கடவுளையும் தேவர்களையும் உலகபாலர்களையும் ஆவாகனஞ் செய்து பூசித்துப் பின் அப் பாண்டத்தளிருக்கும் உண்டைகளுள் ஒன்றைத் தெய்விகசாதனஞ் செய்பவனைக்கொண்டு எடுப்பித்தல் வேண்டும், அவன் எடுக்குங்கால் "யான் பாவமிலனாயின் தருமம் என்பாலதாக" என்று

கருட மென்னும் அளவினவாகிய அரிசிகளை ஐயமுறாமல் மென்றுவிடல் வேண்டும். (இஃது அரிசியா லாராயப்படுவது) ௨௪௭

பெரியோராகிய குரவர்களையும், புதல்வர் முதலியோரின் தலைகளையும், பொன் முதலியவற்றையும் தொட்டுக்கொண்டு விரைந்து "உண்மையாகக் கூறுகின்றேன்" என்று சொல்லிச் சூளுறவு செய்தல் வேண்டும். இன்னும். "இக் கொடுஞ்செயலை யான் செய்துளேனாயின் தீவினைகளெல்லாவற்றையும் அடைவேன்; நல்வினைகளெல்லாவற்றையும் இழந்துவிடுவேன்" என்று கூறுதலும் வேண்டும். ௨௪௮

ஒருவன் மற்றொருவனிடத்தினின்றும் கவர்ந்துகொண்ட பொருளின் அளவு ஆயிரமாயின் நெருப்பினையும், அவ்வளவிற் காற்கூறு குறைந்ததாயின் நஞ்சினையும், மூன்றிலொரு கூறு குறைந்ததாயின் துலாக்கோலினையும், அவ்வளவிற் பாதியாயின் நீரினையும், காற் கூறாயின் அறம் பாவங்களையும், எட்டிலொரு கூறாயின் அரிசிகளையும், பதினாறிலொரு கூறாயின் மற்றைச் சூளுறவுகளையும் மேற்கொள்ளல் வேண்டும். இவ்வாறு தெய்விக சாதனங்கள் கூறப்பட்டுள்ளன. ௨௪௯-௨௫0

பிரதிஞ்ஞை செய்து எடுத்தல் வேண்டும். எடுக்கப்பட்டது தரும உருவமாயின் அவன் தூய்மையுடையான் எனவும், அதரும உருவமாயின் தூய்மையிலன் எனவும் தெளிந்துகொள்ளல் வேண்டும். இது வாசஸ்பத்தியத்திற் கண்டது.

௨௪௭. ஒருவன் அரிசியைப் பற்றித் தெய்விக சாதனஞ் செய்ய நேர்ந்துழி, நீதிபதி அவன் வழிபடும் தெய்வம் அல்லது சூரியன் இவர்கட்குத் திருமஞ்சனஞ் செய்த நீரை ஒரு மட்பாண்டத்திற்பெய்து, ஒரு கருட அளவு எடையுள்ள வெண்மை நிறம் வாய்ந்த அரிசியை அந் நீரில் முதனாள் ஊறவைத்துப் பூசித்தல் வேண்டும். முதனாள் உணவொழித்திருந்த அவன் பிற்றைநாட் காலையில் நீராடிச் சூரியதேவனது ஆலயத்தில் கிழக்கு முகமாக இருந்து அவ்வரிசிகளை மென்று பூர்ச்சம் அல்லது அரசிலையில் உமிழ்தல் வேண்டும். மெல்லுங்கால் அவனுக்கு உடல்நடுக்கமும் வாயில் இரத்தமும் தோன்றி உமிழ்நீரிலும் இரத்தங் காணப்படுமாயின் அவன் குற்றஞ் செய்தவனாவான். உமிழ் நீர் அரிசியின் நிறம் போல் வெண்மையாகக் காணப்படின் குற்றமில்லாதவனாவான். இதுவும் வாசஸ்பத்தியத்திற் கண்டது.

௨௪௮. குரவர்களைத் தொட்டுச் சூளுறவு செய்யுங்கால் "யான் இக் கொடுஞ்செயலைச் செய்துளேனாயின் என் குரவர் நரகத்தில் வீழ்க்கடவர்" எனவும், புதல்வர் முதலியோர் தலைகளையும் பொன் முதலியவற்றையும் தொட்டுச் சூளுறவு செய்யுங்காலும், உண்மை கூறுங்காலும் முறையே "என் புதல்வர் அழிவெய்துக" எனவும், "பொன் முதலியன கேடெய்துக" எனவும் "என் வாய்மை யனைத்தும் பொய்யாக" எனவும் இவ்வாறு கூறிச் சூளுறல்வேண்டுமென்பதாம்,

இங்குக் கூறிய பொருளின் அளவுகள் கடையாயார்க் குரியன வாம். இடையாயார்க்கு இவ் வளவின் இருமடங்கும், தலையாயார்க்கு இவ் வளவின் நான்கு மடங்கும் மிகுதியாக நீதிமன்றத்தார் ஏற்படுத்தல் வேண்டும். ௨௫௧

சிரோவர்த்தி இல்லாதிருக்குங்கால் தெய்விக சாதனங் கொடுக்கத்தக்கதன்று. தெய்விக சாதனங் கொடுக்குங்கால் வாதி சிரத்தானத்திருப்பதால் அவனே சிரோவர்த்தி என்று கூறப்படுவான். ௨௫௨

வேதங்களில் விதிக்கப்பட்டபடி பிரதிவாதியையே தெய்விக சாதனங் கொடுக்கச் செய்தல் வேண்டும். வாதியை நோக்கித் தெய்விக சாதனங் கொடுக்கும்படி யாரும் நியமனஞ் செய்தலாகாது. ௨௫௩

பிரதிவாதியின் விருப்பத்திற் கிணங்க வாதியும் ஒரோவமையம் தெய்விக சாதனஞ் செய்தற்குரியனாவான். அங்ஙனஞ் செய்யுங்கால் அப் பிரதிவாதி சிரோவர்த்தி யாவான். ௨௫௪

அரசரால் ஐயமுறப்பட்டாரையும், கள்வரால் தம்முட் கலந்தவ ரெனக் காட்டப்பட்டாரையும் அவர்தம் தூய்மையைப் புலப்படுத்துதற்பொருட்டுச் சிரோவர்த்தி இல்லாமலே தெய்விக சாதனங் கொடுக்கும்படி செய்தல் வேண்டும். ௨௫௫

பிறர் மனையாளோடும், சேரத்தகாத பெண்களோடுஞ் சேர்ந்ததனாற் றோன்றிய வழக்குக்களிலும், பார்ப்பனக் கொலை முதலிய பெரும் பாதகங்களைப் பற்றிய வழக்குக்களிலும் தெய்விக சாதனங்களை மேற்கொண்டே ஆராய்தல் வேண்டும். மற்றைச் சாதனங்கள் இங்குப் பயன்படா. ௨௫௬

களவு குறித்து ஐயமுறப்பட்ட மனிதற்கு, உழூந் தளவினவாகச் செய்து கொதிக்கின்ற எண்ணெயி லிடப்பட்ட இரும்பு உருண்

---

௨௫௧. இதனால் முன்னர்க் கூறிய பொருளின் அளவு ஆயிரத்திற்கு நெருப்புக்கோடல் கடையாயார்க் கெனவும், இரண்டாயிரத்திற்கு நெருப்புக் கோடல் இடையாயார்க் கெனவும், நாலாயிரத்திற்கு நெருப்புக்கோடல் தலையா யார்க்கெனவும் கொள்ளவேண்டு மென்பது போதரும். இங்ஙனமே நஞ்சு முதலிய சாதனங்களுக்குக் கூறிய பொருளளவை இடையாயார் தலையாயார்களுக்கு முறையே இருமடங்கு நான்குமடங்கு மிகுதியாகக் கணக்கிட்டு அறிந்துகொள்க. சிறு தொகையினிமித்தம் தலையாயோரை நெருப்பில் நடத்தல் முதலிய கடுங் குற்றவுபுரியச் செய்தல் தக்கதன்று என்பது கருதி இவ்வாறு கூறப்பட்டன.

௨௫௨. சிரோவர்த்தி என்பான், ஒருவன் தெய்விக சாதனஞ் செய்யுங் கால் அதனை ஏற்றுக்கொள்ளுதற்பொருட்டு அவன் எதிரில் இருப்பவனாவான்.

டைகளைக் கையினுள்ளூதலாகிய தெய்விகம் விதிக்கப்பட்டுள்ளது. ௨௫௭

உயிர்க்கொலை சம்பந்தமான வழக்கில் சான்று முதலிய பிற சாதனங்களிருப்பினும், பிரதிவாதி தெய்விக சாதனத்தைக் கடைப்பிடிக்க விரும்புவானாயின், அவ் வழக்கில் வேறு சாதனங்களைப் பற்றி வினவலாகாது. ௨௫அ

ஒரு வழக்கில் சான்று முதலிய மாநுட சாதனங்கள் வஞ்சமுடையன வென்று அரசனாற் கேட்கப்படுமாயின், அறவிருக்கையின் கண் வீற்றிருக்கும் அவ் வரசன் அவ் வழக்கைத் தெய்விக சாதனத்தால் ஆராய்தல் வேண்டும். ௨௫௯

ஒரு கடன்பத்திரம் நாம கோத்திரங்களால் உண்மைப் பத்திரத்தை ஒப்பக் கற்பிக்கப்பட்டிருக்குமாயின், அப் பத்திரமூலம் பொருள் பெற்றுக்கொள்ளாத பிரதிவாதியின் பக்கத்தைத் தெய்விக சாதனத்தால் ஆராய்ந்து நிருணயித்தல் வேண்டும். ௨௬0

எவ் வழக்கில் மாநுட சாதனம் இல்லையோ அதன்கட் டெய்விகசாதனத்தைக் கொடுக்கும்படி செய்தல் வேண்டும். காட்டிலும், மக்கள் வழங்கா இடத்திலும், இரவிலும், இல்லத்திலுள்ளும் நிகழ்ந்த காரியங்களையும், கொள்ளை, பெண்களின் ஒழுக்கக்கேடு, எல்லாப் பொருள்களையும் ஒருங்கு மறைத்தல் ஆகிய இவற்றைப் பற்றிய காரியங்களையும், இலௌகிக சாதனங்கள் மிகப் பிழைபட்டிருக்கும் காரியங்களையும் தெய்விக சாதனங்களால் ஆராய்தல் வேண்டும். ௨௬௧-௨௬௨

பெரும் பாதகங்களைப் பற்றிய வழக்குக்களிலும், அடைக்கலப் பொருள்களைக் கவர்ந்த வழக்குக்களிலும் சான்றுகள் உள்ளன வெனினும் அரசன் தெய்விக சாதனங்களாற் காரியங்களை ஆராய்தல் வேண்டும். ௨௬௩

எவ் வழக்கில் முதற்கட் சான்று கூறுவாரும், அவர்க்குப் பின் சான்று கூறுவாரும், அவர்க்குப் பின் சான்று கூறுவாரும் மாறுபட்டுரைக்கின்றனரோ அவ் வழக்கைச் சூளுறவுகளால் ஆராய்ந்து முடித்தல் வேண்டும். ௨௬௪

நில முதலிய நிலையியற் பொருள்களைப் பற்றிய வழக்கிலும், பூகம், சிரேணி, கணம் என்னும் இக் குழுவினர் வழக்குக்களிலும், தானஞ் செய்யப்பட்டும் பின்னர்க் கொடுக்கப்படாத பொருளைப்

பற்றிய வழக்கிலும், பணியாளர் தலைவர் ஆகிய இவர்தம்முள் நேர்ந்த வழக்கிலும், விற்றல் வாங்கல்களின் சம்பந்தமான வழக்கிலும், விலைப் பொருள் கொடுக்கப்பட்டும் அப் பண்டங் கொள்ளப்படாத வழக்கிலும் உள்ள நிகழ்ச்சிகளைச் சான்று, பத்திரம், அநுபவம் ஆகிய இம் மூன்று சாதனங்களாலும் ஆராய்ந்து முடிவு செய்தல் வேண்டும். உசுரு-உசுசு

விவாகம், திருவிழா, சூது ஆகிய இவற்றைப் பற்றிய வழக்குக்களிற் சான்றுகளே ஏற்றுக்கொள்ளத்தக்க சாதனங்களாம். தெய்விகமும் இலிகிதமும் சாதனங்களாகா. உசுஎ

வீட்டு வாயில், தெரு, நுகர் பொருள், நீர் வெளிப்படுந் தூம்பு ஆகிய இவை முதலியவற்றைப் பற்றிய வழக்குக்களில் அநுபவமே சிறந்த சாதனமாகும். தெய்விகங்களும் சான்றுகளும் அங்ஙனமாகா. உசுஅ

ஒருவன் மாநுட சாதனத்தையும் மற்றொருவன் தெய்விக சாதனத்தையுங் கூறுவாராயின், அவ்வழக்கில் அரசன் மாநுட சாதனத்தையே ஏற்றுக்கொள்ளல் வேண்டும். தெய்விக சாதனத்தை அங்ஙனம் ஏற்றுக் கொள்ளலாகாது. உசுகூ

வழக்குரைக்கும் மனிதரின் சாதனங்களுள் மாநுட சாதனம் அவ் வழக்கின் ஏகதேசத்தைப் பற்றியதாக அறியப்படினும் அதுவே கொள்ளற்பாலதாகும். தெய்விக சாதனம் முழுதும் பற்றி நிற்பினும் அங்ஙனங் கொள்ளற்பாலதன்றாம். உஎ0

## கஅ. வழக்குக்களின் தீர்ப்பு வகைகள்.

காரியங்களை முடிவுசெய்தல் சான்று முதலிய பிரமாணங்களாலும், தானம் முதலிய ஏதுக்களாலும், வழக்க ஒழுக்கங்களாலும், சூளுறவாலும், அரசன் ஆணையாலும், வாதியின் உடன்பாட்டினாலும் ஆகும். ஆதலின் இவைபற்றி அஃது அறுவகைப்படும். உஎக

---

உசுரு-உசுசு. பூகம் - ஒருவகைச் சாதிக் கூட்டம். சிரேணி, கணம் இவைகளைப் பற்றி கூ0-கூக-ஆம் சுலோகங்களிற் காண்க.

உஎக. தானமுதலிய ஏதுக்களை இப்பிரகாணத்தின் உகக-ஆம் சுலோகத்திற் காண்க. வழக்க ஒழுக்கங்கள் - தேயதருமம் சாதி தருமமுதலியன; இப்பிரகரணத்தின் சுக-ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க.

எவ் வழக்கில் இலிகிதமும், அநுபவமும், சான்றுமாகிய இலௌகிக சாதனங்களும், தெய்விக சாதனங்களும் இல்லையோ அதன்கண் அரசனது அபிப்பிராயமே பிரமாணமாகும். ௨எ௨

இலௌகிக தெய்விக சாதனங்களான்முடிவுசெய்தற்கியலாதனவும், ஐயப்படுதற்குரியனவும் ஆகிய நிலவெல்லை முதலியவற்றைப் பற்றிய வழக்குக்கள் இறுதியில் அரசன் கருத்தின்வண்ணம் முடிக்கப்படுவனவாம் ; என்னை அரசனே யாவர்க்கும் தலைவனாதலின். ௨எ௩

அரசனும், ஆராயாது தன் விருப்பின் வண்ணம் காரியங்களை முடிப்பானாயின் பாவமுடையனாவான். ஆதலின் அறநூல்களுக்கு மாறுபாடில்லாமற் பொருள்நூல்களை ஆராய்ந்து செய்தல் வேண்டும். ௨எ௪

அரசன் அமாத்தியர் முதலியோரின் உலோப குணத்தால் வழக்காராய்ச்சி பிழை யுடையதாகும் ; அதனால் உலகத்து மக்கள் அறத்தினின்றும் பிறழ்ந்துவிடுவர்; வஞ்சகச் செயலினும் ஒழுகத் தலைப்படுவர். ௨எ௫

மிக்க காமம், வெகுளி, உலோபங்களால் ஒருவழக்கு நடைபெறுமாயின் அதனாலுண்டாம் பாவம் கருத்தாக்களையும், சான்று கூறுவோரையும், நீதிமன்றத்தவரையும், அரசனையும் சாரும். ஆதலின் அப் பாவத்திற்குக் காரணமான காம முதலியவற்றையொழித்து அவ் வழக்கை நன்கு ஆராய்தல் வேண்டும். ௨எ௬

தீயவற்றை நல்லனவாக அரசற்கு எடுத்துக்காட்டும் அமைச்சர்களும் அங்ஙனம் அவர் எடுத்துக்காட்டியவற்றைப் பகுத்துணர்ந்

---

௨எ௨. இலௌகிக சாதனங்கள் இல்லாத வழக்கில் ஒருவன் தெய்விகசாதனங்களையும் உடன்படானாயின், அரசனது அபிப்பிராயத்தின்வண்ணம் அவ் வழக்கு முடிக்கப்படவேண்டு மென்பதாம்.

௨எ௪. இதன் முன்னுள்ள இரண்டு சுலோகங்களாலும் பிறவாற்றான் முடிக்கப்படாத வழக்குக்க ளெல்லாம் இறுதியில் அரசன் கருத்தின்வண்ணம் முடிக்கப்படு மென்பது கூறப்பட்டது. அங்ஙனமாயின் அரசன் நன்றையும் ஆராயாது தன் மனத்திற் றோன்றியபடி செய்வானாயின், அது தீங்காய் முடியு மென்று கருதி இச் சுலோகத்தில் அறநூல்வழிப் பொருணூலை ஆராய்ந்து செய்யவேண்டு மென்று வலியுறுத்திக் கூறப்பட்டது.

௨எ௬. கருத்தாக்கள் - அக் காம முதலிய ஏதுக்களால் வழக்குத் தொடரும் வாதியும், அவ் வேதுக்களால் உண்மைவழக்கை மறுத்துரைக்கும் பிரதிவாதியுமாவர். நீதிமன்றத்தாரும் அரசனும் அவ் வழக்கை ஏற்று நடத்துதலால் பாவப் பயனை எய்துவ ரென்பதாம்.

தாராயாமல் உண்மையாகக் கருதி அவர் கருத்தின்வழியே காரியங் களை முடிக்கும் அரசனும் அவ்வழக்கில் எட்டு மடங்கு பாவப் பயனை அநுபவிப்பர். உஎஎ

அதருமநெறியி லொழுகும் அரசனை இடித்துரைத்துத் தடை செய்யாத அமைச்சர் முதலியோர் அவ் வரசனோடு கூடக் கீழ் நோக் கிய முக முடையராய் நரகத்தையடைவர். உஎஅ

குற்றஞ் செய்தார்க்கு இடுந் திக்கார தண்டமும் சொற்றண்டமு மாகிய இவ் விரண்டனையும் விதிக்கும் அதிகாரம் நீதிமன்றத்தார்க் குரியதாம். பொருட்டண்டமுங் கொலைத்தண்டமு மாகிய இவ் விரண்டனையும் விதிக்கும் அதிகாரம் அரசற்குரியதாம். உஎகூ

ஒரு வழக்கின் தீர்ப்பையும், அதனால் அரசன் இட்ட கட்டளை யையும் எவன் அறநெறி பிறழ்ந்தன வென்றெண்ணுகின்றானோ அவன் அத் தீர்ப்பிற் கூறப்பட்ட பொருளளவின் இருமடங்கு பொ ருட்டண்டம் இறுத்து மீண்டும் அக்காரியத்தை நடத்துதல் வேண் டும். உஅ0

சான்றுகளின் துணைகொண்டு நீதிமன்றத்தாராற் செய்யப்பட்ட தீர்ப்புக்களிற் குற்றம் ஏற்படுமாயின் அவ் வழக்குக்களை மீண்டும் விசாரணைக்கு எடுத்துக்கொள்ளல் வேண்டும். அரசனால் ஆராய்ந்து தீர்க்கப்பட்ட வழக்குக்களுக்கும் மறு விசாரணை விதி உண்டு. உஅக

அமைச்சனும், நீதிபதியும், மற்றை நீதிமன்றத்தாரும் காரியங் களை மாறுபடச் செய்துவிடுவாராயின் அரசன் மாறுபட்ட அக் காரியங்க ளெல்லாவற்றையும் ஆராய்ந்து உண்மைத் தீர்ப்புச் செய் தல் வேண்டும். அங்ஙனம் மாறுபடத் தீர்த்த அமைச்சன் முதலி யோர்க்கு ஆயிரம் பணம் தண்டமும் விதித்தல் வேண்டும். உஅஉ

எந்த மனிதனுந் தண்டமின்றி ஒரு பொழுதும் நன்னெறிக்கட் செல்லமாட்டான். ஆதலின் நீதிமன்றத்தாரின் தவறுகள் வழக் குரைப்போரால் நன்கு எடுத்துக்காட்டப்படின், அரசன் அத் தவறுகளைப் போக்கி உண்மையாக நீதி செலுத்தல் வேண்டும். உஅங

---

உஎகூ. திக்காரதண்டம் - அதட்டி ஒறுத்தல். சொற்றண்டம் - கடுஞ் சொற்களால் ஒறுத்தல்.

உஅஉ. முதனூலில் "ஆயிரம்" என்று மாத்திரம் உள்ளது. தண்ட விதி யிற் பண அளவு கூறப்பட்டமையால் "ஆயிரம் பணம்" என்று இங்கு எழுதப் பட்டது. இதனை ஆயிரம் பொன் என்றுங் கொள்ளலாம்.

வாதி தான் மேற்கொண்ட பூருவபக்கத்தைச் சான்று முதலிய சாதனங்களால் மெய்ப்பித்தலாலும், நீதிபதி முதலியோரால் உண்மை பற்றிப் பாராட்டப்படுதலாலும், வெற்றித் தீர்ப்புப் பத்திரம் பெறுதலாலும் இவ்வுலகத்தில் அவன் வெற்றியாளன் என்று கூறப் படுவான். ௨அ௪

நீதிமன்றத்தார் முதலியோரால் ஆராய்ந்து தீர்க்கப் பட்டதும் பிரதிவாதியால் ஏற்றுக்கொள்ளப்பட்டது மாகிய வழக்கு நிகழ்ச் சியைக் கண்டு அரசன் அவ் வழக்கில் வெற்றி பெற்ற வாதிக்கு வெற் றிப்பத்திரம் அளித்தல் வேண்டும். ௨அ௫

ஒரு வழக்குப் பொய்ம்மையானதாக இருப்பின் அதனைக் கொணர்ந்த வாதியை அப் பொய்வழக்கின் வன்மை மென்மைக் கேற் பப் பல ஆண்டுகள்வரை சிறைப்படுத்தல் வேண்டும். அவ் வழக்கிற் குறிக்கப்பட்ட பிரதிவாதியைக் கௌரவப்படுத்தல் வேண்டும். ௨அ௬

எவ்வரசன் காம வெகுளிகளை அடக்கி அறநெறி நின்று காரி யங்களை ஆராய்கின்றானே அவனைக் குடிகள் கடலை நோக்கிச் செல் லும் ஆறுகளைப் போலப் பின்பற்றி யொழுகுவர். ௨அ௭

## ௧௧. அதிகார உரிமை ஆராய்ச்சி.

தந்தை தாயர் உயிரோடிருக்குங்கால் புதல்வன் வயோதிகனா யினும் அவன் சுதந்திரமுடையனல்லன். அத் தந்தை தாயரிருவருள் ளும் வித்துக்குச் சிறப்புண்மை காணப்படுதலால் தந்தையே சிறந்தவ னாவான். ௨அ௮

தந்தை இல்லையாயின் தாய் சிறந்தவளாவள். தாயும் இல்லையா யின் தமையன் சிறந்தவனாவன். அத் தமையனுக்கே சுதந்திரத் தன் மை யுண்டென் றெண்ணப்படும். தமையனுந்தன்மை குணத்தாலும் வயதாலுமாம். (ஒருவன் குணங்கள் வாய்க்கப்பெறாமல் வயதான் மாத்திரம் மூப்புடையனாயிருப்பின் அம் மூப்புச் சிறந்ததன்றென்ப தாம்.) ௨அ௯

ஒருவன் தன் தந்தையின் மனைவிமார் எல்லோரிடத்திலும் தன் னைப் பெற்ற தாயிடத்துப் போல மதிப்பு வைத்து நடந்துகொள்ளல் வேண்டும். தன் பொருளைக் கூறிட்டுத் தனக்கு ஒத்த அளவுள்ள ஒரு கூற்றினால் அவ்வெல்லோரையும் பாதுகாத்தல் வேண்டும். ௨௯0

குடிமக்கள் எல்லோருஞ் சுதந்திரமுடையரல்லர்; அரசனொ ருவனே சுதந்திரமுடையனாவான். மாணாக்கர் சுதந்திரமுடையரல்லர்; ஆசிரியன்பாலே சுதந்திரத்தன்மை யுள்ளதாம். ௨௯௧

மருகியை அடக்கி யாளுதற்குரிய சுதந்திரம் மகனுக்கே யுரிய தாம். புதல்வனை விற்றற்கண்ணும் தானஞ் செய்தற்கண்ணும் தந்தைக்குச் சுதந்திரம் இன்றாம். உகூஉ

பரதந்திரர்களாக இங்குக் கூறப்பட்ட எல்லோரும் தமக்குக் கீழ்ப்பட்டாரை ஏவுதற்கண்ணும், தம்பொருளை ஈதற்கண்ணும், ஈயாமைக்கண்ணும் தாமே தலைவராதலின் இச்செயல்களிற் சுதந்திர முடையராவர். உகூங

மணி, முத்து, பவழம் முதலிய மற்றை இயங்கியற்பொருள் எல்லாவற்றிற்கும் தந்தையே உரிமை யுடையனாவான். நிலையியற் பொருள் எல்லாவற்றிற்கும் தந்தையும் பிதாமகனும் உரிமை யுடைய ராகார். உகூச

மனைவியும், புதல்வனும், பணியாளனுமாகிய இவர் மூவரும் பொருட்குச் சுதந்திர முடையரல்லர். அவரால் ஈட்டப்படும் பொருண் முழுதும் அவர்தம் தலைவற் குரியனவாம். உகூரு

களவு முதலியவற்றால் ஒருவனுடைய பொருள் மற்றொருவன் கையிற் காணப்படுதலின் ஒருபொருள் ஒருவன் கையிலிருத்தல் பற்றி அவனே அப் பொருட் குரியான் என்னும் நியமமின்று. ஆதலின், பொருட்குரிய தலைமைத்தன்மை நீதிநூன்முறையான் அன்றிக் காட்சி அள்வை முதலிய அநுபவங்களாற் பொருந்துவ தன்று. இன்றேல் ஒருவன்பொருளை மற்றொருவன் கவர்ந்துகொண்டான் என்று கூறுதற்கு இயலாது. உகூசா—உகூஎ

---

உகூஉ. தந்தை உயிரோடிருக்குங்கால் புதல்வனுக்குச் சுதந்திரமில்லை யென்று உஅஅ - ஆம் சுலோகத்திற் கூறினர். அதனால் மருகியை அடக்கி யாளுஞ் சுதந்திரமும் மகனுக்கின்றி அத் தந்தைக்கே யுண்டுகொல் என்னும் ஐய முண்டாம். அவ்வையத்தை யொழித்தற்கு இச் சுலோகங் கூறப்பட்டது.

உகூச. உரிமை விரும்பியவாறு விற்றல் தானஞ்செய்தற் கண்ணதாம். நிலை யியற்பொருள் எல்லாவற்றிற்கும் என்றமையாற் சிறிதளவு தானம் முதலியன செய்தற்கண் உரிமை தந்தைக்குண்டெனபது குறிப்பிற் பெறப்படும்.

உகூரு. புதல்வனுக்குச் சுதந்திரமின்றென்றது ஈண்டுத் தந்தை உயிரோ டிருக்குங்காலெனக் கொள்க.

உகூசா-உகூஎ. இன்றேல் என்பதற்கு நீதிநூன்முறைப்படி இப் பொருட் குரியான் இவன் என்னும் நியம மில்லையாயின் என்று பொருள் கொள்ள வேண்டும். ஒருவன் கையில் ஒரு பொருள் இருக்குமானால் அங்ஙனம் இருத்தல் பற்றி அப் பொருட்குரியான் அவன் என்று கொள்ளலாகாது. அஃது அவற்கு எவ்வாறு வந்ததென்று நூன்முறையான் ஆராயவேண்டு மென்பதாம்.

பொருணூல்களில் எல்லா வருணங்களுக்கும் தக்கவாறு தனித் தனியே பொருளீட்டும் உபாயங்கள் விளக்கிக் கூறப்பட்டுள்ளன. அந் நூல்களிற் கூறப்பட்ட தருமங்கள் எப்பொழுதும் மிலேச்சரா னும் மேற்கொள்ளப்பட்டன. இப் பொருளீட்டும் உபாயங்கள் உல கத்து மக்களின் வாழ்க்கைநிலை குறித்து அறிவிற் சிறந்த பண்டை ஆசிரியராற் கூறப்பட்டன. ௨௯௮

ஒருவன் பொருளைக் கூறிட்டுக் கொள்ளுங்கால் அவன் மனைவி மாரும், புதல்வரும் ஒத்த அளவில் ஒவ்வொரு கூறும், மணஞ் செய் யப்படாத கன்னி அரைக்கூறும், தௌகித்திரன் காற்கூறும் பெறு தற்குரியராவர். ௨௯௯

தலைவன் இறந்துவிடுவானாயின் அவன் புதல்வர் முதலியோர் முற்கூறிய அளவின்படி அவன் பொருளைக் கூறிட்டுக்கொள்ளக் கடவர். ௩௦௦

புதல்வன் ஒருவனாயின் அவன் தன் பொருளின் நான்கி லொரு கூறு தாய்க்கும், எட்டி லொரு கூறு உடன்பிறந்தானுக்கும், பதி னாறி லொரு கூறு உடன்பிறந்தாள் மகனுக்கும் கொடுத்து எஞ்சிய வற்றை எல்லாம் தான் எடுத்துக்கொள்ளல் வேண்டும். ௩௦௧

ஒருவனுடைய பொருளை அவன் புதல்வன், பெயரன், மனைவி, மகள், அவள்மகன், தாய்தந்தையர், தமையன் தம்பிமார், அவர்தம் புதல்வ ராகிய இவருள் முறையே முற் கூறப்பட்டார் இல்லையாயின் பிற்கூறப்பட்டார் எய்துதற் குரியராவர். ௩௦௨

ஒரு பெண்ணுக்குக் கிடைத்த சௌதாயிகப் பொருட்கு அவ ளே சுதந்திர முடையளாவாள். அப் பொருள் நிலையியற்பொருளா யினும் அதனை விற்றற்குந் தானஞ் செய்தற்கும் அவளுக்கு உரிமை யுண்டு. ௩௦௩

மணம் புரியப்பட்ட பெண்களுக்கும், அது செய்யப்படாத சிறுமியர்க்கும் கணவன்பக்கல் நின்றும், தந்தை இல்லத்தினின்றும்

---

௩௦௦. முதலியோர் என்றதனால் முற் சுலோகத்திற் கூறப்பட்ட அவன் மனைவியரையும், கன்னியரையும், தௌகித்திரனையுங் கொள்ளல் வேண்டும். முற்கூறிய அளவு - இதன் முற் சுலோகத்திற் கூறப்பட்டது.

௩௦௨. புதல்வன் இல்லையாயின் பெயரனும், அவனும் இல்லையாயின் மனை வியும் என்றிவ்வாறு முறையே எய்துதற்குரியராவர் என்றறிதல் வேண்டும்.

௩௦௩. சௌதாயிகம் - ஸ்த்ரீ தனம். இதனைப் பின் வருஞ் சுலோகத்திற் காண்க.

தாய், தந்தை, தமையன் தம்பி முதலியோரால் கொடுக்கப்படும் பொருள் சௌதாயிகமாகும். ௩0௪

ஒருவன் தன் தந்தை முதலியோரின் பொருட்சம்பந்தமின்றித் தான் தனியே ஈட்டிய பொருண்முழுதையும் தன் விருப்பின்படியே அநுபவிக்கலாம். அப்பொருள் அவன் தமையன் தம்பி முதலியோரால் கூறிட்டுக் கொள்ளத்தக்கதன்று. ௩0௫

ஒருவன் பொருட்கு நீரினாலும், கள்வராலும், அரசனாலும், நெருப்பினாலும் கேடு நேர்ந்திருக்குங்கால், பிறனொருவன் தன் வன்மையால் அக்கேட்டை ஒழித்து அப் பொருளைக் காப்பாற்றுவானாயின், அவன் அப் பொருளிற் பத்திலொரு கூறு பெறுதற்குரியனாவான். ௩0௬

உ0. கூடி வினை செய்தல்

பொற்கொல்லன் முதலிய வினைஞர் பலர் ஒன்று கூடி அணிகலன் முதலிய சிற்பவினைகளைச் செய்வாராயின், அக் காரியங்களுக்கேற்றவாறும், அவர் தம் தகுதிக் கேற்றவாறும், வேதனம் பெறக்கடவர். ௩0௭

சிற்பவினைகளை யாராயுந் திறனும், அக் கலைகளிற் சிறந்த அறிவும் வாய்க்கப் பெற்றவனைச் சிற்பி என்று அறிவுடையோர் கூறுவர். ௩0௮

அரமியம், தேவாலயம், சிறுகுளம், மற்றை உபகரணப் பொருள்கள் ஆகிய இவற்றை ஒருங்கு சேர்ந்து செய்யுந் தொழிலாளருள் தலைவன் இருமடங்கு வேதனம் பெறுதற் குரியனாவான். ௩0௯

நாட்டியம் ஆடுவோர் வருவாயைக் கூறிட்டுக் கொள்ளு முறைமை பெரியோரால் பின்வருமாறு கூறப்பட்டுள்ளது. அந்நடருள், தாள வியல்பறிந்தோன் வருவாயிற் பாதிப்பொருளைப் பெறுதற்குரியனாவான். எஞ்சிய பாதிப் பொருளை மற்றைப் பாடகர் ஒத்த அளவாகக் கூறிட்டுக் கொள்ளல் வேண்டும். ௩௧0

கள்வர் அரசன் ஆணையை மேற்கொண்டு பிற நாட்டினின்றுங் கவர்ந்த பொருளில் ஆறிலொரு கூறு அவ்வரசற்குக் கொடுத்து

---

௩0௪. கணவன்பக்கல் நின்றும் இடைக்கும் பொருள் மணஞ் செய்யப்பட்ட பெண்ணுக்காம். அப் பொருள் மணம் புரிதற்கு முன்னரே பெண்ணின் தந்தைதாயரால் வேண்டப்பட்டு அப் பெண் கோடற்குரியவனால் கொடுக்கப்பட்டதாகும்.

விட்டு எஞ்சிய பொருளை ஒத்த அளவாகக் கூறிட்டுக்கொள்ளல் வேண்டும். ருகக

மேற் கூறிய களவுத் தொழிலில் தலைப்பட்டாருள் ஒருவன் பிற ராற் பிடிக்கப்படுவானாயின், அவனை விடுவித்தற்பொருட்டுக் கொடுக் கப்படும் பொருளை அக் கள்வர் எல்லாரும் ஒத்த அளவாகக் கூறிட் டுக் கொடுத்தல் வேண்டும். ருகஉ

பொன், தானியம், சுவைப்பொருண் முதலியவற்றால் வாணிகம் புரிவோர் குறைவு, சமம், மிகுதி யாகிய தம் மூலப் பொருள்களின் கூறுகட் கேற்றவாறு ஊதியம் பெறக்கடவர். ருகரு

வாணிகம் புரியுங்கால் முன்னரே துணியப்பட்டபடி சமமாக வும், குறைவாகவும், மிகுதியாகவும், மூலப் பொருளைக் கூறிட்டுத் தொகுத்தல் வேண்டும். அக்கூறுகட் கேற்பவாறு செலவையுந் தொழி லையுஞ் செய்தல் வேண்டும். அதனால் வரும் ஊதியத்தையும் அங்ங னமே கூறிட்டுக்கொள்ளல் வேண்டும். ருகச

வாணிகம் புரிவார்க்கும் உழவுத்தொழில் செய்வார்க்கும் இவ் விதியே பொருந்துவதாகும். ருகரு

பலர்க்கும் பொதுவான பொருளும், ஒருவனிடத்தினின்றும் திருப்பிக் கொடுப்பதாகக் கூறி வாங்கிய யாசிதப் பொருளும், அடைக் கலப்பொருளும், பந்தகப்பொருளும், அடிமையும், அவ் வடிமையின் பொருளும், பிறனொருவனுக்குச் சேரவேண்டி ஒருவன் தன்பால் வைத்த பொருளும், சிற்பவினை செய்தற்பொருட்டுத் தன்பாற் பிறர் தந்த பொருளும், சந்ததி இருக்குங்கால் அக் குடும்பத்துப் பொரு ளும் ஆகிய இவ் வொன்பது வகைப்பட்ட பொருள்களையும் அறிவு டையார் தமக்குக் கேடு வந்தகாலத்தும் தானஞ்செய்தல், விற்றன் முதலியவற்றால் பிறர்க்குக் கொடுத்தலாகாது. ருகசு

பெறத்தகாத பொருளைப் பெறுபவனும், கொடுக்கத் தகாத பொருளைக் கொடுப்பவனும் ஆகிய இருவரும் கள்வனை யொப்பத் தண்டிக்கப்படுதலோடு உத்தம சாகச தண்டத்திற்கும் உரியரா வர். ருகஎ

---

ருகக. பிறராடு - பகைவர்களாடு.

ருகச. மூலப்பொருள் எவ்வாறு கூறிடப்பட்டதோ அவ்வாறே தொழி லுஞ் செலவும் ஊதியமும் கூறிடப்படவேண்டு மென்பது கருத்து.

ருகஎ. உத்தமசாகசம் - ஆயிரம் பணம் இறுக்கும்படி செய்யும் தண்டம். இதனை இவ் வத்தியாயத்தின் முதற் பிரகரணத்து ககக-ஆம் சுலோகத்திற் காண்க.

உரியரல்லாதாரிடத்தினின்றும் கள்வரிடத்தினின்றும் பொருள் கொள்ளுவோனும், பிறர் பொருளை மறைவில் விற்போனும் ஆகிய இருவரும் கள்வனை யொப்ப அரசனாற் றண்டிக்கப்படுவர். ௩௧௮

குற்றமில்லாதவனும், தனக்கு ஒரு கேடுஞ் செய்யாதவனுமாகிய இயமானனைக் காரணமின்றி விலக்கிய புரோகிதனும், அங்ஙனமே குற்றமில்லாத புரோகிதனைக் காரணமின்றி விலக்கிய இயமானனுட் ஆகிய இருவரும் தண்டிக்கப்படுவார். ௩௧௯

வாணிகம் புரிவோன் தான் விற்பதற்காகக் கொண்ட பண்டத்தில் காலம், இடம் முதலியவற்றை நோக்கி, அப் பண்டங் கொள்ளுதற்பொருட்டுச் செலவாகிய பொருளையும் அறிந்து, கொண்முதற்றொகையில் முப்பத்திரண்டிலொருகூறுதல், பதினறிலொரு கூறுதல், ஊதியம் ஏற்படுத்தலாம். இவ் வளவினும் மிகுதியாக ஊதியங் கொள்ளலாகாது. ௩௨௦

ஒருவன், ஊதியப் பொருளிற் பாதி தருவதாக உடன்படுவனயின் அவற்கு மற்றொருவன் வாணிகம் புரிதற்பொருட்டு எப்பொழுதும் வட்டியின்றி முதற்பொருள் கொடுத்துதவலாம். ௩௨௧

ஒருவன், தன்பாற் கடன்கொண்டவனிடத்தினின்றும் முதற்பொருளுக்கு இருமடங்கு மிகுதியாக வட்டி பெற்றிருப்பானயின், பின்னர் அக் கடன் கொடுத்தவற்கு முதற்பொருளை மாத்திரம் கொடுக்கும்படி அரசன் தீர்ப்புச் செய்தல் வேண்டும். அதனின் மிகுதியாகக் கொடுப்பித்தலாகாது. ௩௨௨

பொருளுடையார் வட்டிக்கு வட்டி சேர்த்தல் என்னும் வஞ்சத்தாற் குடிகளின் பொருளைக் கவர்ந்துவிடுவர். ஆதலின் அரசன் அப்பொருளுடையாரால் கேடெய்தாவண்ணம் குடிகளை ப்பாதுகாத்தல் வேண்டும். ௩௨௩

௩௧௯. இயமானன் - வேள்வித் தலைவன், புரோகிதன் - வேள்வி வினை செய்வோன்; இருத்துவிக்கு என்றுங் கூறப்படுவான்.

௩௨0. கொண்முதற்றொகையாவது - விற்றற் பொருட்டு வாங்கிய பண்டத்திற்குக் கொடுத்த விலைப்பொருளும், அப்பண்டத்தை வாணிகத்தலத்திற் கொணர்தற்கு ஏற்பட்ட செலவுப் பொருளுங் கூடிய தொகையாம்.

௩௨௧. வாணிகத் தொழிலிற் கிடைக்கும் ஊதியத்திற் பாதி பொருள் கொடுத்தவற்கும், பாதி தொழில் செய்தவற்கு மாம் என்பது கருத்து.

௩௨௩. வட்டிக்கு வட்டி சேர்த்தலைச் சக்கரவிருத்தி என்று முதனூல் கூறும்.

எவன் ஆற்றலுடையனுயிருந்தும், பொருளுடையானிடத்தினின்றுங் கடனாகக் கொண்ட பொருளை மீண்டும் அவற்குக் கொடுக்கவில்லையோ அவனை அரசன் சாமோபாயத்தாலும் தண்டோபாயத்தாலும் முறையே இணக்கியும் ஒறுத்தும் கொடுக்கும்படி செய்தல் வேண்டும். நஉச

கடன் கொடுத்தா னொருவன் கடன் கொண்டவனிடத்தினின்றும் எழுதிவாங்கிய கடன்பத்திரம் தவறிவிடுமாயின் அதனை அவன் அரசன்பால் தெரிவித்துக்கொள்ளல் வேண்டும். அங்ஙனந் தெரிவிக்கப்பட்ட அதனை அரசன் சான்றுகளால் நன்கு ஆராய்ந்தறிந்து முன்போலக் கடன்கொண்டவனைப் பத்திரம் எழுதிக்கொடுக்கச் செய்தல் வேண்டும். நஉரு

ஒருவனாற் கொடுக்கப்படாத பொருளை வலிந்து கவர்ந்து கொண்டவனும், மனமொப்பிக் கொடுத்த பொருளை மீண்டும் பெற விரும்புவோனும் ஆகிய இவ்விருவரும் அறநூலுணர்ந்த அரசனால் தண்டிக்கப்படுபவராவர். நஉசா

எவன் விலைப்பண்டங்களை வஞ்சித்து விற்கின்றானோ அவன் எப்பொழுதுங் கள்வனை யொப்பத் தண்டிக்கப்படுவான். நஉஎ

சிற்பிகளின் குணஞ் செயல்களை யறிந்து தக்கவாறு வேதனங் கொடுத்தல் வேண்டும். நஉஅ

அரசன் தன் நிலத்தில் வெள்ளி யெடுத்து விற்போனிடத்தினின்றும் நாடோறும் அவ் வெள்ளி விலையில் ஐந்தி லொருகூறுதல், நான்கி லொரு கூறுதல் மூன்றிலொரு கூறுதல், பாதியாதல் இறையாகப் பெற்றுக்கொள்ளல் வேண்டும். இவ்வளவின் மிகுதியாகப் பெறலாகாது. நஉசு

## உக. உலோகங்களை வஞ்சிப்போர்க்கு இடுந் தண்ட முறை.

கலப்பில்லாத தூய்மை மிக்க பொன் நூறு பலமாயினும் உருக்கப்படுமாயின் பின்னர் எடையில் ஒரு சிறிதுங் குறைவுறாது. கலப்பில்லாத தூய வெள்ளி உருக்கப்படுமாயின் நானூற்றி லொரு கூறும், அத்தகைய செம்பு உருக்கப்படுமாயின் நூற்றிலொரு கூறும், வங்கமும், ஈயமும், சசதமும் ஆகிய இவை உருக்கப்படுமாயின் பதினாறி லொரு கூறும், இரும்பு உருக்கப்படுமாயின் எட்டி லொரு கூறும்

நஉசு. இது சரக்கப் பொருளினின்றும் அரசற்குக் கிடைக்கவேண்டிய கூறும்.

எடையிற் குறைவனவாம். இங்குக் கூறிய அளவின் மிகுதியாகக் குறையுமாயின் அவ் வுலோகங்களால் வினைசெய்யுஞ் சிற்பிகள் அரசனாற் றண்டிக்கப்படுவர். ௩௩0-௩௩௧

நன்றாக இயைத்துச் செய்யும் பணிச்செயன் முதலியவற்றில் பொன் இருநூற்றி லொரு கூறும், வெள்ளி நூற்றி லொரு கூறும் எடை குறையும். அப் பொன் வெள்ளிகளாற் செய்யப்படும் பணி முதலியவற்றில் உறுப்புக்கள் ஒன்றோ டொன்று அழகுறச் சேர்க்கப் படுங்கால் அவ்வெடை அதிகமாகும். ௩௩உ

இங்குக் கூறிய அளவின் மிகுதியாகக் குறையுமாயின் அப் பொற்கொல்லன் பணி செய்வதாகப் பெற்ற பொன்னளவிற் பதினாறி லொரு கூறு பொன் தண்டம் இறுக்கக்கடவன். அப் பணியில் உறுப்புக்கள் ஒன்றோ டொன்று சேர்க்கப்படுதலால் மிக்க அளவையும், நன்றாக இயைத்துச் செய்தலாற் குறைந்த அளவையும் ஆராய்ந்தறிந்து கணக்கிடல் வேண்டும். ௩௩௩

பொன்னாற் செய்யப்படும் பணிகளுள் தலையாய பணிக்கு அதன் எடையில் முப்பதிலொரு கூறும், இடையாய பணிக்கு அதன் எடையில் அறுபதி லொருகூறும், கடையாய பணிக்கு அதன் எடையில் நூற்றிருபதி லொரு கூறுமாக அவற்றை இயற்றிய பொற்கொல்லன் கூலி பெறக்கடவன். கைவினைப் பணிக்கு அதன் எடையில் இருநூற்றுநாற்பதி லொருகூறும், உருக்கி வார்த்தன்மாத்திரஞ் செய்யின் அதன் எடையில் நானூற்றெண்பதி லொருகூறும் கூலியாகும். ௩௩௪

வெள்ளியாற் செய்யப்படும் பணிகளுள் தலையாய பணிக்கு அதன் எடையிற் பாதியும், இடையாய பணிக்கு அதன் எடையிற் காற்கூறும், கடையாய பணிக்கு அதன் எடையில் எட்டி லொரு கூறும், கைவினைக்கு அதன் எடையிற் பதினாறி லொரு கூறும் கூலியாகும். ௩௩௫

செம்பு, வங்கம், சசதம் ஆகிய இவ் வுலோகங்களாற் செய்யப்படும் பாண்டம் முதலியவற்றிற்கு அவ்வவற்றின் எடையிற் காற்கூறு கூலியாகும். இரும்பினாற் செய்யப்படுவனவற்றிற்கு அவற்றின் சிறுமை பெருமை நோக்கி அவ்வெடைகளிற் பாதியாதல், ஒத்த அள

௩௩உ. இயைத்துச் செய்தல் - பணி முதலியவற்றை அராவி மெருகிடல். உறுப்புக்கள் சேர்க்கப் படுங்கால் எடை அதிகமாதல் பொடிவைத்து ஊதுதலாலும்.

வாதல், இருமடங்கு முதல் எட்டுமடங்குவரை மிகுதியாதல் கூலி கொடுத்தல் வேண்டும். ௩௩௬

பொன் முதலிய உலோகங்களை வஞ்சிக்கும் வினைஞர் வஞ்சிக்கப்பட்ட அளவின் இருமடங்கு தண்டம் இறுக்கக் கடவர். ௩௩௭

உலகநடைகளால் தோன்றினவும், பண்டைக்காலத்து முனிவரால் அறநூல்களில் விதிக்கப்பட்டனவு மாகிய வழக்க ஒழுக்கங்கள் பல்வேறு வகைப்படுவன. அவை முழுதுங் கூறுதற்கியலாதனவாம். ௩௩௮

நாட்டைப் பற்றிய இவ்வைந்தாம் பிரகரணம் சுருக்கமாகக் கூறப்பட்டது. இதன்கட் கூறப்படாத நல்லனவும், தீயனவுமாகிய விடயங்கள் உலகியலானும், மற்றை நீதிநூல்களானும் அறிதற்பாலனவாம். ௩௩௯

சுக்கிர நீதி நான்காம் அத்தியாயத்தில்,
நாட்டைப் பற்றிய இறுதியதாகிய
"இராச தருமம்" என்னும்
ஐந்தாம் பிரகரணம் முற்றிற்று.



ஆறும் பிரகரணம்.

அரணியல்.

இனி அரண்களைப் பற்றிய ஆறும் பிரகரணம் சுருக்கிக் கூறப்படும். பிறர் உட்புக இயலாதவாறு பள்ளம், முள், கல் ஆகிய இவைகளால் அமைக்கப்படுவது களர்நிலவரண் என்று கூறப்படும். ௧

நாற்புறமும் மிக அழகாகத் தோண்டி யமைக்கப்படுவது அகழியரணாகும். இட்டிகைகளானும், கற்களானும், மண்ணாலும் எடுக்கப்பட்ட சுவர்களாலாகிய கோட்டை மதிலரணாகும். ௨

---

௩௩௬. இரும்பினாற் செய்யப்படுவனவற்றிற்கு எட்டுமடங்குவரை கூலி நியமனம் ஏற்படுத்தியது அதனாற் செய்யப்படும் எந்திரம் முதலிய உயர்விலைக் கருவிகளை நோக்கி யென்க.

௧. களர்நிலவரண் - நிலவரண் வகைகளுள் ஒன்று. இதனை ஐரிணம் என்று முதனூல் கூறும்.

௨. அகழியரண் - நீர்அரண் வகைகளுள் ஒன்று. இட்டிகை - செங்கல்.

பெரிய முண்மரக்கூட்டங்கள் சூழ அமைக்கப்படுவது காட்டரணாகும். நீரும் நிழலுமின்றி நாற்புறத்து முள்ள மருநிலம் நிலவரண் என்று கூறப்படும். ௩

நாற்புறத்தும் மிக்க நீர்ப்பரப்பினை யுடையது நீரரணாகும். மக்கள் வழக்கமில்லாத இடத்தில் நல்ல நீரைப் பிற்புறத்தே கொண்டு மிக வுயர்ந்திருப்பது மலையரணாகும். ௪

படைவகுப்பில் தேர்ந்த அறிவுடையோராலும் போர்வீரராலுஞ் சூழப்பட்டுப் பகைவரால் வேறுபடுக்கப்படாதது படையரணாகும். துணையாக நின்றுதவும் வன்மைமிக்க சுற்றத்தாராலுயது துணையரண் என்று கூறப்படும். ௫

அகழரணும், களர்நிலவரணும், மதிலரணும், காட்டரணும், மருநிலவரணும், நீரரணும், மலையரணு மாகிய இவ் வெழுவகை யரண்களும் ஒன்றற்கொன்று முன்னதனை நோக்கப் பின்னது முறையே சிறந்ததாக வைத் தெண்ணப்படும். ௬

துணையரணும் படையரணுமாகிய இவ்விரண்டும் மற்றை யரண்களெல்லாவற்றையும் அலங்கரிப்பனவாம். என்னை? அவ்விரண்டரண்களுமின்றி மற்றை யரண்கள் அரசர்க்குப் பயன்படாவாகலின். ௭

---

௩. மருநிலம் - பாலை நிலம்.

௪. இதன்கட் கூறிய நீரரணும் மலையரணும் கடலாலும் மலையாலும் இயற்கையாக அமைவனவாதலின் அவை இயற்கை யரண்களாம். முதனூலில் "உதூபுரம்" என்பதனை, "உதூவபுரம்" எனப் பாடங்கொண்டு உயர்ந்த இல்லங்க ளமையப் பெற்றிருப்பது என்று பொருள்கோடலும் ஒன்று.

௫. இதன்கட் கூறிய இரண்டரணும் சரப்பொருள்களாலும் முற்கூறிய ஏழரணும் அசரப்பொருள்களாலும் அமைந்தனவாம்.

௬. இயற்கையுஞ் செயற்கையுமாகிய இவ்வெழுவகை யரண்களுள், மதிலையே சிறந்த அரணெனவும், அகழியையும் கடலையும் நீரரணெனவும், களர் நிலத்தையும் மருநிலத்தையும் நிலவரணெனவும் கொண்டு, மலையரண் காட்டரண்களோடு ஐந்தாக்கிப் பின்னுள்ள நீரரண் நிலவரண் மலையரண் காட்டரண் என இயற்கையுஞ் செயற்கையுமாய இந் நான்கரணுஞ் சூழப்படுவது சிறந்த மதிலரணாகும் என்று கூறுவர் திருக்குறளாசிரியர். அவர் கருத்துப்படி அரண் என்னுஞ் சொல் மதிலையே யுணர்த்துவதாகும். ஏனைய அதனைச் சூழ்ந்திருத்தல் பற்றி அரணென உபசரித்துக் கூறப்படும். பிறவற்றுட் சில இல்லாமலிருப்பினும் மதில் இன்றியமையாததாகலான் அதனையே அரணெனக் கொண்டனர். இவ்வுண்மையை "மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" "உயர்வகலந் திண்மை யருமையிந் நான்கி, னமைவ ரணென்றுரைக்கு நூல்" என்னுந் திருக்குறள்களா னறிக.

மற்றை யரண்களெல்லாம் படையரணைத் துணையாக வுடைமையின் அவ் வெல்லா வரண்களினும் படையரணே தலைசிறந்ததென்று அறிவுடையார் கூறுவர். ஆதலின் அப் படையரணை எப்பொழுதும் அரசன் காப்பாற்றுதல் வேண்டும். அ

எவற்குப் படையரணுள்ளதோ அவன் வயத்ததாகும் இந் நிலவுலகம் படையரணில்லாத மற்றை யரண்கள் சிறைச்சாலையை யொப்பனவாம். கூ

அரசனுக்குக் கேடு வந்துழி மற்றை யரண்களும் அவனைப் பாதுகாத்தற்குரிய சிறந்த இருப்பிடங்களாகும். ௧௦

அரணுள் இருக்கும் போர்வீரன் ஆயுதமுடையவனாக விருப்பின், அவன் ஒருவனே பகைவர் நூற்றுவரோடு போர்செய்தற்கு வலியுடையனாவன். அங்ஙனமிருக்கும் போர்வீரர் நூற்றுவராயின் பகைவர் பதினாயிரவரோடு போர்செய்தற்கு வலியுடையராவர். ஆதலின் அரசன் அரண்களைப் பற்றுக்கோடாகக் கொள்ளல் வேண்டும். ௧௧

மிக்க வலி படைத்த படையரணுக்கு மற்றை யரண்களில்லாத எல்லாவிடங்களும் அரணுடையனபோலவாம். அரசன் போர்க்குரிய உபகரணப்பொருள்களாலும், தானியங்களாலும், வீரராலும், அம்பு முதலிய ஆயுதங்களாலும், பொருளாலும் நிறையப்பெற்ற அரண்களை யுடையனா யிருத்தல் வேண்டும். ௧௨

அரசர்க்கு வன்மை மிக்க சுற்றத்தாராகிய துணைவலி நிறைந்த அரண் மிகச் சிறந்ததாக எண்ணப்படும். அத் துணைவலி நிறைந்த அரணால் அரசன் வெற்றியடைதல் ஒருதலையாம். ௧௩

எவ் வரண்கள் துணைவலி நிறையப் பெற்றுள்ளனவோ அவையெல்லாம் மிக்க பயனுடையனவாம். அரண்கள் ஒன்றுக்கொன்று துணையாக வமைந்திருத்தல் அரசனுக்கு வெற்றி தருவதாகும். ௧௪

சுக்கிர நீதி நான்காம் அத்தியாயத்தில்,

"அரணியல்" என்னும்

**ஆறும் பிரகரணம் முற்றிற்று.**



---

கூ. போர்வீரரை யில்லாத மதில் மூதலிய மற்றை யரண்கள் பகைவர் பொருதற்கு எளியனவாதலின், அவ்வரண்களுள் இருக்கும் அரசன் தற்காப்பின்றிச் சிறைக்கோட்டத்திருப்பவனை யொப்பானென்பது கருத்து.

## ஏழாம் பிரகரணம்.

### க. படையியல்.

இதுகாறும் அரண்களைப் பற்றிய பிரகரணம் சுருக்கிக் கூறப்பட்டது. இனிப் படைகளைப் பற்றிய ஏழாம் பிரகரணம் கூறப்படும். அம்பு வாள் முதலிய ஆயுதங்களையுடைய காலாள் முதலிய கூட்டம் படை யென்று கூறப்படுவதாம். க

அப் படை தானே செல்வது பிறவற்றாற் செல்வது என இரண்டு வகைப்படும். அது பின்னரும் தெய்விகம், ஆசுரம், மானவம் என மூன்று வகைப்படுவதாம். இவற்றுட் பின்னதனை நோக்க முன்னது வன்மையிற் சிறந்ததாகும். உ

தானே செல்வது பிறிதோர் ஊர்தி வேண்டாது நடப்பதாம். பிறவற்றாற் செல்வது ஊர்திகளிலேறிச் செல்வதாம். தானேசெல்வது காலாட்படையொன்றே. பிறவற்றாற்செல்வது தேர்ப்படையும், குதிரைப்படையும், யானைப்படையும் என மூன்றுவகைப்படும். ங

படைப்பல மின்றேல் அரசியலும் பொருளும் பராக்கிரமமும் நிலைபெறாமல் ஒழிந்துபோம். இழிந்த மனிதனொருவன் பலமுடையனாக விருப்பின் எல்லோரும் அவன் வயப்பட்டொழுகுவர். அவன் பலமில்லாதவனாக விருப்பின் எல்லோரும் பகைவராவர். அங்ஙனமாயின் பலமுடைய அரசனுக்கும் பலமில்லாத அரசனுக்கும் உலகத்து மக்கள் எல்லோரும் முறையே வயப்பட்டொழுகுபவராகவும் பகைவராகவும் எங்ஙன மாகாம லிருப்பர்? ச

உடல்வன்மையும், மிக்க வீரமும், படை வன்மையும், படைக்கலப்பயிற்சிவன்மையும், அறிவுவன்மையும், ஆயுள்வன்மையு மாகிய இவ் வாறும் எவன்பால் அமைந்துள்ளனவோ அவனே திருமால் என்றெண்ணப்படுவான். ரு

பகைவர் சிறியராயினும் அவரைப் படைப்பலமின்றி யாரும் வெல்லமுடியாது. தேவரும் அசுரரும் மனிதரும் படைக்கலங்களாலேயே எப்பொழுதும் தத்தம் வாழ்க்கையை நடத்துபவராவர். சு

ஒருவனுக்குத் தன் படைப்பலமே எப்பொழுதும் பகைவரை மிகவும் தோல்வியுறச் செய்வதாகும். ஆதலால் அரசன் பகைவராற்

---

உ. தானே செல்வது - சுவகமம். பிறவற்றாற் செல்வது - அந்நியகமம்.

ச. உலகத்துள்ளா ரெல்லோரும் வலிமிக்க அரசனுக்கு வயப்பட்டும், வலி குறைந்த அரசனுக்குப் பகைமை மேற்கொண்டும் ஒழுகுவரென்பது கருத்து.

கெடுக்கப்படாத படைகளை முற்சிமேற்கொண்டு போற்றல் வேண்டும். எ

படை, உரிமைப்படை துணைப்படை யெனவும், மூலப்படை அமயப்படையெனவும், வன்படை மென்படை யெனவும், பயிற்சிப் படை பயிற்சியில்படை யெனவும், குழுப்படை தனிப்படை யெனவும், கருவிபெறுபடை தன்கருவிப்படை யெனவும், ஊர்திபெறு படை தன்னூர்திப்படை யெனவும் பலதிறப்படும். அ-௯

வேதன முதலிக் காக்கப்படுவது உரிமைப்படையாகும். (இது கூலிப்படை யெனவுங்கூறப்படும்.) நட்புரிமை பற்றிக் காரியத்திற்குத் துணை செய்வது துணைப்படையாகும்.பல் யாண்டுகளாகத் தொடர்ந்து நிற்பது மூலப்படையாகும். (இதனைத் தொல்படை யென்ப.) அங்ஙனமன்றிச் சின்னாட்களிற் சேர்க்கப்படுவது அமயப்படை யாகும். (இது புதுப்படையாகும்.) ௧௦

போர் செய்தற்கட் சிறந்த மனவெழுச்சி யுடையது வன்படை யாகும். அங்ஙனமல்லாதது மென்படையாகும். படை வகுத்துப் போர்செய்வதில் திறமை வாய்ந்தது பயிற்சிப்படையாகும். அத் திறமை யில்லாதது பயிற்சியில்படை யாகும். ௧௧

அரசனால் நியமிக்கப்படும் படைத்தலைவனை யுடையது குழுப்படை யாகும். அப் படைத்தலைவனை யின்றித் தனியே தலைமைகொண்டு காரியம் புரிவது தனிப்படையாகும். தலைவனால் தரப்பட்ட அம்பு வாள் முதலியவற்றை யுடையது கருவிபெறுபடை யாகும். அங்ஙனந் தரப்படாமல் அவற்றைத் தானே கொண்டு செல்வது தன் கருவிப் படையாகும். ௧௨

தலைவனால் தரப்பட்ட ஊர்தியை யுடையது ஊர்திபெறு படை யாகும். அங்ஙனம் தரப்படாமல் தானே ஊர்ந்துசெல்வது தன்னூர்திப் படையாகும். படைத்தலைவனால் திரட்டப்பட்டு அவன் ஆட்சியுட் பட்டதும், அங்ஙனம் திரட்டப்படாமல் தானே திரண்டு அவன் ஆட்சியுட்படாததுமென அது பின்னரும் இருவகைத்தாம். வன்மைமிகுதியால் தம் விருப்பின்படி யொழுகும் வேடர் முதலி யோரின் குழு காட்டுப்படையாகும். ௧௩

பகைவனால் விலக்கப்பட்டுத் தன்*படையுட் புகுந்ததும், பகைவனை வேறுபடுத்து அவனிடத்தினின்றும் தன் வயமாகச் செய்யப் பட்டது மாகிய படை பகைப்படை யாகும். இவ்விருதிறத்துப்

பகைப்படையும் வலி குறைந்த படை யென்று கூறப்படும். ஆதலின் அவை துணையாவனவல்லவாம். ௧௪

அரசன் தன்னோடொத்த மற்போர்த் திறன் மிக்க வீரர்களோடு கூடிச் செய்யும் உறுப்பியக்கங்களாலும், பெரியோர் வணக்கங்களாலும், நல்லுணவுகளாலும், மற்போர் செய்தற்பொருட்டு உடல் வன்மையைப் பெருக்கல் வேண்டும். (பெரியோரை வணங்குதலால் அவர்தம் வாழ்த்துரைகளாலும் உறுப்பியக்கங்களாலும் வன்மை மிகு மென்பது கருத்து.) ௧௫

அரசன் புலி முதலிய கொடிய விலங்கினங்களை வேட்டையாடுதலாலும், இடைவிடாது செய்யும் அம்பு வாள் முதலிய படைக்கலப் பயிற்சியாலும், வீரர்களின் கூட்டுறவாலும் தன் வீரத்தன்மையை நன்கு வளர்த்தல் வேண்டும். ௧௬

நல்ல வேதனங் கொடுத்தலாற் படைப்பலத்தையும், தவத்தாலும் பயிற்சியாலும் படைக்கலவன்மையையும், நூற்பயிற்சித் திறமை வாய்ந்தவர்களின் கூட்டுறவால் அறிவுவன்மையையும் எப்பொழுதும் மிகுவித்தல் வேண்டும். ௧௭

அரசன் இடைவிடாது செய்யும் நற்செயல்களால் தன் இராச்சியத்தைத் தன் குலபரம்பரையில் நீண்டகாலம் நிலைத்திருக்கச் செய்தலே ஆயுள்வன்மையாகும். எத்துணைக் காலம் தன் குல வழியில் இராச்சியம் நிலைத்திருக்கின்றதோ அத்துணைக் காலமே அவ்வரசனுக்கு வாணாளாகும். ௧௮

## ௨. நால்வகைப் படைகளின் அளவு வகைகள்.

அரசன் குதிரைப்படையளவின் நான்கு மடங்கு மிகுதியாகக் காலாட்படையையும், குதிரைப்படை யளவின் ஐந்திலொரு கூறு எருதுகளையும், எட்டிலொரு கூறு ஒட்டகங்களையும், அவ்வொட்டகங்களின் நான்கிலொரு கூறு யானைகளையும், அவ் யானைகளின் அளவிற் பாதி தேர்களையும், அத் தேரளவின் இருமடங்கு மிகுதியான பெரிய நாளிகங்களையும் எப்பொழுதும் வைத்துப் பாதுகாத்தல் வேண்டும். ௧௯-௨௦

௧௪. பகைப்படைகள் வலியுடையனவாயினும் ஒரோவமயம் நீங்கு விளைக்கவுங் கூடு மென்னும் ஐயத்திற்கிடனாக விருத்தலின், அவை ஓரரசனுக்கு வலி குறைந்த படைகளா மென்பது கருத்து.

௧௭. தவத்தால் படைக்கலவன்மையை மிகுவித்தல் மந்திரசாதனத்தாலாம்.

௧௯-௨௦. நாளிகம் - பீரங்கி.

அரசன் காலாட்படைகளை மிக்க அளவினவாகவும், குதிரைப் படைகளை இடைநிகராய அளவினவாகவும், யானைப்படைகளைச் சிற்றளவினவாகவும், எருது ஒட்டகங்களை வேண்டுமளவினவாகவும் வைத்துக் காத்தல்வேண்டும். யானைகளை மிகுதியாக வைத்துக்கொள்ளலாகாது. ௨௧

ஓராண்டிற்கு ஓரிலக்கங் கருட அளவுள்ள பொருள்வருவாயுடைய அரசன் ஒத்தவயதையும், உறுதியான கவசத்தையும், சிறந்த அம்பு வாள் முதலியவற்றையு முடைய நூறுதனிக் காலாட்படைகளையும், சிறிய நாளிகங்களை யுடைய முந்நூறு காலாட்படைகளையும், எண்பது குதிரைகளையும், ஒரு தேரையும், இரண்டு பெரிய நாளிகப் பொறிகளையும், பத்து ஒட்டகங்களையும், இரண்டு யானைகளையும், இரண்டு வண்டிகளையும், பதினாறு எருதுகளையும், ஆறு எழுத்தாளர்களையும், மூன்று மந்திரிகளையும் நன்றாக வைத்துப் போற்றல் வேண்டும். ௨௨-௨௪

## ௩. அரசர்க் குரிய செலவுவகைகள்.

ஓராண்டிற்கு ஓரிலக்கங் கருட அளவு பொருள்வருவாயுள்ள அரசன் திங்களொன்றிற்குச் செலவிடும் வகையும் அளவும் வருமாறு:—

தன் குடும்பத்திற்கு வேண்டிய பண்டங்களைத் தொகுத்து வைத்தற் பொருட்டும், ஈதற்பொருட்டும், தான் இன்பம் நுகர்தற் பொருட்டும் ஆயிரத்தைந்நூறு (௧௫00) கருடங்களும், எழுத்தாளர்க்கு நூறு (௧00) கருடங்களும், மந்திரிகளுக்கு முந்நூறு (௩00) கருடங்களும், மனைவி மக்கள்பொருட்டு முந்நூறு (௩00) கருடங்களும், புலவர்பொருட்டு இருநூறு (௨00) கருடங்களும், குதிரை வீரர் குதிரை காலாட்படைகளின்பொருட்டு நாலாயிரம் (௪000) கருடங்களும், யானைகளும் ஒட்டகங்களும் எருதுகளும் நாளிகங்களுமாகிய இவற்றின்பொருட்டு நானூறு (௪00) கருடங்களும் செலவிடல் வேண்டும். செலவழித் தெஞ்சிய ஆயிரத்தைந்நூறு (௧௫00) கருடங்களை அரசன் கருவூலத்திற் சேமித்துவைத்தல் வேண்டும். ௨௫-௨௭

௨௫-௨௭. இச் சுலோகங்களிற் கூறியபடி திங்களொன்றிற்குக் கூடிய செலவுகளும் கருவூலத்தில் தொகுத்துவைப்பதுமாக ௮௩௦௦ - கருடங்களாகும். ஆகவே ஆண்டொன்றிற்கு ௯௯௬௦௦ - கருடங்களாதல் காண்க. முதல் அத்தியாயம் ௩௧௫-ஆம் சுலோகத்தில் அரசனுக்குரிய வருவாயிற் பாதி நால்வகைப் போர்ப் படைகளின்பொருட்டுச் செலவிடல் வேண்டுமென்று கூறப்பட்டுள்ளது. இங்குத் திங்களொன்றிற்கு ௪௪௦௦ படைச் செலவாகுமென்று கூறப்பட்டுள்ளது. இவ் விரண்டளவும் சிறி தேறக் குறையச் சமமாதல் காண்க.

படைகள் அணிந்துகொள்ளும் ஆடைகளின்பொருட்டு ஆண்டு தோறும் பொருள் கொடுத்தல் வேண்டும். உஅ

## ச. தேர் யானைகளின் வகைகள்.

வன்மைமிக்க இரும்பினு லாக்கப்பட்டதும், எளிதிற் செல்லுதற் குரிய உருள்களையுடையதும், பரியங்க இருக்கையை யுடையதும், தாமே தூங்கி யசைகின்ற படிக்கட்டுக்களையுடையதும், நடுவணுள்ள இருக்கையிலிருந்து நடாத்தும் தேர்ப்பாகனையுடையதும், அம்பு வாள் முதலிய போர்க்கருவிகள் பொதிந்த நடுவிடத்தையுடையதும், விரும்பியவண்ணம் நிழலைச் செய்வதும், அழகுமிக்கதும், சிறந்த குதிரைகளை யுடையதுமாகிய இத்தகைய தேரை அரசன் எப்பொழுதும் வைத்துப் பேணல் வேண்டும். உகூ-ஙூ0

நீலநிறம் வாய்ந்த நாவினையும் நாவின் நுனியினையு முடையதும், மாறுபட்டு வளைந்த தந்தத்தினையுடையதும், தந்தமில்லாததும், நெடுங்காலம் மேற்கொண்டிருக்கும் சினத்தினையுடையதும், மத நீரை மிகுதியாகப் பெய்வதும், முதுகை அசைப்பதும், பதினெட்டிற் குறைந்தநகங்களையுடையதும், மந்தகதியினையுடையதும், நிலத்தைத் துடைத்துச் செல்லும் வாலினையுடையதும் ஆகிய இக் குற்றமுள்ள யானைகள் கேடு செய்வனவாம். இக் குற்றங்க ளில்லாத யானைகள் நலஞ் செய்வனவாம். ஙூக-ஙூஉ

பத்திரம் மந்திரம் மிருகம் மிச்சிரம் என யானைகள் சாதியால் நான்குவகைப்படுவனவாம். ஙூஙூ

தேன்போன்ற நிறம் வாய்ந்த தந்தங்களையும், மிக்க வன்மையை யும், ஒத்த உறுப்புக்களையும், திரண்ட வடிவினையும், அழகிய முகத் தினையும், பிறவற்றினுஞ் சிறந்த அவயவங்களையு முடையது பத்திர சாதி யானையாகும். ஙூச

பருத்த வயிற்றினையும், சிங்கத்தின் பார்வை போன்ற பார்வை யினையும், மிகப் பருத்த தோல் கழுத்து துதிக்கைகளையும், இடை நிகராய உறுப்புக்களையும், நீண்ட உடலினையுமுடையது மந்திரசாதி யானையாகும். ஙூரு

---

உகூ-ஙூ0, பரியங்கம் - கட்டில்.

சிறிய கழுத்து தந்தம் செவி துதிக்கைகளையும், அகன்ற கண்களையும், மிகக் குறுகிய கீழுதட்டினையும், ஆண்குறியையும், குறுகிய உடலினையுமுடையது மிருகசாதி யானையாகும். ௩௬

பத்திரம் மந்திரம் மிருகம் என்னும் இவற்றின் இலக்கணங்கள் பெரிதும் விரவப்பெற்றது மிச்சிரசாதி யானையாகும். இனி முற்கூறிய மூவகைச் சாதி யானைகளுக்கும் உரிய அளவு தனித்தனியே கூறப்படும். ௩௭

௫. யானைகளின் அளவு வகைகள்.

யானையின் அளவில் யவதானியத்தின் நடுப்பாகம் எட்டுக்கொண்டது ஓரங்குலமாகவும் அவ் வங்குலம் இருபத்துநான்கு கொண்டது ஒரு முழமாகவும் அறிவுடையோர் கூறுவர். ௩௮

பத்திரமென்னும் யானையின் உயர அளவு ஏழுமுழமும், அதன் நீளம் எட்டு முழமும், அதன் வயிற்றின் சுற்றளவு பத்து முழமும் ஆகும். ௩௯

மந்திரம் மிருகம் என்னும் யானைகளின் அளவு பத்திரசாதி யானையின் அளவினின்றும் முறையே ஒவ்வொரு முழம் குறைவாகும். பத்திரம் மந்திரம் என்னும் யானைகளின் நீள அளவு ஒத்ததாகுமெனப் பெரியோர் கூறுவர். ௪௦

அகன்ற புருவம் கதுப்பு நெற்றிகளை யுடையதும், எப்பொழுதும் சிறந்த கதியினை யுடையதும், நல்ல இலக்கணங்களோடு கூடியதுமாகிய யானை எல்லாவற்றினுஞ் சிறந்ததாகும். ௪௧

௬. குதிரைகளின் அளவு இலக்கண முதலியன.

குதிரையின் அளவில் ஐந்து யவ தானியத்தின் நடுப்பாகங்கொண்டது ஓரங்குலமாகத் தனியே கணக்கிட்டுக்கொள்ளல் வேண்டும். ௪௨

நாற்பதங்குல அளவு நீளமுள்ள முகத்தினையுடைய குதிரை தலையாயவற்றுள்ளும் தலையாயதாகும். முப்பத்தாறங்குல அளவு நீளமுள்ள முகத்தினையுடைய குதிரை தலையாயதாகும். முப்பத்திரண்டங்குல அளவு நீளமுள்ள முகத்தினையுடைய குதிரை இடையாயதா

௩௬. 'சிறிய' என்னும் அடையைச் செவி துதிக்கைகளுக்கும், 'மிகக்குறுகிய' என்பதனை ஆண்குறிக்குங் கொள்க.

௪௦.

| சாதி | உயரம். | நீளம். | சுற்றளவு. |
|---|---|---|---|
| பத்திரம் | ௭ | ௮ | ௧௦ |
| மந்திரம் | ௬ | ௮ | ௯ |
| மிருகம் | ௫ | ௭ | ௮ |

௪௧. 'அகன்ற' என்னும் அடையைக் கதுப்பு நெற்றிகளுக்குங் கொள்க.

கும். இருபத்தெட்டங்குல அளவு நீளமுள்ள முகத்தினையுடைய குதிரை கடையாய தாகும். ௪௩-௪௪

குதிரைகளின் முகத்தளவைக் கொண்டு அவற்றின் மற்றைய உறுப்புக்களின் அளவுகளைக் கணக்கிட்டறிதல் வேண்டும். அவற்றின் உயர அளவு முற்கூறிய முகத்தளவினும் மும்மடங்கு மிகுதியாகக் கூறப்படும். ௪௫

குதிரையின் சிரோமணி தொடங்கி வாலின் அடிப்பாகம் வரையுள்ள அதன் நீளம் அக் குதிரையின் முகத்தளவின் மூன்றிலொரு கூறு கூடிய நான்கு மடங்கு மிகுதியாகும். ௪௬

குதிரையின் வயிற்றின் சுற்றளவு அதன் முகத்தளவின் மூன்று மடங்கு மிகுதியும் மூன்றங்குலமுமாகும். இவ்வளவுகள் பொதுவாகக் கூறப்பட்டனவாம். இனி, விரிவாகச் சிறப்பளவுகள் கூறப்படும். ௪௭

பின்வரும் அளவுகள் இருபத்தெட்டங்குல நீளம் முகமுள்ள குதிரையைக் குறித்துக் கூறப்படுவனவாம். குளம்பின் உயரம் மூன்றங்குலமாகவும், அதன்மேலுள்ள மணிக்கட்டின் உயரம் நான்கங்குலமாகவும் இருத்தல் வேண்டும். ௪அ

மணிக்கட்டின் மேலுள்ள முழங்கால் இருபத்திரண்டங்குலமாகவும், முழங்காற்பூட்டு மூன்றங்குலமாகவும், தொடை பதினன்கங்குலமாகவும் இருத்தல் வேண்டும். தொடைச் சந்தியினின்றும் தோள் வரையுள்ள அளவு முப்பத்தெட்டங்குலமாகும். பின்றொடை முகத்தின் அளவை யொப்ப இருபத்தெட்டங்குலமாகும். பின் முழந்தாள் முகத்தளவில் நான்கி லொரு கூறு குறைந்தது (உக-அங்குலம்) ஆகும். ௪௯-௫0

குதிரையின் உயர அளவு இதுகாறும் கூறப்பட்டது. இனி அதன் நீள அளவு நூன்முறைப்படி கூறப்படும். ௫௧

௪௬. சிரோமணி - குதிரையின் தலையிலுள்ள ஒரு குறி. முப்பத்தாறங்குல நீளம் முகமுள்ள குதிரைக்கு அதன் முகத்தின் அளவை நான்கு மடங்காகப்பெருக்க ௧௪௪ - அங்குலமாகும். அவற்றோடு அதன் முகத்தளவின் மூன்றிலொரு கூறாகிய அங்குலம் ௧௨ - ஐயும் சேர்க்க அங்குலம் ௧௫௬ - ஆகும். இவ்வளவே அக் குதிரையின் நீள அளவென்று அறிதல் வேண்டும். இவ்வாறே மற்றைக் குதிரைகளுக்கும் முகத்தின் அளவைக்கொண்டு நீள அளவைக் கணக்கிட்டுக்கொள்க.

அழகுற நீண்ட கழுத்தின் நீள அளவு முகத்தளவின் ஆறிலொரு கூறு கூடிய இருமடங்காகும். அக் கழுத்தின் உயரம் முற்கூறிய முகத்தளவிற் காலே யரைக்காற்கூறு குறைந்த அளவினதாகும். ௫௨

பிடரடி தொடங்கி அண்ட மூலம் வரையுள்ள உடலின் நீளம் கழுத்தின் நீள அளவோடொப்பாகும். அவ் வண்ட மூலத்தினின்று திரிகம் வரையுள்ள அளவு முகத்தளவின் ஆறிலொருகூறு கூடிய அரைக் கூறாகும். எஞ்சிய பிடர்வரை யுள்ள பாகம் முதுகாகும். ௫௩

வாலும் ஆண்குறியும் முகத்தளவிற் பாதி யளவினவாகும். அண்டங்கள் ஆண்குறியளவிற் பாதி யளவினவாகும். செவியின் நீளம் ஆறங்குலமாகும். சில குதிரைகளுக்கு ஐந்து அல்லது நான்கு அங்குல நீளமும் உண்டு. ௫௪

குளம்பின் சுற்றளவு ஓரங்குலங் கூடிய முகத்தளவிற் பாதி யாகும். மணிக்கட்டின் சுற்றளவும் முழங்காலின் சுற்றளவும் குளம் பின் சுற்றளவிற் பாதியாகும். ௫௫

அழகிய முன்றொடையின் சுற்றளவு பதினோரங்குலமாக அறி வுடையோர் கூறுவர். பின்றொடைகளின் அடிப்பாகத்துச் சுற்றளவு முகத்தளவின் ஆறிலொருகூறு கூடிய மூன்றுமடங்கு மிகுதியா கும். ௫௬

௫௨. ஆறிலொருகூறு கூடிய இருமடங்காவது, சிறிது கூடிய ௩௦இ - அங்குலமாகும்.

௫௩. அண்டமூலம் - ஆண்குறியின் அடிப்பாகம். அஃதாவது உடலின் இறுதி. கழுத்தின் நீள அளவு ௩௦இ - அங்குலம். 'அவ்வண்ட மூலத்தினின்று' என்பது நீள அளவு முற்றுங் கூறப்பட்ட உடலில் இறுதி தொடங்கிப் பின்ன ரும் அளவு கூறியதாகும். திரிகம் - முதுகின் கடையில் இரண்டுதொடை எலும் புகளும் சேர்ந்திருக்கும் சந்தியிடம். ஆறிலொருகூறு கூடிய அரைக்கூறு - ௧அஇ - அங்குலமாகும். ஆகவே திரிகம் தொடங்கிப் பிடரடிவரை யுள்ள நீள அளவு ௪௨ - அங்குலமாகும்.

௫௪. முகத்தளவிற் பாதி யளவு ௧௪ - அங்குலம். ஆண்குறி யளவிற் பாதி யளவு எ - அங்குலம்.

௫௫. ஓரங்குலங் கூடிய முகத்தளவிற் பாதி ௧௫ - அங்குலம். குளம்பின் சுற்றளவிற்பாதி எஇ - அங்குலம்.

௫௬. ஆறிலொருகூறு கூடிய மும்மடங்காவது, அஅஇ - அங்குலமாகும். குதிரையின் பின்றொடை மூலம் மிகப் பருத்திருத்தல் இயல்பே. ஆயினும் ஒரு தொடை இவ்வளவு அங்குலச், சுற்றளவுடையதாக இருக்கமாட்டாதாகலின்

பிற்புறத்துத் தொடை தொடங்கிக் கால்வரை யுள்ள பாகம் உள்ளும் புறம்பும் வில்லைப்போற் சிறிது வளைந்து காணப்படும். மணிக்கட்டிலுள்ள மணியின் சுற்றளவு ஒன்பதங்குலமாகும். பிற்புறத்து முழந்தாள் முதலியவற்றின் சுற்றளவு முற்புறத்துக் கால்களுக்குக் கூறியபடியாம்.* ௫௭

இரண்டு தொடைகளின் நடுவிற் பக்கமூலத்துள்ள குறியிடம் ஓர் அங்குல அளவினதாகும். ௫௮

கழுத்தின் மேற்புறத்திற் சிரோமணி தொடங்கித் தோள்வரை நீண்டிருக்கும் சிறந்த பிடரிமயிர் தோன்றுமிடம் ஒன்றரையங்குல அகற்சியுடையதாகும். ௫௯

அழகிய பிடரிமயிர் ஒருமுழ அளவு நீளமுடையதாய்க் கீழ் நோக்கித் தொங்கல் வேண்டும். மிக்க வனப்புவாய்ந்த வால் மயிர் ஒன்றரைமுழ மாதல் இரண்டுமுழ மாதல் நீண்டிருத்தல் வேண்டும் ௬௦

செவிகளின் நீள அளவு ஏழு அல்லது எட்டு ஒன்பது பத்து அங்குலங்களாகும். அச் செவிகளின் அகல அளவு மூன்றங்குல மாதல் நான்கங்குலமாதல் இருத்தல் வேண்டும். ௬௧

குதிரையின் கழுத்துத் திரண்டதாகவும் தகட்டு வடிவினதாகவும் இல்லாமல் மயிலின் கழுத்துப்போ லிருத்தல் வேண்டும். அக் கழுத்தின் நுனிப்பாகத்தின் சுற்றளவு ஒருபிடி யளவு கூடிய முகத்தளவோடொத்ததாகும். ௬௨

கழுத்தின் அடிப்பக்கத்துச் சுற்றளவு முகத்தளவின் இருமடங்கு மிகுதியிற் பத்தங்குலங் குறைந்ததாகும். முகத்தளவின்

---

இங்குக் கூறிய அளவு இரண்டு தொடைகளுக்கென்று உய்த்துணர்தல் வேண்டும். அங்ஙனங் கொள்ளுங்கால் ஒரு தொடையின் சுற்றளவு ௪௪௳ - அங்குலமாகும்.

௬௧. செவிகளின் நீள அளவு இப் பிரகரணத்தின் ௧௪-ஆம் சுலோகத்திலுங் கூறப்பட்டது. ஆகவே அவ் வளவு நான்கு அங்குலம் முதல் பத்தங்குலம் வரை இருக்கலாமென்று புலப்படுகின்றது.

௬௨. பிடியளவோடு கூடிய முகத்தளவாவது ௩௪இ-அங்குலமாகும். ௪-ஆம் பிரகரணம் ௮௨-ஆம் சுலோகப்படி பிடி ஒன்றுக்கு அங்குலம் ௪ ஆகும். இவ்வங்குலம் யவம் ௮-கொண்டதாகலின் ௪-க்கு ௮- ௩௨ - யவங்களாகும். குதிரையளவில் ௫-யவம் ஓர் அங்குலமாதலின் ௩௨-யவங்கள் ௬இ - அங்குலங்களாகும். முகத்தளவு ௨௮-அங்குலம். ஆக, ௩௪இ - ஆதல் காண்க.

மூன்றிலொருகூறு குறைந்த அளவினையுடைய அழகிய வயிற்றிடம் மார்பென்று கூறப்படும். ௯௩

கண்களின் மேற்புறத்துள்ள சுற்றளவு எட்டங்குலங் கூடிய முகத்தளவோ டொத்ததாகும். மூக்கின் மேலும் கண்களின் கீழு முள்ள முகத்தின் சுற்றளவு முகத்தின் நீள அளவில் மூன்றிலொரு கூறு குறைந்ததாகும். ௯௪

கண்களின் அகலம் தனித்தனி இரண்டங்குலமாகவும், அவற்றின் நீளம் தனித்தனி மூன்றங்குலமாகவும் இருத்தல் வேண்டும். அன்றி அகலம் இரண்டரை அங்குலமாகவும் நீளம் நான்கங்குலமாகவும் இருக்கலாம். ௯௫

இரண்டு தொடைகளுக்கும் நடுவணுள்ள வெளியிடம் முகத்தளவின் மூன்றிலொரு கூறாகும். இரண்டு கண் நுனிகளுக்கும் நடுவணுள்ள பாகமும், இரண்டு செவிகளுக்கும் நடுவணுள்ள பாகமும், செவிக்கும் கண்ணிற்கும் இடைப்பட்ட பாகமும் தனித்தனி முகத்தளவில் ஐந்திலொரு கூறாகும். நிலத்தில் தோய்ந்த இரண்டு குளம்புகளுக்கும் இடைப்பட்டவெளியளவு செவியளவோடொக்கும். ௯௬-௯௭

இரண்டு கண் மணிகளுக்கும் நடுவணுள்ள இடமும் இரண்டு புருவங்களுக்கும் இடைப்பட்ட இடமும் மூக்கிற்கும் கண்ணிற்கும் நடுவணுள்ள இடமும் பின்தொடை யளவின் மூன்றிலொரு கூறாகும். ௯௮

உதடுகளோடு கூடிய முகத்தின் நுனிப்பாகம் முகத்தளவின் மூன்றிலொருகூறாகும். இரண்டு மூக்குத் துவாரங்களுக்கும் இடைப்பட்ட இடம் முகத்தளவில் ஒன்பதிலொரு கூறாகும். ௯௯

---

௯௩. இருமடங்கு மிகுதியிற் பத்தங்குலங் குறைந்தது ௪௯ - அங்குலம்.

௯௪. எட்டங்குலங் கூடிய முகத்தளவு ௩௧ - அங்குலம். மூன்றிலொரு கூறு குறைந்தது ௧௮ - அங்குலம்.

௯௬-௯௭. மூன்றிலொருகூறு ௯ - அங்குலம். ஐந்திலொருகூறு ௫இ - அங்குலம். செவியளவை ௯௧ - ஆம் சுலோகத்திற் காண்க.

௯௮. பின் தொடை யளவு ௫௦ - ஆம் சுலோகத்திற் கூறியபடி ௨௮ - அங்குலமாகும். அதன் மூன்றிலொருகூறு சிறிது குறைய ௯இ - அங்குலமாகும். முன் தொடை யெனக் கொள்ளின் கண்களுக்கும் அவற்றின் நடுவிடத்திற்குங் கூறிய அளவோடு பொருந்தாமையாற் பின் தொடை யெனக்கொள்ளப்பட்டது.

௯௯. ஒன்பதிலொருகூறு ௩ - அங்குலம்.

குதிரை உடலின் பரப்பு மனித உடலின் நீளத்தில் அரைக் கூறாகும். திரிகத்தின் பரப்பு மார்பினளவோ டொத்ததாகும். முற்புறத்துக் கால்களின் அடிப்பக்கத்தின் கீழுள்ள இருதயம் முகத்தளவில் நான்கிலொரு கூறாகும். ௭0

இருதயத்தை யடுத்துள்ள முன்கால்களின் இடைவெளி முகத்தளவின் ஆறிலொரு கூறாகும். சிவுகத்தினின்றுங் கீழுதட்டினுயரம் ஒன்றரை யங்குலமாகும். ௭௧

உயர்ந்த கழுத்தையும் தாழ்ந்த முதுகினையுமுடைய குதிரை எப்பொழுதும் அழகுற விளங்குவதாகும். ௭௨

ஒருவன் எவ் வுருவத்தைச் செய்தற்கு முயல்கின்றானோ அவ்வுருவத்தை எல்லாவகையாலும் உற்று நோக்கிச் செய்தல் வேண்டும். எவற்கும் முன்னர்ப் பார்க்கப்படாத வுருவம் செய்தற்கு இயலாததாகும். ௭௩

ஆதலின் சிற்பத்தொழில் வல்லான் முதற்கட் குதிரையை நினைவு கூர்ந்து பின்னர் அதன் உறுப்புக்களைச் செய்யக்கடவன். இங்குக் கூறிய அளவிலக்கண முறைப்படி குதிரைகளின் எல்லா உறுப்புக்களும் இயற்றப்படுமாயின் அது நலஞ் சிறத்தற்குக் காரணமாகும். ௭௪

மயிர் நீங்கிய முகமும் அழகும் சோர்வின்மையும் உயர்ந்த மூக்கும் நீண்டுயர்ந்தனவாகிய கழுத்தும் முகமும் குறுகிய வயிறு குளம்பு செவிகளும் விரைவுமிக்க நடையும் அன்னத்தையும் மேகத்தையும் ஒத்த ஒலியும் மிக்க கொடுந்தன்மையின்மையும் மிக்க மந்தமின்மையும் தெய்வத்தன்மைமிக்க வன்மையும் சிறந்த ஒளியும் நறுமணமும் நன்னிறமும் நலம் பயக்கும் சுழிகளுமாகிய இவற்றை யுடைய குதிரையே காண்பவர் மனத்தைக் கவரும் இயல்பினதாகும். ௭௫-௭௬

இடமுகம் வலமுகம் என்னும் வேறுபாட்டால் இரண்டு வகைப்படும் சுழிகளும் பிரமரம் என்று கூறப்படும். அச்சுழி நிறைவுடையது நிறைவில்லாதது எனவும், நீண்டது குறுகியது எனவும் மீண்டும் பலதிறப்படும். ௭௭

---

௭0. மார்பின் அளவு ௧௮ - அங்குலம்; ௬௩-ஆம் சுலோகத்திற் காண்க. நான்கிலொருகூறு ௭ - அங்குலம்.

௭௧. ஆறிலொருகூறு ௪இ - அங்குலம். சிவுகம் - கீழுதட்டோடு கூடிய வாயின் கீழ்ப்பாகம்.

பெண்குதிரையின்பாலும் ஆண்குதிரையின்பாலும் முறையே இடமுகமாகவும் வலமுகமாகவும் இருக்கும் சுழிகள் அவ்வவற்றிற்குக் கூறப்பட்ட பயன்களை விளைவிப்பனவாம். அவை மாறியிருக்குமாயின் அப் பயன்களை விளைவிப்பனவாகா. ௭௮

அவ் விருவகைச் சுழிகளுக்கும் கீழ் நோக்கிய முகமும் மேனோக்கிய முகமும் குறுக்கு முகமும் உள்ளனவாம். அம் முக வேறுபாட்டாற் பயன்வேறுபாடு முண்டாகும். ௭௯

சங்கு சக்கரம் கதை பதுமம் யாகவேதி சுவத்திகம் பிராசாதம் தோரணம் வில் அழகியநிறைகுடம் சுவத்திகமாலை மீன் வாள் சீவற்சம் ஆகிய இவற்றின் வடிவத்தை யொத்து விளங்கும் சுழிகள் நலம் பயப்பனவாம். ௮0

மூக்குநுனியிலும் நெற்றியிலும் நெற்றியின் மேற்புறத்தும் கழுத்திலும் தலையிலும் சுழிபொருந்திய குதிரைகள் மிகச் சிறந்தனவாம். ௮௧

மார்பிலும் தோளிலும் கழுத்திலும் அரையிலும் நாபியிலும் வயிற்றிலும் விலாப்பக்கங்களின் நுனிப்பாகத்திலும் சுழியுள்ள குதிரைகள் இடையாயினவென்று கூறப்படும். ௮௨

நெற்றியில் இரண்டு சுழிகளும் மூன்றாவதாகத் தலையி லொரு சுழியும் விளங்கப்பெற்ற குதிரை பூரணாநந்தம் என்னும் பெயரினதாம். அது தலையாயதாகும். ௮௩

எதன் முதுகு எலும்பில் ஒரு சுழி தோன்றி விளங்குகின்றதோ அது சூரியன் என்னும் பெயரினதாம். அது தன்னை யுடையார்க்குக் குதிரைக் கூட்டங்களை மேன்மேலும் வளர்விக்கும். ௮௪

எதன் நெற்றியில் மூன்று சுழிகள் குறுக்காகத்தோன்றி விளங்குகின்றனவோ அது திரிகூடம் என்னும் பெயரினதாம். அஃது எப்பொழுதும் தன் தலைவற்குக் குதிரைகளை மிகுவிப்பதாகும். ௮௫

அங்ஙனமே மூன்று சுழிகள் எதன் கழுத்தில் தோன்றி விளங்குகின்றனவோ அது குதிரைகளுட் சிறந்ததாய் அரண்மனையி லிருக்கத் தகுதியுடையதாகும். ௮௬

---

௭௮. அவ்வவற்றிற்குக் கூறப்பட்ட பயன்களை ௮0-ஆம் சுலோக முதலியவற்றிற் காண்க.

௮0. சுவத்திகம் - அரிசிமாவால் முக்கோணவடிவமாகச் செய்யப்படும் மங்கலப் பொருள். பிராசாதம் - ஈண்டுக் கோபுரத்தின்பாலதாம். சீவற்சம்-திருமால் மார்பில் பெருமை தோன்ற விளங்கும் வெண்மயிராலாகிய ஒரு மறு.

எதன் கபோலங்களில் இரட்டைச் சுழிகள் காணப்படுகின்றனவோ அக்குதிரை தன்னையுடையாற்குப் புகழைப் பெருக்குவதோடு அவன் அரசியலையும் வளர்விக்கும். ௮எ

எதன் இரு கபோலங்களிலும் ஒற்றைச்சுழி காணப்படுகின்றதோ அக்குதிரை சருவநாமம் என்னும் பெயரினதாம். அது தன் தலைவற்குக் கேடு பயப்பதாகும். ௮௮

எதனுடைய வலப்பக்கத்துக் கபோலத்தின் மாத்திரம் ஒரு சுழி காணப்படுகின்றதோ அது சிவம் என்னும் பெயரினதாம். அது தன் தலைவற்குப் பெருநலம் பயப்பதாகும். ௮௯

அங்ஙனமே இடப்பக்கத்துக் கபோலத்தின் மாத்திரம் ஒரு சுழியமைந்த குதிரை கொடுந்தன்மை யுடையதாய்த் தன் தலைவன் பொருட்குக் கேடு விளைவிப்பதாகும். ௮௯இ

குதிரையினுடைய செவியின் அடிப்பாகத்தில் 'இரட்டைச் சுழிகள் காணப்படுமாயின் அவை இந்திராக்கம் என்னும் பெயரினவாய் அரசனையும் அரசியலையும் வளர்விப்பனவாம். தனங்களின் நடுப்பாகத்தில் இரட்டைச்சுழிகள் இருக்குமாயின் அவை விசயம் என்னும் பெயரினவாய்ப் போர் செய்யுங் காலத்தில் மிக்க புகழை விளைவிப்பனவாம். ௯0-௯௧

தோளின் இருபக்கங்களிலும் சுழிகளையுடைய குதிரை பதுமம் என்னும் பெயரினதாம். அது தன் தலைவற்குப் பதுமமென்னும் அளவினையுடைய பல்வகைச் செல்வங்களையும் தருதலோடு இடையறு இன்பத்தையும் பயப்பதாம். ௯௨

மூக்கின் நடுவில் ஒரு சுழியையாதல் மூன்று சுழிகளையாதல் உடைய குதிரை பூபாலன் என்னும் பெயரினதாம். அது குதிரைகளின் சக்கரவர்த்தி என்றறியப்படும். ௯௩

கழுத்திற் பெரியதாகவும் சிறந்ததாகவு முள்ள ஒற்றைச் சுழியினையுடைய குதிரை சிந்தாமணி என்னும் பெயரினதாம். அது தன் தலைவற்குக் கருதிய பொருள்களையும் இன்பத்தையும் அளிப்பதாகும். ௯௪

நெற்றியினும் கழுத்திலும் சுழிகள் இருக்குமாயின் அவை சுற்கம் என்னும் பெயரினவாய்ச் செல்வவளர்ச்சியையும் புகழையும் தருவனவாம். ௯௫

முகத்திலும் அடிவயிற்றிலும் இரட்டைச்சுழிகள் அமையப் பெற்ற குதிரை விரைவில் மரணமெய்தும்; இன்றேல் தன் தலைவற்கு அழிவு செய்வதாகும். ௯௬

முழங்காற்பூட்டிற் சுழிகளிருக்குமாயின் அவை பிரயாணத்திற் றுன்பஞ் செய்வனவாம். குதிரையின் குறியிற் சுழியிருக்குமாயின் அது வெற்றித்திருவைக் கொடுப்பதாகும். ௯௭

முதுகின் கடைப்பாகமாகிய திரிகத்திற் சுழி யிருக்குமாயின் அஃது அறம் பொருள் இன்பங்கட்கு அழிவு செய்வதாகும். வாலின் அடிப்பாகத்திலிருக்குஞ் சுழி தூமகேது என்று சொல்லப்படும். அது பலவகைத் துன்பங்களைச் செய்வதாகும். ௯௮

குறி வால் திரிகம் ஆகிய மூன்றிடத்திலும் சுழி யமையப்பெற்ற குதிரை கிருதாந்தம் என்னும் பெயரினதாம். அது மிகவும் அச்சம் விளைவிப்பதாகும். ௯௯

குதிரையின் விலாப்புறத்தில் மத்தியதண்டம் என்னும் ஓர் இலச்சினை பெருவிரலளவு நீண்டிருக்குமாயின் மிகவுங் கேடு பயப்பதாகும். அம் மத்தியதண்டம் பல்வகைக் கிளைகளோடு பிடரிமயிரில் தோன்றுமாயின் அதன் நீட்சிக்குத் தக்கவாறு மிக்க துன்பம் பயப்பதாகும். ௧௦௦

கபோலத்தின் மேற்பாகமாகிய அநு, கபோலம், இருதயம், கழுத்து, நுனி முகம், நாபியின் கீழுள்ள மூத்திரநிலயம், அரை, நெற்றி யெலும்பு, முழங்காற்பூட்டு, அண்டமூலம், திமில், நாபி, குதம் ஆகிய இவ்வுறுப்புக்களில் உள்ள சுழி கண்ணீருதிர்க்கும் கடுந்துன்பத்தைச் செய்வதாகும். வயிற்றின்வலப்பக்கத்திலும் வலக்காலிலுமுள்ள சுழி எப்பொழுதும் தீமை பயப்பதாகும். ௧௦௧

குதிரையின் கழுத்து நடுவிலும், முதுகின் நடுவிலும், மேலுதட்டிலும், கீழுதட்டிலும், கண்ணிற்குஞ் செவிக்கும் இடையிலும், வயிற்றின் இடப்பக்கத்திலும், விலாப்புறங்களிலும், தொடைகளிலும், முற்புறத்துக் கால்களிலும் இரட்டைச்சுழிகள் இருக்குமாயின் அவை மிக்க நலம் பயப்பனவாம். ௧௦௨

௧௦௦. இலச்சினை - அடையாளம்.

௧௦௧. இங்குக் கூறிய உறுப்புக்களுள், ஒன்றாகிய கபோலத்திலுள்ள சுழி தீயதென்று கூறப்பட்டது; மேல் ௮௭-முதல் ௮௯- வரையுள்ள சுலோகங்களில் கபோலச் சுழிகளுக்கு நல்லனவும் தீயனவுமாகிய பயன்கள் கூறப்பட்டன; இது பொதுவும் அவை சிறப்புமாகிய வேறுபாடு பற்றி.

நெற்றியில் இரண்டு சுழிகள் தனித்தனி விலகியிருக்குமாயின் அவை சூரியன் சந்திரன் என்னும் பெயரினவாய் நற்பயனை விளை விக்கும். அச்சுழிகள் நெருங்கியிருக்குமாயின் இடை நிகராய பயனை யும் மிக நெருங்கி யிருக்குமாயின் தீய பயனையும் விளைவிப்பன வாம். ௧௦௩

நெற்றியில் மேனோக்கிய முக முடையனவாய் இடைவிட்டு மூன்று சுழிகள் இருக்குமாயின் அவை நலஞ் செய்வனவாம். அங்ஙனமே அவ்விடத்தில் இரண்டு சுழிகள் மிக நெருங்கியிருக்குமாயின் தீமை செய்வனவாம். ௧௦௪

நெற்றியில் முக்கோண வடிவினவாய் மூன்று சுழிகளிருக்குமா யின் அவை துன்பம் தருவனவாம். கழுத்தின் நடுவில் ஒருசுழியிருக் குமாயின் அது நலம் பயப்பதோடு எல்லாத் தீங்குகளையும் போக் குவதாகும். ௧௦௫

காலில் கீழ்நோக்கிய முகமுடைய சுழியும், நெற்றியில் மேனோக் கிய முகமுடைய சுழியும் நலஞ் செய்வனவாம். பல்வகைக் கிளை களோடு குறுக்குமுகமாக விளங்குஞ் சுழி மிக்க தீங்கு பயவாத தாகும். ௧௦௬

குறியின் பின்பாகத்திற் சுழியினையாதல் தனம் போன்ற ஓரி லச்சினையையாதல் உடைய குதிரை தீங்கு பயப்பதாகும். செவியின் பக்கத்தில் ஒற்றைச்சுழி யிருக்குமாயின் அது சிருங்கி என்னும் பெயரினதாய் மிகவும் பழிக்கப்படுவதாகும். ௧௦௭

கழுத்துப் பக்கங்களின் மேற்புறத்திற் சுழியுடையதும் அப் பக் கங்களின் ஒரு புறத்தில் 'ஏகரசுமி' என்னும் இலச்சினை யுடையதும் காலில் மேனோக்கிய முகமுடைய சுழி பொருந்தியதும் கட்டுமுளை யைப் பெயர்ப்பதும் ஆகிய இக்குதிரைகள் பழிக்கப்படுவனவாம். ௧௦௮

எதன்கண் நன்மை பயப்பனவும் தீமை பயப்பனவு மாகிய சுழிக ளுள்ளனவோ அக் குதிரை இடையாயதாகக் கருதப்படும். முகத்திலும் நான்கு கால்களிலும் வெண்மை நிறம் வாய்ந்த குதிரை பஞ்சகலியாணம் என்று கூறப்படும். ௧௦௯

---

௧௦௫. இங்குக் கூறியது கழுத்தின் நடுவிடத்திலெனவும் ௧௦௧ - ஆம் சுலோகத்திற் கூறியது கழுத்தில் நடுவல்லாத மற்றையிடங்களிலெனவும் வேறு பாடு உய்த்துணர்க.

முகத்திலும் நான்கு கால்களிலும் வெண்மைநிறம் வாய்ந்த அக் குதிரையே இருதயத்திலும் தோளிலும் வாலிலும் வெண்மை நிறம் வாய்க்கப்பெறுமாயின் அஃது அட்டமங்கலம் என்று கூறப்படும். உடல் முழுதும் ஓரே நிறமும் செவியில் நீல நிறமுமுடைய குதிரை சியாமகன்னம் என்று கூறப்படும். அவ் ஓரே நிறமும் வெண்ணிற மாக விருப்பின் அக் குதிரை எப்பொழுதும் பூசிக்கத்தக்க தூய்மை யுடையதாகும். ௧௧௦

வைடூரிய இரத்தினத்தைப் போன்ற கண்களையும் பலவகை நிறத்தினையுமுடைய குதிரை சயமங்கலம் என்று கூறப்படும். அத்தகைய கண்களையும் ஓரே நிறத்தினையுமுடைய குதிரை அழகுடைய தாக இருக்குமாயின் அது பூசிக்கத்தக்கதாம். ௧௧௧

கருமைநிறம் வாய்ந்த கால்களையுடைய குதிரையும், ஒரு கால் மாத்திரம் வெண்மை நிறமுடைய குதிரையும், வெறுப்பை விளைவிக் கும் நிறத்தினையுடைய குதிரையும், சாம்பர்நிறத்தினையுடைய குதி ரையும், கழுதைநிறம் வாய்ந்த குதிரையும் பழிக்கப்படுவனவாம். ௧௧௨

கருமைநிறம் வாய்ந்த அண்ணத்தினையுடைய குதிரையும், கரிய நாவினையுடைய குதிரையும், கரிய உதடுகளையுடைய குதிரையும், உடல்முழுதும் கரியநிறமும் வாலின் மாத்திரம் வெண்ணிறமுமுடைய குதிரையும் விலக்கத்தக்கனவாம். ௧௧௩

கால்களை உயரத்தூக்கிச் செல்லும் நடையினையுடைய குதி ரையும், யானை புலி மயில் அன்னம் சிச்சிலிப்புள் புறா மான் ஒட்டகம் குரங்கு எருது ஆகிய இவற்றின் நடைகளைப் போன்ற நடைகள் வாய்ந்த குதிரைகளும் போற்றப்படுவனவாம். ௧௧௪

குதிரைப்பாகன் மிகுதியாக உண்டும் மிகுதியாகக் குடித்தும் குதிரையை நடத்துங்காலும் அவனுக்குத் துன்பஞ் செய்யாத அக் குதிரையின் நடையும் அந்நடை வாய்ந்த குதிரையும் சிறந்தனவாக மதிக்கப்படும். ௧௧௫

நெற்றியில் வெண்ணிறம் வாய்ந்த திலக இலச்சினையுடையதும் மற்றை உடல் முழுதும் வெண்மையல்லாத நிறம் பொருந்தியதும் ஆகிய குதிரை தளபஞ்சி என்று கூறப்படும். அஃது எவன்பாலுள் ளதோ அவன் பழிக்கப்படுவான். ௧௧௬

---

௧௧௩. அண்ணம் - மேல்வாய்.
௧௧௬. தளபஞ்சி - தன்னினத்தைக் கெடுப்பது.

ஒரு குதிரை ஒளிமிக்க நிறத்தினையும் மிக்க ஆற்றலையும் சிறந்த நடையினையும் பருமையினையும் எல்லாவுறுப்புக்களிலும் அழகினையு முடையதாக இருக்குமாயின் அது மாறுபட்ட நிறத்தாலுண்டாங் குற்றங்களைப் போக்குவதாகும். ௧௧௭

ஒரு குதிரை சுழி முதலியவற்றாற் குற்றமுடையதாயினும் மிக்க கொடுந்தன்மை யில்லாததாயின் அஃது என்றும் போற்றத்தக்க தாம். ௧௧அ

அடுத்தடுத்துச் சுமந்து நடக்கும் பயிற்சியில்லாத குதிரைகளுக்கு மிக்க தீங்கு விளையும்; மிகவும் அதிகமாகச் சுமந்து நடத்தலால் மெலிவும் நோய்த்தொடர்பு முண்டாம். ௧௧௯

சுமந்து நடவாத குதிரை மந்த இயல்பினதாய் எல்லாத் தொழில்களிலும் விலக்கப்படுவதாகும். வேண்டிய அளவு உணவு கொடுக்கப்படாமையால் மெலிவும், அளவின் மிக்க உணவுகொடுத்தலால் நோயும் குதிரைகளுக்குண்டாம். ௧௨0

குதிரை தன்னைப் பயிற்றுவோனுடைய குணங் குற்றங்களால் எப்பொழுதும் சிறந்த நடையையும் குறைந்த நடையையு முடையதாகும். ௧௨௧

எவன் முழந்தாட் பூட்டுக்குக் கீழே அசைகின்ற காலையும் நிமிர்ந்து நேரான உடலையும் அசைவற்ற இருக்கையையும் காலம் இடம் அறிந்து செலுத்துதற்குச் சமமாகத் தாங்கிய கடிவாளத்தையும் உடையனோ அவனே நல்ல குதிரைப்பாகனாவான். ௧௨௨

நல்ல குதிரைப்பாகன் சிறந்த குதிரையைக் கசையினால் மிக்க கடுமையில்லாமல் மெல்ல அடித்தல் வேண்டும். சிறிது கடிந்து அடிக்க வேண்டின் உறுப்புக்களில் இடம் நோக்கி அடிக்கக் கடவன். ௧௨௩

## ௭. குதிரைக்கு வேண்டுவனசெய்து நடத்து முறை.

அறிவுமிக்க குதிரைப்பாகன் குதிரை கனைக்குமாயின் அதன் கக்கங்களிலும், கால் இடறி நடக்குமாயின் விலாப்பக்கங்களிலும், அச்சம் எய்துமாயின் செவிகளின் நடுவிலும், வழியை விட்டு விலகிச் செல்லுமாயின் கழுத்திலும், சினங்கொள்ளுமாயின் முற்புறத்துக் கால்களின் நடுவிலும், மனக்கலக்கம் எய்துமாயின் வயிற்றிலும் அடிக்கக் கடவன். மற்றை உறுப்பிடங்களில் ஒரு பொழுதும் அடித்தலாகாது. ௧௨௪-௧௨௫

---

௧௨௩. கசை - சாட்டை.

௧௨௪-௧௨௫. கக்கம் - முற்புறத்துக் கால்களின் அடிப்பாகம்.

அன்றிக் கனைக்குமாயின் தோளிலும், இடறி நடக்குமாயின் அரையின் கீழ்ப்பக்கத்திலும், அச்சங் கொள்ளுமாயின் மார்பிலும், வழியை விட்டு விலகிச் செல்லுமாயின் முகத்திலும், சினங்கொள்ளுமாயின் வாலிலும், மனக்கலக்கம் எய்துமாயின் முழங்காற்பூட்டுக்களிலும் அடித்தல் வேண்டு மென்பதும் பொருந்தும். ௧௨௬

குதிரையை உரியதல்லாத காலத்திலும் உரியதல்லா வுறுப்புக்களிலும் அடிக்கடி யடித்தலாகாது. அங்ஙனம் தகுதியில்லாக் காலத்திலும் தகுதியில்லா விடங்களிலும் அடித்தல் குதிரைக்குக் குணக்கேடுகளை யுண்டாக்குவதாகும். ௧௨௭

அக் குணக்கேடுகள் அக்குதிரை எத்துணை நாள் உயிரோடிருக்குமோ அத்துணை நாளும் அதனைப் பற்றி நிற்பனவாம். கொடுங்குணம் வாய்ந்த குதிரையைக் கசையினால் அடித்து அடக்கல் வேண்டும். கசையின்றிக் குதிரையின்கண் ஏறலாகாது. ௧௨௮

சிறந்த குதிரை பதினறுமாத்திரைப்பொழுதில் நூறுவிற்கிடை தூரம் விரைந்து செல்வதாகும். அவ்வளவிற் குறைந்த நடையினை யுடைய குதிரைகள் அந் நடைக் குறைவுக் கேற்ப இழிந்தனவாக மதிக்கப்படுவனவாம். ௧௨௯

குதிரைக்கு நடைப்பழக்கஞ் செய்யுங்கால் அதற்கு ஆயிரம் விற்கிடை தூரமுள்ள மண்டலாகாரமான இடம் சிறந்ததாகும். அதனிற் பாதி யளவுள்ள இடம் இடையாயதாகவும், அப் பாதியிற் பாதி யளவுள்ள இடம் கடையாய தாகவும் எண்ணப்படும். நூறு விற்கிடை தூரமுள்ள இடம் சிறுமையாகவும், அதனிற் பாதியாகிய ஐம்பது விற்கிடை தூரமுள்ள இடம் மிகச் சிறுமையாகவுங் கூறப்படும். ௧௩௦-௧௩௧

நாடோறும் மண்டலாகாரமாகச் சுற்றுதலால் ஒரு நாளில் நூறு யோசனை தூரஞ் செல்லும்படி குதிரைக்கு நடைப் பயிற்சியை மிகுவித்தல் வேண்டும். ௧௩௨

முன்பனிக்காலத்திலும் பின்பனிக்காலத்திலும் இளவேனிற்காலத்திலும் காலை மாலை இரு வேளைகளிலும், முதுவேனிற்காலத்தில் மாலைப்பொழுதிலும், கூதிர்க்காலத்திற் காலைப்பொழுதிலும் குதி

௧௨௯. மாத்திரையாவது, காலத்தின் நுண்ணிய ஓரளவாகும்.

௧௩௦-௧௩௧. ஒரு விற்கிடை நான்கு முழமாகும். மண்டலாகாரம் - வளைவு. அதனிற்பாதி ௫௦௦ - விற்கிடை. அப் பாதியிற் பாதி ௨௫௦ விற்கிடை.

ரைக்கு நடைப் பயிற்சி செய்வித்தல் வேண்டும். கார் காலத்திலும், மேடு பள்ளம் விரவிய நிலங்களிலும் சிறிதும் நடத்துதலாகாது. ௧௩௩-௧௩௪

நன்கு நடைப் பயிற்சி செய்வித்தலாற் குதிரைக்கு உதராக்கினி பலமும், உடல்வன்மையும் மிருதலோடு நோயின்மையும் உண்டாம். ௧௩௫

சுமையினாலும், அதிக வழி நடந்தமையாலும் இளைப்புற்ற குதிரையை மெல்ல மெல்ல நடந்து சுற்றிவரச் செய்து பின்னர் ஒருவகை எண்ணெயோடு கலந்த சருக்கரையையும், மாவையும் உண்பித்தல் வேண்டும். ௧௩௬

இன்னும், குதிரை உண்ணுதற்பொருட்டு உலர்ந்தனவும் நனைந்தனவுமாகிய கடலைகளையும், உழுந்துகளையும், கொள்ளுப் பயறுகளையும், நன்றாக வெந்த இறைச்சிகளையும் கொடுப்பித்தல் வேண்டும். ௧௩௭

குதிரையின் உடம்பில் எவ்வுறுப்புச் சிதைந்திருக்கின்றதோ அதன்கண் அடித்தலாகாது. மிக்க வழிநடந்து வந்த குதிரைக்கு அதன்மேலிட்ட கல்லணையை இறக்குதற்கு முன்னரே உப்போடு கலந்த வெல்லத்தை உண்ணக்கொடுத்து அதன் வன்மையைப் பாதுகாத்தல் வேண்டும். ௧௩௮

நடந்திளைத்த குதிரை வெயர் நீங்கிச் சாந்த முற்று உருவம் நன்கு தெளிவெய்தியபின்னர் அதன் மேலிட்ட கல்லணை முதலியவற்றை இறக்கி அதன்பின்னர்க் கடிவாளத்தையும் இறக்குதல் வேண்டும். ௧௩௯

---

௧௩௬. ஸ்நேஹமென்று மூலத்திலுள்ளது ஒருவகை எண்ணெய் என்று மொழிபெயர்க்கப்பட்டது.

௧௩௮. கல்லணை - குதிரைமேலிடுந் தவிசு. உப்போடு கலந்த வெல்லத்தை உண்ணக் கொடுக்குங்கால் கடிவாளத்தை முற்றும் இறக்காமல் வாயினின்றுஞ் சிறிது விலக்கல் வேண்டுமென்பது போதரும்; பின் வருஞ் சுலோகத்தில் குதிரை அவ் வெல்லத்தை உண்டு தெளிவெய்திய பின்னர் முறையே கல்லணையையும் கடிவாளத்தையும் இறக்கவேண்டு மென்றமையின்.

௧௩௯. கடிவாளத்தை யிறக்குதல் - குதிரை உடலினின்றும் வேறுபடுத்தல்.

பின்னர் அக் குதிரையின் உடம்பை நன்றாகப் பிசைந்து பிடித்துப் புழுதியினிடையே புரளச்செய்தல் வேண்டும். அதன் பின் நீராட்டி, உணவு கொடுத்து, நீரருத்தி நன்கு பாதுகாத்தல் வேண்டும். ௧௬0

கள்ளும், இறைச்சிச் சாறுங் குதிரைகளுக்குரிய எல்லாக் குற்றங்களையும் போக்குவனவாம். குதிரையைப் பரிபாலிப்போன் அதற்குத் தன்னுடையன்றவரை பாலும், நெய்யும், நீரோடு கலந்த மாவும் ஆகிய இவற்றை உண்ணக்கொடுத்தல் வேண்டும். ௧௬௧

குதிரை, உணவுண்டு நீர் பருகிய அப்பொழுதே நடையிற் செலுத்தப்படுமாயின் அதற்குக் காச நோய், சுவாச நோய் முதலிய பிணிகள் உண்டாம். ௧௬௨

குதிரைக்குரிய உணவுப்பொருள்களில் யவதானியமும் கடலையும் சிறந்தனவாகவும், உழுந்தும் கொள்ளும் இடைநிகரனவாகவும், மசூரமும் பயறும் தாழ்ந்தனவாகவும் எண்ணப்படும். ௧௬௩

அ. குதிரைகளின் அறுவகை நடைகள்.

குதிரையின் நடை தாரை, ஆஸ்கந்திதம், இரேசிதம், புலுதம், தௌரீதகம், வற்கிதம் என ஆறுவகைப்படும். இவ் வறுவகை நடைகளுக்கும் இலக்கணங்கள் தனித்தனியே உள்ளன. ௧௬௪

நடத்துவோன் குதிக்காற்றூக்கால் விரைந்து செலுத்தப்பட்டுக் குதிரை மயக்க மெய்தி மிக அதிக விரைவோடு செல்லுமாயின் அச் செலவு தாரை என்னும் நடையாகும். ௧௬௫

---

௧௬0. "ஸூாநவாநாவமாஜெஹஸு" என்று மூலத்திலுள்ளது. இப் பாடத்திலுள்ள ஸூாந, அவமாஹ என்னுஞ் சொற்கள் ஒரு பொருளனவாதலாலும் உணவு கூறப்படாமையாலும் "ஆஹார ஸூாநவாநெஹஸு" என்று பாடங்கொண்டு பொருளுரைக்கப்பட்டது.

௧௬௧. குற்றங்கள் ஈண்டு உடற்கணுண்டாம் நோய் முதலியன.

௧௬௩. மசூரம் - தானிய வகைகளுள் ஒன்று. 'மகுஷ்டகம்' கொள்ளு என்று மொழி பெயர்க்கப்பட்டது.

௧௬௪. இங்கு ஆறு வகைப்படும் என்று கூறப்பட்ட குதிரை நடைகளை ௨ - ஆம் அத்தியாயம் ௧௩௪-௧௩௫ - ஆம் சுலோகங்களில் பதினொருவகைப் படுத்துக் கூறினர். அம் மிகுதி இவற்றுள் அடங்கும் போலும்.

சிறிது வளைந்த கால்நுனிகளால் குதிரை துள்ளித் துள்ளிச் செல்லுமாயின் அச் செலவு ஆற்கந்திதம் என்று குதிரை நடையியல்புணர்ந்தோர் கூறுவர். ௧௪௬

குதிரை சிறிது துள்ளித் துள்ளித் தொடர்ந்து நடத்தல் இரேசித நடையாகும். யானைப்போல் நான்கு கால்களாலும் துள்ளிச் செல்லல் புலுதம் என்னும் நடையாகும். ௧௪௭

குதிரை தன் கால்களைச் சிறிதும் வளையாமல் விரைந்து அழகாகச் செல்லுமாயின் அச் செலவு தௌரீதகம் என்றறியப்படும். அந் நடை தேரிழுக்குங்காற் சிறந்ததாகும். ௧௪௮

குதிரை மயிலைப் போல் உயரத் தூக்கிய கழுத்தினையுடையதாய்ப் பாதி உடலை யசைத்துக்கொண்டு நன்றாக வளைந்த கால்களால் நடக்குமாயின் அந்த நடை வற்கிதமென்று கூறப்படும். ௧௪௯

## ௯. எருது ஒட்டகங்களின் இலக்கணம்.

எருதின் வயிற்றின் சுற்றளவு அதன் முகத்தின் நீள அளவினும் நான்கு மடங்கு மிகுதியாகும். திமில்முடிய வுள்ள அதன் உயரம் முகத்தளவின் மூன்று மடங்கு மிகுதியாகும். அதன் உடலின் நீளம் முகத்தளவின் மூன்றரை மடங்கு மிகுதியாகும். ௧௫0

ஏழு தால அளவு உயரமுள்ள எருது பின்வருங் குணங்களோடு கூடியிருக்குமாயின் போற்றத்தக்கதாம். ௧௫௧

நடக்குங்கால் நின்றுவிடாததும், மந்தநடை யில்லாததும், நன்றாகச் சுமந்து செல்வதும், சிறந்த உறுப்புக்களால் அழகு வாய்ந்ததும், மிக்க கொடுந்தன்மை யில்லாததும், அழகிய முதுகினையுடையதும் ஆகிய எருது எருதுகளுட் சிறந்ததென்று கூறப்படும். ௧௫௨

நாளொன்றுக்கு முப்பது யோசனை தூர விழுக்காடு சுமை தாங்கிச் செல்வதும், ஒன்பது தால உயரமுள்ள வலிய உடம்பினை யுடையதும், நல்ல முகத்தினை யுடையதும் ஆகிய ஒட்டகம் சிறந்ததாகும். ௧௫௩

## ௧0. மனிதர்க்கும் யானைகளுக்கும் உரிய வாணாள் வரையறை.

மனிதர்க்கும் யானைகளுக்கும் பரமாயுள் நூறு யாண்டுகளாகும். மனிதர்க்கும் யானைகளுக்கும் உரிய பாலப் பருவம் இருபது யாண்டுகள்வரையாகும். ௧௫௪

---

௧௫௧. தாலத்தின் அளவு, இவ் வத்தியாயம் ௪ - ஆம் பிரகரணம் ௮௨ - ஆம் சுலோகத்திற் காண்க.

மனிதர்க்கு யௌவனபருவம் அறுபது யாண்டுகள் வரையாகு மென் றெண்ணப்படும். யானைக்கு யௌவன பருவம் எண்பதாண்டு கள்வரையாகும். ௧௫௫

**௧௧. குதிரை, எருது, ஒட்டகங்களின் ஆயுள் வரையறை.**

குதிரையின் பரமாயுள் முப்பத்துநான்கு யாண்டுகளாகும். எருது ஒட்டக மாகிய இவற்றின் பரமாயுள் இருபத்தைந்து யாண்டு களாகும். ௧௫௬

குதிரை, எருது, ஒட்டகமாகிய இவற்றின் பாலப்பருவம் ஐந்து யாண்டுகள் வரையாகும். இவற்றின் யௌவனபருவம் பதினாறுயாண்டு கள் வரையாகும். அவ்வளவின் மேற்பட்ட யாண்டுகள் அவற்றிற்கு முதுமைப் பருவங்களாம். ௧௫௭

பற்களின் தோற்றத்தாலும், அவற்றின் நிறங்களாலும் எருது குதிரைகளின் ஆயுள் அளவு அறியப்படும். ௧௫௮

குதிரைக்கு முதலாம் ஆண்டில் வெண்மை நிறம் வாய்ந்த ஆறு பற்களுண்டாகும். இரண்டாம் ஆண்டில் கருமையுஞ் செம்மையுங் கலந்த கீழ்வாய்ப் பற்கள் தோன்றும். ௧௫௯

மூன்றுவது தொடங்கி ஐந்தாவது இறுதியாகவுள்ள யாண்டு களில் முன்வாய்ப் பற்களிரண்டும் கருமைநிறம் வாய்ந்திருக்கும். நான் காம்யாண்டில் அப் பற்களின் இருமருங்குமுள்ள இரண்டு பற்களும் வீழ அவ்விடத்தில் மீண்டும் இரண்டு பற்கள் தோன்றும். ௧௬0

ஐந்தாம் ஆண்டில் கடைவாய்ப் பற்களிரண்டும் வீழ மீண்டும் அவ்விடத்தில் இரண்டு பற்கள் தோன்றும். நடு, அதன் மருங்கு, கடை ஆகிய இம் மூன்றிடத்தும் உள்ள பற்கள் இரண்டிரண்டாக ஆறுவது தொடங்கி எட்டாவது இறுதியாகவுள்ள யாண்டுகளில் முறையே கருமைநிறம் எய்துவனவாம். ௧௬௧

அப்பற்கள் ஒன்பதாவது தொடங்கிப் பதினொன்றுவது இறுதி யாகவுள்ள யாண்டுகளில் முறையே பொன்மை நிறத்தினையும், பன்னி ரண்டாவது தொடங்கிப் பதினான்காவது இறுதியாகவுள்ள யாண்டு

௧௬௧. நடுப்பற்களிரண்டும் ஆறும் ஆண்டிலும், அவற்றின் இருமருங்கு முள்ள பற்களிரண்டும் ஏழாம் ஆண்டிலும், அவற்றின் இருமருங்கு முள்ள கடைப்பற்க ளிரண்டும் எட்டாம் ஆண்டிலும் கருமைநிறம் எய்து மெனக் கொள்க. இங்ஙனமே பின்வருஞ் சுலோகங்களிரண்டிற்கும் பொருளியைத் துக்கொள்க.

களில் முறையே வெண்மை நிறத்தினையும், பதினைந்தாவது தொடங்கிப் பதினேழாவது இறுதியாக உள்ள யாண்டுகளில் முறையே கண்ணாடி போன்ற ஒளியினையு முடையனவாம். ௧௬௨

மீண்டும் அப்பற்கள் பதினெட்டாவது தொடங்கி இருபதாவது இறுதியாக வுள்ள யாண்டுகளில் முறையே தேன் போன்ற நிறத்தினையும், இருபத்தொன்று தொடங்கி இருபத்து மூன்றாவது இறுதியாக வுள்ள யாண்டுகளில் முறையே சங்கை ஒத்த நிறத்தினையும் உடையனவாம். இருபத்துநான்கு யாண்டு தொடங்கி மும்மூன்று யாண்டுகளாக அப் பற்கள் முறையே வெளிவிடுதலையும், அசைதலையும், வீழ்தலையும் உடையனவாகும். ௧௬௩

எக் குதிரையின் முகநுனியில் வளைந்த மூன்று இரேகைகளுள்ளனவோ அது நிரம்பிய ஆயுளையுடையதாகும். அவ் இரேகைகள் குறையக் குறைய அக் குதிரையின் ஆயுளும் குறைந்ததாகும். ௧௬௪

முழங்கால்களை மேற்றூக்கியெறிதல், உதட்டினால் ஒலித்தல், முதுகை யசைத்தல், நீர்நிலையில் நிற்றல், நடக்குங்கால் இடையே நின்றுவிடுதல், முதுகு நிலத்திற் பொருந்த வீழ்தல், பின்புறமாக நடத்தல், கால்களை உயரத்தூக்குதல் ஆகிய இக் குணஞ் செயல்களை உடைய குதிரைகளும், பாம்பைப் போன்ற நாவினையுடைய குதிரையும், கரடியை யொத்த நிறம் வாய்ந்த குதிரையும், அச்சமிக்க குதிரையும் மிகவும் பழிக்கப்படுவனவாம். நெற்றியில் மறுவோடு கூடிய திலகம் அமையப்பெற்ற குதிரை பழிக்கப்படுவதாய்த் தன்னையுடையார்க்குக் கேடு விளைப்பதுமாம். ௧௬௫-௧௬௬

எருதிற்கு நான்காம் ஆண்டில் வெண்மை நிறம் வாய்ந்த எட்டுப் பற்கள் நிறைந்து தோன்றும். அதன் ஐந்தாம் ஆண்டிற் கடைப்பக்

---

௧௬௨-௧௬௩. அப்பற்கள் நடு, மருங்கு, கடைகளிலுள்ளவை. நடுப்பற்களிரண்டும், அவற்றின் இருமருங்குமுள்ள பற்களிரண்டும், அவற்றின் இருமருங்குமுள்ள கடைப்பற்களிரண்டும் முறையே ௯-௧௦-௧௧-ஆம் யாண்டுகளில் பொன்மை நிறத்தினையும், ௧௨-௧௩-௧௪-ஆம் யாண்டுகளில் முறையே வெண்மை நிறத்தினையும் ௧௫-௧௬-௧௭-ஆம் யாண்டுகளில் முறையே கண்ணாடிபோன்ற ஒளியினையும் ௧௮-௧௯-௨௦-ஆம் யாண்டுகளில் முறையே தேன்போன்ற நிறத்தினையும், ௨௧-௨௨-௨௩-ஆம் யாண்டுகளில் முறையே சங்கை ஒத்த நிறத்தினை எய்துவன வெனவும், ௨௪-௨௫-௨௬-ஆம் யாண்டுகளில் முறையே வெளிவிடுதலையும், ௨௭-௨௮-௨௯-ஆம் யாண்டுகளில் முறையே, அசைதலையும், ௩௦-௩௧-௩௨-ஆம் யாண்டுகளில்முறையே வீழ்தலையும் உடையனவாமெனவும் பகுத்துணர்ந்து கொள்க.

கங்களிலுள்ள இரண்டு பற்களும் வீழ அவ்விடத்திற் புதிய பற்கள் மீண்டும் தோன்றுவனவாம். கசுஎ

ஆறும் ஆண்டில் கடைப் பற்களின் அயற்பற்களிரண்டும், ஏழாம் ஆண்டில் அவற்றின் அயற்பற்களிரண்டும், எட்டாம் ஆண்டில் நடுப் பற்களிரண்டும் முறையே வீழ அவ்விடங்களில் மீண்டும் புதிய பற்கள் தோன்றுவனவாம். கசுஅ

எட்டாம் ஆண்டின் பின் இரண்டிரண்டு ஆண்டுகள் வரை அப் பற்கள் முறையே கருமை நிறத்தினையும், பொன்மை நிறத்தினையும், வெண்மை நிறத்தினையும், சிறிது சிவந்த நிறத்தினையும், சங்கை ஒத்த நிறத்தினையும் எய்தும். அதன் பின் அப் பற்கள் அசைதலையும் வீழ்தலையும் உடையனவாம். கசுகூ

இங்குக் கூறியவண்ணமே ஒட்டகத்திற்கும் ஆயுள் வரையறை முதலியன அறிந்துகொள்ளல் வேண்டும். கஎ0

கஉ. யானை முதலியவற்றை யடக்கிக் காக்கு முறை.

செலுத்துதற்கும் இழுத்து நிறுத்துதற்குமுரிய நுனிமுகம் பொருந்திய தோட்டியே யானைகளை யடக்குதற்குத் தக்க கருவியாகும். அக் கருவியால் யானைப்பாகர் யானைகளை ஒறுத்து நன்னடை பயிற்றல் வேண்டும். கஎக

குதிரைக் கடிவாளத்தின் இருமருங்குமுள்ள பன்னிரண்டங்குல நீளம் வாய்ந்த மேற்பாகங்களிரண்டும், அவற்றின் உட்பக்கங்களிற் பொருந்தினவும் வன்மை மிக்கனவுமாகிய நிறுத்தல் இழுத்தற்குரிய கருவிக் கூறுகளோடும், கயிறு கோத்தற் குரிய வளையங்களோடும் கூடினவாக இருத்தல் வேண்டும். இத்தகைய கடிவாளத்தாற் குதிரையை யடக்கி வயப்படுத்தல் வேண்டும். கஎஉ-கஎஙூ

எருதையும் ஒட்டகத்தையும் மூக்குக் கயிறுகளால் நன்கு அடக்கியாளல் வேண்டும். குதிரை எருது ஒட்டகம் ஆகிய இவற்றின் உடம்பிலுள்ள அழுக்கைப் போக்குதற்குக் கூர்மை மிக்க நுனிகளையுடைய சப்தபாலம் என்னும் கருவி உரியதாகும். கஎச

மனிதரையும் விலங்குகளையும் எப்பொழுதும் தகுதியான தண்டங்களால் அடக்கியாளல் வேண்டும். விசேடமாகப் படைவீரர்களை அடித்தொறுக்குந் தண்டத்தாலன்றிப் பொருட்டண்டத்தால் அடக்கியாள இயலாது. கஎ௫

எருதுகளையும் குதிரைகளையும் நீர்ச்சுரப்புள்ள நிலப்பகுதியி லும், யானைகளையும் ஒட்டகங்களையும் காட்டுநிலத்திலும், காலாட் படைகளை வெப்பமும் தட்பமும் ஒத்த நிலப்பகுதியிலும் வைத்துப் போற்றல் வேண்டும். களசு

அரசன் ஒரு யோசனை தூரத்திற்கு நூறு படைவீரர்களாகத் தன் இராச்சிய முழுதிலும் படைகளை நியமித்துக் காத்தல் வேண் டும். களஎ

பண்டங்களைச் சுமந்து செல்வதில் யானையும், ஒட்டகமும், எரு தும், குதிரையும் ஆகிய இவை சிறந்தனவாம். கார்காலமல்லாத மற் றைக் காலங்களில் இவ் வெல்லாவற்றினும் வண்டியே சிறந்ததாக எண்ணப்படும். களஅ

கஙு. போர் வென்றி கொள்ளு முறை.

அறிவிற் சிறந்த அரசன், தன் பகைவன் மிகச் சிறியனாயினும் அவனை வெல்லுதற்கு மிகச் சுருங்கிய படைப் பலத்தைத் துணைக் கொண்டு செல்லலாகாது. வன்மைமிக்க அமயப்படை பெரிதெனினும் அதனையுந் துணைக்கொண்டு செல்லலாகாது. களகூ

போர்ப்பயிற்சி யில்லாத படையும், வன்மையில் படையும், அம யப்படையும் பஞ்சுத்துய் போல எளியனவா மாதலின் அவற்றை மதி வலிமிக்க அரசன் எப்பொழுதும் போர்த் தொழிலல்லாத மற்றைக் காரியங்களிற் சேர்ப்பித்தல் வேண்டும். கஅ0

உயிர்க்குக் கேடுவருங்கால் ஆற்றலில்லாத ஒருவன் மாறுபட்ட செயல்களைச் செய்தற்கு எப்பொழுதும் முயல்வான் ஆற்றல் வாய்ந்த ஒருவன் அங்ஙனம் மாறுபட்ட செயல்களைச் செய்தற்கு முயல்வா னல்லன். கஅக

ஒருவன் உடல்வலி மிக்கானாயினும் வீரம் இல்லாதவனாக இருப் பின் போர்க்களத்தில் நிற்றற்குத் தகுதியில்லாதவனாவான். அங்ஙன மாயின் ஆற்றல் குறைந்தவனும் வீரம் இல்லாதவனும் ஆகிய ஒருவன் பகைவரோடு பொருதற்கு எங்ஙனந் தகுதி யுள்ளவனாவான்? (ஆகான் என்றபடி.) கஅஉ

---

களகூ. அமயப் படை-போர், குறித்து அப்பொழுது திரட்டப்படுவது. இதனை இப் பிரகரணத்தின் க0-ஆம் சுலோகத்திற் காண்க.

கஅக. உயிர்க்குக் கேடு வருங்கா லென்பதனை ஆற்றல்வாய்ந்த ஒருவற்குங் கூட்டிக் கொள்க. மாறுபட்ட செயல்கள்-யுத்த தருமத்திற்கு விரோதமானவை.

நன்கு பயிற்சி செய்யப்பட்ட ஒருவன் குறைந்த வலியுடைய னுயினும் வீரமுடையனுயிருப்பின் பகைவரை வெல்லுதற்குத் தகுதி யுடையனுவான். அங்ஙனமாயின் மிக்க உடல் வன்மையும், சிறந்த போர்ப்பயிற்சியும், வீரமும் வாய்ந்த ஒருவன் எங்ஙனம் பகைவர் பால் வெற்றி கொள்ளாதிருப்பன்? (வெற்றிகொள்வான் என்றபடி.) ௧௮௩

போர்ச்செயலில் மூலப்படை தன்னுயிர்க்குக் கேடு நேர்ந்த விடத்தும் தன் தலைவனை விட்டொழிதற்கு விரும்பாதாதலின் அரசன் நன்கு பயிற்சி செய்யப்பட்ட வன்மைமிக்க அம் மூலப்படை யின் துணைகொண்டு பகைவரைக் குறித்துப் போர்க்களத்தை யடை தல் வேண்டும். ௧௮௪

சொற்கடுமையாலும், தண்டக்கடுமையாலும், வேதனக்குறை வாலும், அச்சத்தாலும், எப்பொழுதும் வேற்றிடத்திருத்தலாலும், மிக்க வேலைக் களைப்பாலும் படைவீரர்க்கு மனவேறுபா டுண்டா கும். ௧௮௫

ஓரரசனுடைய படைவீரர் மனவேறுபா டுடையராயிருப்பின் அவரால் அவ்வரசற்குச் சிறிய வெற்றியு முண்டாகாது. ஆதலின் பகைவர் படைக்கு மனவேறுபாட்டையும், தன் படைக்கு மனவேறு பாடின்மையையும் அரசன் ஆராய்ந்து செய்தல் வேண்டும் ௧௮௬

அரசன், எப்பொழுதும் தன் பகைவரது படைக்கு மறைவிற் கொடுக்கப்படும் வஞ்சப்பொருட் கொடையால் மனவேறுபா டுண் டாம்வண்ணம் விரைந்து செய்தல் வேண்டும். ௧௮௭

வணக்கத்தாலும் பணிவிடை செய்தலாலும் மிகவுஞ் சிறந்த ஆற்றல்வாய்ந்த பகைவனையும், பெருமைப்படுத்தலாலும் கொடை யாலும் தன்னின் மிக்க ஆற்றல்வாய்ந்த பகைவனையும் தன் மாட்டு அன்புடையராகச் செய்துகொள்ளல் வேண்டும். போர்ச்செயல்க ளால் தன்னிற் குறைந்த வலியினையுடைய பகைவனையும், நட்புரிமை யால் தன்னோடொத்த வன்மை வாய்ந்த பகைவனையும் வயப்படுத்து வெல்லுதல் வேண்டும். இவ்வெல்லாப் பகைவரையும் பேதோபாயங்க ளால் தன்வயப்படுத்துக்கொள்ளல் வேண்டும். ௧௮௮

பகைவரைத் தன் வயப்படுத்துதற்குரிய உபாயம் அவர்தம் சிறந்த படைகளை வேறுபடுத்தலினும் வேறொன்றின்று. ஒருவன் சிறந்த படைகளையுடையனு,யிருக்குங்காறும் அவன் பகைவன் நீதி

யுடையனாதலோடு பெரு நெருப்பிற்குக் காற்றுத் துணைசெய்தல் போல அவற்கு நண்பனாகவும் இருந்து துணைசெய்வான். க௮௯

பகைவரால் விலக்கப்பட்டு வந்த படையைத் தன் படையின் பக்கலில் வைத்துக்கொள்ளலாகாது. தனிமையில் வைத்துப் பிற செயல்களில் நியமனஞ் செய்தல் வேண்டும். அப் படையைப் போர் செய்தற்பொருட்டு நியமிக்கவேண்டுமாயின் முதற்கண் ஏவுதல் வேண்டும். நட்புப் படையை முற்புறத்தாதல், பிற்புறத்தாதல், இரு மருங்குகளினாதல் வைத்தல் வேண்டும். ௪௯0

## கச. போர்க்குரிய நாளிகக் கருவிகள்.

மந்திரத்தாலும், எந்திரத்தாலும், நெருப்பினாலும் வெளிப்படுத் தெறியப்படும்படை விடுபடை (அஸ்திரம்) எனவும், அங்ஙன மல்லாத வாள் குந்தம் முதலியன விடாப்படை (சஸ்திரம்) எனவும் கூறப் படும். க௯௧

விடுபடை நாளிகமெனவும் மாந்திரிகமெனவும் இரண்டுவகைப் படும். க௯௨

அரசன், தன்பால் மாந்திரிகப்படை இல்லாதிருக்குங்கால் வெற்றி குறித்து எப்பொழுதும் வாள் முதலிய விடாப்படைகளோடு நாளிகப்படையையும் மேற்கொள்ளல் வேண்டும். க௯௩

போர்க்குரிய கருவிகளின் வகைகளை யுணர்ந்தோர் அக் கருவிகளின் குறிய வடிவம், நெடிய வடிவம், நுதிவிசேடம் ஆகிய இவற்றால் விடுபடை விடாப்படைகளுக்குப் புதுமையாகவும் வேறு வேறாகவும் பெயரிட்டு வழங்குவர். க௯௪

பெரு நாளிகம், சிறு நாளிகம் என்னும் வேறுபாட்டால் நாளிகப் படை இரண்டுவகைப்படும். க௯௫

குறுக்காய் மேனோக்கிய துளையினை அடியில் உடையதும், ஐந்து சாண் அளவு நீண்ட குழாய்த்தண்டினை யுடையதும், அடியிலும் நுனியிலும் குறி வைத்து அடித்தற்குரிய திலபிந்துக்களோடு கூடியதும், எந்திர தாடனத்தால் நெருப்பை வெளிப்படுத்துவதும்,

---

க௮௯. சிறு நெருப்பை அவித்தலும் பெரு நெருப்பை வளர்த்தலும் காற்றினியல்பாம். அது போலப் படைவலி குறைந்த அரசற்கு ஊறு செய்தலும், படைவலி மிக்க அரசற்குத் துணைசெய்தலும் பகை யரசற்கு இயல்பாம் என்பது போதரும்.

க௯௪. நுதி - கூரிய நுனி.

கற்பொடிகளைத் தாங்கியிருக்கும் கன்னமூலத்தை யுடையதும், நல்ல மரத்துண்டாற் செய்யப்பட்ட உபாங்கத்தை அடிப்பாகமாக வுடையதும், நடுவில் ஓர் அங்குல அளவு அகன்ற துவாரத்தையுடையதும், தன்னுள்ளே நெருப்புப்பொடி பொதியப்பெற்றதும், சலாகையோடு கூடியதும், வன்மைமிக்கதுமாகிய இதுவே சிறு நாளிகமென்று கூறப்படும். இதனைக் காலாட்படைகளும் குதிரைப்படைகளும் தாங்கிச் செல்லல் வேண்டும். ௧௯௬-௧௯௮

நாளிகக்கருவி, மேற்றகட்டின் வன்மைக்குத் தக்கவாறும், துவாரத்தின் அகற்சிக்குத் தக்கவாறும், நாளத்தின் நீளத்திற்குத் தக்கவாறும், கோளத்தின் பருமைக்குத் தக்கவாறும் தூரத்திலுள்ள குறியைத் தாக்குவதற் குரியதாகும். ௧௯௯

அடிப்பாகத்திலுள்ள மூளையின் சுழற்சியால் குறியை ஒத்துத் தாக்கும் நிலையினையடைவதும், மரத்தினாலாக்கப்பட்ட அடிச்சட்டத்தை யுடையதுமாகிய இது பெருநாளிகம் என்னும் பெயரினையுடையதாய் வண்டிகளாற் சுமந்துசெல்லத் தக்கதாகும். இது நன்றாகப் பிரயோகிக்கப் படுமாயின் வெற்றியைக் கொடுக்கும். ௨௦௦

௧௫. நெருப்புப்பொடி யுண்டாக்கு முறை.

சுவர்ச்சிலவணம் ஐந்து பலமும், கந்தகம் ஒருபலமும் உள்ளே புகை தங்கும்படி எரித்து நன்றாகப் பக்குவஞ் செய்யப்பட்ட சதுரக்கள்ளியும் எருக்கும் ஆகிய இவற்றின் தூய்மை மிக்க கரிக்கட்டை ஒருபலமும் எடுத்துப் பொடிசெய்து கலந்து, சதுரக்கள்ளி எருக்கு வெள்ளைப்பூண்டு இவற்றின் இரசங்களாற் காய்ச்சுதல் வேண்டும். அங்ஙனங் காய்ச்சப்பட்ட பின்னர் வெயிலில் உலர்த்திப் பின் சருக்கரையைப் போற் பிசைந்து எடுத்தல் வேண்டும். அதுவே நெருப்புப் பொடி என்று கூறப்படும். ௨௦௧-௨௦௨

நாளிகக்கருவியின் நிமித்தஞ் செய்யப்படும் நெருப்புப்பொடிக்குக் கந்தகமும் கரித்துண்டும் முற்கூறியபடி ஒவ்வொரு பலமும், ஆறு பலமாதல், நான்குபலமாதல் சுவர்ச்சிலவணமும் சேர்த்தல்வேண்டும். ௨௦௩

---

௧௯௬-௧௯௮. திலபிந்து - எள்ளைப்போற் சிறிய புள்ளிவடிவமாக அமைக்கப்படுவது.

௨௦௧-௨௦௨. சுவர்ச்சிலவண மென்பதை வெடியுப்பெனக் கொள்ளல் வேண்டும்.

இரும்பினு லாக்கப்பட்ட உண்டை (குண்டு) தன்னுள் குளிகைகளை யுடையதாகவும் அவற்றை இல்லாததாகவும் இருக்கலாம். சிறு நாளிகக்கருவியி னிமித்தம் ஈயத்தானுதல் மற்றை உலோகங்களானுதல் குளிகைகளை யமைத்தல் வேண்டும். ௨0௪

வன்மைமிக்க இரும்பினுனுதல் மற்றை உலோகங்களினுனுதல் ஆக்கப்பட்ட நாளிகப்படை நாடோறும் மாசு துடைக்கப்பட்டுத் தூய்மையுடையதாக இருத்தல் வேண்டும். அதனை அப் படைவீரர் சூழ்ந்து காத்தல் வேண்டும். ௨0௫

கரிப்பொடியும், கந்தகமும், சுவர்ச்சிலவணமும், மனேசிலையும் அரிதாரமும், காரீயமும், சாதிலிங்கமும், இருப்புத்துகளும், கருப்பூரமும், அரக்கும், நீலியிலைச் சாறும், சரளமரத்துப் பிசினும் ஆகிய இவற்றை ஒத்த அளவினவாகவும், குறைந்த அளவினவாகவும், மிக்க அளவினவாகவும், சேர்த்துப் பலவகையான நெருப்புப்பொடிகளை அவற்றின் இயல்புணர்ந்தோர் நிலவொளி முதலியவற்றைப் போல் ஒளி விளங்கும்படி செய்வர். ௨0௬-௨0௮

அந் நெருப்புப்பொடியில் தீயைப் பற்றவைத்தலாற் சிறந்த நாளிகக்கருவியின்கண் உள்ள உண்டையைக் குறிக்கட் செலுத்தல் வேண்டும். ௨0௯

முதலில் நாளிகக்கருவியைச் சுத்தஞ்செய்து அதன்பின் அதனுள் நெருப்புப்பொடியை யிட்டு அதன் சலாகையால் அக் கருவியின் நாளமூலத்திற் படியும்வண்ணம் இறுகுற இடித்துச் செலுத்தல் வேண்டும். ௨௧0

அதன்பின் அதனுட் சிறந்த உண்டையையும், கன்னபாகத்தில் நெருப்புப்பொடியையும் பெய்து, கன்னபாகத்தி லிடப்பட்ட நெருப்புப்பொடியில் தீயைப் பற்றவைத்து உள்ளிருக்குங் கோளத்தைக் குறியில் வீழ்த்தல் வேண்டும். ௨௧௧

### ௧௬. மற்றை விடுபடை விடாப்படைகளின் வகைகள்.

வில்லினது நாணிற் பூட்டி வெளிப்படுத்திக் குறியை யெய்து வீழ்த்துதற்குரிய அம்பு இரண்டு முழ நீளமுள்ளதாக இருத்தல் வேண்டும். ௨௧௨

---

௨0௪. "சிறு நாளிகக்கருவியின் நிமித்தம்" என்று பின்னர்க் கூறப்பட்டமையால் இரும்பினு லாக்கப்பட்ட உண்டை பெருநாளிகத்திற் குரியதென்பது போதரும்.

௨0௬-௨0௮. நீலி - அவுரி.

பருத்த அடிப்பாகத்தையும், எட்டுக் கோணங்களையும், தாங்குவோன்மார்பளவு உயரத்தையும் உடையது கதை என்று கூறப்படும். தாங்குவோன் உயரமளவு நீளத்தையும், ஒரு முழ அளவுள்ள அடிப்பாகத்தையும், இரண்டு பக்கத்துங் கூரிய முகங்களையு முடையது பட்டீசம் என்னும் ஆயுதமாகும். ௨௧௩

சிறிது வளைந்ததும், ஒரே நுதியினையுடையதும், நான்கு அங்குல அகற்சியுடையதும், மயிர் களையுங் கத்தியின் கூர்மை போன்ற கூர்மையினையும், தாங்குவோன் உந்திச் சுழியளவு உயரத்தையும், வன்மைமிக்க பிடியினையும், அழகிய சந்திரனை ஒத்து விளங்கும் காந்தியினையும் உடையது வாள் என்னும் ஆயுதமாகும். ௨௧௪

நான்கு முழ உயரமுள்ள தண்டமாகிய அடிப்பாகத்தையும், மயிர் களையுங் கத்தியின் கூர்மை போன்ற கூர்மை பொருந்திய முகத்தினையும் உடையது பிராசம் என்னும் ஆயுதமாகும். கொழுவைப்போன்ற நுனியினையும், முளை போன்ற அடிப்பாகத்தையும், பத்து முழ உயரத்தையும் உடையது ஈட்டி (குந்தம்) என்னும் ஆயுதமாகும். ௨௧௫

ஆறு முழச் சுற்றளவையும், கூர்மை மிக்க நுனிப்பாகத்தையும், நடுவண் அழகிய துளையினையுமுடையது சக்கரப்படையாகும். மூன்று முழ நீளமுள்ள தண்டத்தினையும், மூன்று சிகைகளையும், இருப்புக் கயிறுகளையும் உடையது பாசம் என்னும் ஆயுதமாகும். ௨௧௬

கோதுமை என்னுந் தானியத்தினளவு பருமையுள்ள இருப்புத் தகட்டால் வன்மை பொருந்த ஆக்கப்பட்டுத் தலைப்பாகோடு கூடி உடம்பின் மேற்பாகத்திற்கு அழகு செய்வது கவசமாகும். ௨௧௭

சிறந்த இரும்பினாலாக்கப்பட்டுக் கூரிய நுனியினையும், வன்மையினையுமுடையது கரசம் என்னும் ஆயுதமாகும். ௨௧௮

எவன் மிக நிறைந்த உபகரணப் பொருள்களையும், சந்தி விக்கிரகம் முதலிய அறுவகைக் குணங்களையும், சூழ்ச்சி யறிவையும், பலவகைப்பட்ட போர்க்கருவிகளையும் உடையானோ அவ்வரசனே போர் செய்தற்கு விரும்புதல் வேண்டும். இவை யில்லாமற் போர் செய்வானாயின் தன் இராச்சியத்தையுங் கைவிட்டுத் துன்பமும் எய்துவான். ௨௧௯

---

௨௧௩. ஒரு முழ அளவுள்ள அடிப்பாகம் என்றது அவ் வாயுதத்தின் நடுப்பாகத்தை உணர்த்தும்; அஃது இரு புறமுங் கூரிய முகங்களையுடைமையின், இரு புறத்தும் முகங்களையுடைய ஆயுதத்திற்கு அம் முகங்களை நோக்க அடிப்பாகம் நடுவிடம் என்பது பொருந்தும்.

தம்முட் பகைமையினையுடைய இருவர் தத்தங் காரியங்களை நிறைவேற்றிக்கொள்ளுதற்பொருட்டு மனத்தளர்வின்றி அம்பு வாள் முதலியவற்றாற் செய்யுஞ் செயல் போர்ச் செயலென்று கூறப் படும். ௨௨0

மந்திரங்களோடு செலுத்தப்படும் அம்பு முதலியவற்றாற் செய் யப்படும் போர் தெய்விகமெனவும், நாளிக முதலிய கருவிகளாற் செய்யப்படும் போர் ஆசுரமெனவும், வாள் முதலிய கைப்படைக ளாலும் தோள் முதலிய உறுப்புக்களாலும் செய்யப்படும் போர் மானவம் எனவும் கூறப்படும். ௨௨௧

அப் போர் செய்யுங்கால் ஒருவன் ஒருவனோடும், இருவர் இருவ ரோடும், பலர் பலரோடும், ஒருவன் பலரோடும் எதிர்த்து நின்று செய்யலாம். ௨௨௨

## கள. போரில் விருப்பமுள்ள அரசர்க்குக் காலம் இட முதலியன அறியும் வகை.

அரசன் உரிய காலத்தையும், உரிய இடத்தையும், பகைவலி யையும், தன் வலியையும் ஆராய்ந்து அதன்பின் சாம பேத முதலிய உபாயங்களையும், சந்தி விக்கிரக முதலிய அறுவகைக் குணங்களை யும், சூழ்ச்சியையும் அறிந்து போரில் விருப்பமுடையனாதல் வேண் டும். ௨௨௩

போர் செய்தற்குக் கூதிர்க்காலமும், முன்பனிக்காலமும், பின் பனிக்காலமும் தலைசிறந்தனவாம். இளவேனிற்காலம் இடையாயதா கும். முதுவேனிற்காலம் கடையாயதாகும். கார்காலத்தில் போர்செய் தல் கூடாததொன்றாம். அக் காலத்திற் போர் செய்ய நேரின் சாமோபா யத்தை மேற்கொள்ளல் வேண்டும். ௨௨௪-௨௨௫

அரசன் எக்காலத்திற் போர்ச்செயற்குரிய உபகரணங்கள் நிரம்பப் பெறுதலையும், மிக்க படைப்பலத்தையும், உள்ளக்கிளர்ச்சி யையும், சிறந்த நற்சகுன முண்டாதலையும் உடையனாகின்றானோ அக் காலமே போர்க்குரிய நற்காலமாகும். ௨௨௬

அரசற்கு இன்றியமையாக் காரியநிமித்தம் போர் செய்ய நேர்ந்துழிக் காலம் நன்றாக இல்லையாயின், அப்பொழுது விசுவேச

---

௨௨௩. இச் சுலோகப் பொருள் "வினைவலியுந் தன்வலியும் மாற்றான் வலியுந், துணைவலியுந் தூக்கிச் செயல்" என்னுந் திருக்குறளை நினைவுறுத்து கின்றது.

ளுகிய கடவுளை உள்ளமாகிய கோயிலின்கண் அன்போடிருத்திப் போர் குறித்துச் செல்லல் வேண்டும். ௨௨௭

பசுவிற்கும், பத்தினிப்பெண்டிர்க்கும், அந்தணர்க்கும் கேடு நேர்ந்துழிக் காலநியமனங் கருதாமல் போர்க்குச் செல்லல் வேண்டும். ௨௨௮

அரசன் காலத்திற் கேற்றவாறு தன் படைகள் போர்ப்பயிற்சி செய்தற்குரிய விடங்கள் எந் நிலத்திலுள்ளனவோ அந் நிலம் பகைவர்க்கு மாறுபட்டதாக இருப்பின் அது தலையாயதாகும். ௨௨௯

அந் நிலம் தனக்கும் பகைவர்க்கும் ஒத்ததாகவிருப்பின் இடையாயதாகும் என்று நூற்பொருளுணர்ந்தார் கூறுவர். ௨௩௦

பகைவருடைய படைவீரர் போர்ப்பயிற்சி செய்தற்குப் போதிய தகுதி வாய்ந்ததும், தனக்கு மாறுபட்டதும் ஆகிய நிலம் கடையாயதாகும். ௨௩௧

பகைவரது படை தன்படையினும் மூன்றிலொருகூறு குறைந்ததாகவும், பயிற்சி செய்யப்படாததாகவும், வலியற்றதாகவும், புதிதாகத் திரட்டப்பட்டதாகவும் இருக்குமாயின் உறுதியாகத் தனக்கு வெற்றி கிடைக்கும். ௨௩௨

புதல்வனை யொப்பப் பாதுகாக்கப்படுவதும், கொடையினாலும் மற்றைச் சிறப்புக்களாலும் பெருமைப்படுத்தப்பட்டதும், போர்க்குரிய உபகரணங்கள் நிரம்பப்பெற்றதும் ஆகிய தன் படை வெற்றியை அளிப்பதாகும். ௨௩௩

## ௧௮. சந்தி விக்கிரக முதலிய அறுவகைக் குணங்கள்.

சந்தி, விக்கிரகம், யானம், ஆதனம், சமாச்சிரயம், துவைதீபாவம் என்னு மிவற்றை மந்திரத்திற்குரிய அறுவகைக் குணங்களாக அறிதல் வேண்டும். ௨௩௪

எச் செயலால் வன்மைமிக்க பகைவனும் தன்மாட்டு நட்புரிமையெய்துகின்றானோ அச் செயல் சந்தி என்று கூறப்படும். அச்செயலை அரசன் முயன்று ஆராய்ந்தறிதல் வேண்டும். ௨௩௫

எச் செயலாற் பகைவன் துன்புறுத்தப்பட்டுத் தனக்கு வயமாகின்றானோ அச் செயல் விக்கிரகமாகும். அதனை அரசன் அமைச்சரோடு சூழ்ந்து ஆராய்தல் வேண்டும். ௨௩௬

---

௨௩௪. இவற்றை முறையே நட்பாக்கல், பகையாக்கல், மேற்சேறல், இருத்தல், கூட்டல், பிரித்தல் என்று கூறுவர் பரிமேலழகர். (திருக்குறள் ௬௩௫-உரை.)

தன் விருப்பம் நிறைவேறுதற்பொருட்டுப் பகைவரை அழித்தற்குச் செல்லுதல் யானமாகும். தற்காப்பும் பகைவர்க்குக் கேடும் உண்டாம்வண்ணம் இருத்தல் ஆதனமாகும். ௨௩௭

ஆற்றலில்லாத ஒருவன் எவரால் காக்கப்பட்டு வன்மையுடையனாகின்றானோ அவரைப் பற்றியொழுகுதல் சமாச்சிரயமாகும். தன் படைகளைக் கூட்டங் கூட்டமாகப் பிரித்து வைத்தல் துவைதீபாவமாகும். ௨௩௮

ஆற்றல்மிக்க பகைவனால் நெருக்கப்பட்டு அவற்கு வேறு எதிர்ச்செயல் செய்ய இயலாமல் வருந்தும் அரசன் இடையே சில காலத்தைக் கழித்துப் பின்னர்ச் சந்திசெய்ய முயலல் வேண்டும். ௨௩௯

இச் சந்தி யொன்றே இன்பஞ் செய்யுங் கையுறையாக எண்ணப்படும். அன்பில்லாதனவாகிய பிற வெல்லாம் கையுறையின் பேதங்களாகும். ௨௪௰

எதிர்த்துவரும் பகையரசன் ஆற்றல்மிக்கானாயின் கையுறை பெறாது திரும்புவானல்லன். அவ் வமயம் அக் கையுறை யின்றி வேறு சந்தியென்பது ஒன்று இன்றாம். ௨௪௧

பணிவிடை செய்தற்கு உடன்படல், மகட் கொடுத்தல், நிலங் கொடுத்தல், பொருள்கொடுத்தல் ஆகிய இவற்றுள் ஒன்றைப் பகைவனது ஆற்றற்குத் தக்கவாறு கையுறையாகச் செய்தல் வேண்டும். ௨௪௨

அரசன் பகைவரை வெற்றிகொள்ளுதற்பொருட்டு மந்திரவன்மையால் தன் சாமந்த அரசரைச் சந்தி செய்துகொள்ளல் வேண்டும். வன்மைமிக்க ஒருவன் தன்னை நெருங்கித் தனக்குக் கேடு செய்யக்

---

௨௩௮. முதனூலில் உள்ள "குல்மம்" என்பது கூட்டம் என்று மொழி பெயர்க்கப்பட்டது. குல்மம் படையின் ஓர் அளவைக் குறிப்பதுமாம். ௨-ஆம் அத்தியாயம் ௧௪௰ - ஆம் சுலோகத்திற் காண்க.

௨௩௯. இது முதல் ௨௪௧ - வரை உள்ள சுலோகங்களில் எவர்பால் எவ்வமயம் எவ்வாறு சந்திசெய்துகொள்ளல் வேண்டும் என்பதைப்பற்றிக் கூறுவர்.

௨௪௰. இதனால் உண்மையன்போடு செய்யப்படுஞ் சந்தியாகிய கையுறையே சிறந்ததெனவும், அன்பில்லாதனவாகிய பிற கையுறைகளெல்லாம் அத்துணைச் சிறந்தன வல்ல வெனவும் கூறியவாறாம். பிற கையுறைகளின்ன வென்பதை ௨௪௨ - ஆம் சுலோகத்திற் காண்க.

௨௪௧. எதிர்த்துவருதற்குக் காரணம் மண் பெண் பொன் முதலியவற்றுள் ஒன்றன்பால் வைத்த அவாவேயாம்.

கூடுமாதலின் அவன் இழிந்தவனாயினும் அங்ஙனஞ் செய்யாதவாறு அவனோடு சந்தி செய்துகோடல் நன்று. உ௪௩

நெருங்கிய முட்கள் சூழ்ந்த மூங்கிற்புதர் கூட்டமாக விருக்குமாயின் அதனைக் களைதல் இயலாத தொன்றாம். அங்ஙனமே அரசனும் அமைச்சர் முதலிய குழுக்களோடு கூடியிருப்பின் பகைவரால் வெல்லப்படுவானல்லன். உ௪௪

அரசன் தன்னின் மிக்க ஆற்றல்வாய்ந்த பகைவன்பாற் சந்தியையும், தன்னின் ஒத்த பகைவன்பால் விக்கிரகத்தையும், தன்னிற் குறைந்த பகைவன்பால் யானத்தையும், நண்பரோடு சமாச்சிரயத்தையும் செய்துகொள்ளல் வேண்டும். அரண்களை யடைந்திருத்தலாகிய ஆதனத்தையும் தன்படைகளைக் கூட்டங் கூட்டமாகப் பிரித்து வைத்தலாகிய துவைதீபாவத்தையும் மேற்கொள்ளல் வேண்டும். உ௪௫

அறிவிற் சிறந்த அரசன் தனக்குப் பகைவர் பலராக அவராற் பொதுவாக அச்சம் ஏற்படுமாயின் அவருள் ஆற்றல்மிக்கானோடு தக்க காலத்திற் சந்தி செய்து தன்னைப் பாதுகாத்துக்கொள்ளல் வேண்டும். உ௪௬

தன்னின் மிக்க ஆற்றல் வாய்ந்த பகைவனோடு போர் செய்தலாகாது. மேகம் ஒருபொழுதும் காற்றிற்கு எதிர்முகமாகச் செல்வதில்லை என்னும் இதுவே அதற்கு எடுத்துக்காட்டாகும். உ௪எ

தன்னின் மிக்க ஆற்றல் வாய்ந்தவனிடத்து வணங்கி ஒழுகுவோனது செல்வமும், உரிய காலம் நோக்கிப் பராக்கிரமத்தை மேற்கொள்வோனது செல்வமும் மாறுபட்டொழுகாத ஆற்றைப் போல என்றும் அவரை விட்டு நீங்காவாம். உ௪அ

முற்காலத்தில் ஒருவர்க்கொருவர் கேடு செய்வதில்லை என்று நியமஞ் செய்துகொண்டும் விருத்திராசுரன் இந்திரனாற் கொல்லப்பட்டானாதலின், அறிவிற் சிறந்த அரசன் பகைவனோடு சந்தி செய்துகொள்ளினும் அவனை முற்றும் நம்பலாகாது. உ௪௯

---

உ௪௩. மந்திரம் - சூழ்ச்சி.

உ௪௫. அரண்களை யடைந்திருத்தலாவது, பகைவரை வெல்லுதற்குரிய வன்மைவாய்ந்த தன் அரணுட் காவலோடு இருத்தலும் பகைவர் அரண்களை முற்றுகையிட்டுச் சூழ்ந்திருத்தலுமாம். இக் கருத்துக்களை முறையே உஅ௫-ஆம் சுலோகத்திலும் உஅ௬-உஅஎ-ஆம் சுலோகங்களிலுங் காண்க.

பகைவனால் துன்புறுத்தப்பட்டுக் கேடெய்திய அரசன் தனக்கு நலத்தை விரும்பிக் காலமும், இடமும், படையும் ஆகிய இவற்றைத் தக்கவாறு அமைத்துக்கொண்டு விக்கிரகத்தைத் தொடங்கல் வேண்டும். உ௫0

அரசன் தன்னிற் குறைந்த படைப்பலத்தையும், நட்டோரையுமுடையவனும், அரணுள் இருப்பவனும், கள் காமம் சூது முதலிய விதனங்களில் மிக்க பற்றுடையவனும், குடிகளின் பொருள்களைக் கவர்ந்துகொள்பவனும், மனம் மாறுபட்ட அமைச்சர் படைவீரரையுடையவனும் ஆகிய பகைவனைச் சூழ்ந்து போர் செய்து அழிக்கக் கடவன். இதனையே விக்கிரக மென்றறிதல் வேண்டும். இஃதல்லாத பிறவெல்லாம் கலகமென்றெண்ணப்படும். உ௫க-உ௫உ

மிக்க ஆற்றல் வாய்ந்த சூரனாகிய பகைவனோடு அவனின் மிகக் குறைந்த ஆற்றல் வாய்ந்த அரசன் விக்கிரகத்தை மேற்கொள்ளலாகாது; அங்ஙனங் கொள்ளின் அவன் பொருள் எல்லாவற்றிற்கும் அழிவுண்டாமாதலின். உ௫௩

ஒரு பொருளை அடையவேண்டு மென்று பலர் மேற்கொள்ளும் அவாவே கலகத்திற்குக் காரணமாகும். ஆதலின், அப்பொருளை யடைதற்கு வேறு உபாயம் இல்லையாயின் விக்கிரகத்தை மேற்கொள்ளல் வேண்டும். உ௫௪

இனி, யானம் ஐந்து வகைப்படுமென்று மதிவலிமிக்கோர் கூறுவர். அவையாவன:—விகிருகிய யானம், சந்தாயயானம், சம்பூயயானம், பிரசங்கயானம், உபேட்சையானம் என்பனவாம். உ௫௫

ஓர் அரசன் தன் படைப்பலத்தால் எல்லாப் பகைவரையும் எப்பொழுது போரில் வென்றுகொண்டு செல்லுகின்றானோ அச் செலவை விகிருகியயானம் என்று யானவியல்புணர்ந்த பெரியார் கூறுவர். உ௫௬

தன் நண்பர் எல்லாராலும் பகைவருடைய நண்பர்எல்லோரையும் போரில் தோல்வியுறச் செய்து தானும் படைப்பலத்தாற் பகைவரை நோக்கிச் செல்லுதலும் விகிருகியயானம் என்று கூறப்படும். உ௫௭

---

உ௫0. இது முதல் ஐந்து சுலோகங்களில் விக்கிரகத்தைப் பற்றிக் கூறுவர்.

உ௫௫. இதுமுதல் உ௬௧-வரையுள்ள சுலோகங்களில் யானத்தின் வகைகளைப் பற்றிக் கூறுவர்.

உ௫௬. விகிருகியயான மென்பது பகைவரது படையைப் போருணற்றிச் சிறிது சிறிதாக வென்று மேற்சேறலாம்.

வேறொரு பகைவனை நோக்கிப் போர் குறித்துச் செல்லும் அரசன் தன்னைப் பின்றொடர்ந்து வரும் மற்றொரு பகைவனோடு வெற்றியையும் பயனையும் விரும்பிச் சந்தி செய்துகொண்டு செல்வானாயின் அச் செலவு சந்தாயயானம் என்று கூறப்படும். உ௫அ

ஓர் அரசன் வீரமும் வன்மையுஞ் சிறக்கப்பெற்றுப் போர்த் திறன் வாய்ந்த தன் சாமந்த அரசர் பலரோடு கூடி ஒரு பகைவனை நோக்கிச் செல்லுதல் சம்பூயயானமாகும். உ௫௯

ஓரிடத்தை நோக்கிப் புறப்பட்ட அரசன் பிறிதோரிடத்திற்கு வஞ்சகமாகச் செல்லுதல் பிரசங்கயானம் ஆகுமென்று அவ்வியல் புணர்ந்த அமைச்சர் கூறுவர். உ௬0

பகைவனை நோக்கிப் போர் குறித்துச் சென்ற வன்மைமிக்க அரசன் தோல்வியாகிய மாறுபட்ட பயனை யெய்தி அப் பகைவனைப் புறக்கணித்துவிட்டுத் திரும்பிப் போதல் உபேட்சையானம் என்று கூறப்படும். உ௬௧

## ௧௯. போர் குறித்துச் செல்லுதலின் வகைகள்.

அரசன் இழிகுலத்துப் பிறந்து தீயொழுக்கமுடையனாயினும் கொடையாளியாக விருப்பின் அவன்பாற் படைவீரர் அன்புடையராவர். ஆதலின் தன் படைவீரரை மனமுவந்து கொடுக்கும் பரிசிலால் மகிழ்வித்தல் வேண்டும். போர்குறித்துச் செல்லுங்கால் படைத்தலைவன் சிறந்த வீரர் பலர் தன்னைப் புடைசூழ்ந்துவரத் தான் படைகளின் முன்னணியிற் செல்லல் வேண்டும். நடுவில் மகளிரும், கருவூலமும், அரசனும், சிறந்த மற்றைப் பொருள்களும் போதல் வேண்டும். அப் படைத்தலைவன் தன் படைகளை இரவும் பகலும் முயன்று பாதுகாத்தல் வேண்டும். உ௬உ-உ௬௩

## உ0. படை வகுப்புக்களும் அவற்றின் செயல்களும்.

ஆறும், மலையும், காடும், மதிலுமாகிய இவ்விடங்களுள் எங்கெங்கு அச்சந் தோன்றுமோ அங்கங்கு வியூகமாகச் செய்யப்பட்ட படைவீரரோடு அப் படைத்தலைவன் போதல் வேண்டும். உ௬௪

படைகளின் முன்னணியில் அச்சமுண்டாகுமாயின் பெரிய மகரவியூகமாதல், இருபக்கத்தும் இறக்கைகளையுடைய சேன வியூக

உ௬உ. இதுமுதல் உஅச-வரையுள்ள சலோகங்களில் யானைத்தினிமித்தம் செய்யப்படும் படைவகுப்பு முதலியவற்றைக் கூறுவர்.

மாதல், சிறந்த வீரராலாகிய கூரிய முகத்தினையுடைய சூசி வியூகமா தல் வகுத்துச் செல்லல் வேண்டும். ௨௬௫

படைகளின் பின்புறத்தில் அச்சமுண்டாகுமாயின் சகடவியூகத்தையும், இருமருங்கிலும் அச்சமுண்டாகுமாயின் வச்சிரவியூகத்தையும், எல்லாப் பக்கங்களிலும் அச்சமுண்டாகுமாயின் சருவதோபத்திரவியூகம், சக்கரவியூகம், வியாளவியூகங்களையும் அவ்வந் நிலத்திற்குத் தக்கவாறு பகைப்படையைப் பிளந்து செல்லும்வண்ணம் அமைத்தல் வேண்டும். ௨௬௬

வாத்திய ஒலி விசேடத்தால் அறிவிக்கப்படும் படை வகுப்பியற்றுஞ் சங்கேதங்களைத் தன் படைவீரரலலாத வேறு ஒருவனும் அறியாவண்ணஞ் செய்தல் வேண்டும். ௨௬௭

மதிவலி மிக்க அரசன் பலவகையான படை வகுப்புக்களை எப்பொழுதும் செய்வித்தல் வேண்டும். ௨௬௮

அரசன் குதிரைகளுக்கும், யானைகளுக்கும், காலாட்படைகளுக்கும் வேறு வேறாகவுள்ள படைவகுப்புச் சங்கேதங்களை உரக்க ஒலித்துக் கேட்கச் செய்தல் வேண்டும். ௨௬௯

படைவீரர் வலப்புறம், இடப்புறம், நடு, முற்புறம் ஆகிய இவ்விடங்களில் எங்கிருப்பினும் அப் படைவகுப்புச் சங்கேத ஒலிகளைக் கேட்டு அவ்வொலிக் குறிப்பால் ஆணையிட்டவாறு செய்யக்கடவர். ௨௭௦

இனிச் சங்கேதவழிச் செய்யப்படும் படைவகுப்புக்களின் செயல்களாவன:— திரண்டு கூடுதல், பரவி நிற்றல், நாற்புறத்துஞ் சுற்றுதல், நெருங்குதல், முன்போதல், விரைந்துபோதல், பின்னுகை நடத்தல், வரிசையாக எதிர் நோக்கிப் போதல், நேராக எழுந்து நிற்றல், நிலத்திற் புரளுதல், அட்டதளமும் சக்கரமும் கோளமும் ஊசியும் சகடமும் அருத்தசந்திரனும் ஆகிய இவற்றைப் போல் வடிவமைந்திருத்தல், சிற் சிலவாகப் பிரிந்து நிற்றல், ஒழுங்குபட நிரை நிரையாகச் செல்லல், விடுபடை விடாப்படைகளைக் கையிற் றாங்குதல், அவற்றை உபயோகிக்கச் சித்தஞ் செய்தல், குறியைத் தாக்குதல், விடுபடைகளை எறிதல், கைப்படைகளால் தாக்குதல், அப் படைகளை விரைந்து சித்தஞ் செய்தல், குறியில் வீழ்த்தல், மீண்டும் மீண்டும் அவற்றைப் பற்றுதல், விடுதல், அம்பு வாள் முதலியவற்றாலும் அடி

௨௬௫. சேனம் - கழுகு. சூசி - ஊசி.
௨௬௭. சங்கேதம் - குறியீடு.

வைப்புக்களாலும் தற்காப்புச் செய்து கோடல், எதிர்த்துத் தாக்குதல், இரண்டு வரிசை மூன்றுவரிசை அல்லது நான்கு வரிசைகளாகச் செல்லுதல், முன் நிற்றல், திரும்பிவருதல், பக்கங்களிற் செல்லுதல் என்பனவாம். உஎக—உஎசு

படைவகுப்பிலுள்ள வீரன் அம்புகளைத் திட்டஞ் செய்தற் பொருட்டுப் பின் போந்தும், அவற்றை விடுதற்பொருட்டு முன் சென்றும் முன்னணியில் நின்று அவற்றை எறிதல் வேண்டும். உஎஎ

அம்பை விடுத்த வீரன் நிலத்திலிருத்தல், அன்றி முன்னோக்கிச் செல்லுதல் வேண்டும். தன் எதிரில் இருக்கின்ற பகைவனை அணிமையிற் சென்று கண்டு அவன்பால் தன் அம்புகளை ஒவ்வொன்றாக வாதல், இரண் டிரண்டாகவாதல், கூட்டங் கூட்டமாகவாதல் சங்கேதத்திற் குறிப்பிட்டவாறு மீண்டும் விடுதல் வேண்டும். உஎஅ

ஆகாயத்திற் கிரௌஞ்சப்புட்கள் எங்ஙனம் வரிசை வரிசையாகப் பறந்து செல்லுமோ அங்ஙனஞ் செல்லுமாறு நுண்ணிய கழுத்தினையும், இடைநிகராய பின் இறகினையும், பருத்துத் திரண்ட இறகுகளையும் உடையதாக அமைக்கப்படும் படைவகுப்புக் கிரௌஞ்சவியூகமாகும். இதனை இடத்தின் தகுதிக் கேற்றவாறு நடத்துதல் வேண்டும். உஎகூ

பெரிய இறகுகளையும், இடைநிகராய கழுத்தையும், பின் இறகையும், முகத்திற் கூர்மையையும் உடையதாக அமைக்கப்படும் படைவகுப்புச் சேனவியூகமாகும். உஅ0

நான்கு கால்களையும், நீண்டு பருத்த முகத்தினையும், இரண்டு உதடுகளையு முடையது மகரவியூகமாகும். கூரிய முகத்தினையும், ஒத்து நீண்ட தண்டத்தினையும், அதன் அடியில் துளையினையுமுடையது சூசிவியூகமாகும். உஅக

ஒரே வழியினையும், எட்டுவகையான வளைவுகளையும் உடையதாகச் செய்யப்படுவது சக்கரவியூகமாகும். நாற்புறத்தும் எட்டு வளைவுகளையுடையது சருவதோபத்திரவியூகமாகும். உட்செல்லுதற்குரிய வழியின்மையையும், எல்லாப் பக்கத்தும் முகங்களையும், எட்டு வட்டங்களையுமுடையது கோளவியூகமாகும். சகட வடிவமாக அமைக்கப்படுவது சகடவியூகமாகும். பாம்புவடிவமாக அமைக்கப்படுவது வியாளவியூகமாகும். உஅஉ—உஅ௩

வழியையும் போர்க்களத்தையும் நோக்கி அவற்றிற்குத் தக்க வாறு தன் சிறுபடை பெரும் படைகளை ஒருவியூகமாகவும், இரண்டு வியூகங்களாகவும், பல வியூகங்களாகவும், கலப்பு வியூகமாகவும் அமைத்துக்கொள்ளல் வேண்டும். ௨அ௪

௨௧. பகைவரை முற்றுகையிட்டுத் தடை செய்தல்.

எவ்விடங்களிலிருந்து நாளிக முதலிய எந்திரக் கருவிகளாற் பகைப்படையை அழித்தல் கூடுமோ அவ் விடங்களில் அரசன் தன் படை வீரரோடு கூடியிருத்தல் ஆதனம் என்று கூறப்படும். ௨அ௫

பகைவர் பாதுகாப்பிற்குரிய புல்லும், உணவும், நீரும், மற்றைப் பண்டங்களும் ஆகிய இவ்வெல்லாவற்றையும் உட்செல்லவொட்டா மல் நாற்புறமும் நீண்டகாலம் முற்றுகையிட்டிருத்தலால் முயன்று தடுத்து அத் தடையால் தானியத்தொகுப்பும், நட்புப்படைகளின் வரவும் ஒழியப்பெற்றதும், புல்லும் விறகுங் குறைந்ததும், பொருது வெல்லுதற்குரிய சனங்களையுடையதும் ஆகிய பகைவன் தேயத்தைக் காலம் பார்த்து வென்று தனக் குரியதாக்கிக்கொள்ளல் வேண் டும். ௨அ௬-௨அ௭

வெற்றியை விரும்பும் அரசனும் அவன் பகைவனுமாகிய இரு வரும் போரிற் படைப்பலம் முதலிய குறையப்பெறுவாராயின் அப்பொழுது அவர் தம்முட் சந்தி செய்துகொண்டு ஒற்றுமைப்பட் டிருத்தல் சந்தாய ஆதனம் என்று கூறப்படும். ௨அ௮

ஆற்றன்மிக்க பகைவனால் வேரோடு களையப்பட்டு அப் பகை வனை வெல்லுதற்குரிய உபாயமும் எதிர்ச்செயலுமற்ற அரசன் நற் குலப்பிறப்பும், உண்மையும், மிகச்சிறந்த வன்மையும், பெருந்தன் மையும் வாய்ந்த மற்றோரரசனைப் புகலாக அடைதல் வேண் டும். ௨அ௯

வெற்றியை விரும்பும் அரசற்குத் துணைசெய்தற்பொருட்டு முன்வந்த நண்பரும், சம்பந்திகளும், சுற்றத்தாரும், வேதனம் பெற் றுக்கொண்டாதல் வெற்றியாற் கிடைக்கும் பொருளைக் கூறிட்டுக் கொள்வதென்று உறுதி செய்தாதல் துணைசெய்ய முன் வந்த மற்றை

---

௨அ௫. இதுமுதல் நான்கு சுலோகங்களில் சந்தி முதலியவற்றுள் ஒன் றாகிய ஆதனத்தைக் கூறுவர்.

௨அ௯. இதுவும் பின்வருஞ் சுலோகத்திற் கூறப்படுவதும் சந்தி முதலிய வற்றுள் ஒன்றாகிய சமாச்சிரயத்தின் வகைகளாம்.

அரசரும் சமாச்சிரய மாவர் எனப் பெரியோர் கூறுவர். அரண்களும் சமாச்சிரயம் என்று கூறப்படும். ௨௬௦

துணியப்படாத உபாய காரியத்தை யுடையவனாய்த் தனக்கு நன்மை பயக்கும் காலத்தை எதிர்பார்த்திருக்கும் அரசன் துவைதீபாவம் என்னுங் குணத்தை மேற்கொள்ளக்கடவன். இன்னும் அவன் காகநேத்திரம் போலப் பிறரால் காணப்படாவாறு ஒருகாரியத்தை வெளிப்படையிற் காட்டிப் பிறிதொரு காரியத்தைக் கடைப்பிடித்தல் வேண்டும். ௨௬௧

௨௨. போரிற் சாம முதலிய உபாயங்களை மேற்கோடல்.

சிறந்த உபாயங்களாலும், தக்க சூழ்ச்சிகளாலும், இடையறா முயற்சிகளாலும் சிறு மனிதர்க்கும் காரியங் கைகூடுமாயின் ஓரரசற்கு இவற்றால் எங்ஙனங் கைகூடாததாகும். (எளிதிற் கைகூடுமென்பது கருத்து) ௨௬௨

முயற்சிகளாலேயே காரியங்கள் நிறைவேறுவனவாம், எண்ணங்களான் மாத்திரம் நிறைவேறா. உறங்குகின்ற சிங்கத்தின் வாயில் யானைகள் தாமே சென்று வீழா. ௨௬௩

பிளக்கவொண்ணாத இரும்பும் பிறிதோருபாயத்தால் நீர் போல் உருகுந் தன்மையை யெய்துகின்றது. நெருப்பை அவிப்பது நீர் என்பது உலகப்பிரசித்தம். அங்ஙனமாயினும் பிறிதோருபாயத்தால் அமைக்கப்படும் நெருப்பினால் அந் நீர் சுவறிவிடுகின்றது. மதச் செருக்குமிக்க யானையின் தலையிலும் உபாயத்தினாலேயே மனிதனுடைய அடி வைக்கப்படுகின்றது. ௨௬௪-௨௬௫

௨௬௧. துவைதீபாவம்-சந்தி முதலிய அறுவகைக் குணங்களுள் ஒன்று, அஃது இன்னதென்பதை ௨௫௮-ஆம் சுலோகத்திற் காண்க. ஓரரசன் தன் படையைச் சிறு சிறு குழுவாகப் பிரித்துவைத்தலாகிய துவைதீபாவத்தை மேற்கோடல், பகைவன் தன் படைச் சிறுமை நோக்கி எளிதில் வென்றுவிடலாமென்று கருதிப் போர்க்குரிய மூவன் உபகரணங்களையும் படைகளையும் மிகுதியாக்காமை குறித்தாம். காகத் திருகண்ணின் ஒன்றே மணி கலக்குமாதலின் அம் மணியின் நிலை இன்ன கண்ணிலுள்ள தென்று அறிய வாராது. அது போல அரசன் தான் உண்மையாகக் கடைப்பிடித்துள்ள காரியம் இன்னதென்று பிறரறியாவாறு மேற்கொள்ளவேண்டு மென்பதாம்.

௨௬௩. சிங்கமும் முயன்றாலொழிய யானைகளைக் கவர இயலாதென்பதாம்.

௨௬௪-௨௬௫. நெருப்பினால் நீர் சுவறவேண்டுமாயின் அந் நீர்க்கு ஆதாரமாக இடையில் பாண்டம் முதலியன வமைத்தல் ஈண்டு உபாயமாகும். இவ்விரண்டு சுலோகங்களாலும் சாம முதலிய உபாயங்கள் இன்றியமையாதன வென்று அவற்றின் பெருமை கூறியவாறும்.

உபாயங்களுள் பேதோபாயஞ் சிறந்ததாகும். சந்தி முதலிய அறு குணங்களுள் சமாச்சிரயஞ் சிறந்ததாகும். ஆதலால் வெற்றியை விரும்பும் அரசன் எப்பொழுதும் இவ்விரண்டினையும் மேற்கொள்ளல் வேண்டும். ௨௯௬

அரசன் இவ்விரண்டுமில்லாமல் ஒருபொழுதும் போர் செய்யத் தொடங்கலாகாது. ௨௯௭

பகைவனுடைய படைத்தலைவர், அமைச்சர், அவன் குடிமக்கள், பெண்கள் என்னும் இவரை ஒருவர்க்கொருவர் மனவேற்றுமையுண்டாம்வண்ணம் பேதோபாயத்தைச் செய்தல் வேண்டும். ௨௯௮

அரசன் தன்னுடையவும் பகைவனுடையவு மாகிய சாம முதலிய உபாயங்களையும், சந்தி முதலிய குணங்களையும் எப்பொழுதுஞ் சீர்தூக்கி யறிந்து தன் உயிருக்காதல், பொருள் எல்லாவற்றிற்குமாதல் கேடு நேருங்கால் போர்ச் செயலை மேற்கொள்ளல் வேண்டும். ௨௯௯

௨௩. போரிற் புறங் கொடாமை.

பெண்களுக்கும் அந்தணர்க்கும் இடையூறொழித்து அருள் செய்யுங்காலும், அந்தணர்க்கும் பசுக்களுக்கும் அழிவு நேருங்காலும் உண்டாம் போரில் அரசன் ஒருபொழுதும் புறக்கணிப்பாளனாக இருத்தலாகாது. ௩00

போர் செய்துகொண்டிருக்குங்கால் அதனை யொழித்து எவன் செல்கின்றானோ அவன் தேவரால் மிகவும் கெடுக்கப்படுவான். ௩0௧

குடி புறங்காத்தோம்பும் அரசன் தன்னின் மேற்பட்டாரும், கீழ்ப்பட்டாரும், தன்னோடொத்தாரு மாகிய பகைவராற் போர் குறித்து அழைக்கப்படின் அரசற்குரிய அறத்தை நினைவுட்கொண்டு போர்ச் செயலினின்றும் திரும்பலாகாது. ௩0௨

பிலத் துவாரத்திலுள்ள பிராணிகளைப் பாம்பு கொன்று விழுங்குதல் போலப் போர் செய்தற்கு அஞ்சும் அரசனையும், தேயயாத்திரையில்லாத அந்தணனையும் இந் நிலமகள் அழித்துவிடும். ௩0௩

௩00. அருள் செய்யுங்கால் அச் செயற்குத் தடையாகப் பகைவர் செய்யுஞ் செயல்களாற் போருண்டாம். அழிவு நேர்தல் பகைவராலாம். அப்பொழுது போருண்டாதல் அவ்வழிவை விலக்குதல்பற்றி யாகும்.

அரசிய லறம் பிரமனிடத்தினின்றும் தோன்றினமையின் அந்தணன் தனக்குக் கேடு நேர்ந்துழி அவ் வரசற்குரிய விருத்தியாற் சீவித்தல் உலகத்திற் போற்றப்படுவதொன்றும். ரு0ச

அரசற்குப் படுக்கையில் நிகழும் மரணம் பாவ மரணமாகும். எவ் வரசன் கோழையையும் பித்தநீரையும் கக்கிக்கொண்டு எளிமையுற்று அழுது அம்பு வாள் முதலியவற்றாற் புண்படாத உடலோடு மரணம் எய்துகின்றானோ அவ்வரசனது அம் மரணத்தை அறிவுடையார் பாராட்டுவாரல்லர். ரு0ரு-ரு0சு

செல்வம் படை முதலியவற்றாற் செருக்குமிக்க அரசர்க்குப் போர்க்களத்தன்றி இல்லத்தில் மரணம் நேர்தல் எளிமையையும், செருக்கழிவையும், பாவத்தையுஞ் செய்வதாதலின் அம் மரணம் பாராட்டப்படுவதன்றும். ரு0எ

அரசர்குலத்துப் பிறந்தானொருவன் தன் சுற்றத்தார் சூழப் போர்க்களத்திற் சென்று பகைவனை வெல்லாது சீவித்திருப்பானாயின், அவன் அம்பு வாள் முதலியவற்றாற் பிளந்து கொல்லுதற் குரியனாவான். ரு0அ

போர்க்களத்தில் ஒருவரை யொருவர் வெல்லவேண்டு மென்னும் விருப்பமுடையராய் மிக்க ஆற்றலோடு புறங் கொடாமற் போர் செய்யும் வீரர் துறக்கவின்பம் எய்துவர். ரு0சு

எவ் வீரன் தன் தலைவன்பொருட்டுப் படையின் முன்னணியில் நின்று அச்சங் காரணமாகப் புறங்கொடாமல் வீரத்தோடு போர் செய்கின்றானோ அவன் அழிவில்லாத துறக்கவின்பத்தை யெய்துவான். ருக0

போர்க்களத்தில் இறந்த வீரன் அப் போர்ச்செயலால் எல்லாப் பாவங்களையும் நீக்கித் தூய்மையுடையனாய்ப் புண்ணிய வுலகத்தை யடைவான். ஆதலின் அவ்வீரனைக் குறித்து ஒருபொழுதும் துன்புறலாகாது. ருகக

சிறந்த தெய்வப்பெண்கள் பலர் போர்க்களத்தில் இறந்த வீரனைக் குறித்து இவன் நம் கணவனாவான் என்று அவன்பால் மிக விரைந்து சென்று அவனை யடைவர். ருகஉ

பெருந்தவஞ் செய்து முனிவரரால் அடையப்படும் சிறந்த பதவியைப் போர்க்களத்திற் பகைவரெதிர்நின்று போர் செய்து இறந்த வீரர் எளிதில் விரைந்து எய்துவர். ருகங

எவன் போர்க்களத்திற் புறங்கொடாது போர் செய்கின்றானோ அவற்கு அச் செயலே தவமும், புண்ணியமும், அழிவில்லாத அறக் கடமையும், பிரமசரியம் முதலிய நால்வகை நிலைகளாலும் எய்தும் பயனுமாம். ௩௧௪

மூன்று உலகத்திலும் வீரத்தினுஞ் சிறந்தது வேறு யாதும் இன்று வீரனே எல்லோரையும் பாதுகாப்பவனாவான். வீரன்பாலே எல்லாப் பொருளும் நிலைப்படுவனவாம். ௩௧௫

இயங்கியற்பொருள்களுக்கு நிலையியற்பொருள்கள் உணவாகும். கோரப்பல்லுள்ளவற்றிற்கு அஃதில்லாதவை யுணவாம். கையுறுப் புள்ளார்க்கு அஃதில்லாதவை உணவாகும். அங்ஙனமே வீரர்க்கு அச்சமுடையார் உணவாவர். ௩௧௬

இவ்வுலகத்தில் யோகநெறி யொழுகுந் துறவியும், போர்க்களத் திற் பகைவர் எதிர் நின்று போர்செய்து இறந்த வீரனும் ஆகிய இவ் விருவருமே சூரிய மண்டலத்தைப் பிளந்து கொண்டு செல்பவரா வர். ௩௧௭

ஆற்றன்மிக்க போர்வீரன், போரில் தன்னைக் கொல்ல முயல் வோர் கற்றுணர்ந்த அந்தணராயினும் குரவராயினும் அவரைக் கொன்று தன்னைக் காத்துக்கொள்ளக்கடவன்; இவ்வறம் வேதத் தில் விதிக்கப்பட்ட தொன்றாகலின். ௩௧௮

வீரன், தனக்குப் பகைவராற் பெரிய அச்சந் தோன்றியிருக்கு மாயின், அப்பொழுது செய்யவேண்டியவற்றைப்பற்றி அருளுடையா ரும், பாவமில்லாரும், அறிவிற் சிறந்தாருமாகிய குரவர்களை எவ்வாற் றானும் வினவலாகாது. (குரவரை யடுத்து வினவின் அவர் பகை வர்க்கு எதிர்ச்செயல் செய்ய உடன்படார் என்பது கருத்து.) ௩௧௯

சிறந்த அழகுவாய்ந்த அரண்மனைகளிலும், கழகங்களிலும், உய்யானவனங்களிலும் இருந்து விசித்திரமான பல கதைகளைச் சொல்லி மகிழ்வுறுத்தும் பண்டிதர்கள் அவ்வவ்விடங்களை அலங்கரிப் பவராவர். ௩௨௦

---

௩௧௬. இயங்கியற்பொருள் - மனிதரும் விலங்கு முதலியனவு மாம். நிலையியற் பொருள்கள் - நெல்லும் புல்லு முதலியன. கோரப் பல்லுள்ளன - சிங் கம் புலி முதலியன. அஃதில்லாதவை பசு ஆடு முதலியன.

௩௨௦. இதுமுதல் நான்கு சுலோகங்களில் போர்ச் செயலல்லாத பிற காரி யங்களில் துணைநின்று அலங்கரிப்பவரைக் கூறியது, அவர்களை அவர்கட்குரிய காரியங்களினன்றிப் போர்ச்செயற்குரிய சூழ்ச்சித் துணைவராகக் கருதலாகா தென்பது பற்றியாம்.

மக்கள் பலர் கூடுங் கழகங்களிலிருந்து வியக்கத்தக்க பலசெயல்களைச் செய்கின்றவர்களும், தத்துவ நிருணயத்திற் போற்றத்தக்கவர்களுமாகிய பண்டிதர்கள் அவ்வவ் விடங்களை அலங்கரிப்பவராவர். ௩௨௧

பகைவர்பாற் புரைவழி காண்டலிலும், மனிதருடைய ஒழுக்க வகைகளிலும், யானை குதிரை தேர் என்னுமிவற்றை நடத்துவதிலும், கழுதை ஒட்டகம் வெள்ளாடு செம்மறியாடு என்னுமிவற்றைப் பழக்குவதிலும், பசுக்களையும் பொருள்களையும் பாதுகாத்தலிலும், நடைவழி யமைத்தலிலும், சுயம்வரம் முதலிய காரியங்களிலும், ஆக்கப்பட்ட உணவிற் குற்றம் ஆராய்தலிலும் திறமை வாய்ந்த பண்டிதர்கள் அவ்வவ்விடங்களை அலங்கரிப்பவராவர். ௩௨௨-௩௨௩

அரசன் தன் பகைவருடைய குணங்களைப் பாராட்டும் பண்டிதரைப் பொருட்படுத்தாமல் தானே பகைவருடைய குணங்களை ஆராய்ந்தறிந்து அப் பகைவரால் தனக்குக் கேடு விளையுமென்னும் ஐயந் தோன்றின் அவரைக் கொல்லுதற் குரிய நீதிமுறையைத் தன் படைகளுக்குக் கட்டளையிடல் வேண்டும். ௩௨௪

ஆததாயிகளின் தன்மையை யடைந்த அந்தணன் சூத்திரனையொப்பக் கருதப்படுவான். ஆதலின் ஆததாயியின் கொலையால் அதனைச் செய்வார்க்கு ஒரு குற்றமும் நேராது. ௩௨௫

வாள் முதலிய கருவிகளைத் தாங்கித் தன்னைக் கொலை செய்ய முயன்றுவரும் ஆததாயி சிறுவனாக விருப்பினும் அவனைக் கொன்று விடலாம். அதனால் பாலனைக் கொன்ற குற்றம் உண்டாகாது. அவனைக் கொல்லாதுவிடின் அக் குற்றம் உண்டாம். ௩௨௬

ஓர் அந்தணன் போர்க்களத்தில் அம்பு முதலியன தாங்கிச் சினமுற்று அரசர்குலத்து வீரனை யொப்பப் புறங்கொடாமற்போர் செய்வானாயின் அவனைக் கண்டு கொல்வதால் கொல்வோர்க்கு அந்தணனைக் கொன்ற குற்றம் இன்றாம். இஃது அறநூல்களில் துணியப்பட்டதொன்று. ௩௨௭

எவன் போர்ச்செயலினின்றும் உயிர் வாழ்தலை விரும்பிப் புறங்கொடுத்து ஓடுகின்றானோ அவ் இழிதகையாளன் உடலோடு கூடியிருந்தும் இறந்தவனே யாவன். இன்னுமவன் அந் நாட்டிலுள்ளாரிழைத்த பாவப் பயனையும் அநுபவிப்பான். ௩௨௮

எவன் தன் நட்டோனையும் தலைவனையும் போர்க்களத்தில் விட்டுத் தான் மாத்திரம் வெளிச் செல்கின்றானோ அவன் இம்மையில்

எல்லோராலும் பழிக்கப்பட்டு மறுமையில் நரகத்தையும் எய்து வான். ௩௨௯

எவன் தன் நண்பன் கேடெய்தியிருத்தலைக் கண்டும் அவற்குத் துணைசெய்யாம லிருக்கின்றானோ அவன் இம்மையிற் பழியையும் இறந்தபின் நரகத்தையும் அடைவான். ௩௩0

எவன் தன்னை நம்பித் தன்பால் அடைக்கலமாகப் புகுந்தவனை விலக்குகின்றானோ அவ்வறிவிலான் திசைகளும் இந்திரர்களும் உள்ள காலம்வரை கொடிய நரகத் துன்பத்தை யனுபவிப்பான். ௩௩௧

அந்தணர் ஒழுக்கக்கேட்டினையுடைய அரசனோடு போர்செய்து அவனை அம்பு, வாள் முதலியவற்றாற் கொன்று அழிப்பாராயின் அக் கொலைச் செயலால் அவர் பாவம் எய்துவாரல்லர். ௩௩௨

எப்பொழுது அரசர்குலத்தவர் வன்மையிலரா யொழிய உல கம் இழிந்தவராற் றன்புறுத்தப்படுகின்றதோ அப்பொழுது அந் தணம் துன்புறுத்தும் அவ்விழிந்தாரை அந்தணர் போர் செய்து விரைந்து அழிக்கக் கடவர். ௩௩௩

## உச. அம்பு வாள் முதலியவற்றாற் செய்யப்படும் போர்ச் செயலின் வகைகள்.

மந்திரவன்மை மிக்க படைகளாற் செய்யப்படும் போர் தலையாய தாகும், நாளிகக்கருவி முதலியவற்றாற் செய்யப்படும் போர் இடை யாயதாகும். வாள் முதலிய விடாப்படைகளாற் செய்யப்படும் போர் கடையாயதாகும். கைகலந்து செய்யப்படும் மற்போர் கடையிற் கடை யாயதாகும். ௩௩௪

மந்திரவன்மையால் ஏவப்படும் பெரிய வேற்படை அம்பு முத லியவற்றாற் பகைவரை யழித்தல் மாந்திரிகப் படையாற் செய்யும் போராகும். அது மற்றைப் போர்எல்லாவற்றினுஞ் சிறந்ததாக எண் ணப்படும். ௩௩௫

நாளிகப்படையின் தண்டில் நெருப்புப் பொடியைச் சேர்த்து அதன்கண் உள்ள இருப்புக்கோளத்தைக் குறிக்கண் வீழ்த்துதல் நாளிகப்படைப் போராகும். அது பகைவர்க்குப் பெரிதும்அச்சத்தை விளைவிப்பதாகும். ௩௩௬

குந்தம் முதலிய விடாப்படைகளின் கூட்டத்தாற் பகைவரை யழித்தல் விடாப்படைப் போரென்றறியப்படும். அஃது எப்பொழு தும் நாளிகப்படை இல்லாவிடத்து மேற்கொள்ளத்தக்கதாகும். ௩௩௭

## உ௫. மற்போரும் அதன் வகைகளும்.

பகைவருடைய உயிர்நிலை யுறுப்புக்களையும், உறுப்பின் பொருத்துக்களையும் முறையோடு சென்றுதல் முறை தவறிச் சென்றுதல் திறமையோடு உராய்தலாலும், கைகளாற் பிணித்தலாலும் அவரைக் கொல்லுதல் கைகலந்து செய்யும் மற்போராகும். ௩௩௮

அக் கைப்போர் எட்டுவகையாக எண்ணப்படும். அவ் வகைகள் வருமாறு:—(க)தன் இடக்கையாற் பகைவன் தலைமயிரை இறுகுறப் பிடித்தல், (உ) வன்மையால் நிலத்தில் வீழ்த்திப் பிசைதல், (௩)கால்களால் தலையில் உதைத்தல், (ச) முழங்காலால் வயிற்றின் மோதுதல், (௫) வில்வப்பழம் போல் திரண்ட கைமுட்டியாற் கதுப்புக்களிற் கடுமையாகக் குத்துதல், (சு) அடிக்கடி முழங்கைகளால் தாக்குதல், (எ) அங்கையால் உடம்பில் எப்பக்கத்தும் அறைதல், (அ) பகைவன் சோர்ந்திருக்குங்கால் கபடமாக அவனைப் போரிற் சுழற்றுதல் என்பனவாம். ௩௩௯-௩௪௦

இக் கைப்போர்வகை எட்டனுள் நான்கு வகைகளால் அரசர் குலத்துப் பிறந்தாரையும், ஐந்து வகைகளால் அக் குலத்துப் பிறந்த இழிதகையாளரையும், ஆறு வகைகளால் வணிகரையும், ஏழு வகைகளாற் சூத்திரரையும், எட்டு வகைகளாற் கலப்புச் சாதியினரையும் பொருது அழிக்கலாம். இவ்வெண்வகைக் கைப்போர்களையும் பகைவர் பாலே உபயோகித்தல் வேண்டும். நட்டார்பால் ஒருபொழுதும் மேற்கொள்ளலாகாது. ௩௪௧

## உசு. போர்ச்செயற் குரிய நியமங்கள்.

மனம் மாறுபட்ட அமைச்சரையும் படைகளையு முடைய பகைவரோடு போர் செய்யுங்கால் சிறியனவும் பெரியனவுமாகிய நாளிகப்படைகளை முன்னணியில் நிறுத்தியும், அவற்றின் பின்புறத்தே காலாட் படைகளையும், இருமருங்கிலும் யானைப்படைகளையும் குதிரைப்படைகளையும் நிற்கச் செய்தும் போர் தொடங்கல் வேண்டும். ௩௪௨

படைத்தலைவர் பகைவர் எதிரே சென்றுதல், பக்கங்களில் விலகிச் சென்றுதல் போர் செய்தற்குரிய* நிலம் தமக்கு அநுகூலமாம் வண்ணம் முதலில் தம் படையின் அரைக்கூறு கொண்டு போர் செய்தல் வேண்டும். ௩௪௩

அதன்பின் அமைச்சராற் காக்கப்படும் படைகள் பகையமைச்சரோடு போர் செய்தல் வேண்டும். அதன்பின் அரசனாற் காக்கப்படும் படைகள் பொருதல் வேண்டும். அதன்மேல் அரசன் தன் உயிர்க்கு அழிவு நேர்வதாக விருப்பின் பிறருதவியின்றித் தான் தனியே எதிர்த்துப் பகைவரோடு போர் செய்யக்கடவன். ௩௪௪

நீண்ட வழி நடத்தலாற் களைத்துப்போதல், பசி நீர் வேட்கைகளாற் றுன்பமுறல், நோய் வறுமை அகாலத்திற் பெய்யுங் கன்மழை என்னுமிவற்றால் வருந்தல், கள்வராற் பற்றப்படுதல், சேறு புழுதி நீர் என்னுமிவற்றில் தோய்தல், மனம் வருந்தல், பெருமூச் செறிதல், உறங்குதல், உணவுட்கொள்ளுதல், சுருக்கமாதல், நிலையின்றிக் கலங்குதல், கொடிய நெருப்பின் அச்சத்தால் நடுங்குதல், பெருமழை பெருங்காற்றுக்களாற் கலங்குதல் ஆகிய இவை முதலியன நேர்ந்துழி இவ் விதனங்களால் தன் படை பற்றப்பட்டிருக்குமாயின் அப்பொழுது அவற்றை அரசன் நன்கு பாதுகாத்தலும், இவற்றாற் பகைப்படை பற்றப்பட்டிருக்குமாயின் அப்பொழுது அவற்றை அழித்தலுஞ் செய்தல் வேண்டும். ௩௪௫—௩௪௭

போர்ப்படைக் குரியனவாக இந் நீதிநூலில் அறிவுடையார் கருத்திற் கிணங்கக் கூறப்பட்ட இவ் விதனங்கள் பலவற்றுள்ளும் ஒருவர்க்கொருவர் மனவேற்றுமை யுண்டாம்வண்ணம் செய்தல் சிறந்ததாகும். இது மிக்க பாவச் செயலாகும் என்பது பிற பண்டிதர்கருத்து. ௩௪அ

---

௩௪௩-௩௪௪. இவ் விருசுலோகங்களாலும் ஓர் அரசன் பகைவரோடு போர் செய்யப் புகுங்கால் முதலில் தன் படைத்தலைவனையும் தன் படைகளுட் பாதியையும் செலுத்த வேண்டுமென்பதும், அப் படைத்தலைவனால் வெற்றியின்றாயின் அதன்பின் தன் அமைச்சனையும் அவன் கீழ்ப்பட்ட படைகளையும் போக்க வேண்டுமென்பதும், அவ் வமைச்சனாலும் பகைவரை வெல்ல இயன்றிலதாயின் அதன்பின் தன் காவலுட்பட்ட படைகளை உய்த்தல் வேண்டுமென்பதும், அப் படைகளுக்குங் கேடு நேர்ந்து தன்னுயிர்க்கும் அழிவு வரக்கூடியதாக விருப்பின் பிறருதவியின்றித் தான் தனியே பகைவரோடு போர் புரியவேண்டு மென்பதும் போதரும்.

௩௪௫-௩௪௭. நீண்ட வழி நடந்து களைத்தல் முதலியவாக இங்குக் கூறப்பட்ட நிகழ்ச்சிகளைத் தன் படையுடைத்தாயிருக்குமாயின் அப்பொழுது எளிதில் பகைவர் வென்றவிடுவாராதலின் அரசன் சோர்வின்றிக் காக்கவேண்டு மெனவும், இன்னோரன்ன நிகழ்ச்சிகளைப் பகைப்படை யுடைத்தாயிருக்குமாயின் அப்பொழுது தான் வெல்லுதல் எளிதாதலின் அவ் வமயமறிந்து அழிக்க முயல வேண்டு மெனவும் கூறியவாறு.

௩௪அ. மனவேற்றுமைப்படுத்தல், ஈண்டுப் பகைப்படைக்கென வறிக.

ஓர் அரசற்குத் துணை செய்தற்பொருட்டுப் பல்லாற்றானும் வந்தடைந்த நட்புப்படை முதலியன பகைவரான் மனவேற்றுமை யெய்துமாயின் மிக்க கேடு பயப்பனவாம். அங்ஙனமாயின் மூலப் படையைப் பற்றிக் கூறவேண்டியது யாதுளது? (மூலப்படை வேறு படுக்கப்படுமாயின் அதனையுடைய அரசற்குப் பெருங்கேடு விளையு மென்பது கருத்து.) ௩௪௯

அரசன் தன்னுடையவும், பகைவனுடையவுமாகிய சாம முத லிய உபாயங்களையும், சத்தி முதலிய குணங்களையும், மந்திரச் சூழ்ச்சி களையும் ஆராய்ந்தறிதல் வேண்டும். அங்ஙனம் அறிந்தபின் அறநெறி யான் இயற்றும் போர்ச்செயல்களானுதல், வஞ்சகமாகச் செய்யும் போர்ச்செயல்களானுதல் பகைவனை அழிக்கக்கடவன். ௩௫௦

அரசன் போர் குறித்துச் செல்லுங்கால் போர்த்தொழில் வல்ல தன் படைவீரர்க்கு இயல்பாகக் கொடுக்கப்படும் வேதனத்திற் காற் கூறு மிகுதியாகச் சேர்த்துக்கொடுத்து அவரை இன்புறுத்தல் வேண்டும். போர் நிகழுங்கால் தன் உடலைக் கவசத்தினாலும் தோற் பரிசையாலும் காத்துக்கொள்ளல் வேண்டும். ௩௫௧

அரசன் தன் படைவீரர்க்குத் தறுகண்மையை வளர்விக்கும் கள் முதலியவற்றைக் கொடுத்து நன்றாகக் குடிக்கச்செய்து மன வெழுச்சியை யுடையராக்கி அவருள் மனவேற்றுமை சிறிதும் இல் லாத வீரரைப் போரில் நியமனஞ்செய்தல் வேண்டும். ௩௫௨

நாளிகக் கருவிகளாலும் வாள் முதலியவற்றாலும் காலாட்படை வீரரும், குந்தத்தினாலும் அம்பினாலும் குதிரைவீரரும், யானைவீர ரும், தேர்வீரரும் பகைவரோடு பொருதுஅழித்தல் வேண்டும். ௩௫௩

யானைவீரரோடு யானைவீரரும், குதிரைவீரரோடு குதிரை வீரரும், தேர்வீரரோடு தேர்வீரரும், காலாட்படைவீரரோடு காலாட் படைவீரரும், ஒருவனோடு ஒருவனுமாகப் போர் செய்தல் வேண்டும். வாள் முதலிய விடாப்படைகளால் விடாப்படைகளையும், அம்பு முத லிய விடுபடைகளால் விடுபடைகளையும் தடைப்படுத்தல் வேண் டும். ௩௫௪

## ௨௭. போர்க்களத்திற் கொல்லத் தகாதவர்.

பெரியோர் மேற்கொண்ட யுத்ததருமத்தை யறிந்த போர்வீரன், போர்க்களத்தில் போர்க்கு அஞ்சிப் 'பிறிதோரிடத்தை யடைந்திருப் பவனையும், அலியையும், கைகூப்பி வணங்குகின்றவனையும், தலைமயிர்

௩௫௧. தோற் பரிசை - இதனைக் கேடக மென்றுங் கூறுப.

அவிழ்ந்து சரியப்பெற்றானையும், நிலத்திலிருக்கின்றவனையும், "யான் நினக்கு ஆளாகின்றேன்" என்று கூறுகின்றவனையும், துயில்கின்றவனையும், கவசம் முதலியன பூண்டு சித்தமாக இல்லாதவனையும், ஆடையில்லாதவனையும், ஆயுதமில்லாதவனையும், போர் செய்யாதவனையும் போர்ச்செயலைப் பார்த்துக்கொண்டிருப்பவனையும், பிறனொருவனோடு போர்புரிபவனையும், நீர் பருகுகின்றவனையும், உணவுட்கொள்ளுகின்றவனையும், பிற காரியங்களில் முயன்றிருக்கின்றவனையும், அச்சமுடையானையும், புறங் கொடுத்து ஓடுகின்றவனையும் கொல்லலாகாது. ௩௫௫-௩௫௭

யாண்டு முதிர்ந்தாரையும், பாலரையும், பெண்களையும், துணையில்லாத அரசனையும் கொல்லலாகாது. வீரர் தம் தகுதிக் கேற்ற பகைவீரரோடு பொருது அவரை அழித்தலால் அறத்தினின்றும் வழுவினவராகார். ௩௫௮

அறத்தின்வழிச் செய்யப்படும் போரில் இந் நியமங்கள் உள்ளன. வஞ்சகமாகச் செய்யப்படும் போர்க்கு இந் நியமங்கள் இல்லை. ஆற்றன்மிக்க பகைவனை யழித்தற்கு வஞ்சகமாகச் செய்யப்படும் போர்ச்செயலை யன்றிப் பிறிதோருபாயம் இன்று. ௩௫௯

முற்காலத்தில் இராமனாலும், கிருட்டினனாலும், இந்திரன் முதலிய தேவராலும் இவ் வஞ்சகப்போரே மேற்கொள்ளப்பட்டது. இராமனால் வாலியும், கிருட்டினனால் யவனனும், இந்திரனால் நமுசியும் வஞ்சித்துக் கொல்லப்பட்டனர். ௩௬௦

### ௨அ. பகைவரை வென்றி கொள்ளு முறை.

மலர்ந்த முகத்தினாலும் இனிய சொற்களாலும், தன் பிழையை உடன்படுதலாலும், பணிசெய்தல், ஈதல், வணங்கல், புகழ்தல் என்னுமிவற்றாலும், பிற உதவிகளாலும், நல்ல எண்ணத்தாலும், தெய்வஞ் சுட்டிய சூளுறவாலும் 'பகைவனைத் தன்பால் அன்புடையனாகச் செய்தல் வேண்டும். கத்தியின் கூர்மை போன்ற மனத்தாற் பகைவன் புரைவழியிலுங் குறிவைத்தல் வேண்டும். ௩௬௧-௩௬௨

காரியத்திற்கு அழிவு தேடல் அறிவிலானது குணமாதலின் அறிவுடையான் அவமானத்தை முன்னிறுத்தி மானத்தைப் பின்றள்ளித் தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளல் வேண்டும். ௩௬௩

---

௩௬௩. இன்றியமையாக் காரியம் கேர்ந்துழி அவமானம் சேர்தல் இயல்பெனக் கொண்டும், மானத்தைப் பொருட்படுத்தாமலும் முயறல் வேண்டுமென்பது கருத்து. நன்மைக் காரியம் என்றது போர்ச்செயலை.

அரசன் நூறு படைவீரர் தன்னைச் சூழ்ந்திருக்கத் தான் அரசு கட்டிலிலிருந்து படைவீரரின் காரியங்களை ஆராய்தல் வேண்டும். அதன்பின் தன் நலத்தையும், நாட்டின் நலத்தையும் விரும்பும் படைவீரரை நாடோறும் படைவகுப்பிற் குரிய சங்கேதத்தை யறிவிக்கும் வாத்திய ஒலியின் நியமனப்படி நடத்துவித்தல் வேண்டும். அங்ஙனம் நடத்துங்கால் தன் படைவீரருட் பகைவரால் வேறுபடுக்கப்பட்டாருளராயின் அவரைக் கண்டுபிடித்துக் கொன்றுவிடல் வேண்டும். ௩௬௪-௩௬௫

தன் போர்வீரர் அரிய புதிய காரியங்களைச் செய்வாராயின் அவர்க்கு அரசன் தகுதிக் கேற்றவண்ணம் பொருட்பரிசும், முறையே அதிகார உயர்வும் கொடுத்தல் வேண்டும். ௩௬௬

அரசன் பகைவர்பால் விரைந்து சென்று முதலில் அவர்க்கு நீர், அன்னம், புல் என்னு மிவற்றைத் தடைப்படுத்துதலால் துன்புறுத்திப் பின்னர் அப் பகைவர்க்குப் பொருந்தாத போர்க்களத்தில் முயன்று பொருது அவரை அழித்தல் வேண்டும். ௩௬௭

வஞ்சகமாகச் செய்யப்பட்ட பொன்களை மிகுதியாகக் கொடுத்தலாற் பகைப்படையை வஞ்சித்து வேறுபடுத்து, பகையச்சங் காரணமாக முன் விழித்திருந்தமையால் உண்டாகிய களைப்பினையுடையதும், இனி உறுதியாகத் தனக்கு அழிவு வாராதென்னும் நம்பிக்கையால் நன்கு துயில்கின்றதும் ஆகிய அப் பகைப்படையைத் தான் சோர்விலனாய் நின்று அழித்தல் வேண்டும். அப் பகைவற்குத் துணை செய்யவந்த அவன் நட்புப்படை முதலியன காமம் முதலிய விதனங்களாற் கலக்குண்டிருப்பின் அவற்றை ஒருபொழுதும் அழித்தலாகாது. ௩௬௮ - ௩௬௯

அரசன் தனக்கு மிக்க அணிமையிலுள்ள நாட்டினைப் பகைவன் கொள்ளும்வண்ணம் ஒருபொழுதும் விடலாகாது. ௩௭0

அரசன் சிறிது நேரம் போர்க்குச் சித்தனாய் நிற்கவும், சிறிது நேரம் போரொழிந்து திரும்பிவிடவும் வேண்டும். மீண்டும் சேய்

---

௩௬௪-௩௬௫. படைவீரரை அரசன் நாடோறும் சங்கேத ஒலிப்படி நடத்துவித்தலால் அவருள் தன்மாட்டு அன்புடையார் இன்னாரென்பதையும், பகைவரால் வேறுபடுக்கப்பட்டார் இன்னாரென்பதையும் அறிந்துகொள்வானென்பது கருத்து.

மைக்கணின்றும் போந்து எதிர்பாரா நிலையில் கள்வனைப்போல் நாற்புறமுஞ் சூழ்ந்து பகைவனை வளைத்துக்கொள்ளல் வேண்டும். ௩௭௧

வீரனொருவன் தன் பகைவனை வென்று அவன்பாலுள்ள பொன் வெள்ளி மற்றை உலோகங்களுள் ஒன்றைக் கவர்ந்துகொண்டு வருவானாயின், அது கண்டு மகிழும் அரசன் அப் போர்வீரனை மகிழ்வுறுத்தற்பொருட்டு அவன் செய்தகாரியத்திற்கு ஒத்தவாறு அப்பொருளில் ஒரு கூறு கொடுத்தல் வேண்டும். ௩௭௨

இங்ஙனம் பகைவரை வென்று அவர்பால் அரசிறையை யாதல், அவர்தம் நாட்டின் ஒரு பகுதியையாதல், அவர்தம் நாடு முழுதையுமாதல் கொள்ளல் வேண்டும். அங்ஙனம் கொண்டபின்னர் அந்நாட்டில் வாழும் குடிகளை இன்புறுத்தல் வேண்டும். ௩௭௩

அதன்பின் தூரியம் முதலிய மங்கலவாத்தியங்கள் ஒலிக்கத் தன் நகரத்துட் புகவேண்டும். தனக் குரியராகச் செய்யப்பட்ட அப் பகைவன் நாட்டிலுள்ள குடிமக்கள் எல்லோரையும் தன் புதல்வரையொப்பப் பாதுகாத்தல் வேண்டும். ௩௭௪

## ௨௯. அமைச்சர் கழக முறை.

அரசன் மற்றை மந்திரச் சூழ்ச்சியில் தேயத்திற்கும், காலத்திற்கும், காரியத்திற்கும் ஒத்தவாறு முதலிலும் இடையிலும் முடிவிலும் அமைச்சர்குழுவை நியமனஞ்செய்தல் வேண்டும். ௩௭௫

அமைச்சர் முதலிய அதிகாரங்களில் நியமனம்பெற்றோர் தம் மந்திரச் சூழ்ச்சியின் பயன் இன்னவாறாயிற்றெனவும், இன்ன உபாயத்தாற் காரியத்தை நிறைவேற்றலா மெனவும் இளவரசற்கு அறிவித்தல் வேண்டும். ௩௭௬

அதன்பின் இளவரசன் அவ்வமைச்சர் முதலியவரோடு அவற்றை அரசற்கு அறிவித்தல் வேண்டும். அரசன் முதலில் இளவரசற்கும், அதன்பின் அவ்விளவரசன் அரசன் முன்னிலையில் அமைச்சர்க்கும், அவ்வமைச்சர் தம்கீழ் வினைசெய்யும் அதிகாரிகளுக்கும் கட்டளையிடக்கடவர். புரோகிதன் காரியங்களின் நன்மைதீமைகளைப்பற்றி அரசற்கு உணர்த்தல் வேண்டும். ௩௭௭-௩௭௮

௩௭௫. மற்றை மந்திரச் சூழ்ச்சியாவது - அரசன் தான் முதலிற் கருதிய காரியம் முடிந்தபின்றை மீண்டுஞ் செயற்பாலன வின்னவென் றறிதற் பொருட்டு அமைச்சர் முதலியோரைச் சூழ்வித்தல்.

## ௩௦. படைவீரர்க்குப் பண்ட முதலியன வமைக்கு முறை.

அரசன் எப்பொழுதும் கிராமத்திற்கு வெளியிடத்திலாவது அண்மையிலாவது படைவீரரை வைத்துப் பாதுகாத்தல் வேண்டும். கிராமத்திலுள்ள மக்களுக்கும் படைவீரர்க்கும் கடன்கொடுத்தலும் கடன்வாங்கலு மாகிய வழக்கம் இருத்தலாகாது. ௩௭௯

படைவீரர்க்குரிய பண்டங்களை அவரிருக்குமிடத்தில் தனியே தொகுத்துவைத்தல் வேண்டும். படைவீரரை ஓரிடத்தில் ஓர் யாண்டிற்கு மேல் ஒருபொழுதும் இருக்கச் செய்தலாகாது. ௩௮௦

## ௩௧. படைவீரர்க்குக் கட்டளையிடு முறை.

ஒரு கணப்பொழுதில் ஆயிரக்கணக்கான படைவீரர் போர்க்குச் சித்தமாம்வண்ணம் பயிற்சி செய்வித்தல் வேண்டும். எட்டு நாட்கு ஒருமுறை தன் படைவீரர்க்கு அவரவர்க்கு உரிய நியமங்களைப் பற்றிக் கட்டளையிடல் வேண்டும். ௩௮௧

அக் கட்டளைகளாவன:—"கொடுந் தன்மை, ஆததாயியின்றன்மை, அரசியற் காரியங்களிற் காலந் தாழ்த்தல், அரசற்கு நேரிடுங் கேட்டைப் புறக்கணித்தல், தம் கடமையை மேற்கொள்ளாதிருத்தல், பகைவரோடு அளவளாவுதல் என்னு மிவற்றை வீரர் எப்பொழுதும் ஒழித்துவிடல் வேண்டும். என் ஆணையின்றி ஒருபொழுதும் கிராமத்தினுட் புகுதலாகாது. படைத்தலைவர் முதலிய அதிகாரிகளின் குற்றங்களை எனக்குத் தெரிவித்தல் வேண்டும். எப்பொழுதும் தலைவன் காரியத்தில் எல்லாரோடும் நட்புரிமை யுடையராயிருத்தல் வேண்டும். விடுபடை விடாப்படைகளையும், உடுக்கும் ஆடைகளையும், பல்வகை உணவுகளை யாக்குதற் குரிய பிரஸ்த பரிமாண பாத்திரத்தையும், உண்டியையும், நீரையும் அழுக்கின்றித் தூய்மை யுடையனவாக வைத்துப் பாதுகாத்தல் வேண்டும். பகைவரிடத்தினின்றும் பொருள் பெற்றுக்கொண்டு மனவேற்றுமை யுற்றோரை எனக்குக் காட்டல் வேண்டும். இன்னோரன்ன என் ஆணைகளைக் கடந்து ஒழுகுவோரை இயமன் உலகிற்குப் போக்குவேன்" என்பனவாம். ௩௮௨-௩௮௬

அரசன், படைவகுப்பு முதலிய போர்ச் செயல்களுக்கேற்பப் படைவீரரை நாடோறும் பயிற்சிசெய்வித்தல் வேண்டும். அங்ஙனமே

---

௩௮௨-௩௮௬. 'கொடுந்தன்மை' யெனத் தொடங்கி 'போக்குவேன்' என்பது இறுதியாகக் கூறப்பட்டன வெல்லாம் அரசன் கட்டளைகளாம். பிரஸ்த பரிமாணத்தை உ-ஆம் அத்தியாயம் ௩௮௫ - ஆம் சுலோகத்திற் காண்க.

ஆறுமாதத்திற் கொரு முறை அம்பின் வீழ்ச்சிகளாற் குறியை அடிப்பித்தல் வேண்டும். ௩அஎ

அரசன் காலை மாலை இருபொழுதிலும் படைவீரரின் சாதி, உருவம், வயது, தேயம், கிராமம், இருப்பிடங்களை ஆராய்ந்து கணக்கிடல் வேண்டும். ௩அஅ

## ௩௨. படைவீரரின் வேதன முறை.

அரசன் தன் போர்வீரர் வேதன நிமித்தம் வரையறுத்து வேலை செய்த காலத்தையும், அவர்க்குக் கொடுக்கப்பட்டதும் இனிக்கொடுக்க வேண்டியதுமாகிய வேதனங்களையும், பரிசிலாகக் கொடுக்கப்பட்ட பொருளையும் இவ்வளவினவென்று எழுதுவித்தல் வேண்டும். அவரிடத்தினின்றும் வேதன முதலிய பெற்றுக்கொண்டதற்கு அவர் கைச்சாத்திட்ட பத்திரம் வாங்கல் வேண்டும். தான் அவர்க்கு வேதனத்தின் அளவு குறிக்கப்பட்ட பத்திரங் கொடுத்தல் வேண்டும். ௩அகூ

போர்ப் பயிற்சி நன்கு நிறைவேறப்பெற்ற படைவீரர் முழு வேதனமும், படைவகுப்பு முதலிய போர்ச் செயலில் நியமிக்கப்பட்டுப் பயிலும் வீரர் பாதி வேதனமும் பெறுதற் குரியராவர். ௩௯0

குணக்கேட்டினையுடைய படைத்தலைவனைப் பற்றி யொழுகும் படைவீரர் பகைவரோடு கூடித் தனக்கு அழிவு செய்வாதலின், அரசன் அவ் வீரருள் யாவர் தீய குணங்களிற் பற்றுடையரெனவும், யாவர் தன்னுடைய நற்குணங்களை வெறுக்கின்றவரெனவும், யாவர் தீய குணங்களில் விருப்புவெறுப்பில்லாதவரெனவும் ஆராய்ந்தறிந்து அன்னாரை யழித்துவிடல் வேண்டும். படைவீரர் நற்குண முடையாராயினும் எப்பொழுதும் இன்ப நுகர்ச்சியிற் பற்றுடையரா யிருப்பின் அவரை அரசன் விலக்கிவிடல் வேண்டும். ௩௯௧-௩௯௨

தூய அந்தக்கரணங்களை யுடையாராய் உலகத்தாரால் நம்பப்பட்டாரை உவளகம் முதலியவிடங்களில் நியமித்தல் வேண்டும். அங்ஙனமே தூய அந்தக்கரணங்களையும் நம்பிக்கையையு முடையாரைப் பொருள் முதலியன செலவழிக்குங் காரியங்களில் நியமித்தல் வேண்டும். ௩௯௩

இன்னும், மற்றை அரசியற்காரியம் எல்லாவற்றிலும் உலகத்தாரால் நம்பப்பட்டோரையே நியமனஞ் செய்தல் வேண்டும். அங்ஙனமின்றி நம்பிக்கை யில்லாதாரை நியமனஞ் செய்யின் அவர் அரசர்க்குப் பழியையே விளைவிப்பர். ௩௯௪

அரசன் தன் பகைவரிடத்தினின்றும் வேறுபடுக்கப்பட்ட அமைச்சர் முதலிய குழுவினரையும், பகையரசனது தீய குணத்தால் நாடோறும் மானமிழந்து வருந்தும் படைத்தலைவரையும், இன்னும் பகைவரைச் சார்ந்தாருள் தன் காரியத்திற்குத் துணைநிற்போரையும் நல்ல வேதனம் உதவிக் காத்தல் வேண்டும். ௩௯௫

அரசன் பொருள்நசையாலும், பணிசெய்யாமையாலும், பகைவரிடத்தினின்றும் வேறுபடுக்கப்பட்டு வந்தார்க்கு அரைக்கூறு வேதனம் கொடுத்தல் வேண்டும். பகைவனால் விலக்கப்பட்டுத் தன்பால் வந்த நற்குணமுடையாரை நல்ல வேதனங் கொடுத்துக் காத்தல் வேண்டும். ௩௯௬

௩௩. நாடிழந்த பகைவற்கு வாழ்க்கைநிமித்தம் உதவும் பொருள் வகைகள்.

ஓரரசன், போரில் வென்று பகைவன் நாட்டைத் தனக்குரிமையாக்கிக்கொள்ளுவானாயின் அன்றுதொட்டு அந் நாட்டை இழந்தவற்கு வாழ்க்கைக்கு வேண்டிய அளவு வேதனங் கொடுத்தல் வேண்டும். அவன் புதல்வர்க்கு அதனில் அரைக்கூறு வேனதமும், அவன் மனைவிக்குக் காற்கூறு வேதனமுங் கொடுத்தல் வேண்டும். ௩௯௭

நாடிழந்த பகைவனுடைய புதல்வன் முதலியோர் நற்குணம் நிறைந்தவராகவிருப்பின் அவர்க்கு அந் நாட்டிற் காற்கூறும், அவர் நற்குண மிலராயின் நாட்டின் முப்பத்திரண்டி லொருகூறும் கொடுத்தல் வேண்டும். ௩௯௮

நாடிழந்த பகைவன் சேர்த்துவைத்த கருவூலப் பொருள்களைத் தான் நுகர்தற்பொருட்டுக் கவர்ந்துகொள்ளலாம். அப் பொருட்கு முன் கூறப்பட்ட அளவிற் பாதியளவு வட்டி ஏற்படுத்தல் வேண்டும். அம் முதற்பொருள் இருமடங் காகும்வரை வட்டி சேர்க்கலாம். அதன்மேற் சிறிதும் சேர்த்தலாகாது. ௩௯௯-௪௦௦

நாடிழந்த பகைவர் நற்குணம் நற்செயல்களை யுடையராயிருப்பின் அரசன் தன் பெருமையை வெளிப்படுத்துதற் பொருட்டு அவர்க்கு அவர்தம் முன்னை நிலைகளாகிய அரசியற் சிறப்புக்களை யளித்துப் பெருமைப்படுத்தல் வேண்டும். அவர் ஒழுக்கக்கேடுடையராயிருப்பின் அவரைத் துன்புறுத்தல் வேண்டும். ௪௦௧

---

௩௯௮. இதன் முற் சுலோகத்திற் பகைவனுடைய புதல்வன் முதலியோர்க்குக் கொடுக்கவேண்டிய பொருளளவைக் கூறி இதன்கட் கொள்கைவேறுபாட்டால் நாட்டைக் கூறிட்டுக் கொடுக்கவேண்டிய முறையைக் கூறினர்.

௩௯௯-௪௦௦. முற்கூறப்பட்ட அளவு? வட்டி சேர்த்தல் எதற்காக?

### ௩௪. * யாமிகர்களை அமைக்கு முறை.

யாமங்காப்போரின் அளவை நோக்கி அவ்வளவிற்குத் தக்கவாறு அவர்பொருட்டுப் பகலும் இரவுமாகிய ஒருநாளை எட்டாக, அன்றிப் பத்தாக, பன்னிரண்டாகக் கூறுபடுத்தல் வேண்டும். இங்ஙனமன்றி வேறு விதமாகக் கூறுபடுத்தலாகாது. ௪0௨

இங்ஙனஞ் செய்யப்பட்ட காலக்கூறுகளை யாமிகர் தம் அளவிற்கேற்பப் பணி செய்தற்பொருட்டு முதலில் மேற்கொள்ளல் வேண்டும், அங்ஙனங் கொள்ளுங்கால் அவ் யாமிகருள் முதல் யாமிகன் இறுதியான காலக்கூற்றையும், மற்றை யாமிகர் தத்தங் கூறுகளின் முற்பட்ட கூறுகளையும் எய்தக் கடவர். ௪0௩

* யாமிகராவார் நகரங்களிலும் இல்லங்களிலும் நாடோறும் யாமம் யாமமாக வகுத்துநின்று காவல்செய்பவர். யாமம் - எழு நாழிகை.

௪0௨. அவ்வளவிற்குத் தக்கவாறென்றது காலக்கூறுகளை யாமிகர் மிகுதியாக விருப்பின் மிகுதியாகவும், சுருக்கமாக விருப்பின் சுருக்கமாகவும் செய்ய வேண்டு மென்பது கருதி. இதனால் ஓர்யாமம் எழு - நாழிகையாகவும், ௬-நாழிகையாகவும், ௫ நாழிகையாகவும் கொள்ளல் வேண்டு மென்பது போதரும்.

௪0௩. இங்குக் கூறிய மாறுதல் இரண்டாம்நாட்டொடங்கி மேற்கொள்ள வேண்டுமென்பது கருத்து. இஃது யாமிகர் உடல் நலம் கருதிச் செய்யப்பட்டதாகும். பின்வரும் ௪0௬-ஆம் சுலோகத்தில் யாமிகர் நால்வருக்குக் குறையாதிருக்க வேண்டும் என்று கூறுவாராதலின் அக் குறைந்த அளவினராகிய நான்கு யாமிகர் நாளொன்றிற்குக் குறைந்த அளவிற் கூறுசெய்யப்பட்ட எட்டு யாமங்களில் நான்கு நாள்வரை பணி செய்யு முறையை இச் சுலோகத்திற் கூறியவண்ணம் பின்வரும் விளக்கத்திற் காண்க:—

| நாள் | யாமம் எட்டு | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 1 | அ | இ | உ | எ | அ | இ | உ | எ |
| 2 | இ | உ | எ | அ | இ | உ | எ | அ |
| 3 | உ | எ | அ | இ | உ | எ | அ | இ |
| 4 | எ | அ | இ | உ | எ | அ | இ | உ |

ஈண்டு அ, இ, உ, எ என்பன யாமிகர் நால்வரைக் குறிக்கும்.

மீண்டும் இங்ஙனமே முதலாமவனிடம் இறுதிக்கூற்றையும், இறுதிக்கூற்றிலுள்ளவன்பால் முற்கூற்றையுமாக மாற்றி யமைத்து இங்ஙனம் இரண்டா நாட்டொடங்கி இரண்டாமவன் முதலியோரை மாற்றி நியமித்தல் வேண்டும். ௪0௪

ஒரு நாளில் நால்வர்க்கு மேற்பட்ட யாமிகர்களை என்றும் நியமித்தல் வேண்டும். அன்றிக் காரியங்களின் பெருமை நோக்கி அதற்கேற்ப ஓரே அமயத்திற் பல யாமிகரை நியமித்தலும் பொருந்தும். ௪0௫

நால்வர்க்குக் குறைந்த யாமிகரை ஒருபொழுதும் நியமித்தலாகாது. ௪0௬

எல்லோருடைய காரியங்களும் யாமிகர் கண்ணெதிரில் நடைபெறுமாதலின் அவர் காக்கவேண்டுவனவற்றைப் பற்றியும், பிறர்க்கு அறிவுறுத்தவேண்டுவனவற்றைப் பற்றியும் அவர்க்குக் கட்டளையிடல் வேண்டும். அவ் யாமிகரும் அங்ஙனமே அவற்றை மேற்கொண்டு செய்தல் வேண்டும். ௪0௭

யாமிகன் ஓரளவு வரையறுக்கப்பட்ட பொன் முதலியவற்றை மரத்தினாலாக்கப்பட்ட தன் இருப்பிடத்தின் நடுவண் வைத்துக் காத்தல் வேண்டும். தனக்குரிய யாமத்தின் இறுதியில் தன் இடத்தையடைந்த மற்றொரு யாமிகன்பால் அப் பொன் முதலியவற்றின் வரலாற்றுண்மைகளைக் கூறி அவற்றைக் காட்டல் வேண்டும். ௪0௮

யாமிகர் சோர்வின்றி யிருத்தற்பொருட்டுத் தூரத்தினின்றும் அவர்க்கு அடிக்கடி யறிவுறுத்தல் வேண்டும். ௪0௯

## ௩௫. அரசன் அறத்தின் வழுவாது நின்று குடிகளை இன்புறுத்தல்.

அரசன் எப்பொழுது தான் செய்யவேண்டிய அறக்கடமைகள் எல்லாவற்றையும் செவ்விதிற் காக்கின்றானோ அப்பொழுதே அவன் எல்லா வுலகங்களிலும் பாராட்டப்படுபவனாவான், அங்ஙனம் அறங் காவல் செய்யானாயின் பாராட்டப்படுவானல்லன். ௪௧0

---

௪0௪. இச் சுலோகப் பொருள் முற்சுலோகப் பொருளையே மீண்டும் விளக்கிக் கூறுவதாகத் தோன்றுகின்றது.

௪0௮. கண்டுக் கூறிய பொன் முதலியன உரியவன் இன்னானென்று அறியப்படாமல் எடுக்கப்பட்டதும், கள்வராற் கவரப்பட்டு வந்ததுமாம்.

௪0௯. இதற்கு இவ்வாறன்றி "சனங்கள் விழிப்புடையராயிருத்தற் பொருட்டு யாமிகர் தூரத்தினின்றும் அடிக்கடி அவர்க்கு அறிவுறுத்தல் வேண்டும்" என்றும் பொருள் கூறலாம்.

இடைவிடாது காரியம் புரிதலும், உறுதியாக நல்லன கோடலும், உறுதியாகத் தீயன விலக்கலும் எவன்மாட்டு அமைந்துள்ளனவோ அவனே நீண்ட காலம் அரசியலின்பத்தை யனுபவிப்பவனாவான். ௪௧௧

நிலையில்லாத குணஞ் செயல் மொழிகளையும், நட்டோனிடத்து எப்பொழுதும் வஞ்சித்தொழுகுதலையும் உடைய அரசன் விரைந்து தன் பதவியினின்றும் இழிந்து அழிவெய்துவான். ௪௧௨

தன் விருப்பின்வண்ணந் திரியும் சிங்கத்தை யடக்குதற்குப் புலிகளும் யானைகளும் வலியுடையனவல்ல. அங்ஙனமே தன் விருப்பின் வழி யொழுகும் அரசனை யடக்குதற்கு அமைச்சரெல்லாரும் வலியுடையராகார். ௪௧௩

ஆயிரக் கணக்கான பஞ்சுப் பொதிகள் யானையைத் தடைப்படுத்தும் ஆற்றலுடையனவாகா. அங்ஙனமே நிறைந்த வேதனம் பெறும் அமைச்சர் முதலிய அதிகாரிகள் பலர் தன் விருப்பின்வண்ணம் ஒழுகும் அரசனைத் தடைப்படுத்த வலியிலராவர். ௪௧௪

சேற்றில் வீழ்ந்து கிடக்கும் ஓர் யானையை வெளிப்படுத்துதற்கு மற்றொரு வலிமிக்க யானையே ஆற்றலுடையதாகும். அங்ஙனமே நீதியினின்றும் நழுவிய ஓர் அரசனை எடுத்து நிலைப்படுத்துதற்கு மற்றொரு நீதிமிக்க அரசனே ஆற்றலுடையனாவான். ௪௧௫

ஆற்றன்மிக்க அரசனிடத்து வினைசெய்வார் சிறியராயினும் அவர்பால் திருவும் ஒளியும் தங்குவனவாம். ஆற்றல் குறைந்த அரசன்பாலும் அவன் அமைச்சர் முதலியோர்பாலும் அவை அத்துணை தாலும் தங்குவனவில்ல. ௪௧௬

பல நூல்களா லாக்கப்பட்ட ஒரு பெருங்கயிறு சிங்கம் முதலிய விலங்குகளையும் பிணித் திழுத்தற் குரிய வலியுடையதாகும். அங்ஙனமே அமைச்சர் நட்டார் உறவினர் முதலிய பலரோடும் ஒன்று கூடி வாழ்தல் அரசற்கு மிகவும் சிறந்த ஆற்றலாகும். ௪௧௭

---

௪௧௪. இதனால் தன் விருப்பின்வண்ணம் ஒழுகும் அரசனை நன்னெறிப்படுத்துதற்கு அமைச்சர் முதலியோர் வலியிலராவர் என்று முன் இரண்டு சுலோகங்களிற் கூறிய பொருள் வலியுறுத்தப்பட்டதாகும்.

௪௧௬. சிறந்த அரசனுடைப் பணியாளரிடத்திருக்கும் திருவும் ஒளியும் இழிந்த அரசன்மாட்டும் அவன் அமைச்சர் முதலியோர்மாட்டும் இராவென் பது கருத்து.

குறைந்த இராச்சியத்தையுடைய அரசன் பொல்லாத பணியாளரை யுடையனு யிருத்தலாகாது; படைகளை மிகுதியாகவும் வைத்துக்கொள்ளுதலாகாது; தன் புதல்வர் முதலியோரின் நலங் குறித்துப் பொருட்களுலத்தை எப்பொழுதும் வளர்த்தல் வேண்டும். ௪௧அ

உண்டி, படுக்கை எல்லாவற்றையும் முறையே பசி, உறக்கங்களுக்கு இனியவாம்வண்ணம் அமைத்துக்கொள்ளல் வேண்டும். இன்றேல் விரைவில் வறுமையாளனுவான். ௪௧௯

அரசன் என்றும் இத்தகைய முறைமையாற் பொருளைச் செலவிடல்வேண்டும். வேற்று வழியிற் செலவிடலாகாது. சிறந்த வலியையும் அறத்தினையுமுடைய அரசன் தன்னிற் குறைந்த வலியினையுடையராய் அறத்தையும் நீதியையும் இழந்த அரசரை எப்பொழுதும் கள்வரை யொப்பக் கருதித் தண்டித்தல் வேண்டும். ௪௨0

எல்லா 'வறங்களையும் பாதுகாத்தலாற் சிறிய அரசனும் உயர்ந்த தன்மையை யடைவான். அவ் வறங்களை யழித்தலாற் பெரிய அரசனும் இழிந்த தன்மையை யெய்துவான். ௪௨௧

உலகத்துமக்கள் அறத்திலும் மறத்திலும் புகுதற்குக் காரணம் அரசனேயாகும். அரசனுந்தன்மையை யடைந்தவன் யாவனுயினும் அவனே உலகத்தில் மிகச் சிறந்தவனுக எண்ணப்படுவான். ௪௨௨

## ௩௬. இந் நீதிநூன் மாட்சி.

உலகத்துமக்கள்பொருட்டு மனு முதலியோரால் ஆதரித்துக் கூறப்பட்ட அறநூற் பொருள்களைப் பற்றியே பிருகுவின் புதல்வராகிய சுக்கிரரால் இந் நீதிநூலில் இரண்டாயிரத்திருநூறு சுலோகங்கள் கூறப்பட்டன. ௪௨௩

சுக்கிரராற் கூறப்பட்ட இந் நீதிசாரநூலை இடைவிடாது ஆராயும் அரசன் எப்பொழுதும் அரசியற்காரியமாகிய சுமையைத் தாங்குதற்கு ஆற்றலுள்ளவனுவான். ௪௨௪

மூன்றுலகங்களிலும் சுக்கிரரால் அருளிச்செய்யப்பட்ட இந் நீதிநூற்கு ஒப்பான நீதிநூல் வேறில்லை. ஆதலாற் சுக்கிரர் அருளிய நீதி

---

௪௧அ. வினைசெய்வார் கொடியராக விருப்பின் அவரை. யடக்கியாள முடியாதென்பதும், மிகுதியான படைகளை வைத்துக்கொள்ளின் பொருட் செலவு அதிகமாக நேருமென்பதும் கருத்து.

௪௨௩. இதனுல் இந் நீதிநூலில் உ௨0௦-க்கு மேற்பட்ட சுலோகங்கள் சுக்கிரராற் செய்யப்பட்டன வல்ல வென்பது போதரும்.

நூலே உண்மை நீதிநூலாகும். மற்றை நீதிநூல்களெல்லாம் உலகியலை நடத்துவோர்க்கு அங்ஙனம் அல்லாதனவாம். ௪௨௫

திறமையின்மையாலும் பொருணசையாலும் இங்குக் கூறிய நீதிகளைக் கடைப்பிடித்தொழுகாத அரசர் நல்வினைப்பேறிலராய் நரகத்திற்காளாவர். ௪௨௬

சுக்கிரநீதி நான்காம் அத்தியாயத்தில்,
"படையியல்" என்னும்
ஏழாம் பிரகரணம் முற்றிற்று.
நான்காம் அத்தியாயம் முற்றிற்று.

## ஐந்தாம் அத்தியாயம்.
(கிலநீதி.)

இனி, எஞ்சிய இவ் வத்தியாயத்தில் இராச்சியத்தின் ஏழு அங்கங்களுக்கும் மற்றை மக்கள் எல்லோர்க்கும் நலம் பயப்பனவும், முன்னை நீதிநூல்களுக்கு ஒத்தனவுமாகிய எஞ்சிய எல்லா நீதிகளையும் சுருக்கிக் கூறுவேன். ௧

ஓர் அரசன் "நூறு யாண்டுகள் கடப்பினும் பகைவனை என் வயமாக்குவேன்" என்று மனத்தால் நினைந்து பகைவனது புரை வழியை ஆராய்தல் வேண்டும். ௨

நல்ல மந்திரச்சூழ்ச்சியையும் படைப்பலத்தையுமுடைய அரசன் தன் பகைவனை அவன் நாட்டிலுள்ளாரிடத்தும் வினைசெய்வாரிடத்தும் நம்பிக்கை யில்லாதவனாகவும், குறைந்த படைப்பலத்தையும் குறுகிய சூழ்ச்சித்துணையையு முடையனாகவும் இருக்கும்வண்ணம் தன் திறமையால் தானே செய்தல் வேண்டும். ௩

சோர்வின்மையையுடைய அரசன் பணிசெய்தலையும் வாணிகத் தொழிலையும் தலைக்கீடாகக் கொண்டு, பகைவனது நாட்டுட் புகுந்து, அந் நாட்டின் இயல்பை யாராய்ந்து கண்டு, பூனையைப்போலவும், வேடனைப் போலவும், கொக்கைப் போலவும் தன் இயல்பை மறைத்து நின்று, அப் பகைவற்கு அபயமளித்துக் காம முதலிய விதனங்களிற் பற்று வைத்தொழுகும் மனத்தினை யுடைய அப்பகைவனை யழித்துவிடல் வேண்டும். ௪-௫

---

௧. கூறுவேன் என்பது சுக்கிராசாரியர் கூற்று.

௨. பகைவன் தன்னினும் வலியனாயினும் அச்சமுற்று முயற்சியைக் கைவிடாமல் அவனை வெல்லுதற்குரிய காலத்தையும் அவன் தவறுதலையும் எதிர்பார்த்திருத்தல் வேண்டு மென்பது கருத்து.

பகைப்படையை யழித்தற் குரிய ஆற்றல் வாய்ந்த தன் படையையே போர்ச்செயலில் நியமித்தல் வேண்டும். பகைவனது நாட்டிலிருக்கும் தன் படையையும், மறைவில் தன்பால் வெறுப்புக்கொண்டிருக்கும் படையையும் போர்த்தொழிலில் நியமனஞ்செய்தலாகாது. ௬*

அரசன் போர்விருப்ப மிக்கவனாய் ஒன்றையும் ஆராயாது தன் படையை விரைந்து போர்க்கணுய்த்து அழித்துவிடலாகாது. வினை செய்வான் தனக்கு அரசன் கொடை முதலிய சிறப்புக்களைச் செய்திலனெனினும் அவ்வரசனை விட்டு ஒழிதலாகாது. இன்னும் அவன் அமயத்தில் உயிர்வாழ்க்கை கருதியாதல், பொருணசையானாதல், பகைவன்பக்கல் எய்தி அவற்கு வயமாதல் கூடாது. ௭

பயிர்கள் மேகம் பொழியும் நீரால் எய்தும் வளர்ச்சியை ஆறு முதலியவற்றின் நீரால் எங்ஙனம் எய்தும்? குடிகள் அரசன் உதவும் பொருளால் எய்தும் வளர்ச்சியை மற்றைப் பொருளுடையார் பொருளால் எங்ஙனம் எய்துவர்? (ஈரிடத்தும் முறையே எய்தாவென்பதும் எய்தாரென்பதும் கருத்து.) ௮

அரசன் தான் வலிமிக்க பெரிய வீரனாயினும் மென்மைத்தன்மையை வெளிக்காட்டிப் பகைவன் நாட்டிற் புகுந்து முதலில் அப்பகைவற்குக் காரியத்துணைவனாக விருத்தல் வேண்டும். ௯

அதன் பின் தான் அங்கு வேரூன்றப்பெற்று, வன்மையாற் பகைவனை வேரோடு களைந்து, அவன் இராச்சிய முழுதையுங் கவர்ந்து கொள்ளல் வேண்டும். அப் பகைவன்பால் வெறுப்புமிக்க அவன் உறவினரையும் படைத்தலைவரையும் அவ்விராச்சியத்தின் சில கூறுகளைக் கொடுத்துத் தன்வயப்படுத்திக்கொள்ளல் வேண்டும். ௧௦

வேரற்ற மரத்தின் கிளைகள் உலர்ந்துபோதல் போல, அரசனையில்லாத படைத் தலைவன் முதலியோர் அவ் வமயத்திலும் நாளடைவிலுமாக அழிந்து விடுவர். ௧௧

௬. 'பகைவன் நாட்டிலிருக்கும் தன்படையாவது:—அப்பகைவன் பகைமையின்றி முன்னர் நண்பனா யிருக்குங்காலத்தில் அவனுக்குத் துணை செய்தற் பொருட்டு உதவப்பட்டதாகும். அவனுக்கு அப்பொழுது அப் படை நட்புப் படையாகும். அது தன் கடமையை நிறைவேற்றித் திரும்புதற்கு முன் அவன் பகைவனாய்விடின் அவன் நாட்டிலிருக்கும் அப் படையை அதற்குரிய அரசன் நம்பிப் போர்க்கண் ஏவுதல் கூடாதென்பது கருத்து. ஏவக்கூடாமைக்குக் காரணம் அப் படை பண்டு மேற்கொண்ட அன்பு பிறழ்ந்திருக்குங்கொலோ வென்னும் ஐயமாம்.

அரசியலாகிய மரத்திற்கு அரசன் வேராகவும், அமைச்சர் பருத்த அடிக் கிளைகளாகவும், படைத்தலைவர் கிளைகளாகவும், படைவீரர் தளிர்களாகவும், குடிகள் மலர்களாகவும் கூறப்படுவர். நிலத்தினின்றுங் கிடைக்குங் கூறுகள் பழங்களாகவும், நிலம் வித்தாகவுங் கூறப்படுவனவாம். ௧௨

பகையரசன் தன்பால் நம்பிக்கையுடையனா யிருப்பினும் தான் அவன்பால் நம்பிக்கை வைத்தொழுகலாகாது. அப் பகையரசனது இல்லத்திலாதல் அவன் தனித்துறையும் இடத்திலாதல் தான் சிறிய துணையுடையனாய்ச் செல்லலாகாது. ௧௩

அரசன் உருவத்தாலும் வேடத்தாலும் தன்னைப் போன்ற சிலரை எப்பொழுதும் தன் பக்கலில் வைத்துக்கொள்ளல் வேண்டும். தன் அரசிலக்கணத்திற்குரிய அடையாளப் பொருள்களால் தன்னைக் காத்துக்கொள்ளல் வேண்டும். வேண்டுங்காலத்தில் மற்றைச் சாமானிய மனிதனைப் போலவும் இருத்தல் வேண்டும். ௧௪

பொருட்பெண்டிராலும், ஆடுவோராலும், பாடுவோராலும், பல்வகைக் கள்ளுக்களாலும் பகைவன் அறிவைக் கெடுத்து மயக்கமுறுத்தல் வேண்டும். ௧௫

அரசன் அழகிய ஆடை யணிகலன்களை யணிந்துகொண்டும், மனைவி மக்கள் முதலிய குடும்பத்தோடும், தனக்குரிய சிறந்த அடையாளங்களையுடையனாய், அச்சமுற்று ஒருபொழுதும் போர்க்களத்தை யடைதலாகாது. ௧௬

அரசன் தான் ஆற்றலுடையனா யிருக்குங்காலும் தன் பெண்டிர், புதல்வர், வினைசெய்வார், பகைவர் என்னும் இவரிடத்தில் ஒருகண்மேனும் சோர்வுடையனா யிருத்தலாகாது. இன்னும் அவன் தன் புதல்வன் இயற்கையில் நற்குணமுடையனா யிருப்பினும் அவனுக்கு ஒருபொழுதும் தன் தலைமை முழுதையும் அளித்தலாகாது. அங்ஙனம் தன் தலைமை முழுதும் அவனுக்கு அளிப்பின், அது தனக்கும் குடிகளுக்கும் பெருங்கேட்டையும், அப் புதல்வனுக்கு மிக்க செருக்கையும் உண்டாக்கும். இதனாலன்றே திருமால் முதலிய தேவரும் தம் மக்கட்குத் தம் அதிகாரத்தன்மையைக் கொடுத்திலர். ௧௭-௧௮

௧௪. தன்னைப் போன்ற சிலரைத் தன் பக்கத்தில் வைத்துக்கொள்ளுதல் பகைவர் விரைந்து தன்னை யறிந்துகொள்ளாமைப் பொருட்டாம்.

அரசன் இறந்துவிடின் இளவரசன் முதலியோர் அவ் வரசுரிமைத்தலைமையிலுள்ள பற்றினலும் மனத்தினது மிக்க அவாவாலும் அரசனில்லாத அந் நாட்டை ஒருகணமேனும் ஆளுதற்குத் திறமையில்லாதவராவர். ஆதலின், அரசன் தன் வாழ்நாளிற் சில நாட்கள் எஞ்சியிருக்குங் காலத்தே நற்குணம் நற்செய்கை வாய்ந்த தன் புதல்வன்பால் தன் அரசுரிமைத் தலைமையை யளித்தல் வேண்டும். ௧௯

அப் புதல்வன் சிறந்த அவ் வரசுரிமையை யெய்திய பின் நல்ல நீதிமுறையாற் குடிகளைக் காத்தலோடு முன்னை அமைச்சர் முதலியோரைத் தந்தையை யொப்ப மதித்துப் பெருமைப்படுத்தல் வேண்டும். ௨௦

அவ் வமாத்தியர் முதலியோரும் அவ் வரசிளங்குமரன் கட்டளையிடுங் காரியம் தக்கதாயின் அதனை முன்னையினும் மிகுதியாக ஏற்றுச் செய்தல் வேண்டும். அக் காரியம் தக்கதன்றாயின் "இதனைப் பின்னர்ச் செய்வோம்" என்று கூறிக் காலம் தாழ்த்தலால் ஒழித்துவிடல் வேண்டும். ௨௧

அவ் வமைச்சர் முதலியோர் பொருணசையால் அப் புதிய அரசனேடு கூடி நீதியல்லாத வழியில் ஒழுகலாகாது. அவர் அங்ஙனம் நீதியல்லாத வழியில் ஒழுகுவாராயின் அவ் வரசனேடு ஒரு தலையாக அழிவெய்துவர். ௨௨

தன் குல பரம்பரையில் அன்பு வைத்தொழுகும் வினைசெய்வாரை வெறுத்துப் புதியரை யடையும் அரசன் பகைவர்வயமாதலோடு தன்னுயிரையும் பொருளையும் இழந்துவிடுவான். ௨௩

புதியராய் வந்தவர் நற்குணம் நற்செய்கை நிரம்பப்பெற்றவராக விருப்பின், அவரைப் பழையோரை யொப்பப் பரிபாலித்தல் வேண்டும். அவர் ஒழுக்கங்களைச் சோதித் தாராய்ந்தபின் அவரைப் பண்டை வினைசெய்வாரோடு காரியத்தில் நியமனஞ் செய்தல் வேண்டும். ௨௪

வஞ்சகர் தம் காரியம் முடியுங்காறும் மிக்க மென்மை வாய்ந்த பாராட்டுரைகளாலும், வணக்கத்தாலும், பணி செய்தலாலும், கொடையாலும், இன்சொற்களாலும், அரசனைப் போற்றுவர். உண்மை கூறும் பெரியார் தமக்குக் காரியம் இன்றெனினும், அரசன் முன்

௧௯. இதனல் ஓர் அரசன் தான் இறத்தற்குச் சின்னுள் முன்னரே தன் மகனுக்கு இராச்சிய பட்டாபிடேகஞ் செய்தல் வேண்டுமென்பது கூறப்பட்டது.

னில்லையிலும் அவனைக் காணாதபொழுதிலும் உண்மையாகவே அங்ஙனம் போற்றுவர். இப் பெரியார்க்கும் அவ் வஞ்சகர்க்கு முள்ள வேறுபாடு ஆகாயத்திற்கும் நிலத்திற்கு முள்ள வேறுபாடு போலாம். ௨௫-௨௬

பலராலும் அறியப்பட்ட தூர்த்தரும், பிறர் மனை நயப்போரும் கள்வரு மாகிய இவர்களே வஞ்சகத்திற்குப் பிறப்பிடமாவார். இவருள் அவ் வஞ்சகச்செயலிற் சிறந்தார் தூர்த்தரே. பிறர்மனை நயப்போருங் கள்வரும் அத்துணைச் சிறந்தாரல்லர். ௨௭

இவ் வுலகத்திற் பிறர்மனை நயப்போரும் கள்வரும் பிறர்க்குரிய பொருள்களைக் கவர்தலால் பழிக்கப்படுவர். ஆனால் அவர் அப்பொருள்களைப் பிறர் அறியாவண்ணங் கவர்வர். தூர்த்தரோ, அப்பொருள்களை அப்பொருட்குரியார் பார்த்துக்கொண்டிருக்கும் பொழுதே கவர்ந்துவிடுவர். ௨௮

அத் தூர்த்தர் எப்பொழுதும் நல்லனவற்றைத் தீயன போலவும், தீயனவற்றை நல்லனபோலவும் அறிவிலார்க்குக் காட்டி அவரிடத்தினின்றும் தம் காரியத்தை நிறைவேற்றிக்கொள்வர். ௨௯

இன்னும் அத் தூர்த்தர் தம்பாற் பிறரை மிகவும் நம்பிக்கையடையச்செய்து பின்னர் அந் நம்பினாரை வஞ்சித்தழித்துவிடுவர். ௩௦

வேடன் மானை அகப்படுத்துக் கொலை செய்தற்பொருட்டு முதலில் இனிய கீதத்தைப் பாடி இன்புறுத்தல் போல, வஞ்சகர் எவனுக்குக் கேடு செய்ய விரும்புகின்றனரோ அவனுக்கு முதலில் நலத்தையே செய்வர். ௩௧

மனிதர் விரைந்து பெரும்பொருள் திரட்டுவாராயின், அது வஞ்சத்தாலன்றி ஆகாததொன்றும். பிறர் பொருளைக் கவர்ந்தாலன்றி எவனும் விரைந்து பெரும்பொருளாளனாகமுடியாது. வஞ்சத்தாலன்றி ஒருவன் விரும்பியதை விரும்பியவாறு அடையஇயலாது. ௩௨

அரசர் பிறர்பொருளைக் கவர்தல் சிறந்த தம் கடமையாகுமென்று கருதி, அதனால் தம்முள் ஒருவர்க்கொருவர் பகைமை மேற்

௨௭. தூர்த்தர் - புறத்தே பிறர் ஐயுறாத வேடத்தையும் அகத்தே வஞ்சக ஒழுக்கத்தையு முடையார்.

௩௨. ௨௫-வது ஸ்லோக முதல் இதுவரையுள்ள எட்டுச் ஸ்லோகங்களால் வஞ்சகரின் குணஞ் செயல்களும், அவர் பொருளீட்டுமுறையும் விளக்கிக் கூறப்பட்டன. அரசனும் பிறரும் இவ் வஞ்சவியல்புடையார் பொய்யொழுக்கத்தில் நம்பிக்கை வைத்தலாகாதென்பது கருத்து.

கொண்டு பெரும்போர் விளைத்து இறுதியில் தம் உயிரையும் போக்குவர். ௧௩

பிறர் பொருளைக் கவர்தலால் அரசனுக்குப் பாவமின்றெனின், கள்வனுக்கும் அதனாற் பாவமில்லை யென்று முடியும். ஆதலின் பற்றுக்கோட்டின் வேறுபாட்டால் எல்லாப் பாவங்களும் தம் இயல்பு மாறி அறவுருவமாக நிலைபெறும். ௧௪

எச் செயல் பலராலும் பாராட்டப்படுகின்றதோ அஃது அறமாகும். எச் செயல் பலராலும் பழிக்கப்படுகின்றதோ அது மறமாகும். ஆராய்ந்து துணிதற்கரிய அறத்தின் இயல்பை எவரும் அறிதற்கு ஆற்றலுடையரல்லர். ௧௫

இவ் வுலகத்தில் அளவின்மிக்க கொடையும், தவமும், உண்மை கூறுதலும் ஆகிய இவை வறுமையைச் செய்வனவாம். எச்சொல்லில் அறம் பொருட் பயன்களில்லையோ அச்சொல் மிகவும் வீணை தொன்றும். ௧௬

ஒரு மனிதன் உரிய காலத்தையும் உரிய இடத்தையும் அறிந்து, சிறிதும் ஐயமிலனாய், அறத்தையாதல் பொருளையாதல் ஈட்டவல்லனாயின், அவன் எல்லாராலும் போற்றத் தக்கவனாவான். எப்பொழுதும் எக் காரியத்திலும் ஐயத்தை மேற்கொள்பவன் எவராலும் விரும்பப்படான். ௧௭

மனிதன் பொருட்கு அடிமையாவான். பொருள் எவர்க்கும் அடிமையாகாது. ஆதலின் மனிதன் எப்பொழுதும் சோர்வின்றிப் பொருளீட்ட முயலவேண்டும். அப் பொருளால் அறமும், இன்பமும், வீடும் மனிதர்க்கு உண்டாவனவாம். ௧௮

கையில் அம்பு வாள் முதலியன வில்லாத வீரமும், மனைவி யில்லாத இல்லறமும், ஒற்றுமையில்லாத போரும், அறிவாரையில்லாத

---

௧௪. பற்றுக்கோடு உண்டு அரசனுக்கும். ஓர் அரசன் மற்றோரரசனுடைய காடு பொருள் முதலியவற்றைக் கவர்தல் அரசியற் கடமையாதலின் அவனுக்கு அது பாவமாகா தென்பது கருத்து.

௧௬. அளவின்மிக்க கொடையால் வறுமை நேர்தல் வெளிப்படை. தவத்தால் வறுமையுண்டாதல் வருவாயின்றி உள்ள பொருள் வேள்வி முதலிய நற்காரியங்களினிமித்தம் செலவழிக்கப்படுதலா லாம். பொருள்வரவிற்கு வஞ்சகம் சாதனமாதலாலும் உண்மைகூறுதலில் அவ் வஞ்சகம் இன்மையாலும் உண்மை கூறுதலால் வறுமை யுண்டாம்.

௧௮. மனிதன் பொருட்கு அடிமையாதல் அஃதில்வழி ஒரு காரியமும் கைகூடாமை பற்றியாம்.

திறமையும், நல்ல துணைவரை யில்லாத இடையூறும் எப்பொழுதும் துன்பம் பயப்பனவாம். கேடு நேர்ந்துழி நல்ல நட்பை யொத்த துணை வேறு யாது மின்று. ௩௯

பொருட்கூறு செய்துகொள்ளாத தன் குடும்பத்து ஞாதிகளை அன்புரிமையாலும், பொருட்கூறு செய்துகொண்ட ஞாதிகளைத் திங்கள் வேதன முதலியன கொடுத்தலாலும், நட்டாரைத் தான் துய்க்கும் இன்பப் பொருள்களோடு ஒத்த இன்பப் பொருள்களாலும் உண்மை பேசுதலாலும் மகிழ்வித்தல் வேண்டும். ௪0

எவன் அரசனையும், தன் சம்பந்திகளையும், பெண்களையும், புதல்வரையும், நட்டாரையும், பணியாளரையும் மகிழ்வித்துத் தன் பொருளை அநுபவிக்கின்றானோ அவனே இன்பமுடையனாவான். ௪௧

அரசன் செருக்கு, கடும்பற்றுள்ளம், மானம், நடுக்கம், அச்சம் என்னுமிவற்றை யொழித்து, தன் காரியத்தை நிறைவேற்றிக்கொள்ளுதற்பொருட்டுச் சிறந்த வேதனத்தாலும், அன்பினாலும், பெருமைப்படுத்தலாலும், அதிகார உயர்வளித்தலாலும் வினைசெய்வாரை மகிழ்வித்தல் வேண்டும். இன்றேல் அவர் அவன் காரியத்திற்கு அநுகூலமுடையராகார். ௪௨

அந்தணராலும் நெருப்பினாலும் நீரினாலும் உண்ணப்படும் பொருளுடையான் என்றும் இன்பமுடையனாய் மகிழ்ச்சியடைவான். அங்ஙனம் உண்ணப்படாத அப் பொருளுடையான் என்றும் துன்பம் எய்துவான். ௪௩

செல்வக்களிப்பாற் பிறரைக் குறைக்க விரும்புதல் செருக்கெனவும், யானே எல்லாரினும் உயர்ந்தவனென்றெண்ணுதல் மானமெனவும், பொருளை விடத்தகுமிடத்து விடாமை கடும்பற்றுள்ளமெனவும், தனக்குக் கேடு வருங்கொலோவென்று ஐயமுறுதல் அச்சமெனவும், மனம் ஒன்றினும் நிலைபெறாது சலித்தல் நடுக்கமெனவுங் கூறப்படும். ௪௪

ஒருவன் தாழ்ந்தவனாயினும் அவனுக்குச் செய்யும் மானக்கேடு பெரும்பகைமையை விளைவிப்பதாகும். கொடையும், நிலையின் இழி

---

௪0. பொருட்கூறு செய்துகொள்ளாத ஞாதிகள் - அவிபத்த தனத்தினர்.

௪௩. அந்தணரா லுண்ணப்படுதல் - அவர்க்கு வேண்டுவனவற்றைத் தானமாக வழங்குதல். நெருப்பினா லுண்ணப்படுதல் - வேள்வி முதலியவற்றிற் செலவிடல். நீரினாலுண்ணப்படுதல் - தென்புலத்தார்க்கு நீர்க்கடனாற்றுதலும் வழிச்செல்வார்பொருட்டுத் தண்ணீர்ப்பந்தல் அமைத்துச் செலவிடலுமாம்.

பாமையாகிய மானமும், வாய்மையும், வீரமும், மென்மையும் ஒருவனுக்குச் சிறந்த நட்பை விளைவிக்கும் குணங்களாம். சரு

அரசன் தனக்குக் கேடு நேர்ந்துழி, பண்டிதரும், குரவரும், உடன்பிறந்தாரும், சுற்றத்தாரும், வினைசெய்வாரும், தாயத்தாரும், அமைச்சர் முதலியோருமாகிய இவ்வெல்லோரையும் தன் அத்தாணி மண்டபத்திற்கு வருமாறு அழைத்து, அவரைத் தனித்தனி தகுதிக் கேற்றவாறு பெருமைப்படுத்தி வணக்கமுடையனாய், "ஐயன்மீர்! நீவிர் எல்லீரும் எனக்கு நண்பராவீர்; இப்பொழுது நுங்கள்பால் வேதனம் பெற்றுப் பணிசெய்யுந் தன்மையில்லை; நமக்கு நேர்ந்துள்ள கேட்டைக் கடக்கும்வண்ணம் பொருந்துமாற்றால் நீங்கள் உறுதி மொழி கூறல் வேண்டும்; நும்மைப் போல் எனக்குத் துணைசெய் வார் பிறர் யாருமிலர்; ஆதலின் நீங்கள் பெறும் வேதனத்தில் மூன்றி லொருகூறுதல் பாதியாதல் உணவின் நிமித்தம் இப் பொழுது பெற்றுக்கொள்ளல் வேண்டும்; வேதனத்தின் எஞ்சிய கூறுகளை இக் கேட்டினின்றும் பிழைத்த பின் நன்றியறிவுடையனாய்த் தருவேன்" என்றிங்ஙனம் வேண்டிக்கொள்ளக் கடவன். சசு-சஅ

வினைசெய்வாருள் எவன் பதினாறு யாண்டுவரை வாழ்க்கைக்கு வேண்டிய பொருளை யுடையனா யிருக்கின்றானோ, அவன் எட்டு யாண்டுவரை வேதனம் பெறாமல் தன் தலைவன் காரியத்தைச் செய் தல் வேண்டும். அத்துணைப் பொருளில்லாதவன் தன் பொருணி லைக்கு ஏற்றவாறு ஆண்டு வரையறை செய்து அங்ஙனம் பணிசெய் தல் வேண்டும். சகூ

அறவே பொருளில்லாதார் அரசனிடத்தினின்றும் உண்டியும் உடுக்கையும் பெற்றுக்கொள்ளல் வேண்டும். வேறொன்றையும் பெற லாகாது. ஒருவன் தன் அரசன் இன்புற்றிருக்குங்கால் அவனிடத்தி னின்றும் இன்பங்களைச் செல்வத்தின் நுகர்ந்தும், அவன் துன்புற்றி ருக்குங்கால் தானும் துன்ப முற்றிலனேல் அவனைச் செய்ந்நன்றி கொன்ற தீவினையாளனென்று அவ் வரசனும் மற்றைச் செய்ந்நன்றி யறியுந் திறத்தினராகிய வினைசெய்வோரும் மிகவும் பழித்துரைப் பர். ரு0

தன் தலைவனது சோற்றை யொருமுறை யுண்டு அவ்வளவில் நன்றியறிவுடையனாய் அதன் நிமித்தம் தன் உயிரை விடுபவனும், தன்

---

சகூ-ரு0. இவ் விரு சுலோகங்களினும் கூறப்பட்டவண்ணம் வினை செய் வார் நடந்து கொள்ளுதல் அரசனுக்குக் கேடு நேர்ந்தகாலத்தென்க.

தலைவனுக்குக் கேடு நேர்ந்துழி அவனைவிட்டு விலகாதவனுமாகிய வினைசெய்வாரே சிறந்த புகழுடையராவர். அத்தகைய வினைசெய்வார்க்குக் கேடுநேர்ந்துழி அவர் பொருட்டுத் தன் உயிரையும் ஒழிக்கும் தலைவனே சிறந்தவனாவான். ௫௧

இந் நிலவுலகத்தில் இராமபிரானை யொத்த நீதிவாய்ந்த அரசன் பிறனொருவனும் இலன். இராமபிரானது சிறந்த நீதியாலன்றே குரங்குகளும் வினைசெய்வாராயின. ௫௨

கள்வருடைய மனவொற்றுமையே ஒரு நாட்டை யழித்தற்கு வலியுடையதாகுமாயின், அரசனும் அமைச்சர் முதலிய வினைசெய்வாரும் ஒன்றுபட்டிருப்பின் பகைவரை யழித்தல் எங்ஙனம் எளிதாகாது. (எளிதாகுமென்பது கருத்து.) ௫௩

கிருட்டினனைப் போன்ற வஞ்சகநீதி வாய்ந்த அரசன் வேறொருவனும் இலன். அக் கிருட்டினன் தன் தங்கையாகிய சுபத்திரையை வஞ்சகத்தாலன்றே அருச்சுனன்பாற் சேர்ப்பித்தான். ௫௪

தமக்கு நலஞ் செய்வன யாவை; அவை யெல்லாம் நீதியை யறிந்தார்க்கு யுத்தி யாகும். ௫௫

நொதுமலனொருவன் முதலில் தனக்கு நலஞ்செய்யும் நட்பினையும்; அதன் பின் உற்றவிடத்து அறவுரை கூறித் தன்னை நல்வழிப் படுத்தும் நட்பினையும் ஆக்கிக்கொண்டு அந் நட்டாரால் தனக்கு நலஞ்செய்யுங் காரியங்களை நிறைவேற்றிக்கொள்ளக் கடவன். ௫௬

ஒருவன் தனக்கும் தன் நண்பனுக்கும் அன்புண்டாம்வண்ணம் அந் நண்பனுடைய குணங்களைப் பாராட்டுதலும், அவன் விரும்பும் உண்டி உடுக்கை பொருள்களால் அவனை இன்புறுத்தலும் வேண்டும். அங்ஙனஞ் செய்தல் தனக்குக் காரியசித்தியை அளிப்பதாகும். ௫௭

ஒரு பெண்மகட்கு உரியனல்லாத மற்றோர் ஆடவனை இடைநின்று களவிற் புணர்ப்பிக்கும் குட்டினிகளும், ஓர் ஆடவற்கு உரியளல்லாத ஒரு பெண்மகளை அங்ஙனம் புணர்ப்பிக்கும் விடர்

---

௫௩. இதனால் அரசனும் வினைசெய்வாரும் தம்முள் அன்புடையராய் ஒழுகல் வேண்டுமென்பது கூறப்பட்டது.

௫௫. யுத்தி - பொருத்தமாறு.

௫௬. நொதுமலன்-பிறர்பால் விருப்பு வெறுப்பில்லாதவன். அவன் நட்பினை யாக்கிக்கொள்ளத் தொடங்குங்கால் முதலில் தன் செயற்குத் துணைபுரியும் நட்பினையும், பின்னர்த் தனக்கு நல்லன கூறும் நட்பினையும் ஆக்கிக்கொள்ள வேண்டுமென்பது கருத்து.

தனும் மேற்கொள்ளும் உபாயங்கள் தெய்வஞ் சுட்டிய குளுறவும், பொய்ம்மையான அளவளாவுதலும், அச்சமின்மை காட்டி மகிழ்வுறுத்தலுமாம். ௫௮

ஒருவன் தன்னை வஞ்சகச் செயலினின்றும் வெளிப்படுத்தாமல் மறைத்துக்கொள்வதில் யுத்தியை யாராய்ந்து மேற்கொண்டிலனேல், அவன் அறிவின்மையால் விலங்கினும் தாழ்ந்தவனாவான். களவிற் புணரும் உரியரல்லாத் தலைவரை மறைப்பதில் பெண்பாலாரும் வஞ்சத்தை மேற்கொள்வர். ௫௯

யுத்தி பெரும்பான்மை வஞ்சத்தாலாவதெனவும், சிறுபான்மை உண்மையாலாவதெனவும் இரண்டு வகைப்படும். எவன் வஞ்ச ஒழுக்கமுடையானோ அவன்பால் வஞ்சத்தையே மேற்கொள்ளல் வேண்டும். இன்றேற் பெரியார்க்கும் ஒழுக்கக்கேடுண்டாம். ௬௦

இவ்வுலகத்தில் அறிவுடையார் பலருளர். ஒருவன் மாத்திரம் அறிவுடையனல்லன். ஆதலின் அறிவுத்திறன் வாய்ந்த அமைச்சர் உண்மையுத்தியை முதலில் மேற்கொண்டு, அதுபயன் செய்யாவிடின் அது கண்டு பின்னர்க் காலம் இடம் பாத்திரங்களுக்குத் தக்கவாறு பற்பல விதமான நீதிகளையும் யுத்திகளையும் படைத்துக்கொள்வர். ௬௧-௬௨

இவ் வுலகத்தில் வஞ்சகத் திறமை வாய்ந்த மனிதர் மந்திரம், மருந்து, வெவ்வேறு வேடம், காலம், சொல், பொருள் என்னுமிவற்றைத் தக்கவாறு பற்றிநின்று வஞ்சகச் செயல்களைத் தோற்றுவிப்பர். ௬௩

இவ்வுலகத்தில் விலைப் பொருட்குக் கொடுக்கப்படுவனவும், விலைப்பொருள் கொடுத்து வாங்கப்படுவனவும், பரிசிலாக உதவப்படுவனவுமாகிய ஆடை, பாண்டம் முதலியவற்றை அரசியல் அதிகாரிகளின் முன்னிலையில் வைத்து, அவற்றில் தத்தம் பெயர்களால் பொறிகள் இருக்கும் வண்ணம் அடையாளமிடல் வேண்டும். ௬௪

கள்வரையும் வஞ்சகரையும் விலக்குதற்பொருட்டு, அவ் ஆடை முதலிய விலைப்பொருள்கள் அரசியல் அதிகாரிகளால் அறியப்பட்டனவாக இருத்தல் வேண்டும். (இன்றேற் களவிற் கவர்ந்தும் வஞ்சித்துக்கொணர்ந்தும் அப் பொருள்களை விற்றல் கொள்ளுதல் செய்வரென்பது கருத்து.) ௬௫

அரசன் தன்பால் வைக்கப்பட்ட அறிவிலாருடையவும், குருடருடையவும், பாலருடையவுமாகிய பொருள்களுக்குரிய வட்டியை எப்பொழுதும் அவரவர்க்குக் கொடுத்தல் வேண்டும். ௬௬

பெண்கள் கண்வற்குரியவள், பொதுநிலையள், பிறர்க்குரியவள் என மூவகைப்படுதல் போல வேதனம் பெற்று வினைசெய்வாரும் தலையாயார், இடையாயார், கடையாயாரென மூன்று வகைப்படுவர். ௬௭

---

௫௯. உரியரல்லாத ஆண் பெண்களைக் களவிற் புணர்ப்பிக்கும் ஆண்மகனை மாமி எனவும் பெண்மகளைக் குட்டினி எனவும் வழங்குப.

௬௧. பெண்களுக்கும் அத்திறமை யுளதெனின் ஆண்மக்கள் பால் அஃதில்லாமை அவர் அறிவின்மையைப் புலப்படுத்துவதாகும்.

அவ் வினைசெய்வாருள் எவன் தன் தலைவனுக்கு அன்பு காரணமாகப் பணி செய்கின்றானோ அவன் தலையாயோனாகவும், எவன் மிகுதியான வேதனத்தைப் பெற்றுத் தன் தலைவற்குப் பணி செய்கின்றானோ அவன் இடையாயோனாகவும், எவன் வெளிப்படையில் தன் தலைவன்பால் வேதனம்பெற்று மறைவிற் பிறனொருவனுக்குப் பணி செய்கின்றானோ அவன் கடையாயோனாகவும் வைத்து எண்ணப்படுவான். ௬௭

ஒருவன் தனக்குத் தீங்கு செய்த பிறனுக்கு நன்மை செய்வானாயின் அவனே தலையாயவனாவான். அங்ஙனமன்றித் தனக்கு நன்மை செய்தார்க்குத் தீங்கு செய்பவன் கடையாயவனாவான். (அருத்தாபத்தியால், நன்மை செய்தார்க்கு நன்மையும் தீங்கு செய்தார்க்குத் தீமையும் செய்பவன் இடையாயவனாவானென்பது போதரும்.) ௬௭இ

இடையாயவன் தலைவனோடொத்த சிறப்பை யெய்த விரும்புவான். கடையாயவன் தன் காரியம் முடித்துக் கொள்ளுதலிலேயே கருத்துடையனாக விருப்பான். ௬௮

உபதேசமின்றி அளவைகளால் எல்லாவற்றையும் அறிந்து கொள்ள வியலாது. அறிவுடையார் இளமைப்பருவத்தையும் யௌவனபருவத்தையும் தொடங்கிய காரியத்தை முடித்தற் குரியனவாக அறிதல் வேண்டும். வயோதிக பருவத்தை அதற்குரியதாக ஒருபொழுதும் எண்ணலாகாது. ஆதலின், பருவம் நோக்கி எளிதின் முடித்தற்குரிய காரியத்தை ஆராய்ந்து அதனைத் தொடங்கல் வேண்டும். ௬௯—௭0

ஒரே சமயத்திற் பல காரியங்களைத் தொடங்குதல் நலமன்று. முதலிற் றொடங்கியதொரு காரியம் முடிக்கப்படும் முன் இடையே மற்றொரு காரியம் தொடங்கப்படின் அவ்விரண்டும் நிறைவேறாதொழியும். ஆதலின், காரியம் வல்லான் தொடங்கிய காரியத்தைக் கடைபோக்காமல் இடையே மற்றொரு காரியத்தை மேற்கொள்ளலாகாது. எப்பொழுதும் எளிதில் நிறைவேற்றுதற்குரிய காரியத்தையாராய்ந்து அதனையே செய்தல் வேண்டும். ௭௧-௭௨

எக் கலகம் தன்னைச் செய்தார்க்குப் பொருட்பேறுண்டாக்குமோ அக் கலகம் சிறந்ததாகும். அங்ஙனம் பொருட்பேறின்றிச் செய்யப்படுங் கலகம் செய்தவனுடைய வாணாளையும், பொருளையும், நட்பினையும், புகழையும், அறத்தையும் என்றும் அழிப்பதாகும். ௭௩

---

௬௬. கணவற்குரியவள் அன்பு நிரம்பியவளாதலின் தலையாவாள். பொதுமிலையள் விருப்பு வெறுப் பில்லாதவளாதலின் இடையாவாள். பிறர்க்குரியவள் தலைவன்மாட் டன்பிலளாதலின் கடையாவாள். உவமேயப் பொருள்கள் பின் வருஞ் சுலோகத்தில் விளக்கப்படுவன.

௬௭இ. இங்குக் கூறிய தலையாயவன் இயல்பை "இன்னாசெய் தாரை யொறுத்தல் அவர்நாண, நன்னயஞ் செய்து விடல்", "இன்னாசெய் தார்க்கும் இனியவே செய்யாக்கால், என்ன பயத்ததோ சால்பு" என்னும் திருக்குறள்களிற் காண்க.

அழுக்காறும், கடும்பற்றுள்ளமும், செருக்கும், உவகையும், வெகுளியும், அச்சமும், ஆராய்ச்சியில்லாத துணிவு மாகிய இவ்வேழும் ஒருவன் ஒரு காரியத்தைத் தொடங்குங்கால், அக் காரியத்திற்கு இடையூறு விளைவிக்கும் ஏதுக்களென்று அறிவுடையார் கூறுவர். ௭௪

ஒருவன் ஒரு காரியத்தைத் தொடங்குங்கால் அது பிழைபடா திருக்கும்வண்ணஞ் செய்தல்வேண்டும். அக் காரியம் இடையூறில்லா மற் காலங் கடந்து செய்யப்படினும் அறிவுடையோராற் குற்றமற்ற தென்று ஏற்றுக்கொள்ளத் தக்கதாக விருத்தல் வேண்டும். ௭௫

பத்துக் கிராமங்களுக்குத் தலைவனும் நூறு படைவீரர்க்குத் தலைவனும் ஏவலாளரையுடையராய்க் குதிரையிலேறிச் சஞ்சரிக்கலாம். ஒருகிராமத்திற்குத் தலைவராயினாரும் குதிரையேறிச் செல்லலாம். ௭௬

ஆயிரம் படைவீரர்க்குத்தலைவனும் நூறு கிராமங்களுக்குத்தலைவனும் அம்பு வாள் முதலியன தாங்கிய பத்துப் படைவீரர் சூழ ஒற்றைக் குதிரை பூட்டிய தேர் ஊர்திகளிலேறிச் செல்லலாம். தனிக் குதிரைகளிலும் ஏறிச் செல்லலாம். ௭௭

ஆயிரங் கிராமங்களுக்குத் தலைவனும் பதினாயிரம் படைவீரர்க்குத் தலைவனும் எப்பொழுதும் இருபது போர்வீரர் சூழ்ந்துவர நரவாகனமாகிய சிவிகையிலும், ஒற்றைக் குதிரைபூட்டிய தேர்களிலும், இரட்டைக் குதிரை பூட்டிய தேர்களிலும், யானையிலும் ஏறிச் செல்லலாம். ௭௮

பதினாயிரங் கிராமங்களுக்குத் தலைவனும் ஐம்பதினாயிரம் படைவீரர்க்குத் தலைவனும் பல வீரர்கள் சூழ்ந்துவர நான்கு குதிரைகள் பூட்டிய தேர்களிலும், முற்கூறிய எல்லா ஊர்திகளிலும் ஏறிச்செல்லலாம். ௭௯

அரசன் தன் வினைசெய்வார்க்குத் தலைமைத் தன்மையின் மிகுதி நோக்கி அதற்கேற்றவாறு மிக்க சிறப்புக்களை ஏற்படுத்தல் வேண்டும். அங்ஙனமே மிக்க பொருளுடையார்க்கும் கல்வியறிவு முதலிய குணமுடையார்க்கும் அவரவர் தகுதியின் மிகுதிக் கேற்பச் சிறப்பு அளித்தல் வேண்டும். ௮0

தனக்கு நலத்தை நாடும் அரசன் தன் நாட்டிலுள்ள உயர்ந்தார்க்கு நிலையின் இழிதலும், இழிந்தார்க்கு நிலையின் உயர்தலும் நேரா மிருக்கும்வண்ணம் எப்பொழுதும் செய்தல்வேண்டும். ௮௧

அரசன் தன் நாட்டில் வாழும் கடையாயார் இடையாயார் தலையாயாராகிய குடிகளுக்கும், தன் சுற்றத்தார்க்கும், கிராமங்களிலும் பட்டினங்களிலும் இல்லம் அமைத்துக்கொள்ளுதற்பொருட்டு எப்பொழுதும் நிலங் கொடுத் துதவல்வேண்டும். ௮௨

---

௭௫. இடையூ றில்வழிச் செய்யப்படுங் காரியம் விரைந்து முடிக்கற்பாலதாம். ஆயினும் அது பிற காரணங்களாற் காலந்தாழ்த்து முடிக்கப்படினும், அறிவுடையார் ஏற்றுக்கொள்ளத் தக்கவாறு குற்றமற்றதாக முடியவேண்டு மென்பது கருத்து.

அங்ஙனம் இல்லத்திற்காகக் கொடுக்கப்படும் நிலத்தின் தலையாய அளவு அறுபத்துநான்கு முழ நீளமும் முப்பத்திரண்டு முழ அகலமுமாம். இடையாய அளவு நாற்பத்தெட்டு முழ நீளமும் இருபத்துநான்கு முழ அகலமுமாம். கடையாய அளவு முப்பத்திரண்டு முழ நீளமும் பதினாறு முழ அகலமுமாம். இவ்வாறு அளவிட்டுக் கொடுக்கப்படும் நிலங்கள் அவ்வக் குடும்பத்தினரின் பெருக்க சுருக்கங்களுக் கொத்தவாறும் தகுதிக்கேற்றவாறும் குறைவு மிகுதியின்றி யிருத்தல் வேண்டும். அங

அரசனால் அரசியல் அதிகாரங்களில் நியமனம் பெற்றவர் கிராமத்திற்கு வெளிப்புறத்தே வசித்தல் வேண்டும். போர் வீரருள் ஒருவனும் அரசியற்காரிய மில்லாதிருக்குங்கால் கிராமத்தினுட் புகுதலாகாது. அச

போர்வீரன் ஓரிடத்திலும் ஒருபொழுதும்கிராமத்திலும் வாழுங் குடிகளைத் துன்புறுத்தலாகாது. கிராமத்தில் வாழுங் குடிகளும் அப் போர் வீரரோடு ஒரு பொழுதும் அளவளாவுதலாகாது. அரு

அரசன் போர்வீரர்க்கு அஞ்சாமையை வளர்த்தற்குரிய அறவுரைகளையும் சிறந்த இசைக்கருவிகளையும் ஆடல் பாடல்களையும் எப்பொழுதுங் கேட்கும்படி செய்வித்தல் வேண்டும். அசு

படைவீரரைப் போர்செய்தற்கண் அன்றிப் பிறகாரியங்களில் ஏவுதலாகாது. அஎ

'உண்மைநெறியி லொழுகும் பொருளாளர் வாணிகத்தொழில் முதலியவற்றால் மெலிவடைந் திருப்பாராயின் அவரையும், அங்ஙனமே மெலிவடைந்த பயிர்த்தொழிலாளரையும் அரசன் உதவி புரிந்து காத்தல் வேண்டும். அஅ

படைவீரருட் பொருளுடையார்க்கு அவர் தகுதிக்கேற்றவாறு வேதனம் உதவல் வேண்டும். அவர் அயலிடஞ் செல்லுங்கால் அதன் பொருட்டுச் செலவழிக்கப்படும் பொருளில் அதன் முப்பதிலொரு கூறு மிகுதியாகச் சேர்த்து அவர்க்குக் கொடுத்தல் வேண்டும். அகூ

அரசன் தனிகராகிய அப் படைவீரரின் பொருளைத் தன் கருவூலத்தை யொப்ப முயன்று காத்தல் வேண்டும். வஞ்சித் தொழுகும் தனிகரிடத்தினின்றும் அவர் பொருள்முழுதையும் கவர்ந்துகொள்ளலாம். ' கூ0

கடன் கொடுத்தவன் தன் முதலுக்கு நான்கு மடங்கு மிகுதியான வட்டியைக் கடன்வாங்கினவனிடத்தினின்றும் பெற்றிருப்பானாயின், பின் அக் கடன்வாங்கினவனால் கடன் கொடுத்தவற்கு முதற்பொருள் கொடுக்கத்தக்கதன்று. கூக

சுக்கிரநீதியில் " கிலநீதி " என்னும்

ஐந்தாம் அத்தியாயம் முற்றிற்று.

சுக்கிரநீதி முற்றிற்று.

—:o:—

The India Printing Works, Madras.

உ

சுக்கிரநீதியின் மூலநூற்கண் உள்ள

# அரும்பத முதலியவற்றின் அகராதி.

(ஈண்டுக் குறிக்கப்படும் எண்களுள் I, II, III, IV, V இவை அத்தியாயங்களையும், இவை இரட்டித்து வருங்கால் அத்தியாயத்தோடு பிரகரணங்களையும், மற்றவை சுலோகங்களையும் குறிப்பனவாம்.)

அகல்ய: IV V 102. நோயாளன்.

அங்காரகார: IV II 113. (மரத்தை யெரித்துக்) கரிசெய்பவன்.

அங்குஷ்ட: IV IV 125. கைப்பெருவிரல்.

அங்குலம் I 196. நடுவிரலின் நடுவணுள்ள இரண்டு கணுக்களின் நடுப்பாகநீளம்; எட்டு யவதானியத்தின் நடுக்கூறளவினதுமாம்.

அசூலா: II 23. அருசுருப்புள்ளவர்கள்.

அஜ்ஞாதஸ்வாமிகம் II 326. இன்னார்க்குரியதெனத் துணியப்படாத பொருள்.

அட்ட: I 222. மேன்மாளிகை.

அண்டஜம் IV III 14. முட்டையிற்றோன்றுவது.

அதர்வா IV III 27, 40. வேதங்கள் நான்கனுள் ஒன்று.

அதர்வாங்கிரஸ: IV III 36 ,,

அதமர்ண: IV VII 379. கடன் கொண்டவன்.

அதிகம் II 327, 330. மிகுதி; இது தனக்குரியதெனத் துணியப்பட்ட பொருள்வகையுள் ஒன்று.

அநாமிகா IV IV 124. கடைவிரற்கு அயல் விரல்.

அநிர்திஷ்டஸ்வாமிகம் II 323. இன்னார்க்குரிய தெனத் துணியப்படாத பொருள்.

அநுகூல: IV III 57. நாயகர் பலருள் ஒருவன்.

அநுலோமஜ: IV III 12. உயர்ந்தசாதி ஆணுக்கும் இழிந்தசாதிப் பெண்ணுக்கும் பிறந்தவன்.

அநுல்பண: III 3. இறுமாப்பில்லாதவன்.

அநுப்லவிகா: II 141, 144. சதாநிகர்க்குத் துணைசெய்வோர்.

ஆபமித்யக: II 336, 338, வட்டியுடனாதல் அஃதின்றியாதல் பெற்றுக்கொள்வதாகப் பேசிப் பிறர்க்குக் கடனாகக் கொடுக்கப்படும் பொருள்.

ஆதி: IV V 125. ஈட்டுப்பொருள் ; 225, 316. பந்தப்பொருள்.

ஆதோரண: II 128. யானைப்பாகன்.

ஆத்வர்யவம் IV III 34. அத்துவரியு என்னும் வேள்வியாளனுக்குரிய கன்மம்.

ஆந்வீக்ஷிகீ I 152, 153, 158. அறிவுநூல். [நடை.

ஆப்லுதம் II 134. நான்கு கால்களாலும் துள்ளிச் செல்லும் குதிரை

ஆயவ்யயலேக்யம் II 298, 319. வரவு செலவுப் பத்திரம்.

ஆயுதிக: II 142, 266; V 78. பதினாயிரம் காலாட்படைகளுக்குத் தலைவன்.

ஆயுர்வேத: IV III 27, 37, 75. உபவேதங்களுள் ஒன்றாகிய மருத்துவநூல்.

ஆராமாதிபதி: II 158. ஆடற்பூஞ்சோலைத் தலைவன்.

ஆவேதக: IV V 70. அறிவிப்போன். [ளப்படுவது.

ஆவேதநம் IV V 90. வாதியால் அரசனுக்குத் தெரிவித்துக்கொள்

ஆஶாபால: I 192. திக்குப்பாலகன் ; பதினாயிரம் ஊர்களின் அரசிறைப் பொருள்களைக் கொண்டுசேர்ப்பவன்.

ஆஶீவிஷ: II 214. பாம்பு.

ஆஶ்ரய: IV VII 238, 245, 290. அரசற்குரிய சந்தி முதலிய அறுவகைக் குணங்களுள் ஒன்று.

ஆஸநம் IV VII 234, 237, 285.

ஆஸ்கந்திதம் II 135. முன்னேறிச் செல்லுங் குதிரைநடை; IV VII 144, 146 சிறிது வளைந்த கால் நுனிகளால் துள்ளிச் செல்லுங் குதிரைநடை. [தொழில்.

உத்பூதம் I 334; II 73, 87, 234. குறிப்பால் நிகழும் உறுப்பின்

உத்வா II 383. கணித பரிபாஷைகளுள் ஒன்று.

உத்வாஹநம் II 383. ,,

இந்த்ரநீல: IV II 41, 45, 47. சூழ்கொண்ட மேகத்தைப்போன்ற கரிய ஒளியினையுடைய மணி.

உசிதமாஸ: IV III 29, 52.

உத்தமர்ண: IV V 322; IV VII 379. கடன் கொடுப்பவன்.

உத்தமஸாஹஸ: IV I 77; 83, 86, 116; IV V 317. ஆயிரம் பணங் கொண்ட தண்டம்.

உத்கோச: I 297; II 66, 271; IV I 100; IV II 123. கைக்கூலி.

உதாத்த: IV III 39. எடுத்தலோசை.

உத்கீதம் IV III 35. சாமவேதத்திற் பாடப்படும் இசை.

உத்தார: I 80. எடுகூறு; பாக நிருணயம்.

உத்பிஜ்ஜம் IV III 14. வித்திற்றோன்றுவது.

உபநிதி: II 336, 337. பிறர்பால் நம்பி வைக்கப்படும் பொருள்.

உபகார்யா II 222, 244. காமுக இல்லம்.

உபபோகவ்யய: II 322. நுகரப்படும் செலவு.

உபலப்தி: I 51. அடைதல்.

உபாயநபத்ரம் II 304. கையுறையாகக் கொடுக்கப்படும் பொரு [ளைப்பற்றிய பத்திரம்.

உபேக்ஷாயாமம் IV VII 255, 261. போர்ச்செலவு வகைகளுள் ஒன்று.

ருக்ஷரோஜீ IV IV 68. 766 சிகரங்களையும் 96 மேனிலைக் கட்டுக்களையுமுடைய கோயில்.

ருக்வேத: IV III 37. நான்கு வேதங்களுள் ஒன்று.

ருணம் II 338. வட்டியோடு பெறுவதாகக் கொடுக்கப்படும் பொருள்.

ருணபத்ரம். III 202. கடன் பத்திரம்.

ருண (லேக்யம்) II 310; IV V 174. ,,

ருத்விக் II 301; IV V 319. வேள்வி செய்விப்போன்.

ஐல: I 144. அயிலன்; இளையின் புதல்வன்.

ஐஹிக: II 339, 340. இம்மைச்செலவு.

ஔத்தமர்ணிகம் II 324, 326; III 198, 201. வட்டியோடு தருவதாகப் பேசிக் கடனாகவாங்கிய பொருள்.

ஔபநிதிகம் II 325. அடைக்கலமாக வைக்கப்படும் பொருள்.

ஔபநிதியம் II 324. ,,

கக்ஷா I 221. இல்லத்தின் பிரிவு.

கணாதாதிமதம் IV III 48. கணாத முனிவர் முதலியோர் வகுத்த [தருக்கம்.

கடங்கரம் IV I 108. இழிந்த உணவு.
கநிஷ்டிகா IV IV 124. கடைவிரல்.
கபோணி: IV VII 340. முழங்கை.
கர: I 197, 208. முழம்.
கரக: IV VII 345. கன்மழை.
கரடபத்ரம் II 304. இறைப்பொருளைக் குறிக்கும் பத்திரம்.
கர்ணமர்மம் IV VII 197. சிறு நாளிகக்கருவியின் உறுப்புக்களுள் [ஒன்று.
கர்ணதார: I 65. தோணி இயக்குவோன்; மாலுமி.
கர்மவேய: IV V 97. தடைவகைகளுள் ஒன்று.
கர்ஷ: II 385; IV VII 24. அளவை வகைகளுள் ஒன்று ; பத்து மாடங்கொண்டது.
கல்ப: IV III 28. வேதாங்கங்களுள் ஒன்று.
காச: IV VII 162. கண்ணாடி.
காமசாஸ்த்ரம் IV III 30, 57. இன்பநூல்.
காம்ஸ்யம் IV II 89. வெண்கலம்.
காயகாலமரணா II 392, 395. வேதனவகைகளுள் ஒன்று.
காயமரணா II 392, 393. ,,
காஷ்டாபணம்: IV I 116. காருடாபணம்; பணம்.
காலமரணா II 392, 394. வேதனவகைகளுள் ஒன்று.
காலவேய: IV V 97. தடைவகைகளுள் ஒன்று.
காலாவதிகபத்ரம் II 304. காலத்தைக் குறிப்பிட்டு எழுதிக்கொடுக்கப்படும் பத்திரம்.
கீநாஶ: IV V 18. உழவுத்தொழில் செய்வோன்.
கீலகோஷ்டம் IV VII 408. மரத்தினாலாக்கப்பட்ட இருப்பிடம்.
குடிலம் II 134. வளைந்து செல்லும் குதிரைநடை.
குட்டினீ V 58. [கள்.
குப்யம் IV VII 372. பொன் வெள்ளிகளல்லாத மற்றை உலோகங்
குல: I 193. காற்குரோச அளவுள்ளதும் இருநூற்றைம்பது வெண்பொற்காசு அரசிறையாகப் பெறத்தக்கதுமாகிய நிலப்பகுதி. [க் குழுவினர்.
குலம் IV V 30, 31, 32, 47, 48. வழக்குக்களை ஆராயும் ஒருவகை

